# தமிழெனப்படுவது

இரா. கோதண்டராமன்
தொல்காப்பியர் அடிப்படை ஆய்வு மையம்
புதுச்சேரி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
II Main Road, C.I.T. Campus, Taramani, Chennai - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamiḻeṉappaṭuvatu |
| Author | : | Dr. R. Kothandaraman |
| Publisher & Copyright | : | International Institute of Tamil Studies,<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai - 600 113.<br>Ph: 044-22542992 |
| Publication No. | : | 515 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing Type Used | : | 10 points |
| No. of Pages | : | xxx+378 |
| No. of Copies | : | 1000 |
| Price: | : | Rs.115/- (Rupees One Hundred Fifteen) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road, Luz,<br>Mylapore, Chennai-600 004.<br>Ph. 24984693, 24661807. |
| Subject | : | Tamil Linguistics |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

மொழி என்பது சமூகத் தொடர்பிற்கு ஒரு கருவியாக அமைகிறது. இது சமூகக் கட்டுமானத்திற்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும் பாலமாக விளங்குகிறது. ஒரு மொழி அரிய இலக்கிய நூல்களையும் தொன்மையான இலக்கணங்களையும் பெற்றிருக்கும் நிலையில் அது வளமான மொழியாகக் கருதப்படுகிறது. அம்மொழியில் மொழி பற்றிய ஆய்வுகள் பேரளவில் மேற்கொள்ளப்படும் நிலையில் அது வளரும் மொழியாகவும் கருதப்படுகிறது. மொழி பற்றிய இத்தகைய ஆய்வுகளுக்கு அம்மொழியின் அடிப்படை மரபு இலக்கண அறிவு இன்றியமையாததாகக் கருதப்படும். மொழியின் பல்வேறு கூறுகளையும் ஆய்வு செய்யும் நோக்கில், தமிழில், அதன் ஒலிப்பு நிலையிலிருந்து பயன்பாட்டு நிலைவரை அனைத்து நிலைகளிலும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன. இவ்வாய்வுகள் தொடர்ந்து நடைபெற்றும் வருகின்றன. இத்தகைய ஆய்வுகளை அம்மொழியின் மரபு சார்ந்த இலக்கணப் புலமையோடு மேற்கொள்ளவேண்டும். அவ்வாறு மேற்கொள்ளப்பெறும் ஆய்வே சிறப்புடையதாக அமையும் என்ற அடிப்படை நோக்கில் இந்நூலாசிரியர் முனைவர் இரா. கோதண்டராமன் அவர்கள் பல்வேறு நிலைகளில் இந்நூலில் தம் கருத்தினை வெளிப்படுத்தியிருக்கிறார். மரபு இலக்கண அறிஞராகவும் மொழியியல் அறிஞராகவும் திகழ்பவர்களுள் குறிப்பிடத்தக்கவராக விளங்குபவர் முனைவர் இரா. கோதண்டராமன் அவர்கள். இவர் மரபு இலக்கணம், மொழியியல் சிந்தனை ஆகியவற்றைப் பற்றிப் பலகாலும் அரிதின் முயன்று எழுதிய ஆய்வுக் கட்டுரைகள் இப்பொழுது நூலாக வெளிவருகின்றன.

24 கட்டுரைகள் அடங்கிய இத்தொகுப்பு நூல் **'தமிழெனப்படுவது'** என்ற தலைப்பில் இந்நிறுவனத்தால் வெளிக்கொணரப்படுகிறது. தமிழ்மொழியியல் பற்றிய ஆய்வுக் களங்களில் புதிய ஆய்வுப்போக்கை வளர்த்தெடுக்கும் முயற்சியில் இந்நூலாசிரியர் முயன்றிருக்கிறார். இவர்தம் தமிழ் மரபு இலக்கணப் புலமையும் மொழியியல் அறிவும் இந்நூலின் தொடக்கம் முதல் இறுதி

வரை தெளிவாக வெளிப்பட்டுள்ளன. தமிழ் மொழி பற்றிய ஆய்வுச் சிந்தனையை வளர்ப்பதற்கும், தமிழை மொழியியல் நோக்கில் ஆய்வு செய்வதற்கும் ஒருவர்க்கு மரபு இலக்கண அறிவும், மொழியியல் திறனும் ஒருங்கே அமையும் போக்கு வேண்டும் என இந்நூலுள் வலியுறுத்தியுள்ளார். இன்றைய மொழியாய்வுகளில் புதிய போக்குகளைக் கொண்டு வரவேண்டும் என்றும், இதற்குப் பாடத்திட்டத்தில் மாற்றங்கள் செய்யப்படவேண்டும் என்றும் தம் ஆழமான கருத்தை நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். மரபு இலக்கணமும், மொழியியலும் ஒன்றையொன்று கைகோத்துச் செல்லும் நிலையில் மட்டுமே முறையான ஆய்வுகள் அமையும் என்பதில் இந்நூலாசிரியர் உறுதியாக இருப்பது பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரியதாகும். இந்நூலின் பெரும்பான்மைக் கட்டுரைகள் இந்நூலாசிரியரின் ஆழ்ந்த சிந்தனை வெளிப்பாட்டில் விளைந்த கருத்துகளாகும். இந்நூலில் அமைந்துள்ள கட்டுரைகள் பல்வேறு தலைப்புகளில் அமைந்துள்ளன எனினும், இவற்றுள் தமிழ் மொழியியல் எனும் ஒரு தொடரிழை ஊடாடிக்கிடப்பதால் இக்கட்டுரைகள் ஒரு கோவையாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. மொழியியல் அறிஞரிடத்தும் மரபிலக்கண அறிஞரிடத்தும் இந்நூல் சிறந்த வரவேற்பைப் பெறும் என்று நம்பலாம். இவருடைய பிற ஆய்வுக்கட்டுரைகளையும் ஒருங்கிணைத்து விரைவில் இந்நிறுவனத்தால் பிறிதொரு நூலும் வெளியிடப்பெறவுள்ளது.

இந்நூலினை வெளியிட இசைவு தந்த இந்நிறுவனப் பதிப்புக்குழுவினர்க்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு **பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு **தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி என். இலட்சுமிக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
4-9-04

**இயக்குநர்**

# பொருளடக்கம்

# முன்னுரை

1. தமிழ் இலக்கண ஆய்வானது தொல்காப்பியர் காலந்தொட்டு ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள்ளேயே சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கிறது. மொழியின் அமைப்பியல்புகள் தொடர்பான ஆய்வில் புதிய கோட்பாட்டுச் சிந்தனைகள் இடம்பெறாமற் போனதால் தமிழியல் ஆய்வில் குறிப்பாகத் தமிழ்மொழி ஆய்வில் புதிய சிந்தனைத் தடங்களின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பில்லாமற் போய்விட்டது. 1960-களில் தமிழ்கூறு நல்லுலகில் மொழியியல் அறிமுகப்படுத்தப்பட்டு, பல்கலைக் கழகங்களில் அது இடம்பெற்ற நிலையில் சிலருக்கு அது வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தந்ததே தவிர தமிழ் மொழி தொடர்பான அமைப்பியல் ஆய்வில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. ஆயினும், அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்த ந. குமாரசாமி ராஜா அவர்கள் 1969, 1980 ஆண்டுகளில் முன்மொழிந்த NPP/LPP மீட்டுருவாக்கக் கோட்பாடு திராவிட மொழிகளின் எழுத்தியல் அமைப்பினை ஓரளவு புரிந்துகொள்ள வகைசெய்தது என்பதை மறுக்க முடியாது. ஆனால் இந்த மீட்டுருவாக்க ஆய்வானது இடைநிலை வடிவங்களுக்குப் பொருந்தியதுபோல் அடிநிலை அமைப்புகளுக்குப் பொருந்தவில்லை. இதுபற்றி இந்த ஆய்வுத் தொகுதியில் ஆங்காங்கே பேசப்பட்டுள்ளது.

2. *தமிழெனப்படுவது* என்ற இந்த ஆய்வுத் தொகுதியானது தமிழ் மொழியின் அமைப்பியல்புகள் தொடர்பான ஆய்வினை ஒரு புதிய தடத்தில் கொண்டு செல்லும் ஒரு முயற்சியாகும். மொழியியல் தொடர்பான ஆய்வுகளைப் பொறுத்தவரை நாம் குறைந்தது இரண்டு தலைமுறைகள் பின்தங்கியிருப்பதாகவே தோன்றுகிறது. இன்றைய தமிழியல் ஆய்வுலகம் குறிப்பாக இலக்கணம் மற்றும் மொழியியல் ஆய்வுலகம் ஒரு மாய வலையில் சிக்குண்டு வெளியேற முடியாமல் தவிக்கிறது. இந்த வலையை அறுத்தெறிந்து முற்றிலும் மாறுபட்ட போக்கில்

---

குறிப்பு: இந்தப் பகுதியில் அடைப்புக்குள் உள்ள குறிப்பெண்கள் தொல். எழுத்து. இளம். நூற்பா எண்களைக் குறிக்கும்.

மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் வெளிப்பாடே *தமிழெனப்படுவது* என்ற இந்த ஆய்வுத் தொகுதியில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள். தமிழ் மொழியின் அமைப்பியல்புகள் தொடர்பான ஆய்வுகள் ஒரு புதிய தலைமுறைக்கு ஒளி விளக்காய் அமைந்து அதனை வழி நடத்திச் செல்லவேண்டும் என்பதே இந்த ஆய்வுத் தொகுதியின் மூலம் நாம் விடுக்கும் செய்தியாகும். இளந் தலைமுறை ஆய்வாளர்கள் ஆய்வுலகம் விடுக்கும் அறைகூவல்களை நம்பிக்கையுடன் எதிர்கொள்வதற்குத் *தமிழெனப்படுவது* வழிகாட்டியாக அமையும் என்று நாம் நம்புகிறோம். நம்மிடையே இன்றைய நிலையில் தமிழ் மொழியியலைப் பொறுத்தவரை நுண்மாண் நுழைபுலம் மிக்கச் சிறந்த ஆய்வாளர்களை மிக அரிதாகவே இனங்காண முடிகிறது. ச. அகத்தியலிங்கம், ந. குமாரசாமி ராஜா, செ. வை. சண்முகம் என்று விரல்விட்டு எண்ணக்கூடிய மொழியியற் பேராசிரியப் பெருந்தகைகளின் அர்ப்பணிப்புமிக்க, ஆழ்ந்த புலமைநலம் வாய்ந்த ஆய்வுகள் நமக்கு நம்பிக்கையூட்டுவதாக இருந்தாலும் இவர்களுக்குப் பிறகு அந்த இடத்தை நிரப்பக்கூடிய தமிழ் மொழியியல் ஆய்வாளர்கள் களத்தில் இல்லை என்பதை யாரும் மறுக்க முடியாது.

3. தமிழ் மொழியியல் ஆய்வில் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து ஏற்பட்டுள்ள தேக்கத்துக்கும், தொய்வுக்கும், சரிவுக்கும், பின்னடைவுக்கும் காரணம் என்ன? இன்றைக்குப் பல்கலைக்கழகங்களில் மொழியியல் பேராசிரியர் களாகக் கொலுவீற்றிருக்கும் யாருக்கும் அல்லது பலருக்கும் தமிழின் நெடிய இலக்கிய இலக்கணப் பாரம்பரியத்தைப் பற்றிய அடிப்படை அறிவு சிறிதும் இல்லை. அதேபோல் கல்லூரி களிலும் பல்கலைக்கழகங்களிலும் பணியாற்றும் மொழித்துறை சார்ந்த முதுகலைப் பேராசிரியர்கள் யாருக்கும் மொழியியல் புலமை சிறிதும் இல்லை என்றே கூறலாம். மொழித்துறைகள் மொழியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு இலக்கியத் துறைகளாகவே செயல்படுவது ஒருபுடை வளர்ச்சியின் வெளிப்பாடாகும். இந்தப் போக்கு கவலை அளிப்பதாகவே உள்ளது. மொழியியல் துறையைப் பொறுத்தவரையில் தமிழகத்தில் அது மீண்டும் புத்துயிர் பெற வேண்டுமானால் முதுகலைப் பாடத்திட்டத்தில் உடனடியாக மாற்றங்கள் செய்யப்பட வேண்டும். தமிழ் மரபிலக்கணக் கோட்பாடுகள் மற்றும் தொல்காப்பியம், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பெருந்தொகை தொடங்கி பக்தி இலக்கியங்கள் வரையிலான தமிழின் படிநிலை வளர்ச்சிகள் ஆகியவை முதுகலைப் பாடத்திட்டத்தில் இடம்பெற வேண்டும்.

இதேபோல் தமிழ் முதுகலைப் பாடத்திட்டமும் மாற்றி யமைக்கப்படவேண்டும். எழுத்தியல் (Phonology), உருபனியல் (Morphology), தொடரனியல் (Syntax), வண்ணனை மொழியியற் கோட்பாடுகள் (Descriptive Linguistic Theories), வரலாறு மற்றும் ஒப்பீட்டு மொழியியற் கோட்பாடுகள் (Theories of Historical and Comparative Linguistics) ஆகியவை தமிழ் முதுகலைப் பாடத் திட்டத்தில் இடம் பெறவேண்டும். தமிழ் இளங்கலைப் பாடத் திட்டமும் இதனைக் கருத்தில் கொண்டு மாற்றியமைக்கப்பட வேண்டும். இவை யெல்லாம் போர்க்கால அடிப்படையில் மேற் கொள்ளப்பட வேண்டிய பணிகளாகும். ஆனால் இவை நிறைவேறாது என்பதையும் நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும். இன்றைக்கு, பாடத்திட்டக் குழுவில் இருக்கும் தமிழ்ப் பேராசிரியர்களோ, மொழியியல் பேராசிரியர்களோ இத்தகைய மாற்றங்களை முன்மொழியக் கூடிய திறனோ, தொலைநோக்கோ உள்ளவர்களாக இல்லை.

4. தமிழ் எழுத்தியல் தொடர்பான சில புதிய சிந்தனைகளை இங்கே மேலோட்டமாகக் குறிப்பிடுவது அவசியம். எழுத்தியல் ஆய்வில் அடிநிலை அமைப்புக்கள் (Underlying Structures), அடிநிலைக் கிளவிகள், அடிநிலைச் சாரியைகள் ஆகியவற்றை இனங்காண்பது என்பது தெளிவானதும் வலுவானதுமான ஒரு கோட்பாட்டைக் கருத்தில் கொண்டதாகும். சில எடுத்துக் காட்டுக்களின் வாயிலாக இதனைத் தெளிவுப்படுத்தலாம். *அழக்குடம், வெரிக்குறை/வெரிங்குறை, மகத்துக்கை, புழத்தை, தேங்குடம்/தேக்குடம்/தேத்திறால்* முதலான புறவடிவங்களின் நிலை மொழிகளை அடிநிலை அமைப்புக்களில் முறையே *அழன், வெரிந், மக, புழன், தேன்* எனத் தொல்காப்பியர் இனங்கண்டதால் செயற்கையான ஆய்வின் மூலம் அவற்றின் ஈற்று மெய்களைக் கெடுக்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டுவிட்டது. இதேபோல் *நமது, நமக்கு* ஆகியவை தொடர்பான தொல்காப்பியரின் அமைப்பியல் ஆய்வும் (எழுத்து. இளம். *162, 116, 115*) செயற்கைத் தன்மையதாகவே கருதப்படும். இத்தகைய ஆய்வினை ஒப்பனை ஆய்வு (Cosmetic Analysis) என்றும் இதனடியாக வகுக்கப்படும் எழுத்தியல் விதிகளை ஒப்பனை விதிகள் (Cosmetic Rules) என்றும் குறிப்பிடலாம். ஒப்பனை மூலம் பெறப்படும் எழில் நிரந்தரமானதன்று. அதைப் போன்றுதான் ஒப்பனை ஆய்வின் மூலம் காணும் முடிவுகளும். *அழன், வெரிந், மக, புழன், தேன்* முதலானவை வழக்கில் இருந்தாலும் அவற்றையே அடிநிலை அமைப்புக்களில்

நிலைமொழியாகக் கொள்ளவேண்டும் என்று தொல்காப்பியர் துணிந்ததாலும் அவரது ஆய்வின் போக்கு திசை மாறிவிட்டது. நிலைமொழியின் ஈற்று மெய்க்கேடு *மரவேர்* (<மரம்+வேர்), *மணமேடை* (<மணம்+மேடை) ஆகியவற்றில் நிகழ்வதுபோல் இயற்கையான நிகழ்ச்சியாக அமைய வேண்டும். *தேக்குடம்/ தேங்குடம்* என்பனவற்றின் நிலைமொழியை எடுத்துக்காட்டாகத் *தேன்* எனக் கொண்டதால் னகரத்தைக் கெடுத்து இனவல்லொற் றினையும் இனமெல்லொற்றினையும் வலிந்து வருவிக்க வேண்டிய ஆய்வைத் தொல்காப்பியர் முன்மொழிய வேண்டியதாயிற்று. இதன்விளைவாக, *குளக்கரை/குளங்கரை* ஆகியவற்றில் நிகழும் நிலை மொழியாகிய *குளம்* என்பதன் ஈற்றில் நிகழும் மகர ஈற்றினையும் கெடுத்து இனவல்லொற்று மெல்லொற்றுக்களை மிகுவிக்க வேண்டியது அவருக்குத் தவிர்க்க முடியாத ஒன்றாகி விட்டது.

5. கருதுக: *பொன்+குடம்* என்பது *பொற்குடம்* என்று திரிவது போல, *அழன்+குடம்* என்பதும் **அழற்குடம்* எனத் திரிந்தமைவது இயல்பான புணர்ச்சி மரபாகும். மாறாக, *அழக்குடம்* என அது தொல்காப்பியத்தில் உள்ளதுபோல் திரிந் தமைந்தால் நிலைமொழியானது *அழன்* என இருக்க வாய்ப்பில்லை. *வியாழக்கிழமை, வியாழமாலை* ஆகிய தொடர்கள் *வியாழம்* என்ற சொல் வழக்கில் இருந்தபோது தோன்றி நிகழ்ந்தவையாகும். இவற்றின் நிகழ்ச்சி *வியாழம்* என்ற மகர ஈற்றுச்சொல் *வியாழன்* எனத்திரிந்த பின்னும் தொடர்ந்து வழக்கில் போற்றப்பட்டது. *வியாழம்* வழக்கிழந்த நிலையில் *வியாழக்கிழமை* என்ற தொடரின் அமைப்பினை *வியாழம்+கிழமை* என்று கொள்வதா அல்லது *வியாழன்+கிழமை* என்று கொள்வதா என்பது ஒரு கோட்பாட்டுச் சிக்கலைத் தோற்றுவிக்கின்றது. இத்தகைய சிக்கலைத்தான் *அழக்குடம்* என்பதிலும் எதிர்கொள்ள வேண்டி யுள்ளது. அகமீட்டுருவாக்க உத்தியைப் பயன்படுத்தி *வியாழக் கிழமை* என்ற தொடரை *வியாழம்+கிழமை* என்று ஆராயமுடியும். இதே போல் *அழக்குடம்* என்பதையும் வண்ணனை இலக்கணத்தில் *அழம்+குடம்* என்று ஆராய முடியும். *வியாழக்கிழமை, அழக்குடம், மகப்பேறு* ஆகியவற்றின் நிலைமொழிகளை வழக்கில் உள்ள *வியாழன் (<*வியாழம்), அழன் (<*அழம்), மக (<*மகம்)* எனக் கொண்டால் இயல்பான புணர்ச்சி மரபுக்கு வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. இந்தச் சோதனையில் தொல்காப்பிய ஆய்வு மரபானது மொழியில் உள்ளார்ந்த அமைப்பியல்பினை வெளிப்படுத்தத் தவறிவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

6. *மகத்துக்கை* என்பதன் நிலைமொழியை *மக* எனக் கொண்டதால் பிறிதோர் அமைப்பில் (கருதுக: *பனியத்து*) நிகழும் அத்துச் சாரியையை இங்கே திணித்து *மக+அத்து*- என்ற அடிநிலை அமைப்பைச் சுட்டி, *அத்தின் அகரம் அகரமுனை இல்லை* (இளம். 126) என்ற ஓர் ஒப்பனை விதியை வகுக்க வேண்டிய நெருக்கடி நிலைக்குத் தொல்காப்பியர் தள்ளப் பட்டார். இதன் விளைவாக *குளத்து, அழத்து, புழத்து* ஆகியவற்றின் அடிநிலை அமைப்புக்களிலும் அத்துச் சாரியையைத் திணித்து, நிலை மொழி ஈற்று மெய்களைக் கெடுக்க வேண்டியது தவிர்க்க முடியாததாகிவிட்டது. இத்தகைய ஆய்வுகள் ஒரு வலுவற்ற கோட்பாட்டினை மேற்கொண்டதால் விளைந்தவையாகும். வழக்கில் இல்லாவிட்டாலும் *அழக்குடம்/ அழத்து, புழத்து, மகத்து, தேக்குடம்/தேங்குடம்/தேத்திறால், வெரிக்குறை/வெரிங்குறை* ஆகியவற்றின் நிலை மொழிகளை அடிநிலை அமைப்புக்களில் **அழம், *புழம், *மகம், *தேம், *வெரிம்* என அக மீட்டுருவாக்கம் செய்திருந்தால் புறநிலை வடிவங்களில் இவற்றில் நிகழும் ஈற்று மகரம் இனவல்லொற்று இனமெல் லொற்றுக்களாகப் பதப் புணர்ச்சியிலும், விகுதிப் புணர்ச்சியிலும் திரிந்ததாகக் கொள்ளப்பட்டிருக்கலாம். இதன் மூலம் அத்துச் சாரியையைத் தவிர்த்துத் துகரச் சாரியையை இனங்கண்டிருக்கலாம்; நிலைமொழியின் ஈற்று மெய்யைக் கெடுப்பதும் தவிர்க்கப்பட்டி ருக்கலாம். இத்தகைய ஆய்வில் படிநிலை வளர்ச்சிகளால் அமைந்த மொழியின் எழுத்தியல் கட்டமைப்பானது சிதைய வாய்ப்பில்லை. **அழம், *புழம், *மகம், *தேம், *வெரிம்* ஆகியவை இயல்பான ஆய்வைக் கருத்தில் கொண்டு படைத்துக் கொள்ளப் பட்ட கற்பித வடிவங்களாயினும் அவை கற்பனை வடிவங்கள் அல்ல. அகமீட்டுருவாக்கத்தின் மூலம் படைத்துக் கொள்ளப்பட்ட இத்தகைய வடிவங்கள் வண்ணனை ஆய்வில் அடிக்கடி நாம் வலியுறுத்துவதைப் போல மாற்றுருபுகளாகக் கொள்ளப்படும். எடுத்துக்காட்டாக, *அழன்* என்பது ஓர் எழுத்தியல் சூழலிலும் **அழம்* என்பது பதப்புணர்ச்சியிலும் (எ-டு. அழக்குடம். கருதுக: மரக்கிளை) விகுதிப் புணர்ச்சியில் துகரச் சாரியை முன்னும் (எ-டு. அழத்து. கருதுக: மரத்து) நிகழ்வதாகக் கொள்ளப்படும். இதே போல் *தேத்திறால்* என்பதில் நிகழும் *தேத்து* என்னும் நிலைமொழி அமைப்பானது **தேம்+து* என்ற அடிநிலை அமைப்பிலிருந்து வருவிக்கப்படும். தெளிவான கோட்பாட்டின் மீதமைந்த இத்தகைய நுண்ணாய்வே அடிப்படை ஆய்வு (Fundamental Research) எனப்படும்.

7. தமிழ் மொழியைப் பற்றிய உள் கட்டமைப்பு ஆய்வுகள் (Infrastructural Studies) இன்னும் முனைப்பாக மேற்கொள்ளப்பட வில்லை. மொழியிலக்கணம் தொடர்பான தொல்காப்பியம் உள்ளிட்ட மரபிலக்கணங்களின் ஆய்வு பொதுவாக அடிப்படை ஆய்வு மரபுகளைப் பிரதிபலிப்பதாக இல்லை. எந்த நிலையிலும் மொழியின் வண்ணனை ஆய்வானது செயற்கையாக அமைவது தவிர்க்கப்பட வேண்டும். இலக்கண விளக்க உத்திகள் மொழியின் உள் கட்டமைப்பைச் சிதைக்காதனவாக இருக்க வேண்டும். வழக்கு மொழியானது பல படிநிலைகளை அதாவது பல வளர்ச்சிப் பரிமாணங்களைக் கடந்து வந்துள்ளதாகும். வண்ணனை இலக்கண விளக்கமானது இந்தப் பரிமாணங்களைக் கருத்தில் கொண்டதாக அமையும்போதுதான் மொழியின் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைப் புரிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. தொல்காப்பிய ஆய்வில் இதற்கான வாய்ப்பு இல்லாமற் போய்விட்டது. இந்த உண்மையைத் தமிழ் இலக்கண வல்லுநர்களும், மொழியியல் வல்லுநர்களும் இன்னும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஆயினும் மொழியின் கட்டமைப்பு விளக்கத்தைப் பொறுத்தவரையில் அடிப்படை ஆய்வினை முன்மொழிய வேண்டியது மொழியியலாரின் பொறுப்பும் கடமையுமாகும். மரபிலக்கணிகள் இந்தப் போக்கில் செயல்படத் தயங்குவதைத் தொல்காப்பியக் காலம் தொடங்கி இன்றுவரை கண்டு வருகிறோம். புதிய ஆய்வு மரபுகளைப் பகை நோக்கோடு விமர்சிப்பது மரபிலக்கணிகளுக்கு மொழியியல் மீதுள்ள காழ்ப்புணர்ச்சியைக் காட்டுவதாகவே உள்ளது. ஆகவே அவர்களிடமிருந்து புதிய ஆய்வுச் சிந்தனைகளை நாம் எதிர்பார்க்க வாய்ப்பில்லை.

8. ஓர் இலக்கை அடைய குறைந்தது இரண்டு வழிகளாவது இருந்தால்தான் இரண்டில் எது சிறந்தது என்பதை மதிப்பீடு செய்ய முடியும். ஒரு வழி மட்டும் இருந்தால் அதனை ஒப்பீட்டு முறையில் மதிப்பீடு செய்ய முடியாது. மரபிலக்கண ஆய்வைப் பொறுத்தவரை தொல்காப்பிய ஆய்வு மரபே இன்றுவரை மரபிலக்கணிகளால் பொதுவாகப் போற்றப்பட்டு வருகிறது. மாற்று ஆய்வு மரபானது முன் மொழியப்படாமையால் தொல்காப்பிய ஆய்வு மரபின் வன்மை மென்மைகளை மதிப்பீடு செய்ய முடியாத நிலை தொடர்ந்து நீடித்து வருகிறது. இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் போக்கில் *தமிழெனப்படுவது* என்னும் இந்த ஆய்வுத் தொகுப்பு அமைவதாகக் கருதலாம்.

9. தொல்காப்பியம் தமிழில் அமைந்த முதல் இலக்கண நூல் என்ற சிறப்பைப் பெற்றதாகும். இதில் இரண்டு கருத்துக்களுக்கு இடமில்லை. ஆனால் இதில் பதிவாகியுள்ள எழுத்தியல் ஆய்வில் பல நெருடல்கள் காணப்படுகின்றன. இவை அனைத்தும் கோட்பாட்டு நெருடல்களாகும். இவற்றைத் தவிர்த்து தமிழின் அமைப்பியல்புகளைப் புரிந்துகொள்ள வேண்டுமாயின் ஒரு மாற்று இலக்கண விளக்கக் கோட்பாட்டினை முன்மொழிந்தாக வேண்டும். தொல்காப்பியரின் இலக்கண விளக்கம் புற நிறைவுக் கோட்பாட்டினை (External Adequacy) மையமாகக் கொண்டதாகும். இந்தக் கோட்பாடு இலக்கை மட்டுமே கருத்தில் கொண்டதாகும். நடப்பியல் தரவுகள் (Empirical Data) இதற்குப் போதுமானவையாகும். அகமீட்டுருவாக்கத்தின் மூலம் வழக்கிழந்த வடிவங்களைக் கண்டறிந்து அவற்றை நடப்பியல் வடிவங்களின் மாற்றுருபு களாகக் கொள்வது பற்றிய சிந்தனைக்குத் தொல்காப்பிய ஆய்வில் வாய்ப்பில்லை. இதற்கு மாற்றாக அகநிறைவுக் கோட்பாடு (Internal Adequacy) சிந்தனைக்கு உரியதாகின்றது.

10. *தமிழெனப்படுவது* என்ற இந்தத் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ள ஆய்வுக் கட்டுரைகள் அகநிறைவுக் கோட்பாட்டினை மையமாகக் கொண்டவையாகும். புறநிறைவுக் கோட்பாட்டில் காணப்படுவதைப் போலவே அகநிறைவுக் கோட்பாட்டிலும் கற்பித வடிவங்களுக்கு இடமுண்டு. ஆனால் இருவகைக் கோட்பாடுகளின் அடிப்படையில் இலக்கணிகள் முன்மொழியும் கற்பித வடிவங்கள் முற்றிலும் மாறுபட்டவை யாகும். தொல்காப்பிய எழுத்தியல் ஆய்வில் காணப்படும் *அத்து, அக்கு, வற்று* ஆகிய சாரியைகள் கற்பித வடிவங்களாக இருந்தாலும் அவை வரலாற்று நிகழ்வுகள் அல்லவாகலின் மொழியின் கட்டமைப்பு தொடர்பான இலக்கண விளக்கத்தை இந்த வடிவங்கள் சிதைத்து விடுகின்றன. அகநிறைவுக் கோட்பாட்டில் கற்பித வடிவங்கள் வரலாற்று நிகழ்வுகளாகும். *அழக்குடம், மகத்துக்கை, தேக்குடம்* ஆகியவற்றில் நிலை மொழிகள்ாக் குறிக்கப்படும் **அழம், *மகம், *தேம்* ஆகியவை வண்ணனை ஆய்வில் கற்பித வடிவங்களாகத் தோன்றினாலும் அகமீட்டுருவாக்கத்தின் மூலம் பெறப்பட்ட அவை வரலாற்று நிகழ்வுகளாகக் கொள்ளத்தக்கவையாகும். ஏனெனில் *மரக்கிளை, மரத்து நிழல்* ஆகியவற்றில் காணப்படும் நிலைமொழிகளைப் போலவே *அழக்குடம், மகத்துக்கை, தேக்குடம், தேத்திறால்* ஆகியவற்றின் நிலைமொழிகளும் ஒரு பொதுவான மகர ஈற்று

நிலைமொழிப் புணர்ச்சி மரபைக் கொண்டவையாகும். இந்த உண்மையை இலக்கணிகள் கருத்தில் கொள்ளத்தவறும்போது தான் இலக்கண விளக்க ஆய்வானது திசைமாறி மொழியின் உள் கட்டமைப்பினையும், அதன் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளையும் புரிந்துகொள்ள முடியாமல் செய்துவிடுகின்றது. *தேத்து, அழத்து, மகத்து* ஆகியவற்றின் நிலைமொழிகளை மகர ஈற்றினவாகவும் அவற்றையடுத்து நிகழும் சாரியையைத் துகரக் கிளவியாகவும் கொள்ளும்போது தமிழின் எழுத்தியல் உள் கட்டமைப்புச் சிதையாமல் பாதுகாக்கப்படுகின்றது.

11. *ஈமக்குடம், தாழக்கோல், தமிழக்கன்னி/தமிழவேள், மன்றப்பெண்ணை, குன்றக்கூகை* முதலானவற்றின் நிலை மொழிகளை முறையே *ஈம்* (329), *தாழ்* (385), *தமிழ்* (386), *மன்று/ குன்று* (129) என்று இனங்கண்டு மேற்படி புறநிலை வடிவங்களை அக்குச் சாரியையைப் பெய்து செயற்கை விதிகளின் மூலம் வருவிக்க முயல்கிறார் தொல்காப்பியர். *மரவேர்* (<மரம்+வேர்) என்பதற்கு ஓர் ஆய்வும் *தமிழவேள்* (<தமிழ்- அக்கு+வேள்) என்பதற்கு இன்னொரு ஆய்வும் முன்மொழியப் படுவது தொல்காப்பிய ஆய்வில் காணப்படும் ஒரு கோட்பாட்டு நெருடலாகும். தொல்காப்பியரின் அக்குச் சாரியையை ஏற்றுக் கொண்டால் *மீனக்கொடி* (சிலம்பு. 29. 27.4), *துன்பக்கேணி, இன்பக்கனா, வானவீதி, கானக்கோழி, காமக்கலன்* (குறள். 605), ஆகியவற்றின் நிலைமொழிகளை முறையே *மீன், துன்பு, இன்பு, வான், கான், காம்* எனக் கொள்ள வேண்டும். ஆனால் பழந் தமிழிலேயே *ஈமம், மன்றம், குன்றம், துன்பம், இன்பம், வானம், கானம், காமம்* ஆகிய வடிவங்களின் நிகழ்ச்சியும் அம் என்னும் பகுதிப் பொருள் விகுதியுடன் காணப்படுகின்றன. இவற்றின் நிகழ்ச்சியைத் தொல்காப்பியர் அறியாமல் இருக்க வாய்ப்பில்லை. இவற்றைக் கருத்தில்கொண்டு அக்குச் சாரியையைத் தவிர்த்து, அம் சாரியையைக் கொண்ட ஓர் ஆய்வைத் தொல்காப்பியர் முன்மொழியாதது அவர் மேற்கொண்ட எழுத்தியல் கோட் பாட்டின் குறைபாட்டினையே காட்டுவதாக உள்ளது. இந்த அம் சாரியையானது பிந்திய நிலையில் சொல்லின் ஒருங்கிணைந்த விகுதியாக - அதாவது பகுதிப் பொருள் விகுதியாக - அமைந்து *மீனம், ஈமம், மன்றம், குன்றம், இன்பம், துன்பம், வானம், கானம், காமம்* முதலான சொற்களின் தோற்றத்துக்கு வழிவகுத்துக் கொடுத்துள்ளது. இந்த உண்மையைத் தொல்காப்பியர் கருத்தில் கொண்டிருந்தால் அக்குச் சாரியை என்ற ஒன்றைப் படைத்துக் கொள்ளவேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டிருக்காது.

12. தொல்காப்பிய ஆய்வில் காணப்படும் இன்னொரு கோட்பாட்டு நெருடல் *எகினக்கால்* (338), *கன்னக்குடம்* (347) ஆகியவற்றின் அடிநிலை அமைப்பைப் பற்றியதாகும். இவற்றின் அடிநிலை அமைப்புக்களில் அக்குச் சாரியைக்கு இடமில்லை. இதற்கான விளக்கம் தொல்காப்பிய ஆய்வில் காணப்படவில்லை. இந்தத் தொடர்களில் நிலைமொழியையடுத்து அகரமும் அதனையடுத்து வருமொழி வல்லொற்றும் மிகும் என்பது தொல்காப்பிய ஆய்வு (338, 347). *செருவக்களம்* (261) என்பதன் அடிநிலை அமைப்பில் அம் சாரியையைக் குறிப்பிடும் தொல்காப்பியர் *எகினக்கால், கன்னக்குடம்* ஆகியவற்றின் அடிநிலை அமைப்புக்களில் அம் சாரியையைக் குறிக்கவில்லை. இதற்கான விளக்கமும் தொல்காப்பிய ஆய்வில் காணப்பட வில்லை. நன்னூலாரின் ஆய்வில் அக்குச் சாரியை முற்றிலுமாகத் தவிர்க்கப்பட்டுள்ளது. *ஈமக்குடம், கம்மக்குடம்* (நன். 223) ஆகியவற்றில் அகரச் சாரியை நிகழ்வதாக நன்னூலார் கருதுகிறார். *எகினப்புள்/எகினம்புள்* (நன். 215), *கன்னத்தட்டு/ கன்னந்தட்டு* (நன். 217) ஆகியவற்றின் நிகழ்ச்சி நன்னூலார் ஆய்வில் காணப்படுகிறது. தொல்காப்பியர் காலத்தில் **எகினங்கால், *கன்னங்குடம்* ஆகியவற்றின் நிகழ்ச்சி கிளை மொழி வழக்காக அமைந்து அவரது எழுத்தியல் தரவில் இடம் பெறாமல் போயிருக்கலாம். இதன் காரணமாகவே *எகினக்கால், கன்னக்குடம்* ஆகியவற்றின் அடிநிலை அமைப்புக்களில் அக்குச் சாரியையைக் குறிப்பிடத் தொல்காப்பிய ஆய்வில் வாய்ப் பில்லாமல் போய்விட்டதாகத் தோன்றுகிறது. ஆனால் இந்தத் தொடர்களின் அடிநிலை அமைப்பில் ஏன் அம் சாரியை கருத்தில் கொள்ளப்படவில்லை என்பதற்கான விளக்கம் தொல்காப்பிய எழுத்தியல் ஆய்வில் காணப்படாதது ஒரு கோட்பாட்டுப் பின்னடைவாகவே கருதப்படும். ஆயினும் நாம் முன்மொழியும் கோட்பாட்டின்கீழ் அக்குச் சாரியை முற்றிலுமாகத் தவிர்க்கப்பட்டு அம் சாரியை குறிக்கப்படும். இதேபோல் *எகினக்கால், கன்னக்குடம்* ஆகியவற்றிலும் அம் சாரியை நிகழ்வதாகவே கொள்ளப்படும். *எகினம்* என்ற (பிந்திய) வழக்கும் இதனை வலியுறுத்துகின்றது.

13. தொல்காப்பியரின் வற்றுச் சாரியை பிறழ்பிரிப்பின் விளைவாகும். இதில் நிகழும் வகரம் பல சொல்லியல் அமைப்பு களில் நிலைமொழிக்கு உரியதாகும். *அவற்றை* என்ற அமைப்பில் *அவ்* என்பதே நிலைமொழி. இதனைத் தொல்காப்பியரும் உணர்ந்துள்ளார். ஆனால் *அவற்றை* என்பதை அவர் *அவ்-அற்று*+

*ஐ* என்று இனம் காணாமல் *அவ்-வற்று+ஐ* என்ற அடிநிலை அமைப்பிலிருந்தே வருவிக்கிறார். ஒரு செயற்கையான அதாவது ஓர் ஒப்பனை விதியின் மூலம் (134) *அவ்* என்பதில் நிகழும் வகரத்தைக் கெடுத்து *அவற்றை* என்ற அமைப்பைத் தொல் காப்பியர் வருவிப்பதாகத் தோன்றுகிறது. *அவற்றை, இவற்றை, உவற்றை* ஆகியவற்றின் நிலைமொழிகளை *அவை, இவை, உவை* எனக்கொண்டு *"ஐகாரம் கெட்டவழி நின்ற வகரத்தினை வற்றின்மிசை ஒற்றென்று கெடுத்து"* மேற்படி வடிவங்களை வருவிப்பார் இளம்பூரணர் (தொல். எழுத்து. நூற்பா. 178. உரை) *அவையற்றை (<அவை-வற்று+ஐ)* என்பதை வற்றுச் சாரியையின் வகரத்தைக் கெடுத்து வருவிக்கும் தொல்காப்பியர் (123), *யாவற்றை* (179) என்பதை *யாவை-வற்று+ஐ* (179) மற்றும் *யா-வற்று+ஐ* (176) ஆகிய இருவகை அடிநிலை அமைப்புக்களி னின்றும் வருவிக்கிறார் (178). *அவற்றை* என்பதையும் *அவை-வற்று+ஐ* (282) என்ற அமைப்பிலிருந்து தொல்காப்பிய ஆய்வு வருவிக்கிறது. ஆக *அவற்றை, யாவற்றை* ஆகியவை ஒவ்வொன்றும் இயற்கைக்கு மாறாக இரண்டு நற்றாய்களைக் கொண்டவையாகத் தொல்காப்பிய ஆய்வில் காணப்படுகின்றன. *அவை, யாவை* இரண்டிலும் *வை* என்பதை நீக்கி *அ, யா* ஆகியவற்றோடு வற்றுச் சாரியையைப் புணர்விக்கும் தொல்காப்பிய ஆய்வானது நேரிதான ஆய்வாகத் தோன்றவில்லை. *வற்று* என்பதில் நிகழும் வகரம் நிலைமொழிக்கு உரியது என்று முன்பே குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் *அவற்றை, யாவற்றை, நல்லவற்றை, செய்தவற்றை, செய்பவற்றை, செய்யாதவற்றை* ஆகியவை **அவ்/*யாவ்/*நல்லவ்/*செய்தவ்/*செய்பவ்/*செய்யாதவ்-அற்று+ஐ* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படும். **நல்லவ், *செய்தவ், *செய்பவ்* ஆகிய நிலைமொழிகள் தனியாக நிகழ்கையில் ஈற்று வகரத்தை இழந்து *நல்ல, செய்த, செய்ப (மன்னர் விழைப விழையாமை* (குறள். 692)) எனப் பழந்தமிழில் நிகழ்கின்றன. ஆக *செய்தவ், செய்த* முதலானவற்றில் நிகழும் அவ்வென் கிளவியும் அகரக் கிளவியும் பன்மையைக் குறிக்கும் விகுதிகளாக அமைந்து மாற்று உருபுகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. இந்த உண்மைகள் யாவும் தொல்காப்பிய ஆய்வில் தெளிவுபடுத்தப்படவில்லை. இதனால்தான் தொல்காப்பிய ஆய்வினை வலுவான கோட்பாட்டின் மீதமைந்த அடிப்படை ஆய்வினதாகக் கருதமுடியவில்லை.

14. நான்கன் உருபேற்கும் சொற்களைப் பொறுத்தவரை குகரத்தின்முன் நிகழும் ககர வல்லொற்றின் மிகுதியை *வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு, ஒல்வழி ஒற்றிடை*

*மிகுதல் வேண்டும்* (115) என்று விளக்குகிறார் தொல்காப்பியர். *ஊர்க்கு* என்பதில் நிகழும் ஒற்று மிகுதியை இவ்வாறு விளக்கும் தொல்காப்பியர் *ஊருக்கு* என்பதற்கும் *ஊர்க்கு* என்பதற்கும் உள்ள தொடர்பினை விளக்காதது வியப்பாக உள்ளது. *உகரக்கு* (<உகரம்+கு/ 168), *நலக்கு* (<நலம்+கு/குறள். 149) *நிலக்கு* (<நிலம்+கு/ குறள். 570,1003), *வையக்கு* (<வையம்+கு/குறள். 701) *குலக்கு* (<குலம்+கு/சிலம்பு. 24.10) ஆகியவற்றின் அமைப்பினைப் பற்றிய தொல்காப்பிய ஆய்வு அமைதி காப்பதாகவே தோன்றுகிறது. நிலைமொழியின் மகரத்தைக் கெடுத்து வல்லொற்றை மிகுவித்து மேற்படி சொல்லமைப்புக்களை வருவிப்பது தொல்காப்பியரின் உத்தேசமாக இருக்கலாம். புள்ளி மயங்கியலில் காணப்படும் *மகர இறுதி வேற்றுமையாயின் துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே* (311) என்ற நூற்பா *உகரக்கு, நிலக்கு, குலக்கு* ஆகியவற்றை வருவிக்கத் துணைபுரியுமா என்பது சிந்தனைக்குரியதாகும். ஆயினும் *நிலம்+கு* என்ற அடிநிலை அமைப்பானது எடுத்துக் காட்டாக **நிலங்க்உ>நிலக்கு* எனத் திரிந்தததாகவே நாம் முன்மொழியும் மாற்று ஆய்வில் கொள்ளப்படும்.

15. நான்கன் உருபினையடுத்து வல்லொலற்று மிகுவதும் (எ-டு. அவனுக்குக் கொடு) தீர்க்கப்பட வேண்டிய ஒரு சிக்கலே. இங்கே நிகழும் வல்லொற்று மிகுதியை மகரத்தின் திரிபாகவே கோட்பாட்டு நிலையில் கருதலாம். இதனடிப்படையில் வருமொழி வல்லொற்றாயின் *கும்* என்பதும் பிற எழுத்தியல் சூழல்களில் *கு* என்பதும் மாற்றுருபுகளாய் அமைந்து நான்கன் உருபு நிகழ்வதாகக் கொள்ளமுடியும். பழந்தெலுங்கிலும் இடைக்காலத் தெலுங்கிலும் *கு, குன்* இரண்டும் நான்கன் உருபுகளாக நிகழ்கின்றன. இவற்றுள் *குன்* என்பதில் நிகழும் னகர மெல்லொற்று வருமொழி வல்லொற்றுக்கேற்ப அதன் இன மெல்லொற்றாகத் திரிகிறது. எனவே *குன்* என்பதைக் **கும்* என மீட்டுருவாக்கம் செய்யமுடியும். தமிழில் **கும்* என்பதில் நிகழும் மகர ஒற்று வருமொழி வல்லொற்றுக்கேற்ப இன வல்லொற்றாகத் திரிகிறது. எ-டு. *அவனுக்குக் கொடு, அவனுக்குத் தலைவலி, அவனுக்குச் செலவு இல்லை, அவனுக்குப் பள்ளி விடுமுறை.*

16. தமிழ் வினையமைப்புக்களில் நிகழும் கால விகுதிகள் குறிப்பாக இயைபு விகுதிகளின் முன் நிகழ்பவை மறு பரிசீலனைக்கு உரியவை ஆகின்றன. *எடுத்தான், எடுப்பான், அறிந்தான், அறிவான்* ஆகிய வினைகளின் அமைப்பில் நிகழும் கால விகுதிகளைப் பற்றித் தொல்காப்பிய ஆய்வு அமைதி காக்கிறது. நன்னூலார், எடுத்துக்காட்டாக, *எடுத்தான், அறிந்தான்*

என்பனவற்றை *எடு-த்-த்-ஆன், 'அறி-த்-த்-ஆன்* என்ற அமைப் பினவாகக் கொண்டு முன்னதில் நிகழும் முதல் தகரத்தைச் சந்தி எனவும், பிந்தியதில் நிகழும் முதல் தகரமாகிய சந்தி நகரமாக விகாரப்படுகிறது எனவும் தனது ஆய்வை முடித்துக் கொள்கிறார். இக்கால மொழியியலார் மேற்படி வினைகளை எடு-த்த்+ஆன், எடு-ப்ப்+ஆன், அறி-ந்த்+ஆன், அறி-வ்+ஆன் என ஆராய்கின்றனர். இந்த ஆய்வுகளில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம் யாதெனில் நிலை மொழியாகிய பகுதியானது வழக்கில் உள்ளதாக இருக்கவேண்டும் என்ற அழுத்தமான சிந்தனைப் போக்காகும். கடுமையானதும் தளர்த்த வேண்டியதுமான இந்தக் கோட்பாட்டு நிபந்தனை யானது கல்வி சார்ந்த (Pedagogical) விதிமுறை இலக்கணத்துக்கு ஏற்புடையதாக இருக்கலாம். ஆனால் அகநிறைவுக் கோட் பாட்டினைக் கருத்தில் கொண்ட ஆய்வுக்கு இத்தகைய சிந்தனைப் போக்கு பொருந்தாது. ஏனெனில் மொழியின் படிநிலை வளர்ச்சிகளை விளக்கும் வகையில் இலக்கண விளக்கம் அமைய வேண்டும் என்பது அகநிறைவுக் கோட்பாடு வலியுறுத்தும் தாரக மந்திரமாகும். இதன் அடிப்படையில் *எடுத்தான், எடுப்பான், அறிந்தான்* ஆகியவற்றின் பகுதிகளை *எடும், அறிம்* எனக் கொள்ள வாய்ப்புள்ளது. இவை *எடு, அறி* ஆகியவற்றின் மாற்று உருபுகளாகக் கருதப்படும் வினைப் பகுதியின் வடிவம் அல்லது இலக்கணப் பொருண்மைக்கு (அதாவது தன்வினை/ பிற வினைக்கு) ஏற்ப செய்ம் வாய்பாட்டு மாற்றுருபுகளில் நிகழும் மகர ஈறானது வல்லொற்றுக் கால இடைநிலைகளின் முன் இன வல்லொற்றுக்களாகவோ, இன மெல்லொற்றுக்களாகவோ திரிந்தமையும். எ-டு. எடும்> [எடுத், எடுக், எடுப்]/- [த்,க்,ப்] (எடுத்தான்/எடுக்கான்/எடுப்பான்), *அறிந்து*- என்பது *அறிம்* > *அறித்/-த்* என்று ஆராயப்படும் (இரா. கோதண்டராமனில் 2002ஆ, 2002இ இதுபற்றிய விரிவான ஆய்வினைக் காண்க).

17. *எடுக்கின்றான்/எடுக்கும்/எடுக்க, அறிகின்றான்/அறிக* ஆகியவற்றின் வினைப்பகுதிகள் *எடுக்கு, அறிகு* எனக் கொள்ளப் படும். இந்த வடிவங்கள் *எடு, அறி* ஆகியவற்றின் மாற்றுருபு களாகும். இந்த ஆய்வினின்றும் *எடு, அறி* ஆகிய வினைப் பகுதிகள் *எடும்/அறிம், எடுக்கு/அறிகு* ஆகிய மாற்றுருபுகளைக் கொண்டவை என்ற உண்மை பெறப்படுகின்றது. மேலும் *எடுக்கு, அறிகு* ஆகிய மாற்றுருபுகள் நிகழ்கால இடைநிலையை, *கின்று* என்பதற்கு மாறாக *இன்று* என்பதை இனங்காண வகை செய்கின்றன. *எடுக்கு, அறிகு* ஆகியவை போன்ற வினைப் பகுதிகளின் நிகழ்ச்சியைப் பழந்தமிழில் பரவலாகக் காணலாம்.

எ-டு. *கொடுக்குவர்* (கொடுக்கு-வ்+அர்/புறம். 182.5), *அறிகுவள்* (அறிகு-வ்+அள்/நற். 317.6). குமரித் தமிழில் நிகழும் *படிக்கான், செய்கான்* ஆகிய நிகழ்கால வினைமுற்றுக்களின் அமைப்பு *படிம்-க்+ஆன், செய்-க்+ஆன்* என்று ஆராயப்படும். பழந்தமிழில் நிகழும் *அளித்தும்* (=அளிப்போம்), *அளித்தி* (=அளிப்பாய்), *அளித்திர்* (=அளிப்பீர்) ஆகிய வினைகள் *அளிம்-த்+உம்/இ/இர்* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படும். இங்கே வினைப் பகுதிகளின் மாற்றுருபுகளாக நாம் இனங்கண்டுள்ள வடிவங்கள் வழக்கில் இல்லாதவை; ஆயினும் அவை வரலாற்று நிகழ்வுகளாகும். வண்ணனை ஆய்வில் இத்தகைய வரலாற்று நிகழ்வுகளைக் கண்டறியவேண்டியது ஆய்வாளனின் பொறுப்பும் கடமையு மாகும். கண்டறியாத நிலையில் எழுத்தியல் ஆய்வில் பிறழ் பிரிப்புகள் தவிர்க்க முடியாதவையாகின்றன.

18. மையீற்றனவாக மரபிலக்கணிகளால் ஆராயப்படும் பல வடிவங்கள் உண்மையில் ஐயீற்றனவாகும். பிறழ்பிரிப்பு ஆய்வின் காரணமாக அவை மையீற்றனவாகக் கருதப்படுகின்றன. செய்மின், செய்மதி, செய்மோ முதலான வாய்பாட்டு வினைகள் செய்ம்+இன்/அதி/ஓ என்ற அமைப்பினவாக ஆராயப்படாமல் செய்+மின்/மதி/மோ என ஆராயப்படுவது சந்தியில் நிலைமொழி அல்லது பகுதியானது வழக்கில் உள்ளதாக இருக்க வேண்டுமென்ற நம்பிக்கைதான் காரணம். செய்மார் வாய்பாட்டு வினைகள் மரபிலக்கணிகளால் செய்-ம்+ஆர் என்று ஆராயப் படாமல் செய்+மார் என்று ஆராயப்படுவதற்கும் இத்தகைய நம்பிக்கைத்தான் காரணம். செய்மார், செய்மின் முதலான வாய்பாட்டு வினைகள் தமிழில் வல்வினை-மெல்வினை பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே தொல்வழக்கில் நிகழ்ந்தவையாகும். தமிழில் இத்தகைய வினைகள் தொல்வழக்கின் எச்சங்களாக நிலை கொண்டுவிட்டன. இந்த உண்மையை அறியாத மரபிலக்கணிகள் பிறழ் பிரிப்பு உத்தியைக் கையாளவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். வண்ணனை ஆய்வில் மேலே குறிப்பிட்டது போன்ற வரலாற்று நிகழ்வுகளை இனங்காண முடியும். இந்த வகையில் ஆய்வாளனுக்கு ஆழ்ந்த மொழியியல் புலமை மட்டுமின்றி வரலாற்று நோக்கும், ஒப்பியல் நோக்கும் கருவிகளாக அமைய வேண்டும். இத்தகைய கருவிகள் இல்லாமல் வகுக்கப்படும் மரபுவழி வண்ணனை இலக்கணங்கள் மொழியின் இயல்பான அமைப்பியல் பாங்கினையும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளையும் புரிந்துகொள்ள ஒருபோதும் துணை புரியாது.

19. மரபிலக்கணங்கள் காலம் காலமாகப் பின்பற்றிவரும் புறநிறைவுக் கோட்பாட்டின் அடிப்படையிலான ஆய்வு மரபிலிருந்து விலகி அகநிறைவுக் கோட்பாட்டின் பின்னணியில் தமிழின் அமைப்பியல்புகளை ஆராய்வதன் மூலம் ஒரு புதிய ஆய்வு மரபைத் *தமிழெனப்படுவது* முன் மொழிகிறது. தமிழ் மொழியின் உள் கட்டமைப்பானது வரலாற்று நோக்கிலும் ஒப்பியல் நோக்கிலும் இந்தத் தொகுப்பு நூலில் ஆராயப் பட்டுள்ளது. தமிழ் மொழியியல் ஆய்வு ஒரு புதிய பாதையில் பயணத்தை மேற்கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது. வரலாற்று உண்மைகளையும் ஒப்பியல் ஆய்வின் முடிபுகளையும் உள்வாங்கிய நிலையில் வகுக்கப்படும் வண்ணனை இலக்கணம் மொழியின் படிநிலை வளர்ச்சிகளைப் பிரதிபலிப்பதாக அமையக் கூடாது என்ற நியதி எதுவும் இல்லை. எடுத்துக் காட்டாக, *மகனுக்கு* என்பதன் அடிநிலை அமைப்பு *மகன்-உம்+கு* என்று நமது ஆய்வில் குறிக்கப்படுகிறது. இதேபோல் *எனக்கு* என்பதன் அடிநிலை அமைப்பானது *என்-அம்+கு* எனக் கொள்ளப்படுகிறது. இவற்றிலிருந்து தோன்றியமையும் *மகனுக்கு, எனக்கு* ஆகியவை இடைநிகழ் உயிர்களை இழந்து **மகன்க்கு, *என்க்கு* என அமைகின்றன. இவற்றினின்றும் தோன்றி நிகழும் இடைநிலை வடிவங்களாகிய **மகற்க்கு, *எற்க்கு* என்பவற்றினின்றும் *மகற்கு, எற்கு* ஆகிய புறநிலை வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன. இத்தகைய ஆய்வினை மரபிலக்கணங்களில் காணமுடியாது. இந்த ஆய்வில் உம், அம் சாரியைகள் நான்கன் உருபின் முன் நிகழ்கின்றன. இது வரலாற்று உண்மை. இங்கே இன்னொரு உண்மையையும் குறிப்பிட்டாக வேண்டும். தமிழ் எழுத்தியலைப் பொறுத்தவரை **அழம், *புழம், *மகம், *தேம்* முதலானவற்றை அகமீட்டுருவாக்கம் செய்ததைப் போல் *எனக்கு, மகனுக்கு* ஆகியவற்றில் *அம், உம்* சாரியைகளையும் அகமீட்டுருவாக்கம் செய்யமுடியும். இவற்றுள் அம் என்பது *புளியங்கன்று, தண்ணந் துறைவன்* முதலானவற்றில் வெளிப்படையாக நிகழ்வதைக் காணலாம். உம் சாரியையின் நிகழ்ச்சியை *மாணவர்கள் எல்லாரும், எல்லா மாணவர்களும்* ஆகிய தொடர்களிலும் காணலாம். சாரியைகள் வெளிப்படையாக நிகழாவிட்டாலும் அகமீட்டுருவாக்கம் செய்யமுடியும். இதன் மூலம் எழுத்தியல் ஆய்வானது மொழியின் எழுத்தியல் கட்டமைப்பினை இயல்பான போக்கில் விளக்கத் துணைபுரியும். இந்த உண்மையை வெளிப்படுத்தும் வண்ணனை இலக்கணம் புறநிறைவுக் கோட்பாட்டின் மீதமைந்த மரபிலக்கணத்தைவிடச் சிறந்ததாகக் கருதப்படும்.

20. தமிழ் எழுத்தியலானது படிநிலை வளர்ச்சிகள் பலவற்றைக் கொண்டதாகும். எழுத்துப்பேறுகளும், சாரியைகளும், பலதிறப்பட்ட புணர்ச்சி மரபுகளும் இந்த உண்மையை வலியுறுத்து வனவாகும். அல்வழி, வேற்றுமைப் பாகுபாடுகள் ஆய்வுக்குத் தேவையான வண்ணனைக் கருவிகள் அல்லது உத்திகளாயினும் அவை மொழியின் படிநிலை வளர்ச்சிகளை உணர்த்துவனவல்ல. வண்ணனை ஆய்விலேயே எழுத்துப் பேறுகளைப் பற்றியும் அவை எவற்றின் எச்சங்கள் என்பது பற்றியும், புதையுண்டு கிடக்கும் சாரியைகளைப் பற்றியும் தெளிவாகவும் அறிவுபூர்வ மாகவும் பேசியாக வேண்டும். வண்ணனை இலக்கணம் என்பது மொழியின் இயல்பான உள்கட்டமைப்பினைப் புரிந்துகொள்ளும் ஒரு முயற்சியாகும். இதிலிருந்துதான் விதிமுறை இலக்கணங்கள் (Prescriptive Grammars) தோன்ற வேண்டும். விதிமுறை இலக்கணங்கள் தன்னிச்சையாகத் தோன்ற முடியாது. மொழியின் அமைப்பு எப்படி இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாமல் மொழியின் அமைப்பு இப்படி இருக்கவேண்டும் என்று விதி வகுப்பது மொழியின் அமைப்பியல்புகளை உள்ளது உள்ளபடி அறிந்து கொள்ள வகை செய்யாது.

21. மொழியியலில் வண்ணனை மொழியியல் என்பது ஒரு முக்கியமான பிரிவாகும். வண்ணனை இலக்கணத்துக்கான கோட்பாடு வண்ணனை மொழியியலைச் சார்ந்ததாகும். வண்ணனை இலக்கணம் நேர்முக வர்ணனையாக இல்லாமல் இலக்கண விளக்க நிறைவுள்ளதாக அமையவில்லையாயின் வண்ணனை மொழியியல் கோட்பாடு கண்டிப்பாக மறுபரிசீலனைக்குரியதாகும். தொல்காப்பியம் உள்ளிட்ட தமிழ் மரபிலக்கணங்கள் எல்லாம் வண்ணனை மொழியியல் கோட்பாட்டுக்கு இசைவாக அமைந்துள்ளது போல் தோன்றினாலும் அவை இலக்கண விளக்க நிறைவற்ற நேர்முக வர்ணனை இலக்கணங்களாகவே காணப்படுகின்றன. மொழியின் படிநிலை வளர்ச்சிகள், மொழியில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகள், புதையுண்டு கிடக்கும் அமைப்பியல்புகள் முதலான இலக்குகளைத் தொட்டு மொழியின் அமைப்பைத் தெளிவுபடுத்தாத எந்த இலக்கணத்தையும் முழுமையான இலக்கணமாகக் கருத முடியாது. வண்ணனை மொழியியல் கோட்பாடானது மேலே குறிப்பிட்ட இலக்குகளைக் கருத்தில் கொண்டதாக இல்லையெனில் அதன் அடிப்படையில் அமையும் வண்ணனை இலக்கணங்களுக்கு மாறாக இலக்கண விளக்க நிறைவுள்ள இலக்கணங்களை வகுப்பதற்கேற்ற வகையில்

வண்ணனை மொழியியல் கோட்பாடு அமைய வேண்டும். தமிழைப் பொறுத்தவரையில் வண்ணனை மொழியியல் கோட்பாடு மேலோட்டமாகவே வண்ணனை மொழியியலாரின் கவனத்தை ஈர்த்துள்ளது. இது இந்த கோட்பாட்டின் குறைபாடன்று. அகமீட்டுருவாக்கங்களுக்கு வண்ணனை மொழியியல் கோட்பாட்டில் போதிய வாய்ப்பிருந்தும் மரபிலக்கணிகளும், இக்கால மொழியியல் இலக்கணிகளும் இதனைக் கருத்தில் கொள்ளவே இல்லை. காரணம், இலக்கணத் தரவுகள் நடப்பியல் மொழி சார்ந்தனவாக இருக்கவேண்டும் என்ற அழுத்தமான நம்பிக்கையாகும். இதனால் தமிழின் உள்ளார்ந்த அமைப்பியல்புகளை இன்றளவும் சரியான கோட்பாட்டுப் பாதையில் சென்று புரிந்துகொள்ள முடியாமற் போயிற்று. இந்தக் குறைபாடுகளைக் கருத்தில் கொண்டே அவற்றைத் தவிர்க்கும் முயற்சியின் வெளிப்பாடாகத் *தமிழெனப்படுவது* என்ற இந்த ஆய்வுத் தொகுப்பினைக் கருதலாம்; அப்படித்தான் கருதவேண்டும்.

இறுதியாக ஒன்றைக் குறிப்பிடவேண்டும். இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள கட்டுரைகள் பல்வேறு கால இடைவெளிகளில் எழுதப்பட்டவையாகும். ஒவ்வொரு கட்டுரையும் அதனளவில் நிறைவுள்ளதாகும். எனவே கூறியது கூறல் மாறுபட்ட அல்லது முரண்பட்ட ஆய்வு முடிபுகள், அமைப்பியல் இடைவெளிகளினால் ஆய்வாளனுக்கு ஏற்படும் தயக்கங்கள், மயக்கங்கள், குழப்பங்கள், தெளிவின்மை, நிறைவின்மை முதலான (எரிச்சலூட்டும்) நெருடல்கள் சில ஆய்வுக் கட்டுரைகளில் காணப்படுவது தவிர்க்க முடியாதவையாகி விட்டன. அகநிறைவு, புறநிறைவு தொடர்பான செய்திகள் பல கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. சிலவகை முற்றுவினைப் பகுதிகளின் தோற்றம் பற்றிய ஆய்வுகள் ஒன்றுக்கு மேற்பட்ட கருதுகோள்களின் பின்னணியில் நிகழ்த்தப் பெற்றுள்ளன. அடிப்படை ஆய்வுகளில் இத்தகைய ஈரொட்டு நிலைப்பாடுகள் ஆய்வாளனுக்குப் பெரும் சோதனைகளாகும்; தவிர்க்க முடியாதவையும் ஆகும். இவற்றைக் கடக்காமல் உண்மைகளைக் கண்டறியவும் முடியாது. ஆகவே இத்தகைய குறைகளைப் பொறுத்து, கற்றனைத்து ஊறும் அறிவு என்பதைக் கருத்தில் கொண்டு ஆய்வாளர்கள் நிறைகளை நெஞ்சில் நிறுத்துமாறு வேண்டுகிறேன்.

இரா. கோதண்டராமன்

# நன்றியுரை

*தமிழெனப்படுவது* என்ற ஆய்வுத் தொகுதிக்கு முதன் முதலில் அடிகோலியவர் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர். கி. நாச்சிமுத்து அவர்கள் ஆவார். கடந்த கால் நூற்றாண்டளவில் ஒவ்வொரு முறை சந்திக்கும் போதும் தமிழ் மொழியியல் தொடர்பான எனது ஆய்வுக் கட்டுரைகள் நூல் வடிவில் வெளியிடப்பெற்று எதிர்கால ஆய்வாளர்களுக்கு அவை உந்து சக்தியாக அமையவேண்டும் என்று பேராசிரியர் நாச்சிமுத்து அவர்கள் தொடர்ந்து வலியுறுத்தி வந்தார்கள். ஒரு கனவை நனவாக மாற்றிய பலருள் பேராசிரியர் நாச்சிமுத்து அவர்களுக்கு முதலிடம் உண்டு. *தமிழெனப்படுவது* என்ற இந்த ஆய்வுத் தொகுதி அவரது கனவின் நனவுத்தடமாகும். எனது முயற்சிக்குப் பின்புலமாக விளங்கிய அவருக்கு எனது முதல் மரியாதையையும் நன்றியையும் பதிவு செய்வதில் நான் மிகுந்த மன நிறைவு கொள்கிறேன்.

தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்ட எனது தமிழ் மொழியியல் ஆய்வுக் கட்டுரைகளை நூல்வடிவில் கொணர விருப்பம் தெரிவித்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்னுடன் *17-02-2000, 06-03-2000* தேதியிட்ட மடல்களின் வாயிலாகத் தொடர்பு கொண்டது. நிறுவனத்தின் வேண்டுகோளுக்கிணங்க *15-03-2000* அன்று தமிழில் எழுதப்பெற்ற நாற்பத்திரண்டு ஆய்வுக் கட்டுரைகள் அனுப்பி வைக்கப்பட்டன. இந்த வகையில் மேற்படி நிறுவனத்தின் அன்றைய இயக்குநர் முனைவர் ச. சு. இராமர் இளங்கோ அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சியை நன்றியுடன் நான் நினைவு கூர்கிறேன். சுமார் எண்ணூறு பக்க அளவில் கணினியில் வடிக்கப்பெற்ற எனது ஆய்வுக் கட்டுரைகள் ஒரே தொகுதியாக வெளியிடத் தொடக்கத்தில் திட்டமிடப்பட்டு நூலின் தலைப்பு *தமிழ் தேடும் தமிழ்* என்று முடிவு செய்யப் பட்டது. பின்னர் இந்தத் தலைப்பு *தமிழெனப்படுவது* என மாற்றப்பட்டது. இதனைத் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளின் கணினிப்படிகள் இருமுறை திருத்தப்பெற்றன. இந்த நிலையில் முனைவர் இராமர் இளங்கோ அவர்களின் பதவிக்காலம் முடிந்து

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அடுத்த இயக்குநராக முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள் பொறுப்பேற்றார்கள். ஆய்வுக் கட்டுரைகள் அனைத்தையும் சுமார் எண்ணூறு பக்க அளவில் ஒரே நூலாக வெளியிடுவதில் உள்ள சில நடைமுறைச் சிக்கல்களை விளக்கி இரண்டு நூல்களாக அவற்றை வெளியிடலாம் என்ற கருத்தை இயக்குநர் வெளியிட்டார்கள். இதனைத் தொடர்ந்து *தமிழெனப்படுவது* என்ற தலைப்பினை முதல் தொகுப்பிற்கு ஒதுக்கி 07-04-2002 தேதியிட்ட மடல் வாயிலாக மேற்படி நிறுவனத்திற்குத் தெரிவிக்கப்பட்டது. செயல்திறன்மிக்க நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள் இந்தத் தொகுப்பு சிறந்த முறையில் வெளிவருவதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார்கள். அவருக்கும் அவருக்கு உறுதுணையாக இருந்து இந்தத் தொகுப்பினைச் செம்மையாக வடித்துக் கொடுத்த திருமதி ந. லட்சுமி உள்ளிட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தொழில் நுட்ப ஊழியர்களுக்கும் மேலாண்மை ஊழியர்களுக்கும் எனது இதயம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக் கட்டுரைகளை நூல் வடிவில் கொணரப் பல பேராசிரியப் பெருமக்கள் பல்வேறு நிலைகளில் தங்கள் பங்களிப்பைத் தந்துள்ளார்கள். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து ஓய்வுபெற்ற பேராசிரியர் அ. அ. மணவாளன், சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர் பொன். கோதண்டராமன் (பொற்கோ), மாநிலக் கல்லூரித் தமிழ்த் துறைப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் இரா. இளவரசு ஆகிய பெருந்தகையாளர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் நான் பெருமிதம்கொள்கிறேன்.

*தமிழெனப்படுவது* என்னும் இந்த ஆய்வுத் தொகுதி வெளிவருவதற்கு எனது கெழுதகை நண்பரும் புதுவைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும், தலைவராகவும் பணியாற்றி ஓய்வுபெற்றவரும் சிறந்த சிந்தனையாளருமாகிய முனைவர் அ. பாண்டுரங்கன் அவர்கள் காட்டிய அக்கறையும், மேற்கொண்ட முயற்சிகளும் நன்றியுடன் நினைவுகூரற்பாலனவாகும்.

ஆய்வுக் கட்டுரைகளின் அச்சுப்படிகளை மூலப்படிகளுடன் ஒப்பிட்டு, பிழைதிருத்தம் செய்வதற்கு எனது வாழ்க்கைத் துணைவி திருமதி சாந்தகுணபூஷணம் தந்த ஒத்துழைப்பு நன்றி நவிலற்கும் அப்பாற்பட்டதாகும்.

இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள பல ஆய்வுக் கட்டுரைகளை மிகப் பொறுமையுடன் கணினியின் வாயிலாகத் தட்டச்சு செய்து தந்த திரு. ப. தியாகராசன் அவர்கள் புதுவை அரசின் கல்வித்துறையைச் சார்ந்த மேனிலைப் பள்ளியில் வரலாற்று ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவராவார். அவரது தமிழ்ப் புலமை என்னைப் பலவகையிலும் செம்மைப் படுத்திக் கொள்ள வாய்ப்பாக இருந்தது. இந்தி, பிரஞ்சு ஆகிய மொழிகளில் புலமைமிக்க அவருக்கு என் அன்பான நன்றியைத் தெரிவித்துக்கொள்வதில் நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

மைசூர் இந்திய மொழிகள் நடுவண் நிறுவனத்தில் பேராசிரியராகவும் துணை இயக்குநராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் வி. ஞானசுந்தரம், தமிழக அரசு கால்நடைத் துறையில் துணை இயக்குநராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற டாக்டர் இரா. சுப்பராயலு ரெட்டி, தனித்தமிழ் ஆர்வலரும் எனது கெழுதகை நண்பருமான திரு. பாளை எழிலேந்தி ஆகியோர் *தமிழெனப்படுவது* விரைவில் வெளிவரப் பெரிதும் அக்கறை காட்டியவர்கள் ஆவர். இவர்கள் அனைவரும் எனது அன்பிற்கும் நன்றிக்கும் உரியவர்களாவர்.

*தமிழெனப்படுவது* என்னும் இந்த ஆய்வுத் தொகுதியை மிகச் சிறந்த முறையில் வடிவமைத்து அச்சிட்டு வெளியிட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு நான் பெரிதும் கடமைப் பட்டவனாவேன். ஆய்வுத் துறையில் பல புதிய தடங்களைப் பதிக்கத் தளராது முயற்சி மேற்கொண்டுள்ள இந்நிறுவன இயக்குநர் முனைவர். சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் அவரது அலுவலக உதவியாளர்களுக்கும் மீண்டும் எனது இதயம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரா. கோதண்டராமன்

புதுச்சேரி
*15-08-2004*

# நூலாசிரியர் - ஒரு குறிப்பு

சென்னை பச்சையப்பன் கல்லூரியின் (1954-1959) வாயிலாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டமும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் (1966-1968, 1968-1973) மொழியியல் முதுகலைப் பட்டமும், மொழியியல் முனைவர் பட்டமும் பெற்ற இரா. கோதண்டராமன் மதுரைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் ஒன்பது ஆண்டுகள் (1973-1982) தமிழ் இலக்கணமும் மொழியியலும், ஆறு ஆண்டுகள் அமெரிக்க மாணவர்களுக்கு American Institute of Indian Studies சார்பில் தமிழும் கற்பித்தவர். ஏழாண்டுகள் (1982-1988) கேரள மாநிலம் திருவனந்தபுரத்திலுள்ள அனைத்துலகத் திராவிட மொழியியல் ஆய்வு மையத்தில் மொழியியற் பிரிவில் முதுநிலை ஆய்வாளராகவும் பேராசிரியராகவும் பணியாற்றியவர். ஐந்தாண்டுகளுக்கும் மேலாக (1989-1994) புதுச்சேரியிலுள்ள புதுவை அரசின் தன்னாட்சி அமைப்பாகிய புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராகப் பணியாற்றி அதன் இன்றைய வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர்.

தமிழ் மொழியியல் தொடர்பாக ஆங்கிலத்தில் அவர் எழுதிய ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பினை Tamil Syntax-New Perspectives என்ற தலைப்பில் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது. தமிழ் மற்றும் திராவிட மொழியியல் தொடர்பாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதித் தமிழுக்கும் மொழியியலுக்கும் தனது பங்களிப்பை இவர் தந்துள்ளார். 'புதியன கண்டபோதில் விடுவரோ புதுமை பார்ப்பார்' என்ற கம்பனின் வாக்குக்கு இலக்கணமாகத் திகழும் இவர் தமிழ் மொழியியல் ஆய்வில் தனக்கென முற்றிலும் மாறுபட்ட ஒரு தடத்தைப் பதித்துக்கொண்டவர். அறுபத்தொன்பது வயதினராகிய இவர் கொண்டரெட்டி குலம், தொண்டிண்ட்டிவாரு என்ற ஒன்பது இல்லத் தொகுப்பைச் சேர்ந்த ஓர் எளிய தெலுங்குக் குடும்பத்தில் வேமுல இராமானுஜரெட்டி - குப்பம்மை தம்பதியருக்கு 08-08-1936-இல் (பள்ளிச் சான்றிதழ்படி 15-01-1937-இல்) தலை மகனாகப் பிறந்தவர்.

# வரிவடிவச் சிக்கலும் தீர்வும்

தமிழில் *பங்கு, பஞ்சம், பந்தல், தண்டு, கன்று* முதலான சொற்களில் மெல்லொற்றை யடுத்து நிகழும் வல்லொற்றுக்கள் ஒலியன் நிலையில் (Phonemic Level) நிலையொலியன்களாகவும் (Voiceless Phonemes), ஒலிப்புநிலையில் (Phonetic Level) அலை யொலிகளாகவும் (Voiced Phones) அமைகின்றன. மேற்படிச் சூழலில் வல்லொற்றுக்கள் ஒலிப்பு நிலையில் நிலையொலிகளாகத் தமிழில் ஒலிக்கப்படுவதில்லை.

கன்னடம், தெலுங்கு ஆகிய திராவிட மொழிகளில் வல் லொற்றுக்கள் நிலையொலியன்களாகவும் அலையொலியன்களாகவும் நிகழ்கின்றன. ஆனால் தமிழில் இது போன்ற நிலை இல்லை. இதனால் தமிழ் நெடுங்கணக்கில் மெல்லொற்றுக்களையடுத்து வல்லொற்றுக்கள் நிலையொலிகளாக நிகழ்வதைக் குறிக்க வகை யில்லை. மொழியியல் ஆய்வினைத் தமிழில் மேற்கொள்கையில் ஆய்வாளர்களுக்கு இது ஒரு பேரிடராக இருந்து வருகிறது.

மொழியியல் ஆய்வில் வரிவடிவமானது ஒலிப்பைச் சரியாக உணர்த்த வேண்டும். இதில் மயக்கத்திற்குச் சிறிதும் இடம் இருக்கக்கூடாது. விளைச்சல் என்ற பொருண்மையை உணர்த்தும் தெலுங்குச் சொல்லிலும், எட்டு என்னும் எண்ணுப் பொருண் மையைக் குறிக்கும் கன்னடச் சொல்லிலும் மெல்லொற்றை அடுத்து நிகழும் டகரமெய்யானது நிலையொலித் தன்மையதாகும். இவற்றைத் தமிழில் *பண்ட, எண்டு* என்று எழுதினால் இவற்றில் நிகழும் டகரம் தமிழ் எழுத்தியல் மரபுப்படி அலையொலியாக ஒலிக்கப்படும். இது தவறான ஒலிப்பாகும். இதனைத் தவிர்க்கும் பொருட்டு மெல்லொற்றையடுத்து நிகழும் வல்லொற்று ஊர்ந்த உயிர்மெய் வரிவடிவம் மெய்யாகவும் உயிராகவும் பிரித்து எழுதப்படும் உத்தி இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஆய்வுக் கட்டுரைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. எ-டு. *பண்ட்அ* (தெலுங்கு) 'விளைச்சல்', *எண்ட்உ* (கன்னடம்) 'எட்டு'.

இந்த உத்தியானது ஒலிப்பு நிலையில் உயிரிடையிலும் (Intervocalic Position), இடையொற்றுக்களின் முன்பும் நிகழும் நிலைவல்லொற்று (Voiceless Plosive) அல்லது நிலை வல்லுரசொலி (Voiceless Affricate) ஆகியவற்றைக் குறிக்கவும் இந்த நூலில் கையாளப்பட்டுள்ளது. எ-டு. *மாருச்உ* (<* மாறுச்உ) / *மார்ச்உ* (<*மாற்ச்உ) 'மாற்று', *மாருப்உ* (<*மாற்ப்உ) 'மாற்றம்', *லேப்உ* 'எழுப்பு'. இந்த எடுத்துக்காட்டுக்கள் தெலுங்கில் நிகழ்பவையாகும்.

# ஆய்வுக் களங்கள்

எந்த ஒரு துறையாயினும் அதன் ஆய்வுக் களங்கள் விரிந்து பரந்துபட்டவையாகும். இந்த ஆய்வுக் களங்களை இனங் காண்பதிலும் அடிப்படை ஆய்வுகள் மூலம் கோட்பாடுகளை வகுப்பதிலும் தான் ஆய்வுகள் சிறக்கின்றன. அதன்விளைவாக அறிவுப்புலம் விரிந்து பரந்து ஆழங்கொள்கிறது. தமிழியலைப் பொறுத்தவரை அது இலக்கியவியலாகட்டும் (Literistics), இலக்கணவியலாகட்டும் (Grammatology) அல்லது மொழி யியலாகட்டும் (Linguistics) இந்திய விடுதலைக்குப்பின் இவை தொடர்பான பெரும்பாலான ஆய்வுகள் குறிப்பிட்டுச் சொல்லும் படியாக அமையவில்லை என்பது வேதனைக்கும் வருத்தத்துக்கும் உரிய ஓர் உண்மையாகும். இதற்கான காரணங்கள் முன்னுரையில் ஓரளவுக்குச் சுட்டப்பெற்றுள்ளன. இங்கே மொழியியல் நமது களமாகும். மொழியியலைப் பொறுத்தவரை தமிழகத்தில் கால் நூற்றாண்டுக்கு முன் அதன் அறிமுகம் நம்பிக்கையோடும் மிகுந்த எதிர்பார்ப்புகளோடும் தொடங்கியது. ஆனால் இன்று அந்த நம்பிக்கையும் எதிர்பார்ப்புக்களும் தேய்புரிப் பழங்கயிறாக மெலிந்து நலிந்துபோயுள்ளன. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், ந. குமாரசாமி ராஜா போன்ற நுண்மாண் நுழைபுலம் மிக்க ஆய்வறிஞர்கள் இன்று நம்மிடையே இல்லை. கேரளத்தில் ஒரு வ. அய். சுப்ரமணியமும் தமிழகத்தில் ஒரு ச. அகத்தியலிங்கமும், ஒரு செ. வை. சண்முகமும் ஆய்வுலகில் இன்று நம்பிக்கை யூட்டுபவர்களாக இருந்தாலும் இவர்களுக்குப் பிறகு இவர்களின் இடத்தை நிரப்பும் வகையில் இரண்டாவது அணி ஆய்வாளர்கள் நம்மிடையே உருவாகவில்லை; அல்லது உருவாக்கப்படவில்லை.

மொழியியலில் ஆய்வுக் களங்களை இனங் காண்பதற்கும், இலக்குகளைக் கண்டறிவதற்கும், கோட்பாட்டு அடிப்படை யிலான ஆய்வு முறையை வகுத்துச் செம்மைப்படுத்திக் கொள்வதற்கும் முனைப்புடன் செயல்பட்டாக வேண்டும். திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும் என்ற பாரதியின் கனவு இன்னும் நனவாகவில்லை என்பது தமிழியல் ஆய்வுகளைப் பொறுத்தவரை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய ஓர் உண்மையாகும். நமது புலமைத் திறனை மேம்படுத்திக் கொள்ளும் வகையில் நாம் எங்கே தோற்றிருக்கிறோம், நம்முடைய குறைகள் என்ன,

பலவீனங்கள் யாவை என்பதை அறிந்து கொள்வது அவசியம். இவற்றைப் பற்றிக் கூடுதலாகப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் போதிய காலமும், இடமும் இல்லையென்பதால் தமிழ் மொழி யியலைப் பொறுத்தவரை சில ஆய்வுக் களங்களை மட்டுமாவது இங்கே குறிப்பிட்டாக வேண்டும். போதிய வயதும் வாய்ப்பும் இன்மையால் இந்த ஆய்வாளரால் விரிவாக மேற்கொள்ள முடியாமற்போன ஒன்பது ஆய்வுக் களங்கள் கீழே குறிக்கப் பெற்று பகுதி-1இல் அவை சுருக்கமாகப் பேசப்படுகின்றன.

1. குமாரசாமி ராஜாவின் NPP மீட்டுருவாக்கக் கோட்பாடு.
2. இருவகைச் செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள்.
3. மூவகை இறவாக்காலப் பொது வினைமுற்றுக்கள்.
4. செயும் வாய்பாட்டுப் பொது வினைகள்.
5. முற்றுவினைப் பகுதிகளாகச் செயும் வினைகள்.
6. இறந்தகால முற்றுவினைப் பகுதிகள்.
7. தன்வினை - பிறவினை வியூகங்களும் எழுச்சி வினைப்பெயர்களும்.
8. எதிர்மறை வினைகளின் உடன்பாட்டு நிலைக் களங்கள்.
9. தடம் புரண்ட வினைத் திரிபு மரபுகள்.

இந்த ஆய்வுக்களங்கள் தவிர இந்த நூலின் முன்னுரைப் பகுதியில் சில ஆய்வுக்களங்கள் தொட்டுக்காட்டப்பட்டுள்ளன. இன்னொரு ஆய்வுக் களம் பற்றியும் இங்கே குறிப்பிட வேண்டும். பழந்தமிழில் நிகழும் *வந்தை* (கலி. 63.12), *கேட்டை* (கலி. 62.23, 92.23), *காண்டை* (கலி. 12.14, 92.60, 144.1; பரி. 8.85), *கண்டை* (கலி. 64.6, 8; 103.32, 36, 42, 46: 104. 42, 105.57, 109.7, 110.5) *பாடித்தை* (கலி. 40.10, 43. 15, 23; 131.24, 34), *மதித்தீத்தை* (கலி. 14.17), *நின்றீத்தை* (கலி. 94.4), *சென்றீ* (கலி. 61.15, 93.33), *கண்டீ* (கலி. 61.8, 91.8) முதலான முன்னிலை ஒருமை இறவாக்கால வினைகள் தொடர்பான ஒரு சிற்றாய்வு இந்தத் தொகுப்பில் 16.16-ஆம் பகுதியில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இந்த இறவாக்கால (Non Past) வினைகளின் அமைப்பும், தோற்றமும் விரிவாக ஆராயப்பட வேண்டியவையாகும்.

# 1. குமாரசாமி ராஜாவின் NPP மீட்டுருவாக்கக் கோட்பாடு

*1.1.* குமாரசாமி ராஜா (சுருக்கமாக, ராஜா)வின் (KR.N. 1969) NPP மீட்டுருவாக்கக் கோட்பாட்டில் N என்பது (இன) மெல் லொற்றையும், PP என்பது இரட்டித்த நிலையொலித்தன்மை (Voiceless Character) பொருந்திய இன வல்லொற்றுக்களையும் உணர்த்தும் குறியீடுகளாகும். இந்தக் கோட்பாட்டின்படி NP (-இதில் P என்பது நிலையொலித் தன்மையதாகிய வல்லொற்று-) என்ற மெய்ம்மயக்கம் கொண்ட கிளை வடிவமும் (Cognate Expression), PP என்ற மெய்ம்மயக்கம் கொண்ட கிளை வடிவமும் NPP என்ற மெய்ம்மயக்கம் கொண்ட வடிவமாக மீட்டுருவாக்கம் செய்யப்படும். அதாவது, *NPP என்ற மெய்ம் மயக்கத்தினைக் கொண்ட தொல் வடிவத்தினின்றும் NP என்ற மெய்ம்மயக்கமும், PP என்ற மெய்ம்மயக்கமும் கொண்ட வடிவங்கள் தோற்றம் கொள்ளும். NP என்பது ஒலிப்பு நிலையில் (Phonetic Level) [NB] யாக இருந்து அதன் கிளை வடிவம் PP மெய்ம்மயக்கத்தைக் கொண்டதாய் இருந்தால் இவற்றின் தொல் வடிவமும் *NPP மெய்ம்மயக்கத்தைக் கொண்டதாகவே மீட்டுரு வாக்கம் செய்யப்படும். இதன் விரிவான பன்முக ஆய்வை ராஜாவில் (1969) காண்க. ராஜாவின் NPP மீட்டுருவாக்கக் கோட்பாட்டின்படி பின்வரும் கிளைவடிவங்கள் அவற்றின் ஈற்றில் குறிக்கப்பெற்றுள்ள தொல்வடிவங்களாக (தொ.வ.) மீட்டுருவாக்கம் செய்யப்படும்.

(1) தமிழ். *எட்டு,* கன்னடம். *எண்ட்உ.* தொ.வ. **எண்ட்ட்உ* (*eNTTu)

(2) தமிழ். *தட்பம்,* மலயாளம். *தணுப்பு.* தொ.வ. **தண்ப்ப்உ-*

(3) தமிழ். *தோட்டம்,* தெலுங்கு. *தோண்ட்அ.* தொ.வ. **தோண்ட்ட்அம்*

(4) தமிழ். *விரும்பு, விருப்பு.* தொ.வ. **விரும்ப்ப்உ*

(5) தமிழ். *குழம்பு, குழப்பம்.* தொ.வ. **குழம்ப்ப்உ-*

(6) தமிழ். *கலங்கு, கலக்கம்.* தொ.வ. **கலங்க்க்உ-*

மேலே குறிப்பிட்ட ஆய்வினை ராஜா 1980-இல் சற்று மாற்றியமைத்தார். இதன்படி NPP என்பது ஒரு வல்லொற்று. கெட்டு NP (எ-டு. கன். *எண்ட்உ* 'எட்டு') என்று ஒரு கிளை

வடிவத்திலும், PPP எனத் திரிந்து இரண்டாம் வல்லொற்று கெட்டு PP என இன்னொரு கிளை வடிவத்திலும் (எ-டு. த. *எட்டு* < **எட்ட்டு*) அமையும்.

1.2. ராஜாவின் ஆய்வில் PP என்பதன் அடிநிலை வடிவம் கண்டறியப்படவில்லை. தனது ஆய்வில் இதனை அவர் ஒரு பொருட்டாகக் கருதவில்லை. *மகனுக்கு* என்ற வேற்றுமைப் பெயர் **மகன்க்கு* என ஒடுங்கி, **மகற்க்கு* எனத் திரிந்து இறுதியில் *மகற்கு* எனப் பழந்தமிழில் நிகழ்கிறது. இதன் நிகழ்ச்சி இக்காலத் தமிழில் காணப்படவில்லை. மாறாக, இதன் தாய் வடிவமாகிய *மகனுக்கு* என்ற வடிவமே இக்காலத் தமிழில் பயின்று வழங்குகின்றது. ராஜாவின் ஆய்வில் *மகற்கு* என்பதன் அடிநிலை வடிவமாக **மகன்க்கு* என்பது கொள்ளப்படுகின்றது. இது நமக்கு உடன்பாடே. ஆனால் *மகற்கு* என்பதன் தாய் வடிவமாகிய *மகனுக்கு* என்பது இவரது ஆய்வில் கருத்தில் கொள்ளப்பட வில்லை. இது தனது ஆய்வுக்குத் தேவையில்லை என்று ராஜா கருதியிருந்தால் அவரது *NPP மீட்டுருவாக்கக் கோட்பாட்டினை முழுமையானதாகக் கொள்ள முடியாது. *மகனுக்கு* என்பதில் நிகழும் இரட்டித்த வல்லொற்றுக்களின் அடிநிலை வடிவம் எத்தகையது என்பது நமது அடிப்படைக் கேள்வியாகும். இந்தக் கேள்விக்கு ராஜாவின் ஆய்வில் விடை இல்லை. இந்த இரட்டித்த -க்க்- என்ற வல்லொற்று மயக்கத்தின் அடிநிலை வடிவத்தை -ங்க்க்- எனக் கொள்வதற்கு வாய்ப்பில்லை. ஏனெனில் -ங்க்க்- என்பதில் உள்ள -க்க்- என்பதற்கும் -ங்க்க்- என்றொரு அடிநிலை வடிவத்தை அமைக்க வேண்டியிருக்கும். இது வரம்பில்லாத பயணமாக (Infinite Regress) அமைந்துவிடும். இதனைத் தவிர்க்கும் வகையில் இரட்டித்த வல்லொற்றுக்களின் அடிநிலை வடிவங்கள் NP வடிவினவாக நமது ஆய்வில் கொள்ளப்படுகின்றன. கன்னடம், கோலாமி ஆகிய மொழிகளில் காணப்படும் அமைப்புத் தடயங்களைக் கருத்தில் கொண்டு *மகனுக்கு* என்பதன் அடிநிலை வடிவம் **மகன்-உம்+கு* என இங்கே கொள்ளப்படுகிறது. இந்த அடிநிலை வடிவத்தினின்றும் *மகனுக்கு, மகற்கு* ஆகியவை பின்வரும் ஆய்வின்மூலம் ஒருங்கிணைக்கப்படுகின்றன.

7 (1) *மகன்-உம்+கு > மகனுங்க்உ

(2) *மகனுங்க்உ > மகனுக்கு (வழக்கில் உள்ளது)

(3) *மகனுக்கு > மகன்க்கு

(4) *மகன்க்கு > மகற்க்கு

(5) *மகற்க்கு > மகற்கு (பழந்தமிழ் வழக்கு)

ராஜாவின் ஆய்வில் *மகற்கு* என்பது மேற்கண்டவாறு *மகனுக்கு* என்பதனுடன் ஒருங்கிணைக்கப்படவில்லை. இதனால் *NPP

என்பதன் அடிநிலை வடிவத்தைக் கண்டறிய அவரது ஆய்வில் வாய்ப்பில்லாமல் போய்விட்டது. இந்தக் குறைபாடு மேலே (7)-இல் நிகழ்த்திய நமது ஆய்வில் தவிர்க்கப்பட்டுள்ளது. இந்த ஆய்வினின்றும் மூன்று உண்மைகள் பெறப்படுகின்றன. ஒன்று: ராஜாவின் *NPP மீட்டுருவாக்கம் ஓர் இடைநிலை வடிவத்தில் காணப்படும் நிகழ்ச்சியாகும். இரண்டு: NPP என்பது NVPP என்பதன் ஒடுக்கமாகும். (கருதுக: மகன்க்கு < *மகனுக்கு). இதில் V என்பது உயிரொலி ஆகும். மூன்று: NVPP-யில் நிகழும் VPP என்பது VNP என்பதன் திரிபாகும் (கருதுக: மகனுக்கு < *மகனுங்க்உ) ராஜாவின் NPP மீட்டுருவாக்கம் தாய்வடிவத்தின் விளக்கமல்ல; அது ஓர் இடைநிலை வடிவத்தின் விளக்கமே. இடைநிலை வடிவத்தில் நிகழும் NPP (எ-டு: *மகன்க்கு) கோட்பாட்டு நிலையில் NVPP என்பதன் ஒடுக்கம் என்பதும், இதில் நிகழும் VPP என்பது VNP என்பதன் திரிபு என்பதும் நமது ஆய்வின் முடிபுகளாகும்.

1.3 ராஜாவின் NPP கோட்பாட்டின்படி *குழம்பு, குழப்பம், குழப்பு* ஆகியவை இரண்டு வகையான அடிநிலை வடிவங்களைக் கொண்டவையாகக் கருதப்படுகின்றன. *குழம்பு* என்ற தன் வினையில் பகரம் அலையொலித் தன்மையது (Voiced Character) ஒலியன் நிலையில் அதன் அடிநிலை வடிவம் **குழம்ப்உ* எனக் கொள்ளப்படுகின்றது. *குழப்பு* என்ற பிறவினையின் அடிநிலை வடிவம் **குழம்ப்பு* எனக் குறிக்கப்பட்டு, இதில் நிகழும் ஈற்று வல்லொற்றானது தன்வினை வடிவத்தையடுத்து பிறவினை விகுதியாக நிகழ்வதாக ராஜா கருதுகிறார். அவரது கோட்பாட்டின்படி **குழம்ப்பு* என்பது **குழப்ப்பு* எனத் திரிந்து இறுதியில் *குழப்பு* என்ற பிறவினையாக அமைகிறது. *குழப்பம்* என்பது *குழம்பு* என்ற தன்வினையோடு பகரம் சேர்க்கப்பட்டு - இந்தப் பகரம் பிறவினை விகுதியல்ல - **குழம்ப்பு* என்ற அடிநிலை வடிவம் அமைக்கப்பட்டு அதனின்றும் பெறப்படுகின்றது. *அம்* என்ற வடிவம் பெயராக்க விகுதியாகக் கொள்ளப்படுகின்றது. **குழம்ப்பு* என்ற தன்வினைப் பகுதியானது **குழப்ப்பு* எனத் திரிந்து *அம்* என்பதன் முன் *குழப்பு* என்று அமைகிறது. *குழம்பு/குழப்பம், குழப்பு* தொடர்பான ராஜாவின் ஆய்வு நமக்கு முற்றிலும் உடன்பாடானதல்ல. புற நிறைவை (External Adequacy) அடிப்படையாகக் கொண்ட இந்த ஆய்வைப் புறக்கணிப்பதுடன் ஒரு மாற்று ஆய்வும் இங்கே முன்மொழியப்படுகின்றது.

1.4 *குழம்பு* என்ற தன்வினையும் *குழப்பு* என்ற பிறவினையும் வரலாற்று நிலையில் *குழய்* (=குழை) என்ற வினையின் அடியாகத்

தோன்றிய செய்பு வாய்பாட்டு இறவாக்கால பொதுவினை முற்றுக்களாகும். காலப்போக்கில் இந்த வினைமுற்றுக்கள் முற்றுவினைப் பகுதிகளாக - அதாவது பொதுவினை முற்றுக் களானவை முற்றுவினைப் பகுதிகளாக (Finite Verbal Bases) - நிகழத் தொடங்கின. இந்த நிலையில் *குழம்பு, குழப்பு* ஆகிய வற்றின் முதன்மை வினையடியாகிய **குழய்* என்பது பகுப்பாய்வுக்கு உட்பட வாய்ப்பில்லாமல் போயிற்று. உண்மை என்னவெனில் *குழம்பு, குழப்பு* இரண்டிலும் **குழய்* என்பதே வரலாற்று நிலையில் தன்வினையாகவும், பிறவினையாகவும் செயல்படுகிறது. *கலை, கரை, தேய், குழய்* (= குழை) முதலான பலவினைகள் வினையடி நிலையிலேயே தமிழில் தன்வினை யாகவும் பிறவினையாகவும் நிகழ்கின்றன. *குழம்பு, குழப்பு* ஆகிய வினைகள் தொடர்பான ஆய்வில் இந்த உண்மை கருத்தில் கொள்ளப்பட வேண்டும். அக ஆய்வில் இந்த உத்தியை அப்படியே பின்பற்ற வாய்ப்பு இல்லாமல் இல்லை. *குழம்பு* என்ற தன்வினையில் ஈற்றுப் பகரம் அலையொலித் தன்மையதாகிய தன்வினை விகுதியாகத் திகழ்கிறது. *குழப்பு* என்ற பிறவினையில் ஈற்றுப்பகரம் நிலையொலித் தன்மையதாகிய பிறவினை விகுதியாகச் செயல்படுகிறது. இது எப்படி சாத்தியமாகிறது? *குழம்பு, குழப்பு* இரண்டின் அடிநிலை வடிவமும் **குழம்ப்உ* எனக் கொள்ளற்பாலதாகும். இதில் பகரம் நிலையொலித் தன்மையதாகும். அடிநிலை வடிவத்தில் பகரம் தன்வினை விகுதியுமல்ல; பிறவினை விகுதியுமல்ல. அதேபோல் (*குழய்* என்பதன் மாற்றுருபாகிய) *குழம்* (வரலாற்று நிலையில் **குழய்ம் < *குழயும்)* என்பதும் ஒரு பொதுவினைப் பகுதியாகவே கொள்ளப் படும். *குழம்* என்பது தன்வினைப் பண்புக்கு உரியதாக்கப் படுகையில் நிலையொலித்தன்மையதாகிய பகரம் அலையொலித் தன்மையதாகிறது; பிறவினைக்கு உரியதாக்கப் படுகையில் பகரம் நிலையொலித்தன்மையதாகவே நிகழ்கிறது. இதனைப் பின்வரும் விதிகள் மூலம் விளக்கலாம்.

(8) குழம் [+ தன்வினை] + ப்உ > குழம்பு

(9) குழம் [-தன்வினை] + ப்உ > குழப்பு

(10) குழம் [+தன்வினை] + ப்உ > குழப்பு/-அம்

மேலே (10)-இல் உள்ள விதியில் *அம்* என்ற விகுதியின் முன் தன்வினைப் பகுதியாகக் *குழப்பு* என்ற வடிவம் நிகழ்கிறது. இந்த வடிவத்தைப் பிறவினையாகிய *குழப்பு* என்பதனுடன் குழப்பிக் கொள்ளக்கூடாது. *குழப்பம்* என்பதில் நிகழும் *குழப்பு* என்பது

தன்வினைத் தன்மையதாகையால் அதனையடுத்து நிகழும் *அம்* என்பது தொடக்கத்தில் எதிர்வெச்ச விகுதியாக (Infinitive Suffix) நிகழ்ந்திருக்க வேண்டும். இதனைக் கருத்தில் கொண்டு *குழப்பம்* என்ற வடிவம் தொடக்கத்தில் செயவென் எச்சவினைக்கு இணையான எச்சவினையாகச் செயல்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இது மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

1.5. *குழம்பு/குழப்பம், குழப்பு* ஆகியவற்றை இன்னொரு முறையிலும் ஆராயலாம். இந்த முறைப்படி **குழம்ப்உ* என்பது தன்வினையுமல்லாத பிறவினையுமல்லாத பொதுவினைப் பகுதியாக (Neutral Verbal Base) அமையும். இந்த வினைப்பகுதி [+தன்வினை] என்ற தொடரனியல் கூறினை ஏற்கையில் *குழம்பு* எனவும் *அம்* என்ற விகுதியின் முன் *குழப்பு* எனவும் [-தன்வினை] என்ற தொடரியற் கூறினை ஏற்கையில் *குழப்பு* என்ற பிறவினை யாகவும் திரிந்தமையும்.

1.6 *குழம்பு/குழப்பம், குழப்பு* தொடர்பான நமது மாற்று ஆய்வு *கலங்கு/கலக்கம், கலக்கு; மயங்கு/மயக்கம், மயக்கு; பழகு/ பழக்கம், பழக்கு; உருகு/உருக்கம், உருக்கு; விரும்பு/விருப்பம், விருப்பு; உறங்கு/உறக்கம், உறக்கு; அடங்கு/அடக்கம், அடக்கு; ஏறு/ஏற்றம், ஏற்று; மாறு/மாற்றம், மாற்று; சீறு/சீற்றம், கூறு/ கூற்று, கருது/கருத்து, எழுது/எழுத்து* முதலான பல உறவுநிலை வடிவங்களுக்கும் (Kindred Forms) பொருந்தும். இங்கே நாம் வலியுறுத்த விரும்பும் ஓர் உண்மை என்னவென்றால் தன்வின்னயின் அடியாகப் பிறவினையின் தோற்றம் அமைய முடியாது என்பதுதான். ஒருவினையின் தன்வினைப் பண்பை ஓர் விகுதியின் துணைகொண்டு பிறவினையாக மாற்ற முடியாது. கோட்பாட்டு நிலையிலும் வரலாற்று நிலையிலும் இத்தகைய ஆய்வினை ஏற்க வாய்ப்பே இல்லை.

1.7 மேலே முன்மொழியப்பெற்றுள்ள நமது மாற்று ஆய்வானது *கரைந்து-கரைத்து, கலைந்து-கலைத்து, குழைந்து- குழைத்து, மறைந்து-மறைத்து, தேய்ந்து-தேய்த்து, சேர்ந்து-சேர்த்து* முதலான தன்வினை-பிறவினைத் தன்மையனவாகிய செய்து வாய்பாட்டு இறந்தகாலப் பொது வினைகளுக்கும் பொருந்தும். பின்வரும் ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம்.

(11) சேர்ம் [+தன்வினை] + து [+இறப்பு] > சேர்ந்து (தன்வினை)

(12) சேர்ம் [-தன்வினை] + து [+இறப்பு] > சேர்ந்த்உ > சேர்த்து (பிறவினை)

இந்த ஆய்வில் வினையடிகளின் மாற்றுருபுகளாகிய செய்ம் வாய்பாட்டு வினைகள் தன்வினை, பிறவினை இலக்கணக் கூறுகளை ஏற்கும் வினைப்பகுதிகளாகும். இந்த வினைப்பகுதிகள் வரலாற்று நிலையில் செயும் (= செய்யும்) வாய்பாட்டு வடிவினவாகும். இதனைக் கருத்தில் கொண்டு *குழம்பு-குழப்பு, கலங்கு-கலக்கு* ஆகியவற்றின் வரலாற்று நிலையிலான அடிநிலை வடிவங்களை முறையே **குழயும்ப்உ, *கலயுங்க்உ* எனக் கொள்ளலாம். இந்த அடிநிலை வடிவங்கள் உகரம் ஒடுங்கியும் யகரம் கெட்டும் **குழம்பஉ, *கலங்க்உ* என அமைகின்றன. தன்வினை, பிறவினைக் கூறுகளை ஏற்று இந்த வடிவங்கள் *குழம்பு-குழப்பு, கலங்கு-கலக்கு* என அமைகின்றன. *நடத்து, கடத்து* ஆகிய வினைகளைப் பொறுத்தவரை இவற்றின் முந்தைய வடிவங்கள் **நடந்த்உ* எனவும், **கடந்த்உ* எனவும், அடிநிலை வடிவங்கள் **நடயுந்த்உ, *கடயுந்த்உ* எனவும் அமையும். பிறவினைப் பண்பை ஏற்கையில் **நடந்த்உ, *கடந்த்உ,* ஆகியவை *நடத்து, கடத்து* எனத் திரிந்தமைகின்றன. *நடந்து, கடந்து* ஆகிய செய்து வாய்பாட்டு இறந்தகால வினைகள் (11)-இல் உள்ளது போன்ற விதியின் மூலம் வருவிக்கப்படும்.

*1.8. சேர்ந்து, சேர்த்து* ஆகியவை தொடர்பாக மேலே நிகழ்த்தப்பெற்றுள்ள ஆய்வு மறுபரிசீலனைக்குரியதாகும். இவற்றில் **சேர்ம்* என்பது *சேர்* என்பதன் மாற்றுருபாகக் கொள்ளப்பட்டுள்ளது. கன்னடத்தில் நிகழும் *சேரித்து/சேரித்உ/ சேர்த்உ* (=சேர்ந்தது), *சேரிதனு* (=சேர்ந்தான்), *சேரிதளு* (=சேர்ந்தாள்) ஆகியவை இறந்தகால வினைகளைக் கருதுகையில், தமிழில் *சேர்ந்து* என்பது **சேரிந்து* என்பதன் திரிபொடுக்க மாகவும் *சேர்த்து* என்பது **சேரிந்த்உ* என்பதன் திரிபொடுக்க மாகவும் கொள்ளத்தக்கனவாகத் தோன்றுகின்றன. இந்த ஆய்வானது *செய்து* வாய்பாட்டு இறந்தகால வினைப்பகுதிகளின் அமைப்பினை வரலாற்று நிலையில் **செயிந்து/*செயிந்த்உ* என்ற அடிநிலை வடிவங்களை கொண்டவையாகக் கருதச் செய்கின்றன. இது தொடர்பான ஒரு சிற்றாய்வினைக் கோதண்டராமனில் (Kothandaraman, R. 2001: 7-14) காணலாம்.

❀ ❀ ❀

# 2. இருவகைச் செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள்

2.1. தமிழில் இருவகைச் செய்து வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் காணப்படுகின்றன. இவற்றுள் முதல்வகைச் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் இறந்தகாலத்தினவாகும். இவை *ஆன், ஆள், ஆர்* முதலான நெடில் விகுதிகள் மற்றும் *அன், அவ்* ஆகிய சாரியைகள், அகர விகுதி ஆகியவற்றின் முன் நிகழ்வனவாகும். எ-டு: *செய்து+ஆன், செய்து-அன்/அவ்+ அன், செய்து+அ.* இரண்டாவது வகைச் செய்து வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் இறவாக்காலத்தினவாகும். இவை *அல், அ, உம், இ, இர், ஆன், ஆள், ஆர்* முதலான விகுதிகளின் முன் நிகழ்வனவாகும். எ-டு. *காண்டு* (< *காணுது) + *அல், காணுது+அ* 'காண்கிற' (குமரி மாவட்ட வழக்கு), *காணுது+ஆன்/ஆள்/ஆர்* (குமரி மாவட்ட வழக்கு), *காணுது+உம்/இ/இர்* (பழந்தமிழ் வழக்கு), *காண்டு-உம்/இ/இர்* (இதுவும் பழந்தமிழ் வழக்கே), *காணுது+அல்* (=காண்டு+அல்).

2.2 இறவாக்காலச் செய்து வாய்பாட்டுப் பொதுவினைகள் *செயுது வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் ஒடுக்கங் களாகும். எ-டு. *அறியுதும்/அறிதும், அறியுதி/அறிதி, அறியுதிர்/அறிதிர், *அறியுதல் > அறிதல்.* இதனைக் கருத்தில் கொண்டு செய்து வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைகளைச் **செயிது* வாய்பாட்டுப் பொதுவினைகளின் ஒடுக்கமாகக் கருதத் தோன்று கிறது. இந்த வகையில் கன்னடத்தில் நிகழும் *கேளிது* (=கேட்டு), *அகலிது* (=அகன்று), *ஆளிது* (=ஆண்டு) முதலான இறந்தகால எச்சவினைகள் இங்கே கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். *செயுது வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் அடிநிலை வடிவங்கள் **செயுந்து* (=செய்யுந்து)/ **செயுந்த்உ* வாய்பாட்டினவாகும். புறநானூற்றில் நிகழும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளும் அவற்றினைக் கருத்தில் கொண்டு தொல்காப்பியர் வகுத்த *உம்உந் தாகும் இடனுமார் உண்டே* (சொல். சேனா. 292) என்ற நூற்பாவும் இதனை உறுதிசெய்கின்றன. செயுந்து வாய்பாட்டு வினைகளைக் கருத்தில் கொண்டு *செயிது (> செய்து) வாய்பாட்டு

இறந்தகால வினைகளையும் *செயிந்து வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியனவாகக் கருதலாம். ஆயினும் இது மேலும் ஆய்வுக்குரியது.

2.3 *செயுந்து* வாய்பாட்டு வினைகள் செயும் (=செய்யும்) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியதைப் போலவே *செயிந்து* வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைகளும் *செயிம் வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியனவாகக் கருதத் தோன்றுகிறது. *செயுந்து* மற்றும் *செயிந்து* வாய்பாட்டு வினைகளில் நிகழும் துகரக்கிளவி தொடக்கத்தில் பொது வினை முற்று விகுதியாக (Impersonal Finite Marker) நிகழ்ந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. வண்ணனை நிலையில் செயுந்து வினைகளில் நிகழும் *-உந்து* (< உம்-து) இறவாக்கால முற்று விகுதியாகக் கருதத்தக்கதாகும். இவ்வாறே *செயிந்து (> செய்ந்து > செய்து) வாய்பாட்டு வினைகளில் நிகழும் -இந்து (< இம்-து) என்பதை இறந்தகால முற்றுவிகுதியாகக் கொள்வதற்கான வாய்ப்பு ஆய்வுக்குரியதாகும்.

2.4 *செயிந்து* (< *செயிந்த்உ) வாய்பாட்டு வினைகளின் தோற்றம் சிந்தனைக்குரியதாகும். இவை *செயின்று* வாய்பாட்டு வினைகளின் திரிபாக (அதாவது, *-ன்ற்- > -ந்த்-*) அமையலாம்; அல்லது *செயிந்து* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *செயிம்* வாய்பாட்டு இறந்தகால பொதுவினைகள் *செயின்* வாய்பாட்டின வாகத் திரிந்திருக்க வேண்டும். திராவிட மொழிகளில் நிகழும் நிபந்தனை வினைகள் (Conditional Verbs) (எ-டு. த. *பாடினால்/பாடின்*, தெ. *பாடித்ன* 'பாடினால்', கன். *ஹாடிதரெ* 'பாடினால்', மல. *பாடியால்* 'பாடினால்') அடிப்படையில் இறந்தகால வினைகளாகவே தோன்றுகின்றன. இதனைக் கருத்தில் கொண்டு *செயின்று* (> *செயிந்து) வாய்பாட்டு வினைகளில் நிகழும் செயின் வாய்பாட்டு வினைகளை வரலாற்று நிலையில் இறந்தகாலப் பொது வினைமுற்றுக்களாகக் கருதலாம். பழந்தமிழிலும் தெலுங்கிலும் மொழியிறுதி மகரம் னகரமாகத் திரிந்தமைகின்றது. எ-டு. தமிழ்: *மரம் > மரன், அறம் > அறன், முகம் > முகன்;* தெலுங்கு: *மரம் > ம்ரானு, பாடும் > பாடுனு.* இதனை ஒரு தொல்திராவிட நிகழ்வாகக் கொண்டு *செயிம் வாய்பாட்டு வினைகளில் நிகழும் மகரம் னகரமாகத் திரிந்ததாக கொள்ளலாம். தெலுங்கில் இந்த ஆய்வாளரின் கிளைமொழி உட்படச் சில கிளை மொழிகளில் மொழியிறுதி னகரம் வீழ்ந்துபடும் நிலை காணப்படுகிறது. எ-டு. *பாடும் > பாடுன் >*

*பாடு0. அதி பாடு0* 'அது/அவள் பாடும்', **பாடேன் > பாடே0. நேனு பாடே* 'நான் பாடுகிறேன்', **பாடுதுன் > பாடுது0* (pa:Dutu) - *நேனு பாடுத்உ* 'நான் பாடுவேன்', **பாடித்இன் > பாடித்இ0. நேனு பாடித்இ* 'நான் பாடினேன்'. இந்த எடுத்துக்காட்டுக்கள் இந்த ஆய்வாளரின் கிளைமொழியில் நிகழ்வனவாகும். இதன் அடிப்படையில் *ஆடின்* (< *ஆடிம்), *பாடின்* (< *பாடிம்) முதலான செயின் வாய்பாட்டு இறந்தகால வினைகளில் நிகழும் ஈற்று னகரம் கெட்டு *ஆடி, பாடி* முதலான இறந்தகாலப் பொது வினைகள் தோற்றம் கொண்டனவாகக் கருதலாம். இந்தக் கருதுகோள் மேலும் ஆய்வுக்குரியதாகும்.

2.5 *செய்து* வாய்பாட்டு இறந்தகால வினைகளைச் **செயிந்து* வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொண்டால் அறிந்து, பறித்து ஆகியவற்றில் துகரக் கிளவியின் முன் நிகழும் நகரத்தையும், தகரத்தையும் மகரத்தின் புணர்ச்சித் திரிபாகத் துணியலாம். இதனைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

(1) அறிம்+து > அறிந்த்உ > அறிந்து (aRin[d]u)

(2) பறிம்+து > பறிந்த்உ > பறித்து

இந்த ஆய்வில் *அறிந்து* என்பதில் நிலையொலியாகிய தகரம் அலையொலியாகவும், *பறித்து* என்பதில் நிலையொலியாகவே நிலைபெற்றும் நிகழ்கின்றது. இந்த மாறுபட்ட நிகழ்வுகள் வினையடிகளையும் அவற்றின் தன்வினை-பிறவினை இயல்பு களையும் பொறுத்ததாகும். நிலையொலியாக மேற்படி தகரம் நிகழ்கையில் அதன் முன் நிகழும் இனமெல்லொற்று இன வல்லொற்றாகத் திரிகிறது. இத்தகைய திரிபினை ஒரு தொல்திராவிட நிகழ்வாகக் கருதலாம்.

2.6. செய்து வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைகளைப் பொறுத்தவரை *ஆடு, பாடு, ஓடு* முதலான வினைகளின் அடியாக இவற்றின் நிகழ்ச்சி காணப்படவில்லை. எடுத்துக்காட்டாக **ஆடிது, *பாடிது* முதலான செய்து வாய்பாட்டு வினைகளுக்குத் தமிழில் இடமில்லை. மாறாக, *பாடி* (எ-டு. பாடிய்-அ, பாடி-யான், பாடியவன்), *பாடின்* (எ-டு. பாடின, பாடினான், பாடினவன்) போன்ற இறந்தகாலப் பொதுவினைகளே தமிழில் காணப்படுகின்றன. *பாடி, பாடிய, பாடியவன்* ஆகியவற்றின் நிகழ்ச்சி மலயாளத்திலும் காணப்படுகிறது. ஆனால் தெலுங்கிலும் கன்னடத்திலும், *ஆடிது, பாடிது* முதலான இறந்த காலப் பொதுவினைகளின் நிகழ்ச்சி இயல்பாகக் காணப்படுகிறது.

எ-டு. தெலுங்கு: *பாடித்இமி* 'பாடினோம்' < *பாடித்உ+மு*, *பாடித்எ* (< *பாடித்உ-எ*) "பாடினால்', **பாடித்உ* (< *பாடிந்த்உ* < *பாடிம் + து*). உயிரொலி இயைபின் காரணமாக, **பாடித்இமு* என்பது *பாடித்இமி* என்று திரிந்தமைகிறது. கன்னடம்: *பாடித* (< பாடிது + அ) 'பாடிய', *பாடிதனு* (< பாடிது + அனு) 'பாடினான்', *பாடிதரெ* (< பாடிது + அரெ) 'பாடினால்'; *கேளிது* 'கேட்டு', *கேளித* (< கேளிது + அ) 'கேட்ட', *கேளிதளு* (< கேளிது + அளு) 'கேட்டாள்', *கேளிதரெ* (< கேளிது + அரெ) 'கேட்டார்'. *பாடிது*, *கேளிது* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் **பாடிந்து*, **கேளிந்து* எனக் கொள்ளப்படும்.

2.7. தமிழில் *கேட்ட*, *கேட்டான்*, *கேட்டால்* ஆகியவற்றில் நிகழும் *கேட்டு* என்னும் செய்து வாய்பாட்டுப் பொதுவினையின் அடிநிலை வடிவம் **கேளிந்த்உ* என மீட்டுருவாக்கம் செய்யத்தக்கதாகும். இந்த அடிநிலை வடிவம் **கேளித்து* எனத் திரிந்து பின்னர் இகரம் கெட, **கேள்த்து* என ஒடுங்குகிறது. இவ்வாறு ஒடுங்கிய **கேள்த்து* பின்னர் **கேள்ட்டு* எனவும் **கேட்ட்டு* எனவும் திரிந்து இறுதியில் *கேட்டு* என அமைகிறது. *கேட்டு* என்பதன் அடிநிலை வடிவமாகிய **கேளிந்த்உ* என்பதில் நிகழும் தகரம் நிலையொலியாக நிகழ்வதால் இதன்முன் நிகழும் நகரம் தகரமாகத் திரிகிறது. கன்னடத்தில் முதற்கட்டமாக மேற்படி தகரம் அலையொலியாகத் திரிந்து **கேளிந்து* என அமைந்து, பின்னர் **கேளிந்து* என்பதில் நிகழும் நகரம் கெட்டு *கேளிது* என்ற செய்து வாய்பாட்டு வடிவமாக இயைபு விகுதிகளின் முன் தோற்றம் கொள்கிறது. *செயிந்த்உ வாய்பாட்டு வினைகளில் நிகழும் நகரம் தெலுங்கில் கெடுகிறது. எ-டு. **பாடிந்த்உ* > *பாடித்உ*. **பாடித்உ + மு* > *பாடித்இ + மி* > *பாடித்இமி* 'பாடினோம்'.

2.8. செய்து வாய்பாட்டு இறந்தகால, இறவாக்கால வினைகளைப் பற்றிப் பேசுகையில் இரண்டு செய்திகளைக் குறிப்பிட்டாக வேண்டும். ஒன்று: துகரக் கிளவியின் முன் நிகழும் நகரம் கெடுதல். எ-டு. **செய்ந்து* > *செய்து*, *பெய்ந்து* > *பெய்து*; *அறிதல்*. *அறிது*- < *அறியுது* < *அறியுந்து*; *பாடுதல்*. *பாடுது* < *பாடுந்து*. இரண்டு: துகரக் கிளவியின் முன் நிகழும் இனமெல்லொற்று இனவல்லொற்றாகத் திரிதல். எ-டு. *கேட்டு* (இறப்பு) < *கேட்ட்டு* < *கேள்ட்டு* < *கேள்த்து* < *கேளித்து* < *கேளிந்த்உ*; *அளித்து* (இறப்பு) < *அளியித்து* < *அளியித்து* < *அளியிந்த்உ*; *அளித்து* (இறவாக்காலம்: *அளித்தல்*, *அளித்தி*

(பதி. 79.3) 'அளிப்பாய்') < *அளிய்த்து* < *அளியுத்து* < *அளியுந்த்உ*). இறவாக்கால மெல்வினை சார்ந்த **செய்ந்து* வாய்பாட்டு வினைகள் அனைத்திலும் நகரம் கெடுகிறது. எ-டு. *அறிது (அறிதல்), தேய்து (தேய்தல்), வாழ்து (வாழ்தல்),* இறந்தகால மெல்வினை சார்ந்த **செய்ந்து* வாய்பாட்டு வினைகள் சிலவற்றிலும் நகரத்தின் வீழ்ச்சி காணப்படுகிறது. *செய், பெய், கொய், நெய், எய், வை, அழு, உழு, தொழு, பொரு* ஆகிய பத்து வினையடிகளின் மீது தோன்றிய இறந்தகாலச் செய்து வாய்பாட்டு வினைகள் நகரக் கேட்டின் விளைவுகளாகும். இவ்வாறு நகரம் கெடுவதற்குக் காரணம் அதனையடுத்து நிகழும் நிலையொலியாகிய துகரக் கிளவி அலையொலியாகத் திரிவதேயாகும். ஆயினும் பல இறந்தகாலச் செய்து வாய்பாட்டு வடிவங்களில் இந்த நகரக்கேடு நிகழவில்லை. எ-டு. *அறிந்து, தேய்ந்து, வாழ்ந்து, நுழைந்து, விழுந்து.* இறந்தகாலமாயினும் இறவாக்காலமாயினும் வல்வினை சார்ந்த செய்து வாய்பாட்டு வினைகள் அனைத்திலும் நகரம் தகரமாகத் திரிகிறது. *கற்று: கற்ற* (இறப்பு)/ *கற்றல்* (இறவாக் காலம்), *அளித்து: அளித்த* (இறப்பு)/ *அளித்தல்* (இறவாக்காலம்), *சேர்த்து: சேர்த்த* (இறப்பு)/ *சேர்த்தல்* (இறவாக்காலம்).

2.9 செய்து வாய்பாட்டு இறந்தகால, இறவாக்காலப் பொதுவினை முற்றுக்களின் அடிநிலை வடிவங்கள் மீதான ஆய்வில் ஒரு சிக்கலை விடுவித்தாக வேண்டும். தனிக்குறிலை யடுத்த உகர ஈற்று வினையடிகள் (எ-டு. *தொழு, எழு, இழு, கொடு, இரு, தொடு* முதலியன) மீதமைந்த செய்து வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்களை இனங்காண்பதில் சில இடர்ப்பாடுகள் உள்ளன. இறந்தகாலமாயினும் இறவாக்கால மாயினும் மேலே குறிப்பிட்டது போன்ற வினையடிகள் மீது அமையும் செய்து வாய்பாட்டு வினைகள் - எடுத்துக்காட்டாக, **எழுந்த்உ (> எழுந்து > எழுது/-அல்:* இறவாக்காலம்), **கொடுந்த்உ (> கொடுத்து), *இருந்த்உ (> இருந்து/இருத்து)* / (கருதுக: *இருத்து/-அல், இ, இர், உம்:* இறவாக்காலம்), **தொழுந்த்உ (> தொழுந்து > தொழுது/-அ; அல், உம், இ, இர்* - இறந்தகாலமும், இறவாக்காலமும்), என்று அமைய வேண்டும். இறப்புக்கும், இறவாக்காலத்துக்கும் அடிநிலை வடிவம் ஒன்றாகவே இருப்பது ஒரு சிக்கல். *தொடு* என்ற வினையின் அடியாக அமையும் *தொட்டு* என்பதன் அடிநிலை வடிவம் **தொடுந்த்உ* என்று கொள்ளப்பட்டால் *தொடுத்து* (இறப்பு) என்ற வினைதான்

கிடைக்குமே தவிர *தொட்டு* என்ற வினைவடிவம் கிடைக்க வாய்ப்பில்லை. ஆனால் மேற்படி அடிநிலை வடிவத்திலிருந்து *தொடுது* என்ற இறவாக்கால வடிவத்தைப் பெற முடியும். இதன் நிகழ்ச்சியைத் *தொடுதல், தொடுதும், தொடுதி, தொடுதிர்* (பழந்தமிழ் வழக்கு), *தொடுத*'தொடுகிற', *தொடுதான், தொடுதாள்* முதலியன (குமரி மாவட்ட நிகழ்கால வினைகள்) ஆகிய வினைகளில் காணலாம். *தொட்டு* என்பதை எப்படி வருவிப்பது? *தொடுத்து* என்பது **தொட்த்து* என ஒடுங்கி அதனின்றும் *தொட்டு* என்ற வடிவம் *(*தொட்த்து > *தொட்ட்டு > தொட்டு)* தோன்றியதாகக் கருதலாமா? இது இன்னொரு சிக்கல். *தொட்டு (< *தொடுத்து), நட்டு (< *நடுத்து),. கொட்டு (< *கொடுத்து* - கன்னடம்) முதலானவை கிளைமொழி வழக்குகளாக நிகழ்ந்து செவ்வியல் வழக்கில் இடம்பெற்றிருக்க வேண்டும். இத்தகைய சிக்கல்களுக்கான தீர்வை எதிர்கால ஆய்வாளர்கள் கண்டறிய வேண்டும்.

*2.10* மேலே *2.9*-இல் சிந்திக்கப்பெற்றுள்ள ஆய்வானது நிலைமையை மேலும் சிக்கலாக்குவதாக உள்ளது. எடுத்துக் காட்டாக, **எழுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து *எழுந்து* என்ற இறந்தகால வினையும், *எழுதல்* என்பதில் நிகழும் *எழுது* என்ற இறவாக்கால வினையும் பெறப்படுமாயின் மேற்படி அடிநிலை வடிவத்தில் நிகழும் நகர மெல்லொலிக்குக் காரணமான மகரமெய்யை *-இம்* (இறப்பு), *-உம்* (இறவாக்காலம்) ஆகியவற்றின் மாற்றுருபாகக் கொள்ள வேண்டும். இந்த ஆய்வானது *அறிந்து, அறிது/-அல்; தேய்ந்து, தேய்து/- அல்; பறித்து/-அ, அல்* ஆகியவற்றுக்கும் பொருந்த வேண்டும். இத்தகைய ஆய்வினைத் தள்ளவும் முடியவில்லை; கொள்ளவும் முடியவில்லை.

*2.11* **அறிந்த்உ* என்பதில் உள்ள நகரத்தின் முதல் ஒலியாகிய மகரமெய்யை *-இம், -உம்* ஆகியவற்றின் மாற்றுருபாகக் கொள்வதைவிட *அறிம்* என்பதை *அறி* என்பதன் மாற்றுருபாகக் கொள்வது இன்னொரு ஆய்வு முறையாகும். தமிழில் உள்ள தகர மெய்யைக் கால இடைநிலையாகக் கொண்ட எல்லா வினைப் பகுதிகளுக்கும் செய்ம் வாய்பாட்டு மாற்றுருபுகளை அமைக்க முடியும். எ-டு. *பறி/பறிம், அறி/அறிம், கலை/கலைம், கேள்/கேள்ம், கொய்/கொய்ம், நட/நடம், இரு/இரும்.* இந்த மாற்றுருபுகளில் நிகழும் மகரம் வரலாற்று நிலையில் உம்மைக்

கிளவியாகும். இந்த ஆய்வினை முற்றிலுமாக ஒதுக்கிவிட முடியாது. இதனை ஏற்றுக்கொள்ளும் நிலையில் செய்து, கேட்டு முதலான இறந்தகால வினைகளின் அடிநிலை வடிவங்களைச் *செயிந்த்உ, *கேளிந்த்உ எனக் கொள்ள முடியாமற் போய்விடும். இத்தகைய நிலையானது *கேளித* (=கேட்ட), *கேளிதனு* (=கேட்டான்) முதலான கன்னட இறந்தகால வினைகளிலும், *பாடித்இமி* 'பாடினோம்', *பாடித்ஏ* (=பாடினால்) முதலான தெலுங்கு வினைகளிலும் நிகழும் இறந்தகால வினைப் பகுதிகளை வரலாற்று நிலையில் விளக்கத் துணைபுரியாது. மேலும் இந்த ஆய்வின்படி செய்து வாய்பாட்டு இறந்தகால வினைகளில் நிகழும் துகரக் கிளவியானது அடிப்படையிலேயே காலக்கிளவி என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். துகரக் கிளவி இறந்தகால விகுதியாக நிலைகொண்டதானது இறந்தகால வினையமைப்பில் நிகழ்ந்த மாற்றத்தின் விளைவாகவே கருதத் தோன்றுகிறது. *பறிப்பான், பறிக்கான்* (குமரி மாவட்ட ஆண்பால் எதிர்கால, நிகழ்கால வினைகள்) ஆகியவற்றைப் பொறுத்தவரை **பறிம்* என்பதைப் *பறி* என்பதன் மாற்றுருபாக ஏற்றுக் கொள்வதில் தடையொன்றுமில்லை. ஆனால், *பறித்தான்* என்ற இறந்தகால வினையின் வினைப்பகுதியின் மாற்றுருபாகப் **பறிம்* என்பதைக் கொள்ள முடியுமா என்பது கேள்விக்குறியாக உள்ளது. *இழுத்த, இழுத்தான்; தொழுத, தொழுதான்* ஆகியவற்றில் நிகழும் *இழுத்து, தொழுது* ஆகிய இறந்தகால வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களைக் கண்டறிவதிலும் இத்தகைய சிக்கலை நாம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. கன்னடத்தில் *முரித மனெ* (=இடிந்த வீடு) என்ற தொடரில் நிகழும் *முரித* என்ற பெயரெச்சம் *முரிது* என்ற இறந்தகால வினையின்மீது அமைந்த ஒன்றாகும். *முரிது* என்பதன் கீழ்நிலை வடிவம் **முரிந்து* என்பதாகும். *கோலு முரியித்உ* (muriyitu) என்ற கன்னட வாக்கியத்தில் நிகழும் *முரியித்உ* என்ற வினைமுற்றின் அடிநிலை வடிவம் **முரியிந்த்உ* என்பதாகும். வரலாற்று நிலையில் *முரிது* என்ற வினை **முரியிந்த்உ* என்பதனின்றும் தோன்றியதாகக் கருதலாம். இதனின்றும் *அறிந்து, பறித்து, செய்து* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களை **அறியிந்த்உ, *பறியிந்த்உ, *செயிந்த்உ* எனக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. ஆனால், *எழுந்து, கொடுத்து* முதலானவற்றின் இறந்தகால அடிநிலை வடிவங்களைப் பொறுத்தவரையில் அவற்றைக் கண்டறிவதற்கான தடயங்கள் ஏதும் தென்படவில்லை.

2.12 தமிழில் நிகழும் *திற, மற, நட, சின* முதலான அகர ஈற்று வினையடிகள் **திறய், *மறய், *நடய், *சினய்* என யகர ஈற்றினவாகக் கொள்ளத்தக்கனவாகும். இவற்றின் அடியாகத் தோன்றிய செய்து வாய்பாட்டு இறந்தகால வினைகளும், இறவாக்கால வினைகளும் மாறுபட்ட வடிவினவாக அமைகின்றன. எ-டு *சினந்து* (இறப்பு), (அல் என்பதன் முன் நிகழும்) *சினத்து* (இறவாக்காலம்). *சினத்து* என்ற இறவாக்கால வினையின் அடிநிலை வடிவம் **சினயுந்த்உ* என்பதாகும். *சினந்து* என்ற இறந்தகால வினையின் அடிநிலை வடிவம் **சினையிந்த்உ* எனக் கருதத்தக்கதாகத் தோன்றுகிறது. வண்ணனை நிலையில் *சினந்து, சினத்து* ஆகியவற்றின் வினைப்பகுதி *சினம்* எனக் கொள்ளத்தக்கதாகும். இது *சின* என்பதன் மாற்றுருபு ஆகும். வரலாற்று நிலையில் ** சினம்* என்பது ** சினயும்* (=சினையும்) என்ற செயும் வாய்பாட்டு வினையுடன் தொடர்புடையதாகும்.

2.13 அகர ஈற்று வினையடிகளின் மீது அமைந்த செயின் வாய்பாட்டு வினைகள் வல்வினை சார்ந்தவையாகக் காணப்படு கின்றன. எ-டு. *நடப்பின்/நடக்கின்*. இரு என்ற வினைக்கும் இது பொருந்தும். எ-டு. *இருப்பின்/இருக்கின்*. ஆனால் தொன்னிலையில் நட, மற முதலியவற்றின் அடியாகத் தோன்றிய செயின் வாய்பாட்டு வினைகள் **நடயின், *மறயின்* என்றே நிகழ்ந்திருக்க வேண்டும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணம் *நட, மற* முதலியவற்றின் மாற்றுருபுகளாகிய *நடம், மறம்* முதலானவை **நடயும், *மறயும்* முதலான செயும் வாய்பாட்டு வினைகளிலிருந்து தோன்றியமைந்தவையாகும். வரலாற்று நிலையில் **நடயின், *மறயின்* முதலானவை முந்தையனவாகவும் *நடக்கின்/நடப்பின், மறக்கின்/மறப்பின்* முதலானவை பிந்தையனவாகவும் கருதத்தக்கனவாகும். இதனைக் கருத்தில் கொண்டு *நடந்து* என்பதன் அடிநிலை வடிவத்தை எடுத்துக் காட்டாக **நடயிந்த்உ* எனக் கருத வாய்ப்புள்ளது.

2.14 *செத்து, நொந்து, வெந்து* ஆகிய இறந்தகாலச் செய்து வாய்பாட்டு வினைகளைப் பொறுத்தவரை அவற்றின் அடிநிலை வடிவங்கள் முறையே **செயிந்த்உ, *நொயிந்த்உ, *வெயிந்த்உ* எனக் கொள்ளத்தக்கனவாகும். இவற்றினின்றும் *செத்து, நொந்து, வெந்து* ஆகிய வினைகளைப் பின்வருமாறு வருவிக்கலாம்.

(3) *செயிந்த்உ > செயித்து > செய்த்து > செத்து

(4) *நொயிந்த்உ > நொயிந்து > நொய்ந்து > நொந்து

(5) *வெயிந்த்உ > வெயிந்து > வெய்ந்து > வெந்து

*சாதல், நோதல், வேதல்* ஆகியவற்றில் நிகழும் *சாது, நோது, வேது* ஆகிய இறவாக்கால வினைப்பகுதிகள் முறையே **சாயுந்த்உ, *வேயுந்த்உ, *நோயுந்த்உ* ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து பின்வருமாறு பெறப்படும்.

(6) *சாயுந்த்உ > சாயுந்து > சாயுது > சாய்து > சாது (/-அல்)

(7) *நோயுந்த்உ > நோயுந்து > நோயுது > நோய்து > நோது (/-அல்)

(8) *வேயுந்த்உ > வேயுந்து > வேயுது > வேய்து > வேது (/-அல்)

கன்னடத்தில் *சாயு, நோயு, வேயு* ஆகிய வினைப்பகுதிகளின் நிகழ்ச்சி காணப்படுவதால் இவற்றையே *சாதல் நோதல், வேதல்* ஆகியவற்றின் வினையடிகளாக இந்த ஆய்வில் கொள்ளப் படுகின்றன. *சாய், நோய், வேய்* ஆகியவற்றின் மாற்றுருபுகளாக முறையே *செய், நொய், வெய்* ஆகியவை கொள்ளப்பட்டு இவற்றின் அடியாகச் *செத்து, நொந்து, வெந்து* ஆகிய இறந்தகால வினைகள் (3) முதல் (5) வரையில் குறிப்பிட்டவாறு வருவிக்கப் படுகின்றன.

2.15 மேலே நிகழ்த்திய ஆய்வானது *கண்டு, காண்டு* (< காணுது) ஆகிய இறந்தகால இறவாக்கால வினைகளுக்கும் பொருந்தும். இங்கே குறிப்பிடத்தக்க செய்தியும் ஒன்று உண்டு. *காண்* என்ற வினையின் அடியாக அமையும் செயின் வாய்பாட்டு வினை **கணின்* என்று அமையாது *காணின்* என்றே அமைகிறது. செயின் வாய்பாட்டு வினைகளை வரலாற்று நிலையில் இறந்த கால வினைகளாக கொள்ளும் நமது கருதுகோளுக்குக் *காணின்* என்பது ஓர் அறைகூவலாக உள்ளது. *கண்டு* என்ற இறந்தகால வினையின் முதல் அசை தொடக்கத்தில் எடுத்தொலிக்கப் பட்டிருக்க வேண்டும். அதாவது ஒலிப்பில் அசையழுத்தம் மிகுந்திருக்க வேண்டும். இந்த நிலையில் *காணின்* என்பது *கணின்* என்றே அசையழுத்தத்துடன் தொடக்கத்தில் ஒலிக்கப்பட்டிருக்க வேண்டும். முதலசை படுத்தொலிக்கப்பட்ட நிலையில் அசையழுத்தத்தின் இழப்பை ஈடுசெய்யும் வகையில் *கணின்* என்பது *காணின்* என ஒலிக்கப்பட்டு இருக்கலாம். இது வெறும் அனுமானமே. மேலும் இது ஆய்வுக்குரியது.

❀ ❀ ❀

# 3. மூவகை இறவாக்காலப் பொது வினைமுற்றுக்கள்

### 3.1 செய்து வினைகள்

3.1.1 செய்து (< செயுது), செய்கு (< செயுகு), செய்பு (< செயுபு) ஆகிய மூவகை வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினை முற்றுக்கள் இங்கே கருத்தில் கொள்ளப்படுகின்றன. இவை மூன்றும் கோட்பாட்டு நிலையில் முறையே **செயுந்த்உ, *செயுங்க்உ, *செயும்ப்உ* ஆகிய வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவையாகும். இவற்றுள் **செயுந்த்உ* (>செயுந்து = செய்யுந்து) வாய்பாட்டு வினைகள் பழந்தமிழில் நிகழ்வதை *உம்உந் தாகும் இடனுமார் உண்டே* (சொல். சேனா. 292) என்ற நூற்பாவின் மூலம் தொல்காப்பியர் உறுதிப்படுத்து கிறார். இதனைக் கருத்தில் கொண்டே **செயுங்க்உ, *செயும்ப்உ* ஆகிய வாய்பாட்டு வினைகள் இந்த ஆய்வில் முன்மொழியப் படுகின்றன. செயும் வாய்பாட்டு வினைகள் செயுந்து வாய்பாட்டினவாகவும் உறழ்ந்து நிகழும் என்ற தொல்காப்பியச் செய்தியின் அடிப்படையில் செயும் வாய்பாட்டு வினைகளில் நிகழும் உம்மைக் கிளவியும் செயுந்து வாய்பாட்டு வினைகளில் நிகழும் உந்தென் கிளவியும் உறழ்நிலைக் கிளவிகள் (Free Variants) என்பது தெளிவாகின்றது. **செயுந்த்உ* வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றி நிகழும் செய்து (< செயுது) வாய்பாட்டு - வல்வினை, மெல்வினை சார்ந்த - இறவாக்கால வினைகள் பற்றி முந்தைய பகுதியில் பேசப்பட்டுள்ளது. இந்த வாய்பாட்டு வினைகள் தொடர்பாக அங்கே விடுபட்டுப்போன செய்திகள் மட்டும் இங்கே பேசப்படும்.

3.1.2 கன்னடத்தில் நிகழ்கால வினைகள் அனைத்தும் **செயுந்த்உ* வாய்பாட்டு வினைகளின் திரிபான *செயுத்து* வாய்பாட்டு நிகழ்காலப் பகுதிகளின் மீதே அமைகின்றன. எ-டு. *சேருத்தானெ* (< சேருத்து-ஆனெ) 'சேர்கிறான்', *கேளுத்தாளெ* (< கேளுத்து-ஆளெ) 'கேட்கிறாள்'. ஆனால் தமிழில் இந்த ஒழுங்கமைதி வல்வினை- மெல்வினை அடிப்படையில் போற்றப்

படவில்லை. எ-டு. வல்வினை: *இழத்தும்* (குறள். 1250), 'இழப்போம்' *அளித்தி* (கலி. 95.31), 'அளிப்பாய்', *இரத்திர்* (நற். 71.3) 'இரப்பீர்', *அளித்தல்* (புறம். 59.3); மெல்வினை: *அறிதும்* (குறுந். 40.3), *அறிதி* (நற். 82.3), *அறிதிர்* (அகம். 8.18), *அறிதல்* (ஐங். 261.3). குமரி மாவட்டக் கிளைமொழி வழக்கில் அனைத்து நிகழ்கால வினைகளும் செயுது வாய்பாட்டு நிகழ்காலப் பகுதிகளின் மீதே அமைகின்றன. எ-டு. *வாழுதான், வாழுதேன், வாழுதோம்; படிக்குதான், படிக்குதேன், படிக்குதோம்; வாழுத* 'வாழ்கிற', *படிக்குத* 'படிக்கிற'.

*3.1.3* பொதுப் பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) செயுது வாய்பாட்டு நிகழ்கால வினைகளில் காணப்படும் தகரம் ரகரமாகத் திரிகிறது. எ-டு. *பிரியுரான்* (< பிரியுதான்), *பேசுரான்* (< பேசுதான்), *குடிக்குரான்* (< குடிக்குதான்), *பேசுர* (< பேசுத), *படிக்குர* (< படிக்குத). தகரத்தின் திரிபாகிய இந்த ரகரம் மிகைத்திருத்தம் (Hyper Correction) செய்யப்பட்டு றகரமாக எழுதப்படுகிறது. இதற்குக் காரணம் செய்கின்று வாய்பாட்டு வினைகளில் நிகழும் றகரமே. செவ்வியல் தமிழில் நிகழ்கால வினைப்பகுதிகள் அனைத்தும் செய்கு வாய்பாட்டினவாக அமைவதுடன் நிகழ்கால விகுதியாகிய தகரமும் ரகரமாகத் திரிகிறது. ஆனால் இவ்வாறு திரிந்த ரகரம் செவ்வியல் வழக்கில் றகரமாக மிகைத்திருத்தம் செய்யப்பட்டு எழுதப்படுகிறது. எ-டு. *சேர்கிறான்* (< சேர்குதான் < சேர்கு-த்+ஆன்), *சேர்க்கிறான்* (< சேர்க்குதான் < சேர்க்கு-த்+ஆன்). *செய்கின்று* (< செய்கு + இன்று) வாய்பாட்டு நிகழ்கால வினைப்பகுதியில் நிகழும் இகரமும் றகரமும் எடுத்துக்காட்டாக *பேசுகுரான், குடிக்குரான்* என்று இருக்க வேண்டிய வடிவங்களைப் *பேசுகிறான், குடிக்கிறான்* என்று மாற்றியமைத்துவிடுகின்றன. கோவில்பட்டியில் இருந்து ஏறக்குறைய பத்து கிலோமீட்டர் தொலைவில் உள்ள இளையரசனேந்தல் என்ற கிராமத்துக்கு அருகில் உள்ள ஆண்டிப்பட்டியில் வசிக்கும் பள்ளர் இனத்தவரின் தமிழில் செய்யாத, செய்யாதவன், செய்யாதது ஆகிய வாய்பாட்டு எதிர்மறை வினைகளிலும் இல்லாத, இல்லாதது ஆகியவற்றிலும் நிகழும் தகரம் ரகரமாகத் திரிந்தமைகிறது. எ-டு. *செய்யார, செய்யாரவன், செய்யாரது; இல்லார, இல்லாரது.* பள்ளர் வகுப்பைச் சேர்ந்த பூமணியின் *வெக்கை, பிறகு* ஆகிய புதினங்களிலும் சோ. தர்மனின் *தூர்வை* என்ற புதினத்திலும் இத்தகைய எதிர்மறைக் குறிப்பு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது.

3.1.4 *செயுந்த்உ* வாய்பாட்டு வினைகள் இன மெல்லொற்றாகிய நகரத்தினைத் தெலுங்கில் இழந்து இறவாக்கால வினைமுற்றுக்களின் பகுதியாக நிகழ்கின்றன. எ-டு. *பாடுத்ஆ* (< *பாடுத்ஆன்) / *பாடுத்ஆனு* (< பாடுத்உ + ஆன்/ஆனு) 'பாடுகிறேன்'; *பாடுத்உ* (< *பாடுத்உன்) / *பாடுத்உனு* (< பாடுத்உ+ உன்/உனு) 'பாடுவேன்'. *செயுந்த்உ* வாய்பாட்டு வினைகள் *செயுந்து* வாய்பாட்டினவாகத் திரிந்தும் இனமெல்லொற்றை இழந்தும் பொதுப் பேச்சுத் தமிழில் ஒன்றன்பால் நிகழ்கால வினைகளாக நிகழ்கின்றன. எ-டு. *வருது, பேசுது, நிக்குது* (< *நிற்குது*), *கேக்குது* (< *கேட்குது*). குமரி மாவட்டத் தமிழில் *செய்யுத* வாய்பாட்டு நிகழ்காலப் பெயரெச்சங்களில் நிகழும் *செய்யுது* வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களின் அடிநிலை வடிவங்கள் *செய்யுந்து* வாய்பாட்டினவாகும். எ-டு. *பாடுத* (< பாடுது + அ) 'பாடுகிற', *நிக்குத* (< நிக்குது + அ) 'நிற்கிற', *கேக்குத* (< கேக்குது + அ) 'கேட்கிற'. *செய்யுது* வாய்பாட்டுப் பொதுவினைகள் குமரித் தமிழில் செய்யுதான், செய்யுதாள் முதலான வாய்பாட்டு நிகழ்கால வினைகளில் நிகழ்காலப் பகுதிகளாகச் செயல்படுகின்றன. எ-டு. *பேசுதான்* (< பேசுது + ஆன்) 'பேசுகிறான்'. *செயுந்து* வாய்பாட்டு வினைகளில் நிகழும் துகரக் கிளவி ஒன்றன்பால் விகுதியாக இனங்காணப்படுகையில் எஞ்சி நிற்கும் *செயுந்* வாய்பாட்டு வடிவங்கள் இறவாக்காலப் பகுதிகளாக அமைந்து *அன், அள், அர், ஐ, அம்* முதலான முற்று விகுதிகளைப் பழந்தமிழில் ஏற்கின்றன. எ-டு. *அறியுநன்* (புறம். 136.15), *அறியுநள்* (நற். 44.5), *அறியுநர்* (பத்துப். 8.4), *அறியுநம்* (அகம். 243.12). இந்த எடுத்துக்காட்டுகளில் *அறியுந்* என்பது இறவாக்காலப் பகுதியாகும். *செயுந்து* வாய்பாட்டு வினைகள் இனமெல்லொற்றை இழந்து செய்து வாய்பாட்டினவாக ஒடுங்கி *அல், உம், இ, இர்* ஆகிய விகுதிகளை ஏற்று நிகழும் நிலையும் பழந்தமிழில் காணப்படுகின்றது. எ-டு. *அறிதல்* (குறுந். 276.4), *அறிதும்* (நற். 299.6), *அறிதி* (புறம். 36.2), *அறிதிர்* (அகம். 8.18). இதேபோல் *செயுந்* வாய்பாட்டு இறவாக்காலப் பகுதிகள் உகரம் இழந்து முற்று விகுதிகளை ஏற்கும் நிலையும் பழந்தமிழில் காணப்படுகின்றது. எ-டு. *அறிநை* (புறம். 381.20), *களைநர்* (பதி. 40.7). *செயுந்து* வாய்பாட்டு வினைகள் மலயாளத்தில் *செயுந்நு* வாய்பாட்டினவாகத் திரிந்து நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களாக நிகழ்கின்றன. எ-டு: *ஆடுந்து > ஆடுந்நு*. நிகழ்காலப் பெயரெச்சங்களிலும் *செயுந்நு* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. எ-டு. *ஆடுந்ந* (< ஆடுந்நு + அ) 'ஆடுகிற'.

3.1.5 தமிழில் தன்வினைக்கு எதிராக அமையும் *நிகழ்த்து, அகற்று, புரட்டு, காட்டு, மாற்று, ஆட்டு* முதலான பிறவினைகள் வரலாற்று நிலையில் **செயுந்த்உ* வாய்பாட்டு இறவாக்கால வினைகளை அடிநிலை வடிவங்களாகக் கொண்டவையாகும். மலயாள வழக்காகிய *கொய்த்து* என்ற வினைப்பெயருக்கும் இது பொருந்தும். (*கொயுந்த்உ > கொயுத்து > கொய்த்து). மேலே குறிப்பிட்ட தமிழ்ப் பிற வினைகளுள் சில பின்வருமாறு வருவிக்கப்படும்.

*1(1) *நிகழுந்த்உ > நிகழுத்து > நிகழ்த்து*

*(2) *அகலுந்த்உ > அகலுத்து > அகல்த்து > அகல்ற்று > அகற்ற்று > அகற்று*

*(3) *காணுந்த்உ > காணுத்து > காண்த்து > காண்ட்டு > காட்ட்டு > காட்டு*

*(4) *மாறுந்த்உ > மாறுத்து > மாற்த்து > மாற்ற்று > மாற்று*

*கேட்டல், அளித்தல், குளித்தல், அடைத்தல், மேய்த்தல்* முதலானவற்றில் நிகழும் *கேட்டு, அளித்து, குளித்து, அடைத்து, மேய்த்து* முதலானவை இறவாக்கால வினைப்பகுதிகளாகும். ஆனால் *நிகழ்த்து, அகற்று, காட்டு* முதலானவற்றை வண்ணனை நிலையில் அவ்வாறு கொள்ள முடியாது. புற நிறைவைக் கருத்தில் கொண்ட வண்ணனை ஆய்வில் *நிகழ்த்து* என்பது எடுத்துக் காட்டாக *நிகழ்+த்து* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படும். இந்த அமைப்பில் *-த்து* என்பது பிறவினை விகுதியாகக் குறிக்கப் படும். இதற்கு மாற்றாக அக நிறைவைக் கருத்தில் கொண்ட வண்ணனை ஆய்வில் *நிகழ்த்து* என்பது *நிகழ்ம்+து* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்பட்டு அதில் நிகழும் துகரக் கிளவி பிறவினை விகுதியாகக் குறிக்கப்படும். *நிகழ்ம்* என்பது *நிகழ்* என்பதன் மாற்றுருபாகும். *நிகழ்ம்+து* என்ற ஆய்வு **நிகழுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்தினை பிரதிபலிப்பாகக் கருதலாம்.

3.1.6 தெலுங்கில் நிகழும் *கோந்த்அ* 'அறுப்பு', *ம்ரோந்த்அ / மோந்த்அ* 'இரைச்சல்', *கூந்த்அ* 'கூச்சல்', *மேந்த்அ* 'மேய்ச்சல்', *நீந்த்அ* 'நீச்சல்', *நேந்த்அ* 'நெசவு', *மூந்த்அ* 'மூடி' முதலான அகர ஈற்று வினைப்பெயர்கள் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களின்மீது தோன்றியமைந்தனவாகும். இவற்றுள் சில பின்வருமாறு வருவிக்கப்படும்.

2(1) *கோயுந்த்உ > கோய்ந்த்உ > கோந்த்உ+அ > கோந்த்அ

(2) *கூயுந்த்உ > கூய்ந்த்உ > கூந்த்உ+அ > கூந்த்அ

(3) *நீயுந்த்உ > நீய்ந்த்உ > நீந்த்உ+அ > நீந்த்அ

(4) *மூயுந்த்உ > மூய்ந்த்உ > மூந்த்உ+அ > மூந்த்அ

பழந்தமிழில் நிகழும் *நீத்தம்* (நற். 7.4) என்பதும் தெலுங்கில் காணப்படும் *நீந்த்அ* என்பதும் தொடர்பு உடையனவாகும். எனவே *நீத்தம்* என்பதும் **நீயுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்தி லிருந்து **நீயுந்த்உ > நீயுத்து > நீய்த்து > நீத்து+அம்* என்ற முறையில் வருவிக்கப்படும். *ஆட்டம், ஓட்டம், கூட்டம், மாற்றம், சீற்றம்* முதலானவற்றையும் இதேபோல் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து வருவிக்க முடியும் என்றே தோன்றுகிறது. இந்த வகையிலான ஆய்வு தொடர்ந்து மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்.

3.1.7 தெலுங்கில் *நலியு/நலுசு* 'நலி', *புலியு/புலுசு* 'புளி', *கனியு/கனுசு* 'கனி', *கலியு/கலுசு* 'கலை' முதலான இணைவினைகள் காணப்படுகின்றன. இவற்றுள் முதல் உறுப்பாக நிகழும் *நலியு, புலியு, கனியு, கலியு* முதலானவை செயும் வாய்பாட்டு வினைகளின் எச்சங்களாகக் கருதத்தக்கனவாகும். எடுத்துக் காட்டாக, *கனியு* என்பதன் தோற்றத்தை இப்படி விளக்கலாம். **கனியும் > கனியுன் > கனியு*. *கனியு* என்பதில் நிகழும் ஈற்று உகரத்தைக் கருதுகையில் இந்த ஆய்வு தவிர்க்க முடியாத ஒன்றாகும். இரண்டாவது உறுப்பாகிய *நலுசு, புலுசு, கனுசு, கலுசு* முதலானவை முதல் உறுப்புக்களின் மாற்றுருபுகளாகும். இவற்றில் நிகழும் உகரம் ஊர்ந்த உரசொலியாகிய சுகரத்தைப் பிறழ்பிரிப்பின் விளைவாகக் கருதுவார் பத்ரிராஜு கிருஷ்ண மூர்த்தி (Bh. Krishnamurti 1972:149 & 150). *நலிசி* (nalisi) 'நலிந்து' என்ற வினையெச்சத்தினை எடுத்துக்காட்டாக, *நலி+சி* என்ற அமைப்பினதாகக் கொள்ளும் கிருஷ்ணமூர்த்தி மேற்படி அமைப்பில் *-சி* என்ற வினையெச்ச விகுதியில் நிகழும் சகர உரசொலி தவறாகப் பிரிக்கப்பட்டு வினையடியாகிய *நலி* என்பதுடன் இணைக்கப்பட்டுவிட்டதாகக் கருதுகிறார். இதன் விளைவாக *நலிசு* (> நலுசு) என்ற மாற்றுருபு தோற்றம் கொண்டது என்பது கிருஷ்ணமூர்த்தியின் ஆய்வு. இதேபோல் *தெறவு* (> தெறுவு) 'திற' என்பதன் மாற்றுருபாகத் தெலுங்கில் நிகழும் *தெறச்உ* (teRacu) என்பதில் நிகழும் உகரம் ஊர்ந்த வல்லுர சொலியாகிய (affricate) சகரமும் பிறழ்பிரிப்பின் விளைவாகக் கொள்ளத்தக்கது என்று கருதுகிறார் கிருஷ்ணமூர்த்தி. *தெறச்இ* 'திறந்து' என்பது *தெற+ச்இ* என்ற அமைப்பினதாகக் கொள்ளப் பட்டு அதில் நிகழும் சகர வல்லுரசொலியானது தவறாக வினையடியுடன் சேர்க்கப்பட்டுவிட்டது என்பதும் அதன்

விளைவாக, *தெறச்உ* என்ற வினைப் பகுதி தோற்றம் கொண்டது என்பதும் கிருஷ்ணமூர்த்தியின் ஆய்வு முடிபுகளாகும். இந்த ஆய்வுகளில் கிருஷ்ணமூர்த்தியின் கற்பனை வளம் வெளிப்படு கிறதே தவிர உண்மை ஒரு சிறிதும் வெளிப்படவில்லை. *நலிசி, தெறச்இ* ஆகியவற்றை *நலிசு+இ* (< நலுசு + இ), *தெறச்உ + இ* என்ற அமைப்பினவாகக் கொள்வதில் உள்ள அமைப்பியல் தடைகள் என்ன என்பதைப் பற்றிக் கிருஷ்ணமூர்த்தி சிந்திக்க முற்படவில்லை. ஒரு தவறான அமைப்பியல் ஆய்வை (அதாவது *நலி+சி, தெற+ச்இ*) முன்மொழிந்துவிட்டு அதனடிப்படையில் பெறப்படும் முடிபுகள் நமக்கு உடன்பாடில்லை. கிருஷ்ண மூர்த்தியின் *நலிசி, தெறச்இ* தொடர்பான ஆய்வும் தவறானது; *நலிசி, தெறச்இ* ஆகியவற்றின் உண்மையான அமைப்பு *நலிசு+இ, தெறச்உ+இ* என்பதேயாகும். கிருஷ்ண மூர்த்தியின் ஆய்வை ஏற்றுக் கொண்டால் தமிழில் நிகழும் *பரசு, அலசு, உரசு, தொலைச்சு, அடைச்சு* (கலி. 51.2) ஆகிய வினையடிகளையும் பிறழ்பிரிப்பின் விளைவுகளாகக் கொள்ள வேண்டிய விபரீதம் நேர்ந்துவிடும். ஆகவே கிருஷ்ணமூர்த்தியின் ஆய்வைப் புறக்கணித்துவிட்டு *நலுசு, புலுசு, கனுசு, கலுசு* முதலானவை *செயுந்த்உ வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவை என்று இங்கே துணியப்படுகின்றன. நமது கருதுகோளின் அடிப்படையில் *கனுசு* என்பது எடுத்துக்காட்டாக, **கனியுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து பின்வருமாறு வருவிக்கப்படும்.

(3) *கனியுந்த்உ > கனிய்ந்த்உ > கனிய்ஞ்ச்உ > கனிஞ்ச்உ > கனிச்உ > கனிசு (kanisu) > கனுசு

இந்த ஆய்வு தமிழில் நிகழும் *பரசு, அலசு, உரசு* முதலான வற்றுக்கும் பொருந்தும்.

3.1.8 தமிழில் நிகழும் *வரத்து* என்ற வினைப்பெயரும், தெலுங்கில் காணப்படும் *வச்சு* 'வா' என்ற வினைப்பகுதியும் **வரய்* என்பதன் அடியாகத் தோன்றியவையாகும். இவை **வரயுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்தைக் கொண்டவையாகும். இதனின்றும் *வரத்து, வச்சு* இரண்டும் பின்வருமாறு வருவிக்கப்பெறும்.

(4) *வரயுந்த்உ > வரயுத்து > வரய்த்து > வரத்து

(5) *வரயுந்த்உ > வரய்ந்த்உ > வரய்ஞ்ச்உ > வரஞ்ச்உ > வரச்சு > வ்ரச்சு > வச்சு

தெலுங்கில் *நடச்உ* 'நட', *மறச்உ* 'மற', *தெறச்உ* 'திற', *கடச்உ* 'கட', *குடுச்உ* 'குடி, உண்', *துடுச்உ* 'துடை', *தொலுச்உ* 'துளை,

துலக்கு', *மொலுச்உ* 'முளை', *பிடுச்உ* 'பிழி' முதலான வினைகளைப் பற்றிய ஆய்வு பத்ரிராஜு கிருஷ்ணமூர்த்தியில் (Bh. Krishnamurti 1972: 162-166) காணப்படுகிறது. இவரது ஆய்வு நமக்கு உடன்பாடில்லை என்பதை நாம் ஏற்கனவே தெளிவு படுத்தியிருக்கிறோம். மேலே குறிப்பிட்ட வினைகள் அனைத்தும் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவை யாகத் தோன்றுகின்றன. *மறச்உ* 'மற' என்னும் வினை எடுத்துக்காட்டாகப் பின்வருமாறு பெறப்படும்.

(6) *மறயுந்த்உ > மறய்ந்த்உ > மறய்ஞ்ச்உ > மறஞ்ச்உ > மறச்உ

*மறச்உ* என்பதன் கிளைச்சொல்லாக *மற* என்பதைக் கிருஷ்ண மூர்த்தி கொள்கிறார். அவ்வாறு கொள்வதற்கு வாய்ப்பில்லை என்பதை (6)-இல் உள்ள ஆய்வு புலப்படுத்துகிறது. *மறச்உ* தொடர்பான ஆய்வு பழந்தமிழில் நிகழும் *அடைச்சு, தொலைச்சு பழிச்சு, மிலைச்சு, ஓச்சு, காய்ச்சு, பாய்ச்சு* முதலான வினைகளுக்கும் பொருந்தும். எடுத்துக்காட்டாக *ஓச்சு* என்ற வினை **ஓயுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து பின்வருமாறு வருவிக்கப்படும்.

(7) *ஓயுந்த்உ > ஓயுத்து > ஓய்த்து > ஓய்ச்சு > ஓச்சு

*பாய்ச்சு, காய்ச்சு* ஆகியவற்றின் யகரம் கெடவில்லை. *ஓச்சு* என்பதில் யகரம் கெடுவதற்கான காரணம் அது வேறு கிளைமொழிக்கு உரியதாக இருக்கக்கூடும். அல்லது *காய்ச்சு, ஓச்சு* இரண்டும் இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடாக இருக்க வேண்டும். *மறச்உ* போன்ற வினைகளை வருவிப்பதற்கான ஒரு மாற்று ஆய்வும், 3.2.10-17இல் கருத்தில் கொள்ளப்பட்டு இருக்கிறது.

3.1.9 *மேய்ச்சல், துணிச்சல், எரிச்சல், இரைச்சல், புகைச்சல், நீச்சல், கூச்சல்* முதலானவற்றில் *அல்* விகுதியின் முன் நிகழும் *மேய்ச்சு-, துணிச்சு-, எரிச்சு-, இரைச்சு-, புகைச்சு-, நீச்சு-, கூச்சு-,* முதலான வடிவங்களும் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களினின்றும் தோன்றியனவாகக் கருதலாம். *பரசு, விரசு* (DED 4434), *அலசு, உரசு* ஆகியவற்றுக்கும் இந்த ஆய்வு பொருந்தும். *விரிசல்* என்பதில் நிகழும் *விரிசு* என்பதையும் **விரியுந்த்உ* என்ற **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவத்திலிருந்து வருவிக்கலாம். *தெரிசல்* என்பதன் பகுதியாகிய *தெரிசு* என்பதற்கும் இந்த ஆய்வு பொருந்தும்.

3.1.10 *பேசு-பேச்சு, ஏசு-ஏச்சு, பூசு-பூச்சு, வீசு-வீச்சு, கூசு-கூச்சம்* முதலான இணைகள் தமிழில் காணப்பட்டாலும் ஒவ்வொரு இணையிலும் உள்ள இரண்டு உறுப்புக்களும் இருவேறு படிநிலைகளுக்கு உரியனவாகத் தோன்றுகின்றன. ஆயினும் இணைகளில் இடம்பெற்றுள்ள இரண்டு உறுப்புக்களும் **செயுந்த்உ* வாய்பாட்டு வினைகளையே அடிநிலை வடிவங்களாகக் கொண்டுள்ளன. இதனைக் கருத்தில் கொண்டு *பூசு, பூச்சு* ஆகிய இரண்டையும் **பூயுந்த்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து பின்வருமாறு பெறப்படும்.

*8(1) *பூயுந்த்உ > பூயுத்து > பூய்த்து > பூய்ச்சு > பூச்சு > பூசு*

*(2) *பூயுந்த்உ > பூயுத்து > பூய்த்து > பூய்ச்சு > பூச்சு*

இந்த ஆய்வில் *பூச்சு* என்பதிலிருந்து *பூசு* பெறப்பட்டு உள்ளது. இது நெருடலான ஆய்வாகத் தோன்றுகிறது. ஒரு மாற்று ஆய்வாக அடிநிலை வடிவத்தை மாற்றிப் பார்க்கலாம். **பூயின்ற்உ* என்ற இறந்தகால அடிநிலை வடிவத்திலிருந்து *பூசு, பூச்சு* ஆகியவற்றை வருவிக்க முடியுமா என்று எண்ணிப் பார்க்கலாம். கருதுக:

*9(1) *பூயின்ற்உ > பூயிஞ்ச்உ > பூயிச்சு > பூய்ச்சு > பூச்சு*

*(2) *பூயின்ற்உ > பூயிஞ்ச்உ > பூயிச்உ > பூயிசு > பூய்சு > பூசு*

இந்த ஆய்வில் குறிக்கப்பெற்றுள்ள **பூயின்ற்உ* போன்ற அடிநிலை வடிவங்களின் தேவை பற்றிப் பின்னர் 6.4-இலும் பேசப்படும். ஆனால் (8), (9)இல் காணப்படும் இருவகை ஆய்வுகளில் எது ஏற்புடையது என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும். இங்கே இன்னொரு உண்மையையும் குறிப்பிடவேண்டும். மேலே (9)இல் உள்ள ஆய்வு ஏற்புடையதாயின் *பரசு, விரசு, அலசு* முதலானவற்றின் அடிநிலை வடிவங்கள் **செயுந்த்உ* வாய்பாட்டின வாக அமையாமல் **செயின்ற்உ* வாய்பாட்டினவாகக் கருதப்படும். இந்த வாய்பாட்டு அடிநிலை வடிவங்கள் தொடர்பான வினைகள் பற்றிப் பின்னர் விரிவாகப் பேசப்படும். தேவைப் பட்டால் மேலே நிகழ்த்திய சில ஆய்வுகள் இந்தப் பின்னணியில் திருத்தம்/மாற்றம் செய்யப்படும்.

### 3.2 செய்கு வினைகள்

3.2.1 இனி, செய்கு வாய்பாட்டு இறவாக்கால வினைகளைப் பற்றிச் சிந்திக்கலாம். இந்த வாய்பாட்டு வினைகள் குமரி மாவட்டக் கிளைமொழி வழக்கில் ஒன்றன்பால் நிகழ்கால

வினைமுற்றுக்களாக நிகழ்கின்றன. எ-டு. *வருகு* 'வருகிறது', *பேசுகு* 'பேசுகிறது', *குடிக்கு* (> குடிக்கி) 'குடிக்கிறது', *நடக்கு* 'நடக்கிறது', *எரிகு* 'எரிகிறது'. இந்தக் கிளைமொழியில் *செய்க* (< செய்கு+அ) வாய்பாட்டு நிகழ்காலப் பெயரெச்சங்களில் நிகழும் *செய்கு* வாய்பாட்டு வினைகள் நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களாகக் கொள்ளத்தக்கனவாகும். குமரித்தமிழில் வழங்கும் *செய்கான், செய்காள், செய்கார்* முதலான வாய்பாட்டு நிகழ்கால வினைமுற்றுக்களில் நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளும் அடிப்படையில் பொதுவினை முற்றுக்களாகக் கருதத்தக்கன வாகும். ஆயினும் வண்ணனை ஆய்வில் இத்தகைய செய்கு வாய்பாட்டு வினைகளை நிகழ்கால வினைப்பகுதிகளாகக் கொள்வதே பொருத்தம். இவற்றின் நிகழ்ச்சியைப் பழந்தமிழில் பயின்று வழங்கும் *செய்கும், செய்கம்* ஆகிய வாய்பாட்டுத் தன்மைப் பன்மை இறவாக்கால வினைமுற்றுக்களிலும் காணலாம். குமரித் தமிழில் நிகழும் *வருகது* (< வருகு + அது) 'வருவது', *பேசுகது* (< பேசுகு + அது) 'பேசுவது', *அடிக்கது* (< அடிக்கு + அது) 'அடிப்பது', *நடக்கது* (< நடக்கு + அது) 'நடப்பது' முதலான நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களில் நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகளும் அடிப்படையில் பொது வினை முற்றுக்களே.

*3.2.2* வல்வினை, மெல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்கள் தொடர்பான ஆய்வானது *செய்து* வாய்பாட்டு இறவாக்கால வினைகளை அடியொற்றிய தாகவே அமையும். *செய்கு* வாய்பாட்டு இறவாக்கால வினைகள் *செயுகு* வாய்பாட்டு வினைகளின் ஒடுங்கிய வடிவங்களாகும். மலயாளத்தில் நிகழும் மெல்வினை சார்ந்த *செயுக* வாய்பாட்டு வினைகள் தமிழில் *செய்க* வாய்பாட்டினவாக அமைகின்றன. எ-டு. *எரியுக* (மலயாளம்) > *எரிக* (தமிழ்), *கலையுக* > *கலைக, காணுக* > *காண்க.* தமிழிலேயே *செயுகு* வாய்பாட்டு வினைகளும் *செய்கு* வாய்பாட்டு வினைகளும் உறழும் நிலையும் காணப்படுகின்றது. எ-டு. *தின்னுகிறான்/தின்கிறான், காணுகின்ற/காண்கின்ற, வாழுகின்ற/வாழ்கின்ற, செல்லுகின்ற/செல்கின்ற.* மலயாளத்தில் நிகழும் *செயுக* வாய்பாட்டு வினைகள் *செயுகு+அ* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகும். இந்த அமைப்பில் நிகழும் *செயுகு* வாய்பாட்டு வினைகள் தமிழில் அகரத்தின்முன் *செய்கு* வாய்பாட்டினவாக ஒடுங்குகின்றன. இதேபோல் *வெல்கின்ற* என்ற வினையில் காணப்படும் *வெல்கு* என்னும் செய்கு வாய்பாட்டு வினையானது *வெலுகின்ற* (=வெல்லுகின்ற) என்பதில் நிகழும்

*வெலுகு* என்ற செயுகு வாய்பாட்டு வினையின் ஒடுக்கமாகும். *செயுது* வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் அடிநிலை வடிவங்கள் **செயுந்த்உ* வாய்பாட்டினவாக அமைதல் போல *செயுகு* வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் அடிநிலை வடிவங்களும் **செயுங்க்உ* வாய்பாட்டினவாக அமைதல் தவிர்க்க இயலாத ஒன்றாகும். *செய்கு* வாய்பாட்டு வினைகள் **செயுங்க்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து பின்வருமாறு வருவிக்கப்படும்.

(10) *செயுங்க்உ > செயுங்கு > செயுகு > செய்கு

வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினையாயின் அது பின்வருமாறு பெறப்படும்.

(11) *செயுங்க்உ > செயுக்கு > செய்க்கு

இந்த இரண்டு பொது வருவிப்பு விதிகளைக் கொண்டு *மேய்கு/மேய்க்கு, எரிகு/எரிக்கு* ஆகிய மெல்வினை-வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைகள் பின்வருமாறு வருவிக்கப்படும்.

12(1) *மேயுங்க்உ > மேயுங்கு > மேயுகு > மேய்கு

(2) *மேயுங்க்உ > மேயுக்கு > மேய்க்கு

13(1) *எரியுங்க்உ > எரியுங்கு > எரியுகு > எரிய்கு > எரிகு

(2) *எரியுங்க்உ > எரியுக்கு > எரிய்க்கு > எரிக்கு

இந்த ஆய்வில் மெல்வினை சார்ந்த *செயுகு* வாய்பாட்டு வினைகளும் அவற்றின் ஒடுக்கமாகிய *செய்கு* வாய்பாட்டு வினைகளும் வருவிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

3.2.3 **செயுங்க்உ* (ceyuṅku) வாய்பாட்டு அடிநிலை வினைகள் *செய்ங்க்உ* எனவும் *செய்ங்கு* எனவும் திரிந்தமைய வாய்ப்புள்ளது. இவற்றுள் *செய்ங்கு* வாய்பாட்டு வடிவங்களில் நிகழும் ககரம் அலையொலித்தன்மையது. *செய்ங்க்உ* வாய்பாட்டு வடிவங்களில் காணப்படும் ககரம் நிலையொலித் தன்மையதாகும். இவைபற்றிப் பின்னர் விரிவாகப் பேசப்படும்.

3.2.4 *செய்கு* வாய்பாட்டு வினைமுற்றுக்கள் குமரி மாவட்டக் கிளைமொழியில் ஒன்றன்பாற் சிறப்பு வினைமுற்றுக்களாக நிகழ்வது பற்றி முன்னர்க் குறிப்பிடப்பட்டுள்ளது. குமரி வழக்கில் மெல்வினை சார்ந்த ஒன்றன்பாற் சிறப்பு வினைமுற்றுக்களில் குற்றுகரம் ஊர்ந்த ஈற்றுக் ககரம் வகரமாகத் திரியும் போக்கும் காணப்படுகின்றது. எ-டு, *வருகு > வருவு, எரிகு > எரிவு, ஓடுகு >*

*ஓடுவு, தின்னுகு > தின்னுவு.* குகரத்தின் திரிபாகிய வகர உகரம் ஒப்புமையாக்கத்தின் தாக்கத்தால் வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு ஒன்றன்பாற் சிறப்பு வினைகளின் ஈற்றிலும் இடம்பெறத் தொடங்கியது. எ-டு. *அடிக்கு-வு, நடக்கு-வு, கலைக்கு-வு, கேக்கு-வு* (< *கேட்கு-வு), *நிக்கு-வு* (< *நிற்கு-வு), *இருக்கு-வு. வெடிக்கு-வு* (தங்கம், என்.எஸ். 1997:101). *வெடிக்கு, நிற்கு* ஆகிய ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் *வெடிச்சு, நிச்சு* எனத்திரிந்து வகர உகரம் அவற்றையடுத்து நிகழும் போக்கும் காணப்படுகிறது. எ-டு. *வெடிச்சு-வு* (ஐசக். 1975: 54), *நிச்சு-வு* (ஐசக். 1975: 143). இதன் விளைவாக வல்வினை சார்ந்த *செய்கு-வு* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *செய்கு* வாய்பாட்டு வினைகள் முற்றுத் தன்மையை இழந்து வினைப்பகுதிகளாகச் செயல்பட வேண்டிய நெருக்கடிக்குள்ளாகின்றன.

3.2.5 குமரித் தமிழில் பிறிதொரு கிளைமொழியில் மெல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு வினைகள் சிறப்பு வினைகளிலும் நிகழ்காலப் பெயரெச்சங்களிலும் நிகழ்கையில் ககரம் யகரமாகத் திரிகின்றது. எ-டு. *பாடுகான் > பாடுயான்* 'பாடுகிறான்', *பாடுக > பாடுய* 'பாடுகிற'. மெல்வினைகளில் நிகழ்ந்த இந்தத் திரிபானது ஒப்புமையாக்கத்தின் விளைவாக வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைகளைக் கொண்ட சிறப்பு வினைமுற்றுக்களிலும், நிகழ்காலப் பெயரெச்சங்களிலும் செயவென் வாய்பாட்டு வினைகளிலும் பரவுகிறது. எ-டு. *குடிக்கான் > குடிக்யான், குடிக்க > குடிக்ய* 'குடிக்கிற/குடிக்க'. யகரம் இடம்பெற்றதன் விளைவாக, *குடிக்யான்* என்பது *குடிக்கியான்* என்றும், *குடிக்ய* என்பது *குடிக்கிய* என்றும் நிகழும் போக்கும் குமரித் தமிழில் காணப்படுகிறது. இவற்றில் நிகழும் இகரம் யகரத்தின் நிகழ்ச்சியால் அமைந்த இலக்கணத் தன்மையற்ற ஓர் இடைச்செருகலாகும். *குடிக்கிய* (குறுந். 356. 4), *அளக்கிய* (சீ.சி. 2593), *விளைக்கிய* (சீ.சி. 2867), *மேய்க்கிய* (நாலா. 3917/3100) முதலான செய்யிய வாய்பாட்டு எச்ச வினைகள் மேலே குறிப்பிட்ட முறையில் தோன்றியமைந்தவை யாகும். இவற்றின் அடிநிலை வடிவங்கள் வல்வினை சார்ந்த செயவென் வாய்பாட்டு எச்ச வினைகளாகும். ஒப்புமை யாக்கத்தின் விளைவால் *காண* என்ற மெல்வினை சார்ந்த செயவென் வினை *காணிய* (நற். 222.10) எனவும் நிகழும் நிலை பழந்தமிழில் காணப்படுகின்றது.

3.2.6 *செய்கு* வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்கள் வினைப்பகுதிகளாக நிகழத் தொடங்கியது திராவிட வினைப்

பகுதிகளின் வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். குமரித் தமிழில் *செய்கு* வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் *செய்க* வாய்பாட்டு நிகழ்காலப் பெயரெச்சங்களில் நிகழ்வதைக் காணமுடிகிறது. எ-டு. *எரிக வெளக்கு* 'எரிகிற விளக்கு', *படிக்க பையன்* 'படிக்கிற பையன்'. *செய்கு* வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்கள் குமரித்தமிழில் ஒன்றன்பால் நிகழ்காலச் சிறப்பு வினைகளாகவும் நிகழ்கின்றன. எ-டு. *மழை வருகு* 'மழை வருகிறது'. *மாடு தண்ணி குடிக்கி* (< குடிக்கு) 'மாடு தண்ணீர் குடிக்கிறது'. பழந்தமிழில் *செய்கும், செய்கம்* வாய்பாட்டுத் தன்மை பன்மை இறவாக்கால வினைமுற்றுக்களில் *செய்கு* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைக் காணலாம். இத்தனைக்கும் அப்பால் இறவாக்கால வினைமுற்றுக்களில் *செய்கு* வாய்பாட்டு வினைகள் வினைப்பகுதிகளாகவும் நிகழும் நிலை காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். இந்த எடுத்துக் காட்டுக்களில் *செய்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகள் முற்று வினைப் பகுதிகளாகவும் - அதாவது பொதுவினைமுற்றுக்களாக நிகழ்ந்து வினைப்பகுதிகளாக மாறியவை - முற்றுவினைப் பகுதிகளின் வினையடிகள் முதன்மை வினைப்பகுதிகளாகவும் அமையும் நிகழ்ச்சியைக் காணலாம்.

| | எடுத்துக்காட்டு வினைகள் | முற்று வினைப் பகுதி | முதன்மை வினைப்பகுதி |
|---|---|---|---|
| 14 (1) | வருகுவது (புறம்.139.4) | வருகு | வர்/வா |
| (2) | வருகுவர் (அகம். 294.14) | " | " |
| (3) | வருகுவள் (குறுந். 113.6) | " | " |
| (4) | வருகுவன் (நற். 119.8) | " | " |
| 15 (1) | துறக்குவர் (குறுந்..287.2) | துறக்கு | துற |
| (2) | மறைக்குவன் (புறம்.290.8) | மறைக்கு | மறை |
| (3) | தூர்க்குவன் (பத்துப்.9.271) | தூர்க்கு | தூர் |
| (4) | கேட்குவிர் (பத்துப்.10.291) | கேட்கு | கேள் |
| (5) | நிற்குவிர் (பத்துப். 2.150) | நிற்கு | நில் |
| (6) | அளிக்குவை (அகம்.192.9) | அளிக்கு | அளி |
| 16 (1) | தெளிக்குநர் (கலி. 30.12) | தெளிக்கு | தெளி |
| (2) | துறக்குநர் (கலி. 13.26) | துறக்கு | துற |
| (3) | கேட்குநர் (குறுந். 29.7) | கேட்கு | கேள் |
| (4) | கேட்குநள் (அகம்.63.19) | " | " |
| (5) | அழிக்குநர் (பதி. 22.29) | அழிக்கு | அழி |

| | | | |
|---|---|---|---|
| 17 (1) | கொடுக்கும் (கலி.22.2) | கொடுக்கு | கொடு |
| (2) | ஈர்க்கும் (அகம்.8.7) | ஈர்க்கு | ஈர் |
| (3) | உடைக்கும் (ஐங். 113.2) | உடைக்கு | உடை |
| (4) | பழிக்கும் (கலி. 59.11) | பழிக்கு | பழி |
| (5) | கேட்கும் (குறுந். 163.5) | கேட்கு | கேள் |
| 18 (1) | கொடுக்க (ஐங். 6.6) | கொடுக்கு | கொடு |
| (2) | முடிக்க (அகம்.115.6) | முடிக்கு | முடி |
| (3) | நினைக்க (புறம். 70.19) | நினைக்கு | நினை |
| (4) | நிற்க (ஐங். 5.6) | நிற்கு | நில் |
| (5) | கேட்க (அகம். 110.2) | கேட்கு | கேள் |

மேலே குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்கள் தவிர *செய்கின்று, செய்கின்ற, செய்கின்றான்* முதலான வாய்பாட்டு வினைகளில் நிகழும் வல்வினை, மெல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு வினைகளும் முற்றுவினைப் பகுதிகளாக நிகழ்கின்றன.

3.2.7 குமரி மாவட்டத்தில் காணிக்காரப் பழங்குடி இனத்தவர் பேசும் தமிழில் வல்வினை சார்ந்த இகர ஐகார ஈற்று முதன்மை வினைப்பகுதிகளின் மீது அமைந்த இறவாக்காலப் பொதுவினை முற்றுக்களில் நிகழும் *செய்கு* வாய்பாட்டு முற்று வினைப் பகுதிகளில் (Finite Verbal Bases) இரட்டித்த ககரமெய் சகரமாகத் திரிகின்றது. (S. Agesthialingom 1976) எ-டு.

| | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| 19 (1) | புதெச்சினு (<*புதைக்கினு) | புதெச்சும் (<*புதைக்கும்) |
| (2) | அடைச்சினு(<*அடைக்கினு) | அடைச்சும்(<*அடைக்கும்) |
| (3) | அடிச்சினு (<*அடிக்கினு) | அடிச்சும் (<*அடிக்கும்) |
| (4) | ஒடிச்சினு (<*ஒடிக்கினு) | ஒடிச்சும் (<*ஒடிக்கும்) |

3.2.8 திராவிட வினைப்பகுதிகளின் வரலாற்றில் இரண்டு வகையான *செய்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகளைக் குறிப்பிட்டாக வேண்டும். ஒன்று: இறவாக்காலச் சிறப்புப் பெயரெச்ச வினைகள், *செய்யும்* வாய்பாட்டு வினைகள், எதிர்வெச்ச வினைகள், *செயின்* வாய்பாட்டு வினைகள் ஆகியவற்றில் மட்டுமே நிகழும் *செய்கு* வாய்பாட்டு முற்றுவினைப் பகுதிகள். எ-டு. *கொடுக்குவர்* (புறம். 182.5), *கொடுக்கின்றான், கொடுக்கின்ற, கொடுக்கும், கொடுக்கின்; தருகுவன்* (அகம். 110.5), *தருகின்றான், தருகின்ற, வருகும், வருகின்.* பிறிதொன்று: மூன்று காலங்களிலும் நிகழும் *செய்கு* வாய்பாட்டு

முற்றுவினைப்பகுதிகள். எ-டு. *கலங்கு, சுருங்கு, பெருகு; கலக்கு, சுருக்கு, பெருக்கு.* தெலுங்கிலும் இத்தகைய வினைப்பகுதிகளைக் காணலாம். எ-டு. *காங்கு* 'காய்(தல்)', *வேங்கு* 'வேகு(தல்)', *அடங்கு அலங்கு, ஊங்கு, கரங்கு,* 'கரை(தல்)', *கலங்கு, பெனங்கு* 'பிணை(தல்)', *திருகு* (tirugu) 'திரும்பு', *விருகு* (virugu), 'உடை(தல்)' இவற்றுள் *விருகு, திருகு* ஆகிய தெலுங்கு வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களை **விரியு,*திரியு* எனக் கொள்வார் கிருஷ்ணமூர்த்தி (Bh. Krishnamurti 1972: 161). இது தொடர்பாக அவர் குறிப்பிடும் காரணங்கள் முற்றிலும் ஏற்புடையன அல்ல. *விரி, திரி* என இகர வீற்றினவாகிய வினைகள் தெலுங்கில் *-இயு* ஈற்றினவாக (அதாவது *விரியு, திரியு*) அமைவதே முறை என்றும் *விருகு, திரிகு* அவ்வாறு அமையாமையால் அவற்றை *விரியு, திரியு* ஆகியவற்றினின்றும் வருவிப்பதே முறை என்றும் வாதிடும் கிருஷ்ணமூர்த்தி **இயு> *-இகு* (igu) > *-உகு* (ugu) என்ற ஆய்வின் மூலம் *விருகு, திருகு* ஆகியவற்றை வருவிப்பார். இந்த ஆய்வு புறக்கணிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். *விருகு* என்பது **விரியுங்க்உ* என்ற அடிநிலை வடிவத்தையும் *திருகு* என்பது **திரியுங்க்உ* என்றஅடிநிலை வடிவத்தையும் கொண்டவையாகும். திருகு என்பது எடுத்துக்காட்டாகப் பின்வருமாறு வருவிக்கப்படும்.

(20) *திரியுங்க்உ > திரியுங்கு > திரியுகு > திரிய்கு > திரிகு > திருகு

தமிழில் நிகழும் *திருகு* என்ற முற்றுவினைப் பகுதிக்கும் (20)-இல் நிகழ்த்தப்பெற்றுள்ள ஆய்வு பொருந்தும். தெலுங்கில் தன்வினை யாக நிகழும் *திருகு* (tirugu) மாறுபட்ட பொருண்மையுடன் பிறவினையாகத் தமிழில் நிகழ்கிறது. இந்தப் பொருண்மைத் திரிபு தமிழில் நிகழும் *திருகு* என்பதை (20)-இல் நிகழ்த்திய ஆய்வின் மூலம் வருவிப்பதில் கோட்பாட்டு நிலையில் தடையேதுமில்லை. இனி, தமிழில் நிகழும் *கலங்கு-கலக்கு, பெருகு-பெருக்கு* ஆகிய முற்று வினைப் பகுதிகளும் தெலுங்கில் நிகழும் *காங்கு, கரங்கு* ஆகிய முற்றுவினைப்பகுதிகளும் பின்வருமாறு வருவிக்கப்படும்.

21(1) *கலயுங்க்உ > கலயுங்கு > கலய்ங்கு > கலங்கு (தன்வினை)

(2) *கலயுங்க்உ > கலயுக்கு > கல்ய்க்கு > கலக்கு (பிறவினை)

22 (1) ?*பெரியுங்க்உ > பெரியுங்கு > பெரியுகு > பெரிய்கு > பெரிகு > பெருகு (தன்வினை)

(2) ?*பெரியுங்க்உ > பெரியுக்கு > பெரிய்க்கு > பெரிக்கு > பெருக்கு (பிறவினை)

மேலே (22)-இல் குறிக்கப்பெற்றுள்ள *பெரியுங்க்உ* என்ற அடிநிலை வடிவம் *பெரிய, பெரிது* ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு அமைந்ததாகும். ஆயினும் *பெருங்க்உ* என்பதை அடிநிலை வடிவமாகக் கொள்வதற்கான வாய்ப்பும் ஆய்வுக் குரியது.

(23) *காயுங்க்உ > காயுங்கு > காய்ங்கு > காங்கு 'காய்(தல்)'

*வேங்கு* 'வறுபடு' என்ற தெலுங்கு வினைப்பகுதி *வேயுங்க்உ* என்ற அடிநிலை வடிவத்தைக் கொண்டதாகும்.

(24) *கரயுங்க்உ > கரயுங்கு > கரய்ங்கு > கரங்கு 'கரை(தல்)'

*பெனங்கு* 'பிணை(தல்)' என்ற தெலுங்கு முற்று வினைப்பகுதியின் முதன்மை வினைப்பகுதி *பிணை* என்பதாகும். இந்த முற்று வினைப்பகுதியின் அடிநிலை வடிவம் *பிணயுங்க்உ* எனக் கொள்ளத்தக்கதாகும். இதனின்றும் *பிணைகு* (தன்வினை), *பிணைக்கு* (பிறவினை) ஆகிய தமிழ் முற்றுவினைப்பகுதிகளும் தோன்றியமையும்.

3.2.9 தெலுங்கில் நிகழும் *டிகு* (Digu)/*திகு* (digu) 'இறங்கு' என்னும் முற்றுவினைப்பகுதி சற்று சிக்கலான ஆய்வுக்கு உரியதாகும். இதன் அடிநிலை வடிவம் *இழியுங்க்உ* என்பதாகும். இதில் முதன்மை வினை *இழி* என்பதாகும். தெலுங்கில் *இழியுங்க்உ* என்பதில் நிகழும் ழகரம் டகரமாகி, டகரம் பின்னர் தகரமாகிறது. டகரமும் தகரமும் அலையொலித் தன்மையன வாகும். *திகு* (digu) என்பது பின்வருமாறு வருவிக்கப்படும்.

(25) *இழியுங்க்உ > ழியுங்க்உ > ழியுங்கு > ழிய்ங்கு > ழிய்கு > ழிகு > டிகு > திகு

இந்த ஆய்வில் எந்தக் கட்டத்தில் மொழிமுதல் இகரம் கெடுகிறது என்பதை விளக்க முடியவில்லை. *இழிங்கு* என்ற இடைநிலை வடிவம் *இழிகு* என நிகழ்ந்து இதனின்றும் *டிகு/திகு* தோன்றியமைய வாய்ப்புள்ளதா என்பதும் ஆய்வுக்குரியதாகும்.

3.2.10 *செய்கு* வாய்பாட்டு முற்றுவினைப் பகுதிகள் தொடர்பான ஆய்வில் இன்னொரு சிக்கலையும் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இந்தச் சிக்கல் பழந்தமிழில் நிகழும் *அடைச்சு, தொலைச்சு, மிலைச்சு, பழிச்சு, ஓச்சு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களையும் தெலுங்கில் நிகழும் பின்வரும் முற்றுவினைப் பகுதிகளையும் பற்றியதாகும். கீழே அடைப்புகளில் உள்ளவை தன்வினைகளாகும்.

26 (1) வேஞ்ச்உ (வேங்கு) 'வறு'
(2) காஞ்ச்உ (காங்கு) 'காய்ச்சு'
(3) அடஞ்ச்உ (அடங்கு) 'அடக்கு'
(4) அலஞ்ச்உ (அலங்கு) 'அலை(த்தல்)'
(5) ஊஞ்ச்உ (ஊங்கு) 'ஊசல் ஆட்டு'
(6) கரஞ்ச்உ (கரங்கு) 'கரை(த்தல்)'
(7) கலஞ்ச்உ (கலங்கு) 'கலக்கு'
(8) பெனஞ்ச்உ (பெனங்கு) 'பிணை(த்தல்)'
(9) நலஞ்ச்உ (நலங்கு) 'நலி(த்தல்)', 'பொடி(த்தல்)'

27 (1) தெறச்உ 'திற'
(2) கடச்உ 'கட (நேரம்)
(3) நடச்உ 'நட'
(4) மறச்உ 'மற'
(5) குடுச்உ 'குடி, உண்'
(6) லேச்உ "எழு'
(7) நிலுச்உ 'நில்'
(8) துடுச்உ 'துடை'
(9) பிடுச்உ 'பிழி'
(10) தொலுச்உ 'துலக்கு, துளை(த்தல்)'
(11) மொலுச்உ 'முளை(த்தல்)'

28 (1) ஆருச்உ/ஆர்ச்உ (ஆடு) 'ஆட்டு'
(2) கூருச்உ/கூர்ச்உ (கூடு) 'கூட்டு'
(3) தீருச்உ/தீர்ச்உ (தீரு) 'தீர்(த்தல்)'
(4) வாருச்உ/வார்ச்உ (வாரு) 'வார்த்தல்/வடித்தல்'
(5) ஆர்ச்உ 'ஆர்(த்தல்)'
(6) வேல்ச்உ 'வேட்டல்'
(7) மாறுச்உ/மாற்ச்உ (மாறு) 'மாற்று'
(8) ஆறுச்உ/ஆற்ச்உ (ஆறு) 'ஆற்று'
(9) காலுச்உ/கால்ச்உ (காலு) 'சுடு(தல்)/எரி(த்தல்)'

மேலே குறிக்கப்பெற்றுள்ள மூன்று வகையான தெலுங்கு முற்றுவினைப் பகுதிகளுள் (28)-இல் காணப்படும் நிலையானது மற்ற இரண்டு வகை முற்று வினைப்பகுதிகளினின்றும் மாறுபடு கின்றது. தன்வினைகள் உகரம் ஊர்ந்த ககர ஈற்றினவாகவும், பிறவினைகள் உகரம் ஊர்ந்த சகர ஈற்றினவாகவும் நிகழும் நிலையை (26)-இல் காணலாம். இந்த பிரிவில் நிகழும்

தன்வினைகளும் பிறவினைகளும் மாறுபட்ட அடிநிலை வடிவங்களைக் கொண்டவையா என்பது கோட்பாட்டு அடிப்படையிலான கேள்வியாகும். இதற்கான விடை 'ஆம்' எனில் (26)-இல் பிறவினைகளுக்குரிய அடிநிலை வடிவங்களின் போக்கிலேயே (27)-இல் உள்ள முற்று வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களும் அமையும். எடுத்துக்காட்டாக (26)-இல் குறிக்கப் பெற்றுள்ள *கரஞ்ச்உ*, 'கரை(த்தல்)' என்ற பிறவினையும் (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள *துடுச்உ* 'துடை' என்ற முற்றுவினைப் பகுதியும் முறையே **கரயுந்த்உ, *துடயுந்த்உ* ஆகிய **செயுந்த்உ* வாய்பாட்டினவாக அமையும். மேற்படி கேள்விக்கான விடை 'இல்லை' என்று அமையுமானால் (26), (27)-இல் உள்ள தன்வினை, பிறவினைகள் அனைத்தும் வேறு ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து பெறப்படும். இதனைக் கருத்தில் கொண்டு *கரங்கு, கரஞ்ச்உ* ஆகியவற்றின் அடிநிலை வடிவத்தைக் **கரயுங்க்உ* எனவும், *துடுச்உ* என்பதன் அடிநிலை வடிவத்தைத் **துடயுங்க்உ* எனவும் **செயுங்க்உ* வாய்பாட்டினவாகக் குறிக்கலாம்.

3.2.11 முற்றுவினைப்பகுதிகளாக (28)-இல் குறிக்கப் பெற்றுள்ளவை (26), (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள வினைப்பகுதி களிலிருந்து முற்றிலும் மாறுபட்டவையாகும். எடுத்துக்காட்டாக, *தீருச்உ/தீர்ச்உ* (=தீர்(த்தல்) என்ற தெலுங்குப் பிறவினையின் கன்னடவடிவம் *தீரிசு* (ti:risu) என்பதாகும். கன்னடத்தில் *ஆடிசு* (a:Disu) 'ஆட்டு' என்பது தெலுங்கில் *ஆடிஞ்ச்உ* என நிகழ்கிறது. *அமரிசு* (amarisu) 'அமர்த்து', *எதிரிசு* (edirisu)/ *எதுருசு* 'எதிர்(த்தல்)' ஆகிய கன்னட வினை வடிவங்கள் தெலுங்கில் *அமரிஞ்ச்உ/ அமர்ச்உ, எதிரிஞ்ச்உ/எதுருச்உ* என நிகழும் நிலையும் காணப் படுகிறது. இங்கே குறிப்பிடப்பட்டுள்ள கன்னட, தெலுங்கு முற்று வினைப்பகுதிகள் **செயுங்க்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவத்தி லிருந்தோ **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவத்திலிருந்தோ வருவிக்கத்தக்கவையல்ல. காரணம் *எதிரிசு* (கன்னடம்), *எதிரிஞ்ச்உ* (தெலுங்கு) ஆகியவற்றில் நிகழும் இகரத்தை மேற்படி வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டு விளக்கமுடியாது. எனவே தான் (26), (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களுக்குரிய வாய்பாடு (28)-இல் உள்ளவற்றுக்குப் பொருந்தாது எனக் கருதப்படுகிறது. அப்படியானால் (28)-இல் குறிக்கப்பெற்றுள்ள தெலுங்கு வினைப்பகுதிகள் எந்த வாய்பாட்டு அடிநிலை வடிவங்களோடு தொடர்பு உள்ளவை? இதைப் பற்றி மீண்டும் பின்னர்ப் பேசப்படும்.

*3.2.12.* இனி *(26)*, *(27)*-இல் உள்ள தெலுங்கு வினைப் பகுதிகளுக்கு மீண்டும் வருவோம். *அடங்கு-அடஞ்ச்உ, ஊங்கு-ஊஞ்ச்உ, கலங்கு-கலஞ்ச்உ* ஆகிய தெலுங்கு வினைப் பகுதிகளுக்கு நேரான தமிழ் வினைப்பகுதிகள் *அடங்கு-அடக்கு, ஊங்கு-ஊக்கு, கலங்கு-கலக்கு* என அமைகின்றன. இதன் அடிப்படையில் *அலஞ்ச்உ, கரஞ்ச்உ, பெனஞ்ச்உ* ஆகியவற்றுக்கு நேரான வினைப்பகுதிகள் தமிழில் *அலய்க்கு, கரய்க்கு, பிணய்க்கு* என அமையும். *காஞ்ச்உ* என்பது தமிழில் *காய்ச்சு* என அமைகிறது. *அலய்க்கு, கரய்க்கு* ஆகியவற்றை நோக்கும்போது *காய்ச்சு* என்பது **காய்க்கு* என்பதன் திரிபாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இதேபோல் *பாய்ச்சு, ஓச்சு* ஆகியவையும் **பாய்க்கு, *ஓய்க்கு* ஆகியவற்றின் திரிபாக அமைய வாய்ப்புள்ளது. இதனை அடிப்படையாகக் கொண்டு *(27)*-இல் குறிக்கப் பெற்றுள்ள வினைப்பகுதிகள் அனைத்தையும் வல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொள்வதற்கான வாய்ப்பைப் புறக்கணித்துவிட முடியாது. அதாவது *நடச்உ, மறச்உ, துடுச்உ, பிடுச்உ, தொலுச்உ, மொலுச்உ* ஆகிய தெலுங்கு வினைப்பகுதிகளுக்கு நேரான தமிழ் வடிவங்கள் முறையே *நடக்கு, மறக்கு, துடைக்கு, *பிழிக்கு* (=பிழிகு) *துளய்க்கு, முளய்க்கு* எனக் கொள்ளப்படும். இத்தகைய தமிழ் முற்றுவினைப்பகுதி வடிவங்கள் *(27)*-இல் குறிக்கப்பெற்றுள்ள தெலுங்கு வினைப் பகுதிகள் தொடர்பான தனது ஆய்வில் கிருஷ்ணமூர்த்தியால் (Bh. Krishnamurti 1972: 162-166) கொள்ளப்படவில்லை. இதன் காரணமாக அவரது ஆய்வு திசை மாறி, பல தவறான முடிவுகளுக்கு இடமளித்துவிட்டது.

*3.2.13.* வல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு முற்றுவினைப் பகுதிகளைத் தமிழில் நிகழ்கால வினைமுற்றுக்கள், *செய்யும்* வாய்பாட்டு வினைகள், *செய* வாய்பாட்டு வினைகள் ஆகியவற்றில் காணலாம். எ-டு. *படிக்கிறான், படிக்கும், படிக்க*. இத்தகைய வினைப்பகுதிகளைப் பழந்தமிழில் எதிர்கால வினைமுற்றுக்கள், *செயும், செய* மற்றும் *செயின்* வாய்பாட்டு வினைகள் ஆகியவற்றில் காணலாம். எ-டு. *கொடுக்குவர்* (புறம். *182.5*), *கொடுக்கும்* (பதி. *30.12*), *கொடுக்க* (ஐங். *6.6*); *கேட்குவன்* (புறம். *225.9*), *கேட்குநர்* (குறு. *29.7*), *கேட்கும்* (நற். *288.7*), *கேட்கின்* (ஐங். *81.5*). இது தொடர்பாக *3.2.6*-இல் கூறப்பட்டுள்ள கருத்துக் களையும் அங்கே *(15)* முதல் *(18)* வரை குறிக்கப் பெற்றுள்ள எடுத்துக்காட்டுகளையும் நினைவு கூர்க. இத்தகைய எடுத்துக் காட்டுக்கள் *(26)*-இல் குறிக்கப்பெற்றுள்ள பிறவினைப்

பகுதிகளுக்கும் (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள வினைப்பகுதி களுக்கும் நேரான வினைப்பகுதிகள் தமிழில் வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டினவாகவே அமையும் என்பதைத் தெளிவு படுத்துவனவாக உள்ளன. தெலுங்கு வினைப்பகுதிகளாகிய *அடஞ்சுஉ, கலஞ்ச்உ, மறச்உ, தொலுச்உ, மொலுச்உ* முதலானவற்றுக்கு நிகராக *அடைத்து, கலைத்து, மறத்து, துளைத்து, முளைத்து* முதலான வினைப்பகுதிகளைத் தமிழில் காண முடியவில்லை. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு (26)-இல் குறிக்கப்பெற்றுள்ள பிறவினைப்பகுதிகளும், (27)-இல் குறிக்கப்பெற்றுள்ள இதர வினைப்பகுதிகளும் வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொள்ளத்தக்கன எனத் துணியலாம். இந்தத் துணிபு மேற்படி வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களைச் **செயுங்க்உ* வாய்பாட்டினவாகக் கொள்வதற்கு வகை செய்வதுடன் அவற்றைச் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களோடு தொடர்புபடுத்து வதற்கான வாய்ப்பையும் தவிர்த்துவிடுகிறது. இனி, தெலுங்கில் நிகழும் *அடஞ்ச்உ, கலஞ்ச்உ, மறச்உ, மொலுச்உ* முதலானவற்றில் நிகழும் உகரம் ஊர்ந்த சகரத்தின் தோற்றத்தை விளக்கியாக வேண்டும். இந்த வகையில் குமரி மாவட்டத் தமிழ் நமக்கு வழித் துணையாக அமைகிறது.

3.2.14 வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப் பகுதிகளின் மீதன்மந்த வினைகளில் யகரம் இடம்பெற்ற நிகழ்ச்சிக்கான பின்னணியானது குமரித் தமிழை நிலைக் களனாகக் கொண்டு பகுதி 3.2.5-இல் விளக்கப்பட்டுள்ளது. எ-டு. *குடிக்கான் > *குடிக்க்யான் > குடிக்யான்* 'குடிக்கிறான்', *குடிக்க > *குடிக்க்ய > குடிக்ய/குடிக்கிய* 'குடிக்க'. பகுதி 3.2.7-இல் காணிக்கார வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளில் ககரம் சகரமாகத் திரிந்தமையும் நிலை பற்றியும் பேசப்பட்டுள்ளது. இவற்றைக் கருத்தில் கொண்டு இங்கே நமது ஆய்வைத் தொடரலாம்.

3.2.15 குமரித் தமிழில் மெல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு நிகழ்காலப் பகுதியில் ககரம் யகரமாகத் திரிவது (எ-டு. பாடுகான் > பாடுயான், பாடுக > பாடுய 'பாடுகிற') ஓர் இயல்பான நிகழ்ச்சி ஆகும். ஒப்புமையாக்கத்தின் விளைவால் இந்த யகரம் குமரி வழக்கில் வல்வினை சார்ந்த செய்கு வாய்பாட்டு வினைகளைக் கொண்ட வினைத்திரிபுகளிலும் நிகழத் தொடங்கியது. எ-டு. *படிக்கான் > *படிக்க்யான், படிக்க > *படிக்க்ய* 'படிக்கிற/படிக்க'. இவ்வாறு அமைந்த வினைகளில்

நிகழும் *-க்க்ய்-* என்ற மெய்ம்மயக்கம் யகரத்தின் தாக்கத்தால் *-ச்ச்ய்-* எனத் திரிகிறது. யகரத்தின் இன உயிராகிய இகரம் ஒலித்துணை இடைச்செருகலாக வல்லொற்றுகளையடுத்து நிகழ்கிறது. கருதுக: *-ச்ச்ய்-* > *-ச்ச்இய்-* இந்த நிகழ்வுகளைத் தொடர்ந்து *படிச்சியான்* (< *படிச்ச்யான் < *படிக்க்யான்), *படிச்சிய* (< படிச்ச்ய < *படிக்க்ய) ஆகிய வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன. (குமரித் தமிழில் *படிக்க்யான், *படிக்க்ய ஆகிய இடைநிலை வினை வடிவங்கள் *படிக்கியான், படிக்கிய* எனவும் நிகழும் போக்கு இயல்பாகக் காணப்படுகின்றது). இந்த மாற்றங்களின் விளைவாகச் செய்கு வாய்பாட்டு நிகழ்காலப் பகுதிகள் *படிக்கியான், படிச்சியான்* ஆகிய வினைகளில் *படிக்கு, படிச்சு* என வினைப்பகுதிகளாக இனங்காணப்படுகின்றன. இதனைத் தொடர்ந்து *படிக்கும்* என்ற *செயும்* வாய்பாட்டு வல்வினை *படிச்சும்* எனவும் நிகழ்வதற்கான வாய்ப்பு குமரித் தமிழில் கோட்பாட்டு நிலையில் ஏற்புடையதாகின்றது.

3.2.16 மேலே நிகழ்த்திய ஆய்வுக்கு மாற்றாக இன்னொரு ஆய்வையும் இங்கே எண்ணிப்பார்க்கலாம். இந்த மாற்று ஆய்வின்படி இகர ஈற்று வினைகள் யகர ஈற்றினவாகவும், ஐகார ஈற்று வினைகள் அய் ஈற்றினவாகவும் கொள்ளப்படும். எ-டு. **குடிய்* (> குடி), *மறய்* (=மறை). *குடிக்க* என்பது இதன் அடிப்படையில் **குடிய்க்க* என்பதனின்றும் பெறப்படும். **குடிய்க்க* என்பதில் நிகழும் யகரம் இடம்பெயர்ந்து **குடிக்க்ய* என்ற வடிவத்தைத் தோற்றுவிக்கும். இதனையடுத்து நிகழும் மாற்றங்கள் மேலே 3.2.15-இல் குறிப்பிட்டவாறு அமையும். *மறய்க்க* என்பதில் நிகழும் யகரம் இடம்பெயராமல் பிரதி செய்யப்பட்டு ஈற்று அகரத்தின் முன் நிகழும். எ-டு. *மறய்க்க* > *மறய்க்க்ய*. *மேய்க்க* என்பதற்கும் இது பொருந்தும். எ-டு. *மேய்க்க* > *மேய்க்க்ய*. மேலே 3.2.15-இலும் இங்கும் குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு ஆய்வுகளில் எது ஏற்புடையது என்ற ஆய்வை இங்கே நாம் மேற்கொள்ளவில்லை. மாற்று ஆய்வை ஒதுக்கிவிடாமல் 3.2.15-இல் முன்மொழியப்பட்ட ஆய்வின் அடிப்படையில் *காஞ்ச்உ, கரஞ்ச்உ, மறச்உ, துடுச்உ* என்பன போன்ற தெலுங்கு வினைப்பகுதிகளைச் **செயுங்க்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து பின்வருமாறு ஆராயலாம். இவற்றோடு தொடர்புடைய *காய்ச்சு, கரைக்கு, மறக்கு, துடைக்கு* ஆகிய தமிழ் முற்று வினைப் பகுதிகளும் இந்த ஆய்வில் கருத்தில் கொள்ளப்படுகின்றன.

29 (1) *காயுங்க்உ > காய்ங்க்உ > காங்க்யு > காஞ்ச்யு > காஞ்ச்உ (தெ.)

(2) *காயுங்க்உ > காய்ங்க்உ > காய்க்க்உ > காய்க்க்யு > காய்ச்ச்யு > காய்ச்சு (த.)

30 (1) *கரயுங்க்உ > கரய்ங்க்உ > கரங்க்யு > கரஞ்ச்யு > கரஞ்ச்உ (தெ.)
(2) *கரயுங்க்உ > கரய்ங்க்உ > கரய்க்க்உ > கரய்க்கு (த.)

31 (1) *மறயுங்க்உ > மறய்ங்க்உ > மறங்க்யு > மறஞ்ச்யு > மறஞ்ச்உ > மறச்உ (தெ.)
(2) *மறயுங்க்உ > மறய்ங்க்உ > மறய்க்கு > மறக்கு (த.)

32 (1) *துடயுங்க்உ > துடய்ங்க்உ > துடங்க்யு > துடஞ்ச்யு > துடஞ்ச்உ > துடச்உ (> துடுச்உ) (தெ.)
(2) *துடயுங்க்உ > துடய்ங்க்உ > துடய்க்கு (=துடைக்கு) (த.)

பேச்சுத் தமிழில் *-ய்த்த்-*, *-ய்ந்த்-* ஆகிய மெய்ம்மயக்கங்கள் *-ச்ச்-*, *-ஞ்ச்-* (எ-டு. தேய்த்து > தேய்ச்சு > தேச்சு; தேய்ந்து > தேய்ஞ்சு > தேஞ்சு) எனத் திரியும். ஆனால் *-ய்க்க்-*, *-ய்ங்க்-* ஆகியவை இவ்வாறு திரிய வாய்ப்பு இருப்பதாகத் தோன்றவில்லை. அதனால்தான் *-ய்க்க்-*, *-ய்ங்க்-* என்பவற்றின் திரிபுகளாகிய *-ய்ச்ச்-/-ச்ச்*, *-ய்ஞ்ச்-/-ஞ்ச்* ஆகியவை *-ய்க்க்ய்-/-க்க்ய்-*, *-ய்ங்க்ய்-/-ங்க்ய்-* என்று படைத்துக் கொள்ளப்பட்ட மெய்ம்மயக்கங்களினின்றும் பெறும் முயற்சி மேலே நிகழ்த்திய ஆய்வில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்த அணுகுமுறை மேலும் ஆய்வுக்குரியது.

3.2.17 வரலாற்று நிலையில் சில உண்மைகளை இங்கே கருத்தில் கொள்ள வேண்டும். *-ய்க்க்-* என்ற மெய்ம்மயக்கத்தில் யகரம் இடம்பெயர்ந்து *-க்க்ய்-* என்று அமைதல் ஒரு படிநிலை. இந்த நிலையில்தான் *மறக்கு, திறக்கு, நடக்கு, ஓச்சு, பழிச்சு* முதலான முற்றுவினைப் பகுதிகள் தமிழிலும் *காஞ்ச்உ, மறச்உ, காச்உ* (=காய்க்கு - தமிழ்) முதலான முற்றுவினைப் பகுதிகள் தெலுங்கிலும் தோற்றம் கொள்கின்றன. மேற்படி மெய்ம் மயக்கத்தில் (-ய்க்க்-) யகரம் பிரதி செய்யப்பட்டு *- ய்க்க்ய்-* என்ற மெய்ம்மயக்கம் அமைதல் இன்னொரு படிநிலை. இந்த நிலையிலிருந்துதான் *காய்ச்சு, பாய்ச்சு, அடய்ச்சு* (= அடைச்சு), *தொலய்ச்சு* (= தொலைச்சு) முதலான முற்றுவினைப் பகுதிகள் தமிழில் தோற்றம் கொள்கின்றன. இன்னொரு உண்மையையும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். யகர ஈற்று முதன்மை வினைப் பகுதிகள் (Principal Verbal Bases), முற்று வினைப்பகுதிகளில் (Finite Verbal Bases) யகரத்தை இழந்தும் இழக்காமலும் அமைந்து இரண்டு படிநிலைகளை உணர்த்துகின்றன. யகரமெய் வீழ்ந்துபடும் நிலையை *ஊங்கு - ஊஞ்ச்உ* (= ஊஞ்சல் ஆடு - ஆட்டு), *காங்கு- காஞ்ச்உ* (= காய்(தல்) - காய்ச்சு), *காச்உ* (= காய்(த்தல்), *கலங்கு - கலஞ்ச்உ* (= கலங்கு - கலக்கு) முதலான

தெலுங்குக்குரிய முற்றுவினைப் பகுதிகளிலும் *ஓங்கு, தூங்கு, அடங்கு/அடக்கம்- அடக்கு, கலங்கு/கலக்கம் - கலக்கு, நீங்கு - நீக்கு, விளங்கு/விளக்கம் - விளக்கு, நடக்கு, மறக்கு, திறக்கு, கொடுக்கு* (எ-டு. *கொடுக்குவர்*/புறம். 182.5), *அழிக்கு, அறிகு* முதலிய தமிழுக்குரிய முற்றுவினைப்பகுதிகளிலும் காணலாம். *நீங்கு - நீக்கு* ஆகிய முற்றுவினைப் பகுதிகளின் முதன்மை வினைப்பகுதி எடுத்துக் காட்டாக **நீய்* என்பதாகும். இவ்வாறே *மறக்கு* (எ-டு. *மறக்குநர்*/ ஐங். 464.3, *மறக்குவென்*/புறம். 175.5) என்ற முற்றுவினைப்பகுதியின் முதன்மை வினைப்பகுதி **மறய்* எனக் குறிக்கத்தக்கதாகும். யகரம் நிலைபெறும் முற்றுவினைப்பகுதிகள் தெலுங்கில் காணப்படவில்லை; ஆனால் தமிழில் காணப்படு கின்றன. எ-டு. *காய்க்கு, மேய்க்கு, மறைக்கு* (= மறய்க்கு), *கலைக்கு* (=கல்ய்க்கு), *மேய்கு, மறைகு* (= மறய்கு), *கலைகு* (= கலய்கு).

3.2.18. -*அய்* (= ஐ) ஈற்றினவாகிய முதன்மை வினையடிகளில் நிகழும் யகரம் வீழ்ந்துபடுகையில் பொருண்மை நெகிழ்ச்சியுடன் இரண்டு வகை வினையடிகள் தமிழில் நிகழும் நிலையினைக் காணமுடிகிறது. எ-டு. *மறய்-மற, கலய்-கல, உழய்-உழ.* எடுத்துக் காட்டில் குறிக்கப்பெற்றுள்ள இணை வினைகளில் முதல் வினையின் பொருண்மையே தொல்பொருண்மையாகக் கொள்ளத்தக்கதாகும். இரண்டாம் வினையின் பொருண்மை யானது தொல்பொருண்மையின் நெகிழ்ச்சியாகக் கருதத்தக்க தாகும். இரண்டாம் வினைகளாகிய *மற, கல, உழ* ஆகியவற்றில் ஈற்று யகரம் காணப்படவில்லையென்றாலும் **செயுந்த்உ, *செயுங்க்உ* ஆகிய வாய்பாட்டு அடிநிலை வடிவங்களில் அந்த வினைகள் நிகழும்போது மேற்படி யகரம் நிலைகொள்ளத்தான் செய்கிறது. எ-டு. **மறயுந்த்உ* (>...மறத்து/மறத்தல்), **மறயுங்க்உ* (>... *மறக்கு/மறக்க, மறக்கின், மறக்கும்*). *மற* என்பதன் பொருண்மை *மறய்* (= மறை) என்பதன் பொருண்மையினின்றும் மாறுபடுவதால் அதில் நிகழும் ஈற்று யகரம் கெட்டு *மறத்து, மறக்கு* ஆகிய வினைகள் அமைகின்றன. *மறய்* (= மறை) என்பதன் பொருண்மை காரணமாக *மறய்த்து* (= மறைத்து), *மறய்க்கு* (= மறைக்கு) ஆகிய வினைகளில் முதன்மை வினைப்பகுதியின் ஈற்று யகரம் கெடவில்லை. இதனின்றும் பொருண்மைச் சுட்டானது சொல் வடிவங்களைக் கட்டுப்படுத்தும் திறத்தது என்பதை அறிய முடிகிறது.

3.2.19 தமிழ் வினைகளைப் பொறுத்தவரை மீண்டும் மீண்டும் வலியுறுத்த வேண்டிய உண்மை ஒன்று உண்டு. தன்வினை - பிறவினை என்பது வினையடிக்கு அப்பால் நிகழும் விகுதிகளைக்

கொண்டு முடிவு செய்யப்படும் ஓர் இலக்கணப் பண்பல்ல. எடுத்துக்காட்டாக, *கரைந்து-கரைத்து, சேர்ந்து-சேர்த்து, மாய்ந்து-மாய்த்து* ஆகிய இணைகளில் வினையடிகளே தன்வினை-பிறவினைப் பண்புகளைக் கொண்டுள்ளன. இந்தப் பண்புகளுக்கும் மேற்படி இணைகளில் நிகழும் கால இடைநிலைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. *சேர்* என்பது எடுத்துக்காட்டாகத் தன்வினையாகவும் பிறவினையாகவும் நிகழ வல்லது. *சேரும், சேர்மின்* ஆகிய ஏவல் வினைகள் உரைநிகழ் சூழலின் பின்னணியில் தன்வினையாகவும் பிறவினையாகவும் அறியப்படும். *சேர்ந்து-சேர்த்து* ஆகியவற்றைப் பொறுத்த வரையில் **சேர்ம்+த்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து அவை வருவிக்கப்படும். இந்த அடிநிலை வடிவம் பொதுவான ஒன்று. இதில் காணப்படும் *சேர்ம்* என்பது *சேர்* என்பதன் மாற்றுருபாக இங்கே கொள்ளப்படுகிறது. தன்வினைப் பண்போ பிறவினைப் பண்போ - இந்த இரண்டும் தொடரனியல் சார்ந்த இலக்கணப் பண்புகள் - தொடர்புபடுத்தப்படாத நிலையில் **சேர்ம்+த்உ* என்பது எந்தச் சந்தி விதிக்கும் உட்படாது. இந்த அமைப்பில் நிகழும் *சேர்ம்* என்பதனுடன் தன்வினைப் பண்பையும், பிறவினைப் பண்பையும் புணர்க்கும்போது **சேர்ம்+த்உ* என்பது பின்வரும் மாற்றங்களுக்கு இலக்காகும்.

(33) சேர்ம்[+தன்வினை] + த்உ > சேர்ந்த்உ > சேர்ந்து (தன்வினை)

(34) சேர்ம்[-தன்வினை] + த்உ > சேர்ந்த்உ > சேர்த்து (பிறவினை)

இத்தகைய ஆய்வை நாம் முன்பே சுட்டியிருக்கிறோம். *கலங்கு-கலக்கு, முழங்கு-முழக்கு, விளங்கு-விளக்கு* முதலான முற்று வினைப்பகுதிகள் தன்வினை-பிறவினை தொடர்பான ஆய்வில் ஒரு சிக்கலைத் தோற்றுவிக்கின்றன. வரலாற்று நிலையில் இவை இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களாக நிகழ்ந்து பின்னர் முற்று வினைப்பகுதிகளாக மாறியவை என்பது நமது கருதுகோள். *முழங்கு-முழக்கு* ஆகியவற்றை எடுத்துக்காட்டாக முற்றுவினைகளாகக் கொண்டால் அவை **முழம்+க்உ* என்ற பொது நிலை வினையிலிருந்து தன்வினை-பிறவினைப் பண்புகளைப் புணர்த்திப் பெறப்படும். இந்த அமைப்பில் **முழயும்* என்பதன் ஒடுக்கமாகிய *முழம்* என்பது *முழய்* என்பதன் மாற்றுருபாகக் கொள்ளப்படும். ஆனால் *முழங்கு-முழக்கு* முற்றுவினைப்பகுதிகளாக நிகழ்கையில் எந்த உறுப்போடு தன்வினை-பிறவினைப் பண்புகளைப் புணர்த்துவது? வண்ணணை ஆய்வில் *முழங்கு/முழக்கம், முழக்கு* ஆகியவற்றை **முழம்+க்உ* என்பதிலிருந்து வருவிக்க முடியாது.

மாறாக, *முழங்க்உ என்ற பொதுநிலை வினையிலிருந்து [+தன்வினை], [-தன்வினை] ஆகிய தொடரனியற் கூறுகளைப் புணர்த்தி இவற்றைப் பெறமுடியும். எனவே இது கோட்பாட்டு நிலையில் அணுகப்பட வேண்டிய பிரச்சினையாகும். இது தொடர்பான குமாரசாமி ராஜாவின் ஆய்வு ஏற்புடையதாகக் கொள்ளத்தக்கதல்ல என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக் கிறோம். நம்முடைய நிலையை ஏற்கனவே குறிப்பிட்டிருந்தாலும் (பார்க்க: 1.2) மீண்டும் அதனைச் சற்று மாறுபட்ட நிலையில் இங்கே தெளிவுபடுத்துவது அவசியமாகின்றது. இதனை 3.2.20-இல் அறியலாம்.

3.2.20 *கலங்கு - கலக்கம், அடங்கு - அடக்கம், உறங்கு - உறக்கம், மயங்கு - மயக்கம்* ஆகியவை தன்வினைச் சார்புடையவை. *கலக்கம், அடக்கம், உறக்கம், மயக்கம்* ஆகியவற்றின் பகுதிகளாக நிகழும் *கலக்கு, அடக்கு, உறக்கு, மயக்கு* ஆகியவற்றுக்கும் பிறவினைகளாகிய *கலக்கு, அடக்கு, உறக்கு, மயக்கு* ஆகிய வற்றுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. *அம்* என்ற விகுதியின் முன் நிகழும் *அடக்கு* என்பது *அடங்கு* என்ற தன்வினையின் மாற்றுருபாகும். இதேபோல் மேற்படி விகுதியின் முன் நிகழும் *கலக்கு, உறக்கு, மயக்கு* ஆகியவையும் முறையே *கலங்கு, உறங்கு, மயங்கு* ஆகியவற்றின் மாற்றுருபுகள் ஆகும். *அடங்கு* என்பதும் அம்மென் விகுதியின் முன் நிகழும் *அடக்கு* என்பதும் தன்வினைத் தன்மையனவாதலின் இரண்டும் **அடங்க்உ* என்ற பொதுநிலை வினையின் அடியாகத் தோன்றியனவாகக் கொள்ளப்படும். இவை இரண்டும் பின்வரும் விதிகளின் மூலம் வருவிக்கப்படும்.

35(1) *அடங்க்உ [+தன்வினை] > அடங்கு

(2) *அடங்க்உ [+தன்வினை] > அடக்கு/-அம்

*அடக்கு* என்ற பிறவினையானது பின்வருமாறு வருவிக்கப்படும்.

(36) *அடங்க்உ [-தன்வினை] > அடக்கு

*மறை, குறை, குழை, கரை, கலை, எரி, தேய், சேர்* முதலிய வினையடிகள் தன்வினை, பிறவினைப் பண்புகள் குறிக்கப்படாத பொதுநிலை வினைகளாகும். இந்தப் பண்புகளை ஏற்கையில் இத்தகைய பொதுநிலைவினைகள் தன்வினைகளாகவும் பிறவினைகளாகவும் இனங்காணப்படுகின்றன. இதனைக் கருத்தில் கொண்டே **அடங்க்உ* என்ற பொது நிலை வினை (35), (36)-இல் குறிக்கப்பட்டுள்ளது

## 3.3 செய்பு வினைகள்

3.3.1 *செய்து, செய்கு* வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினை முற்றுக்கள் முறையே **செயுது, *செயுகு* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்கள் என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. அதேபோல் *செய்பு* வாய்பாட்டு இறவாக்காலப் பொதுவினை முற்றுக்களும் **செயுபு* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகக் கொள்ளத் தக்கனவாகும். எ-டு. *நினையுபு* (கலி. 57.22, 76.3) > *நினைபு* (அகம். 298.19), *விரையுபு* (ஐங். 422.3) > *விரைபு* (அகம். 324.13). இதனைக் கருத்தில் கொண்டு *வளையுபு* (கலி. 103.16) என்ற *செயுபு* வாய்பாட்டு வினையானது *வளைபு* என்ற *செய்பு* வாய்பாட்டு வினையாக ஒடுங்க வாய்ப்புள்ளதாகத் துணியலாம். இதே போல் *வழிபு* (பதி. 47.5), *அறிபு* (நற். 13.8), *பிரிபு* (அகம். 41.11), *மறைபு* (அகம். 48.15), *ஊர்பு* (நற். 269.3), *காய்பு* (அகம். 1.11), *சூழ்பு* (பத்துப். 8.227), *காண்பு* (அகம். 3.2) முதலான செய்பு வாய்பாட்டு வினைகள் *செயுபு* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகக் கொள்ளத்தக்கனவாகும்.

3.3.2. *செய்பு* வாய்பாட்டு வினைகள் இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களாகத் தொல்பழந்தமிழில் நிகழ்ந்தமையைப் பழந்தமிழில் நிகழும் *செய்பன்ன+பெயர்* என்ற வாய்பாட்டுப் பெயரெச்சப் பெயர்த் தொடர்கள் புலப்படுத்துகின்றன. இவை *செய்தன்ன+பெயர்* என்ற வாய்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சப் பெயர்த்தொடர்களைப் போல தொடரனியல் விளக்கத்துக்கு உரியனவாகும். பழந்தமிழில் நிகழும் பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(37) நின்று காண்பன்ன நீண்மலை (புறம். 211.3)

38(1) மெய்புகு வன்ன கைகவர் முயக்கம் (அகம். 305.7)
(2) பளிங்குசொரி வன்ன பாய்சுனை (பத்துப். 8.57)
(3) பருகு வன்ன காதல் (அகம். 305.6)
(4) வான்றோய் வன்ன புரிசை (புறம். 21.3)
(5) நீர்இகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர் (ஐங். 465.1)

39(1) இமைதீய்ப் பன்ன கண்ணீர் (குறுந். 4.2)
(2) பாம்புபதைப் பன்ன பரூஉக்கை (பத்துப். 5.70)
(3) விசும்புகடப் பன்ன பொலம்படைக்கலிமா (நற். 361.3)

*அற்று* என்னும் உவமக்கிளவியை அடுத்தும் *செய்பு* வாய்பாட்டு வினையின் நிகழ்ச்சி பழந்தமிழில் அரிதாகக் காணப்படுகின்றது. கருதுக:

(40) புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக் கொள்வற்றே பசப்பு (குறள். 1187)

*உழி* என்ற பெயர்நிலைக் கிளவியின் முன்னும் செய்து வாய்பாட்டு இறந்தகாலப் பொதுவினைமுற்றுக்களைப் போன்றே செய்பு வாய்பாட்டு இறவாக்காலப் பொது வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியையும் பழந்தமிழில் காணலாம். பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருதுக:

(41) துனிநீர் கூட்டமொடு துன்னா ராயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல் (நற். 216.1, 2)

42(1) பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி (பத்துப். 8.57)
(2) பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி (ஐங். 204.3)
(3) பாசியற்றே பசலை காதலர்,
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே (குறுந். 399. 2-4)

43(1) நிறைகதிர் ஞாயிற்றை நாடென்றேன் யானும்
உரைகேட்புழி எல்லாஞ் செல்வேன் (கலி. 146. 29, 30)
(2) ... ... நன்னர் நெஞ்சம்
இட்டருங் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே (அகம். 128.6, 13-15)

எதிர்மறைச் சார்பு வாக்கியங்களிலும் (Negative Subordinate Clauses) *செய்பு* வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் நிகழ்ச்சியைப் பழந்தமிழில் காண முடிகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத் தக்கனவாகும்.

44(1) பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே (பதி. 63.1)
(2) நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்
என்றும் என்தோள் பிரிபறி யலரே (நற். 1.1,2)
(3) காண்பறி யலையே (புறம். 133.2)

45(1) மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே (பதி. 63.5)
(2) கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே (பதி. 63.7)

மேலே *செய்பன்ன, செய்புழி* வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் *செய்வு* வாய்பாட்டு வினைகள் *செய்பு* வாய்பாட்டு வினைகளின் திரிபாகும்(?). இத்திரிபினை, **செயுபு > செயுவு > செய்வு* என விளக்கலாம்.

3.3.3 *செய்பன்ன* வாய்பாட்டுத் தொடர்கள் *செய்வது போன்ற* என்ற வாய்பாட்டுத் தொடர்களோடும், *செய்புழி* வாய்பாட்டுத் தொடர்கள் *செய்யுமிடத்து / செய்யுங்கால் / செய்யும்போது* ஆகிய வாய்பாட்டுத் தொடர்களோடும் தொடரனியல் நிலையிலும் (Syntactic Level), பொருண்மை நிலையிலும் (Semantic Level) தொடர்புடையனவாகும். *செய்பு* வாய்பாட்டு வினைகள் *செய்வது* வாய்பாட்டுப் பொதுவினைகளோடும், *செய்யும்* வாய்பாட்டுப் பொதுவினைகளோடும் மேற்படி தொடரனியல் விளக்கத்தின் மூலம் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்வதைக் காணலாம். இத்தகைய நிகழ்ச்சியே *செய்பு* வாய்பாட்டு வினைகளை வரலாற்று நிலையில் இறவாக்காலப் பொதுவினைமுற்றுக்களாகக் கொள்ள வகை செய்கின்றது. *மறப்பறியேன்* (குறள். 1125, 1207) என்ற எதிர்மறைத் தொடர் *மறப்பறியலென்* என்ற தொடரனியல் அமைப்போடு பொருண்மை நிலையில் பொருந்துவதாகும். இதனைக் கருத்தில் கொண்டு மேலே (44), (45)-இல் நிகழும் *பணிபு அறியலை, காண்பு அறியலை, மலர்ப்பு அறியலை, பொய்ப்பு அறியலை* ஆகிய எதிர்மறைத் தொடர்கள் *பணிபு அறியாய், காண்பு அறியாய், மலர்ப்பு அறியாய், பொய்ப்பு அறியாய்* என்ற தொடர்களுடன் பொருந்துவனவாகக் கொள்ளலாம். இந்தத் தொடர்களில் நிகழும் *செய்பு* வாய்பாட்டு வினைகள் *செய்வது* வாய்பாட்டு வினைகளோடு துணை நிலை வழக்கிலும் (எ-டு. *காண்பு அறியலை = காண்பதை அறியாய்*), உறழ்நிலை வழக்கிலும் (எ-டு. *காண்பு அறியாய் = காண்பது அறியாய்*) நிகழ்வதால் *செய்பு* வாய்பாட்டு வினைகளை இறவாக்காலப் பொது வினைகளாகக் கொள்வது பற்றிய நமது நிலைப்பாடு மேலும் உறுதிப்படுகின்றது. இங்கே இன்னொரு செய்தியையும் குறிப்பிட்டாக வேண்டும். *செய்திலன், செய்கிலன், செய்கின்றிலன்* என்ற வாய்பாட்டு இறந்த மற்றும் இறவாக்கால எதிர்மறை வினையமைப்புக்கள் பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் காணப்படுகின்றன. ஆனால் **செய்பிலன்* என்பது போன்ற வாய்பாட்டு எதிர்மறை வினையமைப்புக்கள் தமிழில் காணப்படவில்லை. இது அமைப்பியல் இடைவெளி (Structural Gap) எனக் கொள்ளத்தக்கதா என்பது ஆய்வுக்குரியதாகும்.

3.3.4 *வான், பான், பாக்கு* (எ-டு. *கொய்வான், காண்பான், உண்பாக்கு*) ஆகியவற்றை நன்னூலார் (நூற்பா 343) எதிர்வெச்ச (Infinitive) விகுதிகளாக இனங்காண்பார். வண்ணனை ஆய்வில் இது ஏற்புடையதாயினும் மேற்படி விகுதிகள் பிறழ்பிரிப்பின் விளைவுகளாகும். *கொய்வான்* (= கொய்ய), *காண்பான்* (= காண),

*அளிப்பான்* (= அளிக்க), *உண்பாக்கு* (= உண்ண), *அளிப்பாக்கு* (= அளிக்க) முதலான எதிர்வெச்சங்களின் பகுதிகள் எடுத்துக் காட்டாக வரலாற்று நிலையில் **கொய்வு, *காண்பு, *அளிப்பு, *உண்பு* எனக் கொள்ளத்தக்கனவாகும். இதனைத் தொடர்ந்து *-வான், -பான், -பாக்கு* ஆகிய விகுதிகள் *-ஆன், -ஆக்கு* என அமையும். இதனை வண்ணனை ஆய்வில் தெளிவுபடுத்த முடியாது என்பதில்லை. *கொய்வான், காண்பான்/காண்பாக்கு* ஆகிய எதிர்வெச்சங்களில் நிகழும் பகுதிகளை முறையே *கொய்வு, காண்பு* என இனங்கண்டு அவற்றை முறையே *கொய், காண்* ஆகியவற்றின் மாற்றுருபுகளாக வண்ணனை ஆய்வில் கொள்ள முடியும். ஆனால் நடப்பியல் நிலையில் பகுதிகள் அல்லது தனியுருபன்களையே வண்ணனை ஆய்வில் கருத்தில் கொள்ளும் எழுதப்படாத மரபு இருப்பதால் *கொய்வான், உண்பான்/ உண்பாக்கு* ஆகிய எதிர்வெச்சங்கள் *கொய்+வான், உண்+பான்/ பாக்கு* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படுகின்றன. இதன் விளைவாகக் *கொய்வு, உண்பு* ஆகிய மாற்றுருபுகள் தவிர்க்கப்படுகின்றன. ஆதலால் *ஆன், ஆக்கு* எனக் குறிக்கப்பட வேண்டிய விகுதிகள் *வான்/பான், பாக்கு* எனக் குறிக்கப்படும் நிலை தவிர்க்க முடியாததாகின்றது. மீண்டும் வலியுறுத்துகிறோம்: *கொய்வான், உண்பான்/உண்பாக்கு* ஆகிய எதிர்வெச்சங்களை வண்ணனை ஆய்வில் *கொய்வு+ஆன், உண்பு+ஆன்/ஆக்கு* என்ற அமைப்பினவாகக் கொள்வதற்கு கோட்பாட்டு அடிப்படையில் எந்தத் தடையும் இல்லை.

3.3.5. *கொய்வான், உண்பான்/உண்பாக்கு* ஆகிய வினை வடிவங்கள் எதிர்வெச்சங்களாகக் கொள்ளப்படுகையில் அவற்றின் பகுதிகளாகிய *கொய்வு, உண்பு* ஆகியவற்றை இறவாக் காலப் பகுதிகளாகக் கொள்வதா அல்லது முற்றுவினைப் பகுதிகளாகக் கொள்வதா என்ற ஒரு சிக்கல் எழுகிறது. *படிக்க, பார்க்க* ஆகிய வல்வினை சார்ந்த எதிர்வெச்சங்கள் எடுத்துக் காட்டாக, *படிக்கு+அ, பார்க்கு+அ* என்ற அமைப்பினவாகக் கொள்ளப் பெற்று இவற்றில் நிகழும் *படிக்கு, பார்க்கு* ஆகியவை முற்றுவினைப் பகுதிகளாகக் கருதப்படும். இதனைக் கருத்தில் கொண்டு *கொய்வான், உண்பான்/உண்பாக்கு* ஆகிய எதிர்வெச்சங்களைக் *கொய்வு+ஆன், உண்பு+ஆன்/ஆக்கு* என்ற அமைப்பினவாகக் கொள்வதுடன் அவற்றில் நிகழும் நிலை மொழியையும் முற்றுவினைப்பகுதிகளாகக் கொள்வதே பொருந்தும் எனத் தோன்றுகிறது. ஆனால் மேற்படி வினை யமைப்புக்களில் *செய்பாக்கு* வாய்பாட்டு வினைகள் வேறொரு

தொடரனியல் சூழலில் எதிர்வெச்சங்களாக நிகழாத நிலையும் தமிழில் காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*46(1)* கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து (குறள். 1127)

*(2)* இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னுமிவ் வூர் (குறள். 1129)

*(47)* நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து (குறள். 1128)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *கரப்பாக்கு, வேபாக்கு* ஆகியவற்றை எதிர்வெச்சங்களாகக் கருத வாய்ப்பில்லை. மாறாக இவை *செய்தல்* அல்லது *செய்வது* வாய்பாட்டுப் பொது வினைகளோடு பொருந்துவனவாகின்றன. அதாவது *கரப்பாக்கு* என்பது *கரத்தல்/கரப்பது* எனவும், *வேபாக்கு* என்பது *வேதல்/வேவது* எனவும் விளக்கற்பாலனவாகின்றன. ஆனால் இந்தச் சமன்பாட்டில் ஒரு சிக்கல் உள்ளது. *கரப்பு* அல்லது *கரத்தல்* என்பது எடுத்துக்காட்டாகக் *கரப்பாக்கு* என்பதில் உள்ள *கரப்பு* என்பதனோடு பொருந்துமா அல்லது *கரப்பாக்கு* என்ற முழு வடிவத்தோடு பொருந்துமா என்பதே அந்தச் சிக்கல். *கரப்பு* என்பதோடு பொருந்துமாயின் *ஆக்கு* என்பதன் பொருண்மை என்ன? *கரப்பாக்கு* என்ற முழு வடிவத்தோடு பொருந்துமாயின் *கரப்பு* என்பதனை எதனுடன் சமன்படுத்துவது? இந்தச் சிக்கலிலிருந்து விடுபடுவதற்கு மேலே குறிப்பிட்ட நமது சமன்பாடு (அதாவது, *கரப்பாக்கு = கரத்தல்/கரப்பது)* ஏற்புடையதுதானா என்பதை மீண்டும் எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது. குறட்பாக்களில் நிகழும் *கரப்பாக்கு, வேபாக்கு* ஆகியவை அமைந்த தொடரன்களை நுணுகி நோக்கினால் மேற்படி வடிவங்கள் இரண்டும் *கரக்கும்+என்று, வேகும்+என்று* என விளக்கத்தக்கனவாகத் தோன்றுகின்றன. இந்த விளக்கத்தின் அடிப்படையில் *கரப்பாக்கு* என்பதில் நிகழும் *கரப்பு* என்பது *கரக்கும்* என்பதனோடு துணை நிலை வழக்கில் அமைவது தெளிவாகின்றது. இதனின்றும் *கரப்பாக்கு* என்ப்தில் நிகழும் *கரப்பு* என்பது இறவாக்காலப் பொதுவினைமுற்று என்ற உண்மை பெறப்படுகின்றது. *கரப்பு* என்பதை அடுத்து நிகழும் *ஆக்கு* என்பது *என்று* என்பதற்கு நேரான வாக்கியச் சாரியை (Sentential Complementizer) எனக் கொள்ளத்தக்கதாகின்றது. தொடரனியற் சூழலுக்கு (Syntactic Context) ஏற்ப, *செய்பாக்கு*

வாய்பாட்டு வினைத் தொடர்களை எதிர்வெச்சமாகவும் வாக்கிய வினையெச்சமாகவும் (அதாவது, *கரக்கும் + என்று*) நிகழத்தக்கன வாகக் கொள்ளலாம். (இது, ஒரு வினைமுற்றானது வாக்கியச் சூழலுக்கேற்பப் பயனிலையாகவும் முற்றெச்சமாகவும் நிகழ்வதைப் போன்றதாகும்).

*3.3.6 செய்பு* வாய்பாட்டு வினைகள் **செயுபு* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கம் என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டது. இந்த ஒடுக்கம் **செயுது > செய்து, *செயுகு > செய்கு* ஆகிய ஒடுக்கங் களுக்கு இணையானது என்ற உண்மையும் முன்பே பெறப்பட்டது. எனவே **செயுது, *செயுகு* வாய்பாட்டு வினைகளைப் போலவே **செயுபு* வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்களும் அமைதல் தவிர்க்க முடியாதது. *செயுது, செயுகு* வாய்பாட்டு வடிவங்கள் முறையே **செயுந்த்உ *செயுங்க்உ* வாய்பாட்டு அடிநிலைவடிவங்களைக் கொண்டவையாகும். இதனைக் கருத்தில் கொண்டு **செயுபு* வாய்பாட்டு வினைகளும் **செயும்ப்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவை என்பது கோட்பாட்டு அடிப்படையில் ஏற்புடையதும் தவிர்க்க முடியாததும் ஆகும். மீட்டுருவாக்க நிலையில் **செயுந்த்உ, *செயுங்க்உ, *செயும்ப்உ* ஆகிய வாய்பாட்டு வினைகள் சமகாலத் தனவா வெவ்வேறு காலத்தனவா என்பது தனி ஆய்வுக்கு உரியதாகும்.

3.3.7 வல்வினை, மெல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகள் **செயும்ப்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து பின்வருமாறு பெறப்படும்.

48 (1) *செயும்ப்உ > செயுப்பு > செய்ப்பு

(2) *செயும்ப்உ > செய்ம்ப்உ

*அளிப்பு, கலைப்பு, சேர்ப்பு, சாய்ப்பு* முதலான *செய்பு* வாய்பாட்டுத் தமிழ் வல்வினைகளும் *சம்ப்உ* (campu), *சூம்ப்உ* (cu:mpu), *திம்ப்உ* (dimpu) 'இறக்கு' முதலான *செய்பு* வாய்பாட்டுத் தெலுங்கு வினைகளும் (48)-இல் குறிப்பிட்டவாறு தோன்றி யமையும். *சேர்ப்பு* என்ற வினை எடுத்துக்காட்டாக, **சேரும்ப்உ* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து (சேரும்ப்உ > சேருப்பு > சேர்ப்பு என்று) பெறப்படும். *நலுப்உ* 'நசுக்கு', *கலுப்உ* 'கலக்கு' ஆகிய தெலுங்கு வினைகள் பின்வருமாறு வருவிக்கப்படும்.

(49) *செயும்ப்உ > செயுப்உ > செய்ப்உ

தேவைப்பட்டால் உயிரொலி இயைபு (Vowel Harmony) விதியும் (49)-இல் இடைநிலை விதியாகச் செயல்படும் *நலுப்உ* 'நசுக்கு' என்ற தெலுங்கு வினை பின்வருமாறு வருவிக்கப்படும்.

(50) *நலியும்ப்உ > நலிய்ம்ப்உ > நலிம்ப்உ > நலிப்உ > நலுப்உ

இந்த ஆய்வில் ஈற்றயல் வடிவமாகிய *நலிப்உ* என்பது உயிரொலி இயைபின் காரணமாக *நலுப்உ* எனத் திரிந்தமைகிறது. *சம்ப்உ* 'கொல்'. *சூம்ப்உ* 'காட்டு'. *திம்ப்உ* (dimpu) 'இறக்கு' ஆகிய தெலுங்கு வினைப்பகுதிகள் பின்வருமாறு பெறப்படும்.

(51) *சயும்ப்உ > சய்ம்ப்உ > சம்ப்உ 'கொல்'

(52) *சூயும்ப்உ > சூய்ம்ப்உ > சூம்ப்உ 'காட்டு'

(53) *இழியும்ப்உ > ழியும்ப்உ > ழிய்ம்ப்உ > ழிம்ப்உ > டிம்ப்உ (Dimpu) > திம்ப்உ (dimpu)

மேலே (51)-இல் *சய்* என்பதும் (52)-இல் *சூய்* என்பதும் முதன்மை வினையடிகளாகும். *சய்* என்பதன் நெடில் வடிவமாகிய *சாய்* என்பது *சாம்பு* என்ற தமிழ் வினையின் முதன்மை வினையடியாக நிகழ்கிறது. கன்னடத்தில் இது *சாயு* என்ற வினையடியாக நிகழ்கின்றது. *சூம்ப்உ* என்பதில் முதன்மை வினையடியாகக் குறிக்கப்பெற்றுள்ள *சூய்* என்பது *சூழ்* என்பதன் திரிபாகும். தெலுங்கில் நிகழும் *சூடு* (cu:Du) 'பார், காண்' என்ற முதன்மை வினையடியும் *சூழ்* என்பதன் திரிபாகும். *சூய்* என்பது அகமீட்டுருவாக்க வடிவமாக (52)-இல் நிகழ்த்தப்பெற்றுள்ள ஆய்வில் குறிக்கப் பெற்றுள்ளது. இனி, மெல்வினை தொடர்பான *செய்பு* வாய்பாட்டு வினைகள் பின்வருமாறு வருவிக்கப்படும்.

54 (1) *செயும்ப்உ > செயும்பு > செயுபு > செய்பு/செயுவு > செய்வு
(2) *செயும்ப்உ > செயும்பு > செய்ம்பு

*சேர்பு, சாம்பு* ஆகிய *செய்பு* வாய்பாட்டு மெல்வினைகள் (54)-இல் குறிப்பிட்டுள்ளது போல் பின்வருமாறு தோன்றியமையும்.

(55) *சேரும்ப்உ > சேரும்பு > சேருபு > சேர்பு

(56) *சாயும்ப்உ > சாயும்பு > சாய்ம்பு > சாம்பு

*காய்வு* என்பதும் *கிளம்பு* என்பதும் பின்வருமாறு பெறப்படும்.

(57) *காயும்ப்உ > காயும்பு > காயுபு > காயுவு > காய்வு

(58) *கிளயும்ப்உ > கிளயும்பு > கிளய்ம்பு > கிளம்பு

*சம்ப்உ, சூம்ப்உ* (தெலுங்கு), *சாம்பு, கிளம்பு* (தமிழ்) ஆகிய வினைகளில் முதன்மை வினையடியில் நிகழும் யகரம் கெடுகிறது. *அளிப்பு, அளப்பு* முதலானவற்றிலும் முதன்மை வினையடிகளில் நிகழும் யகரம் கெடுகிறது. ஆனால் *மறைப்பு* (=மறய்ப்பு), *மறைபு* (= மறய்பு) ஆகியவற்றில் இந்த யகர இழப்பு நிகழவில்லை.

3.3.8 தமிழில் காணப்படும் *மதிப்பு, கெலிப்பு, குறிப்பு* ஆகிய வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகளுக்கு நேரான தெலுங்கு வடிவங்கள் முறையே *மதிம்ப்உ, கெலிம்ப்உ, குறிம்ப்உ* என அமைகின்றன. முன்னதாக 48(1)-இல் முன்மொழிந்த ஆய்வின்படி *மதிப்பு, கெலிப்பு, குறிப்பு* ஆகியவற்றின் வருவிப்பு முறையும், 48(2)-இல் முன்மொழிந்த ஆய்வின்படி *மதிம்ப்உ, கெலிம்ப்உ, குறிம்ப்உ* ஆகியவற்றின் வருவிப்பு முறையும் மாறுபடுகின்றன. இந்த மாறுபாடு எதனால் நேர்ந்தது? கன்னடத்தில் நிகழும் *கேளுத்து* என்ற நிகழ்கால வினைப் பகுதியின் அடிநிலை வடிவம் **கேளுந்த்உ* என்றே அமையும். *கேளுத்து* என்பது **கேள்த்து* என ஒடுங்கி இறுதியில் *கேட்டு* (கேட்டு-அல்) எனத் தமிழில் நிகழும். இதனைக் கருத்தில் கொண்டே வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகளை வருவிக்க 48(1)-இல் உள்ள ஆய்வுமுறை முன்மொழியப்பட்டது. ஆயினும் *மதிப்பு* (த.) என்பதையும் *மதிம்ப்உ* (தெ.) என்பதையும் வருவிக்கும் மாறுபட்ட ஆய்வுகள் நிறைவளிப்பனவாகத் தோன்றவில்லை. 48(2)-இல் உள்ள விதியைப் பின்வருமாறு மாற்றியமைப்பதன் மூலம் *மதிப்பு, மதிம்ப்உ* இரண்டையும் ஒரே ஆய்வின் மூலம் பெற முடியும் என்று தோன்றுகிறது.

(59) *செயும்ப்உ > செய்ம்ப்உ (தெலுங்கு) / செய்ப்பு (தமிழ்)

இந்த ஆய்வு *கலக்கு* (< *கலங்க்உ), *கலைக்கு* (<*கலய்ங்க்உ), *குடிக்கு* (< *குடிங்க்உ) முதலான வல்வினை சார்ந்த *செய்கு* வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும் என்றே தோன்றுகிறது. வருவிப்பு முறைகளில் சில மாறுபாடுகள் இருப்பதாகத் தோன்றினாலும் *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வல்வினைகள் அனைத்தும் முறையே **செயுந்த்உ, *செயுங்க்உ, *செயும்ப்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவை என்ற கருதுகோள் ஏற்புடையதேயாகும். ஏனெனில் மெல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வினைகளை **செயுது, *செயுகு, *செயுபு* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங் களாகக் கொள்வதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. இதன் அடிப்படையில் *செயுது, செயுகு, செயுபு* வாய்பாட்டு வினைகளை முறையே **செயுந்து, *செயுங்கு, *செயும்பு* வாய்பாட்டு வடிவங்களோடு தொடர்புபடுத்துவதும், இத்தகைய வடிவங்களைக் கோட்பாட்டு அடிப்படையில் முறையே **செயுந்த்உ, *செயுங்க்உ, *செயும்ப்உ* ஆகிய வாய்பாட்டு அடிநிலை வடிவங்களோடு தொடர்புபடுத்துவதும் தவிர்க்க முடியாதவையாகும்.

3.3.9 வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டுப் பொது வினைகள் முற்றுவினைப்பகுதிகளாக நிகழும் போக்கினைப் பழந்தமிழில் காணலாம். இத்தகைய முற்று வினைப்பகுதிகளை இரண்டு வகையினவாகக் கொள்ளலாம். முதல் வகையின முக்காலங்களிலும் வினை மற்றும் பெயரெச்சங்களிலும் வினைப் பகுதிகளாக நிகழவல்லவையாகும். எ-டு. *திருப்பு, எழுப்பு, எடுப்பு* (பழந்தமிழில் எழுப்பு என்ற பொருளில்), *கழிப்பு* (பழந்தமிழில் *கழிப்பி* (< கழிப்பு - இ) 'கழித்து' என்ற அமைப்பில்) இரண்டாம் வகையின *செயின், செய* ஆகிய வாய்பாட்டு வினைகளில் மட்டுமே வினைப்பகுதிகளாகப் பழந்தமிழில் நிகழ்பவையாகும். எ-டு. *கொடுப்பின்* (நற். 355.6), *சேர்ப்பின்* (அகம். 280.8), *தீப்பின்* (குறு. 334.4), *கேட்பின்* (அகம். 98.29); *அளிப்ப* (நற். 177.7), *கொடுப்ப* (குறு. 292.4), *மறைப்ப* (பதி. 71.10), *கேட்ப* (பதி. 70.23). இங்கே குறிப்பிட்ட இருவகை முற்று வினைப்பகுதிகளும் **செய்ம்ப்உ* வாய்பாட்டு வடிவங்களின் திரிபுகளாகும்.

3.3.10. தெலுங்கில் நிகழும் பிறவினைத் தன்மையனவாகிய (வல்வினை சார்ந்த) *செய்பு* வாய்பாட்டு முற்று வினைப்பகுதிகள் **செய்ம்ப்உ* வாய்பாட்டு வினைகளின் திரிபாகவே கருதத்தக்கன வாகும். எ-டு. *கடப்உ (< கடம்ப்உ)* (=கடத்து), *நடப்உ (< *நடம்ப்உ)* (= நடத்து), *மேப்உ (< மேம்ப்உ < *மேய்ம்ப்உ)* (= மேய்ப்பு), *லேப்உ (<* லேம்ப்உ)* (=எழுப்பு), *நிலுப்உ (< * நிலும்ப்உ)* (= நிறுத்து), *நெரப்உ (< *நெரம்ப்உ)* (= நிரவு), *பாப்உ (< *பாம்ப்உ)* (= பகுப்பு), *குடுப்உ (<* குடிப்உ < குடிம்ப்உ)* (= ஊட்டு), *மாப்உ (< மாம்ப்உ < *மாய்ம்ப்உ)* (=மாசுபடுத்து), *பேப்உ (< பேம்ப்உ < *பேர்ம்ப்உ)* (= பெயர்ப்பு). இந்த எடுத்துக்காட்டுக்களில் ஒன்றாகிய *லேப்உ* 'எழுப்பு' **எழம்ப்உ* என்பதனோடு தொடர்புடையது. **எழம்ப்உ* என்பதன் அடிநிலை வடிவம் **எழயும்ப்உ* எனக் குறிக்கத்தக்க தாகும். இதில் நிகழும் **எழய்* என்பது *எடய்* எனத்திரிந்து *துயிலெடை நிலை* (தொல். பொருள். நச்சர் - பவானந்தம் பதிப்பு 91.2) (= துயில் எழும் நிலை) என்ற தொடரில் நிகழ்கிறது.

3.3.11. வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகள் பழந்தமிழில் *செயின், செய* வாய்பாட்டு வினைகளில் மட்டுமே முற்றுவினைப் பகுதிகளாக நிகழும் நிலை பற்றி முன்னதாகப் பேசப்பட்டது. இதனின்றும் இரண்டு வகை எச்சவினைகளில் மட்டுமே *செய்பு* வாய்பாட்டு வல்வினை முற்றுவினைகள் வினைப்பகுதிகளாக நிகழும் நிலை தொல் திராவிடத்திலேயே கால் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இத்தகைய வினைகள் தெலுங்கிலும் பிற திராவிட மொழிகளிலும்

இடம்பெற்றுள்ளதே மேற்படி உண்மையை வலியுறுத்துவதாக உள்ளது. தென் திராவிடக் குழுமத்தைச் சேர்ந்த துளு மொழியில் வல்வினை சார்ந்த பல *செய்பு* வாய்பாட்டு முற்றுவினைப் பகுதிகளைக் காணலாம் (Ramakrishna T. Shetty. 2001). சில எடுத்துக்காட்டுக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

60(1) அடுப்உ 'சமைத்தல்', தமிழ். அடு, அடுப்பு
(2) அணெப்பு 'அணை(த்தல்)'. தமிழ். அணைப்பு
(3) அர்ப்உ 'அழி (த்தல்)'. தமிழ். அழிப்பு
(4) ஒடிப்உ 'உடை (த்தல்)'. தமிழ். ஒடிப்பு
(5) கரிப்உ 'கழி(த்தல்)'. தமிழ். கழிப்பு
(6) கடெப்உ 'வெட்டு, வீழ்த்து'. தமிழ். கடிப்பு
(7) தணிப்உ 'தணிவி'. தமிழ். தணிப்பு
(8) கொரப்உ/கொரெப்உ 'குறை'. தமிழ். குறைப்பு
(9) தின்ப்உ 'தின்'. தமிழ். தின்பு
(10) தீர்ப்உ 'தீர்(த்தல்)'. தமிழ். தீர்ப்பு
(11) தொடெப்உ 'துடை, தடவு'. தமிழ். துடை, துடைப்பு
(12) தொயிப்உ/தோயிப்உ 'தோய்த்தல்/துவைத்தல்'. தமிழ். தோய்ப்பு
(13) புடெப்உ/பொடெப்உ 'புடை(த்தல்), தூற்று'. தமிழ். புடய்ப்பு.
(14) நெடிப்உ 'நடு'
(15) நில்ப்உ/நிலிப்உ 'தங்கு'. தமிழ். நிற்பு
!16) நெயிப்உ/நேப்உ 'நெய்(தல்)'. தமிழ் - (?)
(17) பிரிப்உ 'முறுக்கு, திரி(த்தல்)'. தமிழ். பிரிப்பு
(18) புலிப்உ 'புளி(த்தல்)'. தமிழ். புளிப்பு
(19) மேப்உ 'மேய்(த்தல்)'. தமிழ். மேய்ப்பு

மேலே குறிக்கப்பெற்றுள்ள துளு வினைப்பகுதிகள் அனைத்தும் இறவாக்கால வினைத்திரிபுகளில் மட்டுமே நிகழ்பவையாகும். இத்தகைய வினைவடிவங்கள் பழந்தமிழில் *செயின், செய* ஆகிய வாய்பாட்டு எச்ச வினைகளில் மட்டுமே வினைப் பகுதிகளாக நிகழ்கின்றன. எ-டு. *கொடுப்பின்* (< கொடுப்பு + இன்) (நற். 355.6), *கொடுப்ப* (< கொடுப்பு + அ) (குறு. 292.4) இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது. *உழைப்பு, அழைப்பு, சிரிப்பு, தகைப்பு* முதலான வல்வினை சார்ந்த செய்பு வாய்பாட்டு வடிவங்கள் இக்காலத் தமிழில் வேற்றுமை யுருபேற்கும் பெற்றியனவாயினும் அடிப்படையில் இவை

முற்றுவினைப்பகுதிகளே. அதனால்தான் பழந்தமிழில் *உழைப்ப, அழைப்ப உழைப்பின், அழைப்பின்* போன்ற வினையெச்சங்களின் வினைப்பகுதிகளாக அவை நிகழ்கின்றன. ஆனால் இந்த நிலை பிந்திய தமிழில் தொடரவில்லை.

3.3.12. வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டுப் பிறவினைகளுக்கு எதிரான தன்வினைகள் தமிழில் *செய்வு* வாய்பாட்டினவாக நிகழ்கின்றன. இவைமெல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கருதத்தக்கனவா என்பது சிந்தனைக்குரியதாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக:

| | பிறவினைச் சார்பு | தன்வினைச் சார்பு |
|---|---|---|
| 61(1) | தீர்ப்பு | தீர்வு |
| (2) | அழிப்பு | அழிவு |
| (3) | மறைப்பு | மறைவு |
| (4) | குறைப்பு | குறைவு |
| (5) | தேய்ப்பு | தேய்வு |
| (6) | முறிப்பு | முறிவு |
| (7) | நுழைப்பு | நுழைவு |
| (8) | செறிப்பு | செறிவு |
| (9) | தணிப்பு | தணிவு |
| (10) | பணிப்பு | பணிவ் |

இந்த எடுத்துக்காட்டுகளில் பிறவினையாகக் குறிக்கப் பெற்றுள்ளவை பழந்தமிழில் *செயின், செய* ஆகிய வாய்பாட்டு எச்சவினைகளின் பகுதிகளாக நிகழவல்லவை. ஆனால் இவற்றுக்கு எதிராகத் தன்வினைகளாகக் குறிக்கப்பெற்றுள்ள வடிவங்கள் முற்று மற்றும் எச்சவினைகளின் பகுதிகளாக நிகழும் நிலை தமிழில் காணப்படவில்லை. மெல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகளின் திரிபாகிய *செய்வு* வாய்பாட்டு வினைகளுக்கும் இது பொருந்தும். எடுத்துக்காட்டாக, *பிழிவு* (< *பிழிபு*) என்பதனைக் கருதுக. ஆனால் *செய்வு* வாய்பாட்டு வினைகள் அனைத்திற்கும் இது. பொருந்தும் என்று கூற முடியாது. அகர ஈற்று வினையடிகளோடு தொடர்புடைய பல *செய்வு* வாய்பாட்டு வினைகள் சில குறிப்பிட்ட வினைத் திரிபுகளில் மட்டும் வினையடிகளாக நிகழும் போக்கு தமிழில் காணப்படுகிறது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

| இயல்பு வினையடி | வல்வினை சார்ந்த வினைப்பகுதி | மெல்வினை சார்ந்த வினைப்பகுதி |
|---|---|---|
| 62 (1) மற | மறப்பு | மறவு (மறவற்க. குறள். 106) |
| (2) துற | துறப்பு | துறவு (துறவற்க. குறள் .106) |
| (3) கர | கரப்பு | கரவு (கரவாது. குறள். 1061) |
| (4) இர | இரப்பு | இரவு (இரவாமை. குறள். 1061) |
| (5) நட | நடப்பு | நடவு (நடவாது. பரி. 10. 43) |
| (6) புல | புலப்பு | புலவு (புலவாய். சிலம்பு. 7.2.1) |
| (7) விய | வியப்பு | வியவு (வியவற்க. குறள். .439). |
| (8) நய | நயப்பு | நயவு (நயவற்க. குறள். 439) |
| (9) பிற | பிறப்பு | பிறவு (பிறவாயாக்கை. சிலம்பு5.169) |
| (10) கல | கலப்பு | கலவு (கலவாது. பரி. 20.19) |
| (11) திற | திறப்பு | திறவு (திறவாது. புறம். 44.14) |
| (12) சின | சினப்பு | சினவு (சினவாய். பதி. 32.17, சினவல் (குறு. 362.2) |
| (13) கற | கறப்பு | கறவு (கறவாப்பான்முலை. பத்துப். 3.131) |
| (14) சிற | சிறப்பு | சிறவு (சிறவாது. அகம். 98.24) |
| (15) கட | கடப்பு | கடவு (கடவினர். கலி. 33.31) |
| (16) மண | மணப்பு | மணவு (மணவா. நற். 31.12) |

இந்தப் பட்டியலில் இரண்டாம் பிரிவில் நிகழும் *மறப்பு, துறப்பு* முதலானவை முன்பே குறிப்பிட்டபடி *செயின், செய* வாய்பாட்டு எச்சவினைகளில்வினைப்பகுதிகளாக நிகழவல்லவையாகும். மூன்றாம் பிரிவில் நிகழும் *மறவு, துறவு* முதலான மெல்வினை சார்ந்த வடிவங்கள் பழந்தமிழில் சில குறிப்பிட்ட வினைத் திரிபுகளில் மட்டுமே வினைப்பகுதிகளாக நிகழ்கின்றன. *சினவு* இதற்கு விதிவிலக்கு. எ-டு. *சினவல்* (அகம். 365.3), *சினவாது* (நற். 100.6), *சினவாய்* (பதி. 32.17), *சினவிய* (நற். 100.6), *சினவின்* (புறம். 90.5), *சினவுவது* (கலி. 91.6), *சினவுவாய்* (கலி. 87.3), *சினவுவென்* (ஐங். 118.3). இந்தப் பிரிவில் நிகழ்பவை மெல்வினை சார்ந்த வடிவங்களாக இருந்தாலும் இவற்றைச் *செய்பு* வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகக் கொள்ள முடியாது. ஏனெனில் இவை வல்வினை சார்ந்த *செய்பு* வாய்பாட்டு வினைகளுக்கு அதாவது *மறப்பு, துறப்பு* முதலானவற்றுக்கு எதிரான இலக்கணத் தன்மையைக் கொண்டவை அல்ல. எடுத்துக்காட்டாக *மற, மறப்பு, மறவு* மூன்றும் ஒரே வகை இலக்கணத் தன்மைக்கு உரியவையாகும். *மறப்பு* என்பதைப் பிறவினையாகவும் *மறவு* என்பதைத் தன் வினையாகவும் கொள்ள முடியாது. இதனின்றும்

ஓர் உண்மை புலனாகின்றது. *தீர்வு, அழிவு* முதலான வினை வடிவங்களும், *மறவு, துறவு* முதலான வினை வடிவங்களும் மாறுபட்ட அடிநிலை வடிவங்களைக் கொண்டவை என்பதே அவ்வுண்மை. *தீர்வு, அழிவு* முதலானவற்றைச் *செய்பு* வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகவும் *மறவு, துறவு* முதலானவற்றைச் *செயும்* வாய்பாட்டு வினைகளின் மகரம் குறுகிய திரிபுகளாகவும் கருதத் தோன்றுகின்றன. எ-டு. **சினயும் > சினய்ம் > சினம் + உ > சினவ்-உ, சினவும்* என்பதன் பகுதியாகிய *சினய்* (= சினை) பழந் தமிழில் *சினைஇ* (ஐங். 455.1), *சினைஇய* (பத்துப். 8.229), *சினைஇயோர்* (புறம். 41.18) ஆகிய வினை வடிவங்களில் பகுதியாக நிகழ்வதைக் காணலாம். இதனின்றும் அகர ஈற்று வினையடிகள் அனைத்தும் **அய்* ஈற்றனவாகக் கருதத்தக்கவை என்பது தெளிவாகிறது.

3.3.13 தமிழில் நிகழ்வதாக (62)இல் குறிக்கப்பெற்ற வடிவங் களைப் போலவே தெலுங்கிலும் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

| | வல்வினை சார்ந்த வினைப்பகுதி | மெல்வினை சார்ந்த வினைப்பகுதி |
|---|---|---|
| 63 (1) | தெறச்உ 'திற' | தெறவு/தெறுவு (தெறவனு 'திறவேன், திறக்க') |
| (2) | மறச்உ 'மற' | மறவு/மறுவு (மறவமு 'மறவோம்') |
| (3) | நடச்உ 'நட' | நடவு/நடுவு (நடவரு 'நடவார்') |
| (4) | பிடுச்உ 'பிழி' | பிடுவு (பிடவலேது 'பிழியவில்லை') |
| (5) | துடுச்உ 'துடை' | துடுவு (துடவனு 'துடைக்க மாட்டேன்' 'துடைக்க') |
| (6) | நிலுச்உ 'நில்' | நிலுவு (நிலவமு 'நில்லோம்') |
| (7) | லேச்உ 'எழு' | லேவு (லேவரு 'எழமாட்டார்') |
| (8) | பொடுச்உ 'குத்து' | பொடுவு (பொடவனு 'குத்த' 'குத்த மாட்டேன்') (முள், ஊசி) |
| (9) | விடுச்உ 'விடு' | விடுவு (விடவமு 'விடோம்') |
| (10) | வீடுச்உ | வீடுவு (வீடவனு 'அவிழ்(த்தல்) 'அவிழ்க்கேன்' 'அவிழ்க்க') |

இங்கும் இரண்டாம் பிரிவிலுள்ள *தெறவு, மறவு* முதலானவற்றின் அடிநிலை வடிவங்களைச் *செய்பு* வாய்பாட்டுக்கு உரியவற்றோடு தொடர்புபடுத்த முடியவில்லை. எனவே இவற்றையும் மகரம் குறுகிய *செயும்* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைந்தனவாகவே கொள்ளத் தோன்றுகிறது. ஆயினும் திராவிட மொழிகளில் நிகழும் *செய்வு* வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்கள் பற்றிய ஆய்வு முடிந்ததாக நாம் கருதவில்லை.

# 4. செயும் வாய்பாட்டுப் பொதுவினைகள்

4.1 *செயும்* (= செய்யும்) வாய்பாட்டுப் பொது வினை முற்றுக்கள் திராவிட வினைமுற்றுக்களின் வரலாற்றில் குறிப்பிடத் தக்க இடத்தைப் பெறுகின்றன. *-உந்து* (< *உந்த்உ), *-உங்கு* (< *உங்க்உ), *-உம்பு* (< *உம்ப்உ) ஈற்று இறவாக்காலப் பொதுவினை முற்றுக்களாகிய **செயுந்து, *செயுங்கு, *செயும்பு* வாய்பாட்டு வினைகளின் அடிநாதமாக அமைபவை *செயும்* வாய்பாட்டு வினைகளாகும். *செயும்* வாய்பாட்டு வினைகள் *செய்ம்* வாய்பாட்டினவாக ஒடுங்கும் இயல்பினவாகும். இதன் விளைவாகவே *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வினைகள் தோற்றம் கொள்வதற்கான பின்புலம் அமைகிறது. இதனையே இன்னொரு வகையாகவும் கொள்ளலாம். *செயும் +து/கு/பு* என்று ஒருவகை அமைப்பும் *செய்ம் +து/கு/பு* என்று இன்னொரு வகை அமைப்பும் மெல்வினை, வல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு வினைகளுக்கு நிலைக்களன் களாக அமைவனவாகக் கொள்ள முடியும் என்பதை ஆய்வுக்குரிய ஒரு கருதுகோளாகக் கொள்ளலாம். இந்தக் கருதுகோளின்படி வல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வினைகளைச் *செய்ம் +து/கு/பு* என்ற வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்தும், மெல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வினைகளைச் *செயும்+ து/கு/பு* என்ற வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்தும் வருவிக்கலாம். கருதுக.

1 (1) அளிம் + த்உ > அளிந்த்உ > அளித்து (அளித்தல், அளித்தி, அளித்திர்)

(2) அளிம் + க்உ > அளிங்க்உ > அளிக்கு

(3) அளிம் + ப்உ > அளிப்பு

இந்த ஆய்வில் *அளிம்* என்பது **அளியும்* என்ற *செயும்* வாய்பாட்டு வினையின் ஒடுக்கமாகும். *மதிம்ப்உ* (தெலுங்கு), *மதிப்பு* (தமிழ்) ஆகிய வடிவங்கள் 1(3)-இல் உள்ளவாறு ஆராயப் படும். இதேபோல் *மேய்ப்பு* (தமிழ்), *மேப்உ* (தெலுங்கு) ஆகிய வடிவங்களும் 1(3)-இல் உள்ள ஆய்வின் அடிப்படையில் பெறப்படும். கருதுக:

*2 (1)* மேய்ம் + ப்உ > மேய்ப்பு (தமிழ்)

*(2)* மேய்ம் + ப்உ > மேய்ப்உ > மேப்உ (தெலுங்கு)

மெல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு வினைகள் *செயும்+த்உ/க்உ/ப்உ* என்ற வாய்பாட்டு வடிவங்களின் திரிபாகிய *செயுந்து, செயுங்கு, செயும்பு* வாய்பாட்டு வினைகளி லிருந்து பின்வருமாறு வருவிக்கப்படும். *கலையுது/கலைது, கலையுகு/கலைகு, கலையுபு/கலைபு* ஆகியவை இந்த ஆய்வில் கருத்தில் கொள்ளப்படுகின்றன.

*3 (1)* கலையும் + து > கலையுந்து > கலையுது > கலைய்து > கலைது (கலைது + அல் > கலைதல்)

*(2)* கலையும் + கு > கலையுங்கு > கலையுகு > கலைய்கு > கலைகு

*(3)* கலையும் + பு > கலையும் > கலையுபு > கலைய்பு > கலைபு (?> கலைவு)

இப்போது ஒரு சிக்கல் எழுகிறது. *சாம்பு, கிளம்பு* ஆகியவை எந்த வகையிலான அடிநிலை வடிவத்திலிருந்து பெறப்படும்? *செய்ம்+ப்உ* வாய்பாட்டு வடிவத்திலிருந்தே இவற்றைப் பின்வருமாறு வருவிக்கலாம் எனத் தோன்றுகிறது.

*4 (1)* (சாயும்+ப்உ>) சாயும்பு > சாய்ம்பு > சாம்பு

*(2)* (கிளயும்+ப்உ>) கிளயும்பு > கிளய்ம்பு > கிளம்பு

இந்த ஆய்வு மீண்டும் பரிசீலனைக்கு உரியது. செய்ம் வாய்பாட்டு வினைகள் செயும் வாய்ப்பாட்டு வினைகளின் ஒடுக்கம் என்பதால் *செய்ம்+து/பு/கு, செயும்+து/கு/பு* என்ற இருவகை அடிநிலை வடிவங்களை முன்மொழிதல் ஏற்புடையதா என்ற வினாவை ஒதுக்கிவிட முடியாது.

4.2 செயும் வினைகள் மெல்வினை சார்ந்தனவும் வல்வினை சார்ந்தனவும் என இருவகையில் நிகழும் நிலை தமிழில் காணப் படுகின்றது. *மறையும், தேயும், அழியும்* முதலானவை மெல்வினை சார்ந்த செயும் வாய்பாட்டு வினைகளாகும். *மறைக்கும், தேய்க்கும், அழிக்கும்* முதலானவை வல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டு வினைகளாகும். மெல்வினை - வல்வினைப் பாகுபாடு தொடக்கத்தில் அதாவது தொல்திராவிடத்தில் அல்லது தொல் திராவிடத்துக்கு முந்தைய நிலையில் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஏனெனில் வல்வினை சார்ந்த *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக் கால வினைகள் அனைத்தும் அடிநிலை வடிவங்களில்

வல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டு வினைகளைக் கொண்டிருக்கவில்லை; அதற்கான வாய்ப்பும் இல்லை. எடுத்துக் காட்டாக *மறைத்து* (மறைத்தல் என்பதில் நிகழ்வது), *மறைக்கு, மறைப்பு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களில் **மறைம்* என்ற *செய்ம்* வாய்பாட்டு வினையின் நிகழ்ச்சிக்குத்தான் இடமுள்ளது. **மறைம்* என்பது **மறையும்* என்ற *செயும்* வாய்பாட்டு வினையின் ஒடுக்கமாகும். அடிநிலை வடிவத்தில் *மறைம்* (< மறையும்) என்ற வினை மெல்வினையாகக் கொள்ளத்தக்கதல்ல. இது ஒரு பொது வினைமுற்றாகும். *துளைக்கு, பறிக்கு; துளைப்பு, பறிப்பு; துளைத்து, பறித்து* (துளைத்தல், பறித்தல் ஆகியவற்றில் நிகழ்பவை) ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களில் நிகழும் *செயும்* வாய்பாட்டு வினைகள் **துளையும்* (=துளயும்), **பறியும்* என்றே இனங்காணப்படும். இதன் அடிப்படையில் *நினைத்தொறும்* (பத்துப். 8.251) என்ற தொடர் *நினைம்+தொறும்* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படும். இந்த அமைப்பில் நிகழும் **நினைம்* என்பது **நினையும்* என்பதன் ஒடுக்கமாகும். *நினையுங்காலை* (சொல், சேனா. 198) என்ற தொடரில் தொல்காப்பியர் இதனை மிகுதியாகப் பயன்படுத்துவார். *தொறும்* என்பதில் உள்ள தகரம் நிலையொலியாக நிகழ்வதால் *நினைம்* என்பதில் உள்ள மகரத்தின் திரிபாகிய நகரம் இனவல்லொற்றாகத் திரிகின்றது. *நினைத்தொறும்* போன்ற தொடர்கள் பழந் தமிழிலும் பின் பழந்தமிழிலும் பரவலாகக் காணப்படுகின்றன. பின்வரும் ஆய்வின்மீது அமைந்த இத்தகைய தொடர்கள் கருத்திற் கொள்ளற்பாலனவாகும்.

5 (1) *ஆர்ம்+தொறும் > ஆர்ந்த்ஒறும் > ஆர்த்தொறும் (அகம். 12.6)

(2) *இழம்+தொறும் > இழந்த்ஒறும் > இழத்தொறும் (குறள். 940)

(3) *உழம்+தொறும் > உழந்த்ஒறும் > உழத்தொறும் (குறள். 940)

(4) *வியம்+தொறும் > வியந்த்ஒறும் > வியத்தொறும் (புறம். 217.9)

(5) *ஈம்+தொறும் > ஈந்த்ஒறும் > ஈத்தொறும் (பதி. 61.12, 13)

(6) *களிம்+தொறும் > களிந்த்ஒறும் > களித்தொறும் (குறள். 1145)

(7) *விளிம்+தொறும் > விளிந்த்ஒறும் > விளித்தொறும் (நற். 157.5)

(8) *இசைம்+தொறும் > இசைந்த்ஒறும் > இசைத்தொறும் (அகம். 283.7)

(9) *இறைம்+தொறும் > இறைந்த்ஒறும் > இறைத்தொறும் (பழ. 344)

(10) *சுவைம்+தொறும் > சுவைந்த்ஒறும் > சுவைத்தொறும் (புறம். 164.5)

(11) *துடைம்+தொறும் > துடைந்த்ஒறும் > துடைத்தொறும் (ஐங். 358.3)

(12) கேள்ம் > கேண்ம் > கேண்
கேண்+தொறும் > கேண்ட்ஒறும் > கேட்டொறும் (நற். 157.7)

(13) கல்ம் > கன்ம் > கன் + தொறும் > கன்ற்ஒறும் > கற்றொறும் (பழ. 332)

இந்த ஆய்வில் நிகழும் *செய்ம்* வாய்பாட்டு வினைகள் மெல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்கள் அல்ல. வல்வினை - மெல்வினை பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே வழக்கில் அமைந்த செயும் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியே மேற்படி எடுத்துக்காட்டுக்களில் நிகழ்கின்றன. இவை அனைத்தும் மெல்வினை - வல்வினை பாகுபாடு தோன்றிய நிலையில் தவிர்க்கப்பட்டு வல்வினை சார்ந்த வினைகள் அவற்றின் இடத்தில் நிகழத் தொடங்கின. இதனைப் பின்வருமாறு விளக்கலாம்.

| | தொல்லமைப்பு | வல்வினை சார்ந்த அமைப்பு |
|---|---|---|
| 6 (1) | (அ) *நினையும் தொறும் | (ஆ) நினைக்குந் தொறும் |
| (2) | (அ) *ஆரும் தொறும் | (ஆ) ஆர்க்குந் தொறும் |
| (3) | (அ) *இழயும் தொறும் | (ஆ) இழக்குந் தொறும் |
| (4) | (அ) *உழயும் தொறும் | (ஆ) உழக்குந் தொறும் |
| (5) | (அ) *வியயும் தொறும் | (ஆ) வியக்குந் தொறும் |
| (6) | (அ) *ஈயும் தொறும் | (ஆ) ஈக்குந் தொறும் (?) |
| (7) | (அ) *களியும் தொறும் | (ஆ) களிக்குந் தொறும் |
| (8) | (அ) *விளியும் தொறும் | (ஆ) விளிக்குந் தொறும் |
| (9) | (அ) *இசையும் தொறும் | (ஆ) இசைக்குந் தொறும் |
| (10) | (அ) *இறையும் தொறும் | (ஆ) இறைக்குந் தொறும் |
| (11) | (அ) *சுவையும் தொறும் | (ஆ) சுவைக்கும் தொறும் |
| (12) | (அ) *துடையும் தொறும் | (ஆ) துடைக்குந் தொறும் |
| (13) | (அ) *கேளும் தொறும் | (ஆ) கேட்குந் தொறும் |
| (14) | (அ) *கலும் தொறும் | (ஆ) கற்குந் தொறும் |

மேலே குறிப்பிட்ட இருவகை அமைப்புக்களில் *செயும்* வாய்பாட்டு வினைகளின் மாறுபட்ட வடிவங்களைக் காணலாம். இதன்றும் வல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டு வினைகளின் பகுதிகள் அனைத்தும் தொல்லமைப்பில் காணப்படும் *செயும்* வாய்பாட்டு வினைகளைக் கொண்ட அடிநிலை வடிவங்களி லிருந்து தோற்றம் கொண்டவை என்பது புலனாகின்றது. காட்டாக, *சுவைக்கும்* என்பதில் நிகழும் *சுவைக்கு* என்ற முற்றுவினைப் பகுதியின் அடிநிலை வடிவம் **சுவையும்* என்ற *செயும்* வாய்பாட்டு வடிவினதாகும். தொல்லமைப்பில் நிகழும் *செயும்* வாய்பாட்டு வினைகள் அனைத்தும் தமிழில் வல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டினவாக நிகழும் போக்கே காணப் படுகிறது. தொல்லமைப்பில் வழக்கில் இருந்த பல *செயும்* வாய்பாட்டு வினைகள் தமிழில் மெல்வினைப் பிரிவில் இடம்பெறத் தொடங்கின. எடுத்துக்காட்டாக *மறைக்கு, புதைக்கு, கலக்கு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களில் நிகழ்ந்த **மறையும், *புதையும், *கலயும்* ஆகிய *செயும்* வாய்பாட்டுப் பொது வினைகள் தமிழில் மெல்வினைப் பிரிவில் நிகழ்வதைக் கருத்தில் கொள்ளலாம். *மறியல், குளியல், நிலையல்* (தொல்.இளம்.எழுத்து. 258/309), *சமையல்* ஆகிய வினைகள் மெல்வினை - வல்வினைப் பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே வழக்கில் நிகழ்ந்தவையாகும். இவற்றுக்கு இசைவான *செயும்* வாய்பாட்டு வினைகள் *மறியும், குளியும், நிலையும்* (தொல்.எழுத்து. இளம். 190, 221, 310), *சமையும்* என்று அமையும். இந்த வினைகள் இக்காலத் தமிழில் ஏவல் வினைகளாக நிகழும் நிலை காணப்படுகிறது. எ-டு, *நீர் அதை மறியும்; நீர் அங்கே குளியும், நீர் சமையும்.* பல வல்வினை சார்ந்த *செயும்* வாய்பாட்டு வினைகள் ஏவல் வினைகளாக நிகழும்போது மேற்கண்டவாறே நிகழ்கின்றன. எ-டு. *நீர் அதைப் பாரும்; நீர் அதைக் கேளும்; நீர் அங்கே நில்லும்,* மேலே குறிப்பிட்ட *மறியல், குளியல்* ஆகியவை இக்காலத் தமிழில் *மறித்தல், குளித்தல்* என வழங்குகின்றன. *மறியல் போராட்டம், குளியல் அறை, சமையல் வேலை* ஆகிய தொடர்களை *மறித்தல் போராட்டம், குளித்தல் அறை, சமைத்தல் வேலை* எனக் குறிப்பிடும் மரபு தமிழில் இல்லை. *மறியல், குளியல், சமையல்* ஆகியவையும் அவற்றுக்கு இசைவான *மறியும், குளியும், சமையும்* ஆகியவையும் தமிழில் வழங்கினாலும் அவற்றைத் தொல் திராவிட நிகழ்வுகளாகவே கருத வேண்டும். இத்தகைய நிகழ்வுகள் தொல்திராவிடக் கிளை மொழிகள் தனிமொழிகளாக இனங்காணப்பட்ட நிலையில் அவற்றில் தொல்வழக்கின் எச்சங்களாக நிலை கொள்கின்றன.

4.3 *செயும்* வாய்பாட்டு வினைகள் *செய்ம்* வாய்பாட்டின வாக ஒடுங்கும் என்பதைத் தொல்காப்பியர் (சொல். சேனா. 238) குறிப்பிடுகிறார். இந்தக் குறிப்பானது *செயும்* வாய்பாட்டுப் பெயரெஞ்சு கிளவியைக் கருத்தில் கொண்டது என்றாலும், *செயும்* வாய்பாட்டு முற்று மற்றும் ஏவல் வினைகளுக்கும் இது பொருந்தும். *உண்ம்* (புறம். 178.5), *கொண்ம்* (புறம். 152.29), *சென்ம்* (நற். 19.9, 71.3), *தின்ம்* (புறம். 150.13) முதலானவை *செயும்* வாய்பாட்டு ஏவல் வினைகளின் ஒடுக்கங்களாகும். *உண்மர்* (பதி. 24.18), *காண்மர்* (பத்துப். 6.513), *கொண்மர்* (பத்துப். 6.514), *தின்மர்* (பதி. 24.18) ஆகிய வினைமுற்றுக்களில் நிகழும் *உண்ம்-, காண்ம்-, கொண்ம்-, தின்ம்-* ஆகிய இறவாக்கால வினைப்பகுதிகள் *செயும்* வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் ஒடுக்கங்களாகும். சிறப்பு வினை முற்றுக்களில் (Personal Finite Verbs) *செயும்* வாய்பாட்டு வினைகள் ஒடுங்காமல் நிகழும் நிலையினை *அறியுமோன்* (புறம். 137.4), *கொய்யுமோன்* (புறம். 252.3), *தெளியுமோர்* (தொல்.சொல். சேனா. 153), *உணருமோர்* (மேற்படி. 96), *தெரியுமோர்* (மேற்படி. 101), *வாழுமோர்* (பதி. 71.27), *வேயுமோர்* (பரி. 12.11) முதலான வினைகளில் காணலாம். *செயும்* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கத்தைப் பழந்தமிழில் *செய்மார், செய்மின், செய்மதி, செய்மோ, செய்மே* ஆகிய வாய்பாட்டு வினைகளிலும் காணலாம். இவற்றுள் *செய்மின்* வாய்பாட்டு வினைகள் *செயுமின்* வாய்பாட்டினவாக நிகழும் நிலையை *அரையுமின்* (கம்ப. 5505), *பிழியுமின்* (மேற்படி), *எய்யுமின்* (மேற்படி. 5805), *போழுமின்* (மேற்படி), *கொய்யுமின்* (மேற்படி.), *செய்யுமின்* (மேற்படி), *தின்னுமின்* (மேற்படி. கோவை கம்பன் அறநிலை பதிப்பு) ஆகியவற்றில் காணலாம். மேலே குறிப்பிட்ட வாய்பாட்டு வினைகள் அனைத்தும் பிறழ்பிரிப்பின் காரணமாகச் செய்+மார், செய்+மின், செய்+மதி, செய்+மோ என்ற அமைப்பினவாக மரபிலக்கண ஆய்வில் கொள்ளப்படுகின்றன (தொல்.சொல்.சேனா. 7, 224, 274). இந்த ஆய்வு ஏற்புடையதெனில் *உண்மர், தின்மர்* முதலான வினைகளையும் *செய்+மர்* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்ள நேரிடும். எனவே இந்த ஆய்வு ஏற்புடையதன்று. *செய்மார், செய்மின், செய்மதி, செய்மோ* ஆகிய வாய்பாட்டு வினைகள் உண்மையில் *செய்ம்+ஆர், செய்ம்+இன், செய்ம்+அதி, செய்ம்+ஓ* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்ளத்தக்கனவாகும். *செய்மார்* வாய்பாட்டு வினைகளின் அமைப்பு தொடர்பாகச் சேனாவரையர் கூறும் கருத்தை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். அவர் கூறுகிறார்:

> "மார் எதிர்காலம் பற்றி வந்த ஆரேயாம்; ரஃகான் ஒற்றென அடங்குமெனின் அற்றன்று. ஆரேயாயின் கொண்மார் என்புழி மகரம் காலம் பற்றி வந்ததோர் எழுத்தாகல் வேண்டும். உண்பார், வருவார் எனக் காலம் பற்றி வரும் எழுத்து முதனிலைக்கேற்றவாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார், வருமார் என எல்லா முதனிலை மேலும் மகரத்தோடு கூடி வருதலானும் (வினை கொண்டு முடிதற்கேற்ப தோர் பொருள் வேறுபாடு உடைமையானும்) ஆர் ஈறு அன்று வேறெனவேபடும் என்பது" (தொல்.சொல். சேனா. 7)

சேனாவரையரின் கருத்தானது திராவிட மொழிகளில் குறிப்பாகத் தமிழில் மெல்வினை - வல்வினை பாகுபாடு தோன்றிய பிறகு வினையமைப்புக்களில் நிகழ்ந்த அமைப்பியல் மாற்றத்தைக் கருத்தில் கொண்டதாகும். ஆனால் *செய்மார்* வாய்பாட்டு வினைகள் மேற்படி பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே வழக்கில் நிகழ்ந்தவையாகும். இந்தக்கூற்று *செய்மின், செய்மதி, செய்மோ* வாய்பாட்டு வினைகளுக்கும் பொருந்தும், *சுவைக்கு, பறிக்கு* ஆகிய *செய்கு* வாய்பாட்டு வல்வினைகளும் *சுவைப்பு, பறிப்பு* ஆகிய *செய்பு* வாய்பாட்டு வல்வினைகளும், *சுவைத்து, பறித்து (சுவைத்தல், பறித்தல்* ஆகியவற்றில் நிகழ்பவை). ஆகிய இறவாக்காலச் *செய்து* வாய்பாட்டு வினைகளும் அடிநிலை வினையமைப்புக்களில் **சுவையும், *பறியும்* ஆகிய *செயும்* வாய்பாட்டு வினைகளைக் கொண்டவையாகும். இங்கே சேனாவரையரின் வாதம் எடுபடாது. ஏனெனில் **சுவையும், *பறியும்* ஆகிய வினைகள் மெல்வினை - வல்வினை பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே நிகழ்ந்த தொல் வழக்காகும். எனவே செய்மார் தொடர்பான சேனாவரையரின் ஆய்வினை ஏற்பதற்கில்லை. *செய்மார்* வினைகள் *செய்ம்+ஆர்* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகவே கொள்ளப்படும். இந்த வாய்பாட்டு அமைப்புக்களில் நிகழும் *செய்ம்* வாய்பாட்டு வினைகளை மெல்வினை - வல்வினை பாகுபாட்டுக்குப் பிறகு தோன்றியவையாகக் கொள்ள முடியாது; கொள்ளவும் கூடாது.

4.4 *செயும்* வாய்பாட்டுப் பொதுவினைகள் *செய்ம்* வாய்பாட்டினவாக ஒடுங்கி அன்சாரியை முன்னும் பலர்பால் விகுதியாகிய *-ஆர்* என்பதன் முன்னும் நிகழும் நிலையையும் பழந்தமிழில் காண முடிகின்றது. எ-டு. *செய்ம்மன* (தொல்.சொல்.

சேனா. 222) 'செய்வன', *மொழிமனார்* (தொல்.சொல்.சேனா. 175) 'மொழிவர்', *என்மனார்* (மேற்படி. 01) 'என்பர்', ***என்மார்*** (பரி. 11.115, 117, 119, 121) 'என்பர்'. இந்த வினைமுற்றுக்களில் *செய்ம், மொழிம், என்ம்* ஆகியவை இறவாக்காலப் பகுதிகள் (Non-Past Bases) ஆகும். இத்தகைய காலப் பகுதிகளைக் கொண்ட சிறப்பு வினைகள் மெல்வினை - வல்வினைப் பாகுபாடு தோன்றுவதற்கு முன்பே வழக்கில் இருந்தவையாகும். *இசைக்குமன* (தொல்.சொல். சேனா. 01). 'இசைப்பன' என்பது விதிவிலக்கான நிகழ்வாகும். இதில் நிகழும் *இசைக்கும்* என்பது வல்வினை சார்ந்த செயும் வாய்பாட்டினதாகும். இது மேற்படி பாகுபாடு தோன்றிய பின் படைத்துக் கொள்ளப்பட்ட வினையாகும். *செய்ம்மன* என்பதன் அமைப்பைப் பற்றிப் பேசுகையில் மீண்டும் மயங்குகிறார் சேனாவரையர். "செய்ம்மன வென்பது மனவீற்று முற்றாய் எதிர்கால முணர்த்தும்" (தொல்.சொல். 222, உரை) என்பது சேனாவரையரின் முடிபாகும். *இசைக்குமன* என்பதன் அமைப்பை ஆராய்கையில் "இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். மன் என்னும் இடைச்சொல் மன என ஈறு திரிந்து நின்றது" (தொல்.சொல். 01, உரை) என்று குறிப்பிடுவார் சேனாவரையர். *செய்ம்மன, இசைக்குமன* ஆகியவை தொடர்பான சேனாவரையரின் ஆய்வு ஏற்புடைய தன்று. இரண்டின் அமைப்பும் முறையே *செய்ம்-அன்-அ, இசைக்கும்-அன்-அ* என்பதாகும். இந்த அமைப்பில் அகரக் கிளவி பலவின்பால் விகுதியாகவும் *அன்* என்பது சாரியையாகவும் கொள்ளத்தக்கனவாகும். *செய்ம், இசைக்கும் (<இசைக்கு + உம்)* ஆகியவற்றில் நிகழும் மகரக் கிளவியும் உம்மைக் கிளவியும் இறவாக்கால விகுதிகளாகும். *என்மனார்* (<என்-ம்+அன்+ஆர்), *மொழிமனார்* (<மொழி-ம் + அன் + ஆர்) ஆகிய வினைகளுக்கும் இந்த ஆய்வு பொருந்தும். *என்ம்-, மொழிம்-* ஆகியவை முறையே **எனும், *மொழியும்* என்ற *செயும்* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகும். ஆயினும் *செய்ம்மன, என்மனார், மொழிமனார்* என்பவற்றில் நிகழும் *செய்ம்-, என்ம்-, மொழிம்-* ஆகியவை முற்று வினைகள் என்ற நிலை மாறி காலப் பகுதிகளாக (Tense Bases) நிகழும் நிலை ஏற்பட்டுவிட்டது. இங்கே இன்னொரு செய்தியையும் குறிப்பிட்டாக வேண்டும். *செய்ம்மன* என்ற ஆட்சி தொல்காப்பிய நூற்பாவில் காணப்பட்டாலும் வரலாற்று நிலையில் அது *செய்மன* என்றே கொள்ளத்தக்கதாகும். *செய்ம்மின், செய்ம்மதி* ஆகிய வடிவங்களும் வரலாற்று நிலையில் *செய்மின், செய்மதி* என்றே குறிக்கத்தக்கனவாகும்.

❀ ❀ ❀

# 5. முற்றுவினைப்பகுதிகளாகச் செயும் வினைகள்

5.1 *செயும்* வாய்ப்பாட்டுப் பொதுவினைமுற்றுக்கள் சிறப்பு வினைகளில் காலப்பகுதிகளாகவும் நிகழவல்லவை என்பது முன்னதாகத் தெளிவுபடுத்தப்பட்டது. இவை *செய்து, செய்கு, செய்பு* வாய்பாட்டு இறவாக்கால வினைகளைப் போல் முற்றுவினைப் பகுதிகளாகவும் நிகழ்வதற்கான வாய்ப்பு பற்றி *மறவு, திறவு, நடவு, சினவு* முதலான வினைப் பகுதிகளின் அடிப்படையில் 3.3.12-இல் பேசப்பட்டுள்ளது. தெலுங்கில் நிகழும் *கனியு* என்னும் வினைப் பகுதி *கனியும்* என்ற *செயும்* வாய்பாட்டுவினையுடன் தொடர்புடையதாகக் கருதத்தக்கதாகும். இதன் தோற்றத்தை இப்படி விளக்கலாம்: **கனியும் > கனியுன் > கனியு*. இதன் அடிப்படையில் *புலியு (<புலியுன்)* 'புளி (த்தல்)', *நலியு (<நலியுன்)* 'நலி(தல்)/நசுங்கு', *தெலியு (<தெலியுன்)* 'தெரி(தல்)', *வடியு (<வடியுன்)* 'வடி(தல்)' முதலான முற்றுவினைப் பகுதிகள் *செயும்* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவையாகக் கருதப்படும். *கதுமு* (> கதுவு - தமிழ்), *மெருமு* 'மின்னு (தல்)', *தோமு* 'துலக்கு', *நேமு* 'நேம்பு' முதலான தெலுங்கு வினைப்பகுதிகளைச் *செயும்* வாய்பாட்டுப் பொது வினைகளோடு தொடர்புபடுத்த முடியுமா என்பது ஆய்வுக்குரியதாகும். தமிழில் நிகழும் *இருமு, பொருமு* ஆகியவற்றையும் இந்த ஆய்வுக்கு உட்படுத்த வாய்ப்புள்ளது.

5.2. *செயும்* வாய்பாட்டுப் பொதுவினைகள் வினைப் பகுதிகளாக நிகழ்வதற்கான வெளிப்படையான, தெளிவான சான்றுகள் தமிழில் காணப்படவில்லை. ஆயினும் மொழியிறுதி மகரம் வகரமாகத் திரியும் போக்கினையும் *செய்யாமை* வாய்பாட்டு எதிர்மறை வினைகளுக்கு எதிரான உடன்பாட்டு வினைகளையும் கருத்தில் கொண்டு இந்த முயற்சியை - அதாவது *செயும்* வாய்பாட்டு வினைகள் முற்று வினைப் பகுதிகளாக நிகழ்வதைக் கண்டறியும் முயற்சியை - இங்கே மேற்கொள்ளலாம். மொழியிறுதி மகரமானது அரை மாத்திரையில் குறுகி வகரமாகத் திரியும் போக்கினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

1 (1) புலம் + அன் > *புலமன் > புலவன்

(2) அறம் + ஐ > *அறமை > அறவை (புறம். 44.11)

(3) மறம் + அர் > *மறமர் > மறவர்

(4) புனம் + அன் > *புனமன் > புனவன் (குறு. 105.1)

(5) முடம் + அன் > *முடமன் > முடவன்

(6) மடம் + அன் > *மடமன் > மடவன் (புறம். 140.2)

(7) *உழம் + அன் > *உழமன் > உழவன்

(8) *கிழம் + அன் > *கிழமன் > கிழவன்

(9) *கயம் + அர் > *கயமர் > கயவர்

(10) *ஒரும் + அன் > *ஒருமன் > ஒருவன்

(11) *இளம் + அல் > *இளமல் > இளவல்

*புலமை, மடமை, கிழமை, ஒருமை, இளமை, களமர்* ஆகியவற்றில் மகரம் குறுகி வகரமாகத் திரியாமைக்குச் சார்பியல் வரலாற்றை (Relative Chronology) இப்போதைக்கு ஒரு காரணமாகக் கருதலாம். *மறத்தி* (< மறம்+தி), *உழத்தி* (< உழம்+தி), *முடத்தி* (< முடம்+தி), *ஒருத்தி* (< ஒரும்+தி), *கிழத்தி* (< கிழம்+தி) ஆகியவற்றில் தகரத்தின்முன் மகரம் குறுகாமல் நகரமாகத் திரிந்து பின்னர் இனவல்லொற்றாகத் திரிகிறது. மேலே நிகழ்த்திய மகரக் குறுக்க ஆய்வின் அடிப்படையில் *வந்தவன், நல்லவன்* ஆகிய வினையாலணையும் பெயர்களை முறையே **வந்தம் + அன் > வந்தவன், *நல்லம் + அன் > நல்லவன்* என ஆராயலாம். **செய்தம்* வாய்பாட்டு வினைகள் *செய்தக்கால், செய்தப்பொ* (பேச்சு வழக்கு) ஆகிய தொடர்களில் நிலைமொழியாக நிகழ்வனவாகும். இவற்றில் நிகழும் வல்லொற்று மிகுதியானது குறுகாத மகரத்தினை அடிநிலை உருபொலியனாகக் (Morphophoneme) கொண்டதாகும். குறுகிய மகரம் வகரமாகத் திரிதலைத் தொன் மொழியின் நிகழ்வாகக் கருத முடியுமா என்பது ஆய்வுக்குரிய தாகும். கருதுக; *நேம்பு* (தமிழ்), *நேம்புக/நாவுக* (மலயாளம்), *நேமு* (தெலுங்கு); *நாம்* (த), *நாவு* (< *நாமு) (கன்னடம்); *பாம்பு* (த), *பாமு* (தெ), *பாவு/ஹாவு* (கன்.); *நீம்* (த), *நீம்/நீவு* (கன்.), **வறும்-உ* (த), *வறுவு* (தெலு) 'வற்றல்'. இதனைக் கருத்தில் கொண்டு தமிழில் நிகழும் *திலுவை, கலவை, அளவை, பார்வை (< ? பாருவை). மிதவை, கறவை, பறவை* முதலானவற்றின் முந்தய வடிவங்களை **திலுமை, *கலமை, *அளமை, *பார்மை (< *பாருமை), *மிதமை, *கறமை, *பறமை* என இனங்காண முடியும். இத்தகைய

மீட்டுருவாக்கங்களைக் கன்னட வழக்குகள் உறுதிப்படுத்துகின்றன. எ-டு ba:lume/ba:luve 'வாழ்வு' (<*va:ḷumay) (A.S. Acharya 1967:46); *உளு (=உழு), உள்மெ (<*உழுமய்)* (U.P. Upadhyaya 1968:66); 'உழவு'; *கேயு* (ge:yu) 'உழை (த்தல்)', *ge:me* (<*keyumay) (மேற்படி) 'உழைப்பு', *கெல்லு* (gellu), *கெல்மே* (gelme), *(<* கெலிமய்)* (மேற்படி) 'கெலிப்பு'; *தாழ்மெ, தாவிமி* (R. Narasimhacharya 1969:143) *சோல்மெ/சோலுவெ* 'தோல்வி'. *கல்வி, கேள்வி, தோல்வி, வேள்வி* முதலானவற்றில் நிகழும் வகரத்தையும் குறுகிய மகரத்தின் திரிபாகவே கருதலாம். இவற்றில் நிகழும் ஈற்று இகரத்தை *-அய்* என்பதன் திரிபாகக் கொள்ள வாய்ப்பு உள்ளது. *நிலைமை* (= நிலய்மய்), *பொறுமை* (= பொறுமய்), *தாழ்மை* (= தாழ்மய்) ஆகியவையும், கன்னட எடுத்துக்காட்டுக்களும் இத்தகைய முடிவுக்குத் துணை புரிவனவாய் உள்ளன.

5.3 *செயாமை* (= செய்யாமை) வாய்பாட்டு எதிர்மறை வினைகள் குறிப்பு வினைகளாகும். அமைப்பியல் நிலையில் இவற்றைச் *செய்தமை* வாய்பாட்டு வினைகளுக்கு எதிராக அமைந்த வினைகளாகக் கருத முடியாது. *செய்தி* வாய்பாட்டு உடன்பாட்டு ஏவல் (ஒருமை) வினைகளுக்கு எதிரான வினைகள் *செய்யாதி* வாய்பாட்டினவாக அமைதல் போன்று, செய்தமை வினைகளுக்கு எதிரான வினைகள் *செய்யாதமை* வாய்பாட்டினவாக அமைவதே ஏற்புடையதாகும். ஆகவே *செய்யாமை* வாய்பாட்டு வினைகளுக்கு எதிரான உடன்பாட்டு வினைகளாகச் *செய்தமை* வாய்பாட்டு வினைகளைக் கொள்ள முடியாது. இதனின்றும் *செய்யாமை* வாய்பாட்டு வினைகளின் நேரிதான உடன்பாட்டு வினைகளைப் பொறுத்த வரையில் தமிழில் ஓர் அமைப்பியல் இடைவெளி (Structural Gap) இருப்பதகாகத் தோன்றுகிறது. *பொறுமை, நிலைமை, தாழ்மை* ஆகிய வினைகளுக்கு நேரான எதிர்மறை வடிவங்களாக முறையே *பொறாமை, நிலையாமை, தாழாமை* ஆகியவற்றை இனங்காண முடியும். இதனைக் கருத்தில் கொண்டு செய்யாமை வாய்பாட்டு வினைகளுக்கு நேரான உடன்பாட்டு வினைகளாகச் **செயுமை* (< செயும் + ஐ) வாய்பாட்டு வினைகளைக் குறிப்பிட முடியும். இதன்மூலம் மேலே குறிப்பிட்ட அமைப்பியல் இடைவெளியைத் தவிர்க்க முடியும். ஆனால் *செயுமை* (> செய்மை) வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி தமிழில் மிகமிக அரிதாகவே காணப் படுகிறது. இதற்குக் காரணம் *செயுமை/செய்மை* வாய்பாட்டு

வினைகளில் நிகழும் மகரம் குறுகி வகரமாகத் திரிந்ததாகல் வேண்டும். இதனைக் கருத்தில் கொண்டே *கலவை, நிலுவை, பார்வை* முதலானவற்றையும் *கல்வி, கேள்வி, தோல்வி, வேள்வி* முதலானவற்றையும் *செய்மை* (< செயுமை) வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொள்வதற்கான வாய்ப்பு பற்றி முன்னதாகச் சிந்திக்கப்பட்டது. ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டு வினைவடிவங்கள் மொழியில் இடம்பெறவில்லை யென்றால் அந்த வாய்பாட்டு வினைகள் திரிந்து வழங்குவதற்கான வாய்ப்பை முற்றிலுமாகப் புறக்கணித்துவிட முடியாது. இதன் அடிப்படையில் *கரவு, திறவு, சினவு, மறவு, பரவு* முதலானவற்றின் அடிநிலை வடிவங்கள் *செயும்* வாய்பாட்டினவாக முன்னர்த் துணியப்பட்டன. *வரவு, செலவு, தரவு, குலவு, குவவு, விரவு, துழவு* முதலான வற்றையும் இவ்வாறே கருதலாம். தமிழில் நிகழும் செய்வு வாய்பாட்டு வினைகள் நுண்ணாய்வுக்கு உட்படுகையில் இந்த வாய்பாட்டு வினைகளின் தோற்றத்துக்குச் *செயும்* வாய்பாட்டு வினைகளின் பங்களிப்பு என்ன என்பது தெளிவாகும்.

5.4 இடைப்பிறவரலாக இங்கே ஒரு செய்தியைக் குறிப்பிட்டாக வேண்டும். *செய்மின்* வாய்பாட்டுப் பன்மை/உயர் வொருமை ஏவல்வினைகளைப் பொறுத்தவரையில் வல்வினை - மெல்வினை பாகுபாடு இல்லை. *அளிமின், குறைமின், தேய்மின்* ஆகியவை எடுத்துக்காட்டாக **அளிக்குமின், *குறைக்குமின், *தேய்க்குமின்* என்று தமிழில் நிகழ்வதில்லை. ஆனால் மலயாளத்தில் இந்தப் பாகுபாடு காணப்படுகிறது. எ-டு. *வருவின்/ வரின்; குடிக்குவின்/குடிக்கின்/குடிப்பின்.* *வருவின் குடிக்குவின்* ஆகிய ஏவல்வினைகள் *வருவு* (< *வருகு) + *இன், குடிக்குவு* + *இன்* என்ற அமைப்பினவாகும். செய்கு வாய்பாட்டு மெல்வினைப் பகுதிகளின் ஈற்றில் நிகழும் குற்றுகரம் ஊர்ந்த ககர உரசொலி (குமரித் தமிழில் உள்ளது போல்) வகரமாகத் திரிய, அதனையடுத்து *இன்* இடம்பெறுகிறது. எ-டு. *வருகு > வருவு/ -இன்.* *வரூ* என்னும் ஏவல் வினை *வருவு* என்பதன் திரிபாகும். எ-டு. *(வருகு >) வருவு > வருOஉ > வரூஉ > வரூ.* ககர உரசொலியின் திரிபாகிய வகரஉகரம் ஒப்புமையாக்கத்தின் தாக்கத்தால் *குடிக்கு* என்ற வல்வினை சார்ந்த வினைப்பகுதியை அடுத்தும் நிகழத் தொடங்கிய நிலையில் *குடிக்குவின்* போன்ற ஏவல்வினைகள் தோன்றி நிகழலாயின *குடிக்கூ* என்ற ஏவல் வினை *குடிக்குவு* என்பதன் திரிபாகும். காண், தின் போன்ற மெல்லீற்று வினை களின் மீதமைந்த செய்மின் வாய்பாட்டு வினைகள் மலயாளத்தில்

காணப்பட்டாலும் அவை அந்த மொழிக்கு உரியவையல்ல. எனவே *வருவின், குடிக்குவின்* போன்ற மலயாள ஏவல் வினைகளைச் செய்மின் வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கருத வாய்ப்பில்லை. இந்த ஆய்வு முந்தைய ஆய்வுகளினின்றும் திரிபாகக் கருத வாய்ப்பில்லை. இந்த ஆய்வு முந்தைய ஆய்வுகளினின்றும் (Robert Caldwell 1961: 532. 533; Ramaswamy Aiyar, L.V. 1936: 89. 90; Subrahmanyam, P.S. 1971: 460) மாறுபட்டதாகும்.

5.5. வினையடிகளைத் தமிழில் *செய்தல்* வாய்பாட்டு வடிவிலும், மலையாளத்தில் *செயுக* (=செய்யுக) வாய்பாட்டு வடிவிலும் குறிப்பிடுவது மரபு. எ-டு. *எரி:* தமிழ் - *எரிதல்;* மலையாளம் - *எரியுக.* துளுவில் வினையடிகள் *ஆடு, பாடு, தின், மேய், தோல்* (-தோற்றல்) ஆகிய வினைகள் எடுத்துக்காட்டாக *ஆடுனி, பாடுனி, தின்ப்உனி, மேப்உனி, சோலுனி* எனக் குறிக்கப் படுதல் மரபு. இந்த வினைகளைச் *செய்யுனி* வாய்பாட்டினவாகக் கொண்டு இவற்றைச் **செயுமு* வாய்பாட்டு வினைகளின் திரிபாகக் கொள்ளலாம். மொழியிறுதி மகரம் தமிழிலும் தெலுங்கிலும் னகரமாகத் திரியும் நிலை பற்றி முன்பே பேசப்பட்டுள்ளது. எ-டு. *மரம் > மரன்* (தமிழ்), *ம்ரானு* (தெலுங்கு); *பாடும்* (தமிழ்) > *பாடுனு* (தெலுங்கு). இந்த திரிபைத் தொன்மொழி நிகழ்வாகக் கருதலாம். இதன் எச்சம் துளுவில் *செயுனி* வாய்பாட்டு வடிவங்களில் காணப்படுகிறது. இதனைக் கருத்தில் கொண்டு தான் *செயுனி* வாய்பாட்டுத் துளு வடிவங்களைச் **செயுமி* வாய்பாட்டினவாக மீட்டுருவாக்கம் செய்யலாம் என்ற கருதுகோள் முன்மொழியப்படுகிறது. **செயுமி* வாய்பாட்டு வடிவங்களைச் **செயும்-ஐ* வாய்பாட்டு வடிவங்களின்வழித் தோன்றல்களாகக் கொள்வதற்கான வாய்ப்பு ஆய்வுக்குரியதாகும்.

5.6 பழந்தமிழில் *அறியுமோன்* (புறம். 137.4), *கொய்யுமோன்* (புறம். 252.3) முதலான *செய்யுமோன்* வாய்பாட்டு வினைகளின் நிகழ்வு பற்றி ஏற்கெனவே பேசப்பட்டுள்ளது. *செய்தான், செய்தோன்* ஆகிய வாய்பாட்டு வினைகள் *செய்தவன்* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைவதுபோல் *செய்யுமோன்* வாய்பாட்டு வினைகள் **செய்யுமவன்* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைப் பிறப்பிடமாகக் கொண்டவையாகும். **செய்யுமவன்* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைப் பழந்தமிழில் காண முடியவில்லை. ஆயினும் *செய்யுமவன், செய்யுமவர், செய்யுமது* முதலான வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியை இடைக்காலத் தமிழில் குறிப்பாக உரையாசிரியர்கள்

தமிழில் பரவலாகக் காண முடிகிறது. *தழுவுமவன்* (கலி. 104. நச். உரை), *கிடக்குமவன்* (மேற்படி), *சொல்லுமவர்* (கலி. 13. நச். உரை) *காணுமது* (திருவா. எண்ணப் பதிகம் 5), *பேணுமது* (மேற்படி). பழந்தமிழில் நிகழும் பலர்பால் இறவாக்கால வினைகளாகிய *செய்மார்* வாய்பாட்டு வினைகளின் அடி நிலை வடிவங்களையும் *செயுமவர்* வாய்பாட்டினைவாகக் கொள்வதற்கான வாய்ப்பினைப் புறக்கணித்துவிட முடியாது. இங்கே குறிப்பிட்ட அனைத்து வினைகளும் *செயும்* வாய்பாட்டு வினைகளைக் காலப்பகுதியாகக் கொண்டவையாகும். இரண்டு வினாக்களை இங்கே கருத வேண்டியுள்ளது. ஒன்று: பழந்தமிழ் வடிவங்களின் திரிபாக *உண்ணுமர், உண்மர்* (< *உணுமர்), *தின்மர்* (< *தினுமர்) ஆகியவற்றின் திரிபாக *உண்ணுவர்* (<* உண்ணுமர்), *தின்னுவர்* (< *தின்னுமர்) ஆகியவற்றைக் கொள்ள முடியுமா? இரண்டு: *பேசுவோர், வருவோர், பாடுவோர்* ஆகியவற்றை முறையே **பேசுமோர், *வருமோர், *பாடுமோர்* என்பவற்றின் திரிபாகக் கருத முடியுமா? *பேசுவார், பேசுவோர்* ஆகியவற்றைப் *பேசுபவர்* என்ற அடிநிலை வினையின் திரிபுகளாகக் கொள்வதற்கான வாய்ப்பு உண்டா என்ற இன்னொரு வினாவும் இங்கு எழுகிறது. பழங்கன்னடத்தில் பின்வரும் வினையமைப்புகள் காணப்படு கின்றன (R. Narasimhacharya 1969:145).

(2) barpan 'வருவான்' barpavan 'வருபவன்'
barpaL 'வருவாள்' barpavaL 'வருபவள்'
barpar 'வருவார்' barpavar 'வருபவர்'
barpudu 'வருவது' barpuvu 'வருபவை'

இந்த எடுத்துக்காட்டுக்களைக் கருதுகையில் *வருவன், வருவள், வருவர்* ஆகியவற்றை **வருமன், *வருமள், *வருமர்* ஆகியவற்றின் திரிபாகக் கருத வாய்ப்பில்லை. ஆயினும் கன்னடக் கிளை மொழிகளில் நிலைமை வேறாக இருக்கிறது. மைசூர் வழக்கில் காணப்படும் *குடியோது* (< *குடியுவது) 'குடிப்பது', *தின்னோது* (<*தின்னுவது), *கலியோனு* (< *கலியுவனு) 'கற்பவன்' .bariyo:nu (<*bariyuvanu) 'எழுதுபவன்', *குடியோ* (< *குடியுவ) 'குடிக்கும்', bariyo: (<*bariyuva) 'எழுதும்' (இரண்டும் பெயரெச்சங்கள்) ஆகியவை **குடியுமது, *தின்னுமது, *கலியுமது*, *bariyumanu, **குடியும*, *bariyuma ஆகியவற்றின் திரிபாகவே கொள்ளத் தோன்றுகின்றன. *குடி* என்பது தமிழில் வல்வினை சார்ந்ததாயினும் *குடிமின், குடிமார்* ஆகிய வினைகளில் இந்த நிலை போற்றப்படவில்லை.

*குடியோது, குடியோனு, குடியோ* ஆகிய கன்னட வினைகள் *குடியும் என்ற வினையின் மீது தோன்றியமைந்தனவாகும். இதனைக் கருத்தில் கொண்டு *வருவர், அறிவர், பேசுவர், வாழ்வர்* ஆகியவற்றை முறையே **வருமர், *அறிமர், *பேசுமர், *வாழ்மர்* என்பவற்றின் திரிபுகளாகக் கொள்ள வாய்ப்புள்ளது. ஆனால் *பேசுவார், பேசுவோர்* ஆகியவை **பேசுமவர்* என்ற அடிநிலை வினையின் திரிபுகளாக அமைய வாய்ப்பில்லை. ஆயினும் *மறைவு, எரிவு, சினவு* முதலானவற்றைச் *செயும்* வாய்பாட்டு வினைகளின் திரிபாகவே துணியலாம். பழந்தமிழில் நிகழும் *புகுவனர்* (ஐங். 432.3), *வருவனள்* (நற். 339.6), *நினைவனள்* (கலி. 44.18), *பிழிவனம்* (பத்துப். 8.60), *படிவன* (பத்துப். 7.10) முதலான வினைகள் *செயும்* வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றி யமைந்தனவாகக் கொள்ளலாம். *செயும்/செய்ம்* வாய்பாட்டு வினைகள் தொடர்பான ஆய்வும், *செய்வு* வாய்பாட்டு வினைகள் தொடர்பான ஆய்வும் விரிவாகவும் அழுத்தமாகவும் மேற் கொள்ளப்பட வேண்டியவையாகும். இங்கே இது தொடர்பாகக் கூறப்பட்டுள்ள செய்திகள் இத்தகைய ஆய்வுக்கு அடித்தளமாக அமையலாம்.

❀ ❀ ❀

# 6. இறந்தகால முற்றுவினைப் பகுதிகள்

*6.1* செய்து (< செயுது), செய்கு (< செயுகு), செய்பு (< செயுபு) ஆகிய இறவாக்காலப் பொதுவினை முற்றுக்கள் பற்றியும், அவை முற்றுவினைப் பகுதிகளாக நிகழும் போக்கினைப் பற்றியும் மூன்றாம் கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டது. இந்த ஆய்வுக்கு உட்படாத *பேசு, ஏசு, வீசு, பூசு* முதலான முற்றுவினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களைக் கண்டறிய வேண்டியுள்ளது. அதற்கு முன்பாகத் தெலுங்கு, கன்னட நிலையையும் நாம் கருத்தில் கொண்டாக வேண்டும். பின்வரும் தெலுங்கு, கன்னட வினைப் பகுதிகளைக் கருத்தில் கொள்க.

| தெலுங்கு | கன்னடம் | |
|---|---|---|
| 1(அ) ஆர்ச்உ | (ஆ) ஆடிசு 'ஆட்டு' | (DED 290) |
| 2(அ) கூருச்உ/கூர்ச்உ | (ஆ) கூடிசு 'கூட்டு' | (DED 1562) |
| 3(அ) ஆருச்உ/ஆர்ச்உ | (ஆ) ஆர்ச்உ 'ஆர்த்தல்' | (DED 312) |
| 4(அ) ஆறுச்உ/ஆருச்உ/ஆர்ச்உ | (ஆ) ஆறிசு 'ஆற்று' | (DED 346) |
| 5(அ) சேருச்உ/சேர்ச்உ | (ஆ) சேரிசு 'சேர்த்தல்' | (DED 2312) |
| 6(அ) தீறுச்உ (=தீருச்உ) | (ஆ) தீரிசு 'தீர்த்தல்' | (DED 2683) |
| 7(அ) மாறுச்உ/மார்ச்உ | (ஆ) மாறிசு 'மாற்று' | (DED 3960) |
| 8(அ) வாருச்உ/வார்ச்உ | (ஆ) -- 'வார்த்தல்' | (DED 4387) |
| 9(அ) வாடுச்உ/வாட்ச்உ | (ஆ) பாடிசு(ba:Disu) 'வாட்டு' | (DED 4377) |
| 10(அ) அலர்ச்உ | (ஆ) அலரிசு/அலர்ச்உ'அலர்த்து' | (DED 209) |
| 11(அ) தூறுஉச்உ/தூர்ச்உ | (ஆ) தூறிசு 'நுழைத்தல்' | (DED 2795a) |
| 12(அ) தேறுச்உ/தேர்ச்உ | (ஆ) -- 'தேற்று' | (DED 2856) |
| 13(அ) காலுச்உ/கால்ச்உ | (ஆ) -- 'சுடுதல், எரித்தல்' | (DED 1259) |
| 14(அ) சீளுச்உ/சீலுச்உ | (ஆ) -- 'பிளத்தல்' | (DED 1351) |
| 15(அ) எதுருச்உ | (ஆ) எதிரிசு/எதுருசு'எதிர்த்தல்' | (DED 680) |
| 16(அ) ஓர்ச்உ | (ஆ) ஓடிசு 'ஓட்டு,தோற்கு'(தெ) | (DED 877) |
| 17(அ) ... | (ஆ) மேயிசு 'மேய்த்தல்' | (DED 4179) |
| 18(அ) காஞ்ச்உ/காச்உ | (ஆ) காயிசு 'காய்ச்சு' | (DED 1219) |

*19(அ) ....* *(ஆ) உதிரிசு, உதிர்ச்உ 'உதிர்த்தல்'* (DED 526)

*20(அ) அமருச்உ/அமர்ச்உ* *(ஆ) அமரிசு/அமர்ச்உ 'அமர்த்து'* (DED 1934b)

மேலே குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்களில் கன்னட வினைகளில் உகரம் ஊர்ந்த ஈற்று மெய்யானது உரசொலியாகும். எடுத்துக்காட்டாக, *ஆடிசு* 'ஆட்டு' என்பது *ஆடிஸு* என்ற ஒலிப்பினதாகும். தெலுங்கில் மேற்படி உரசொலி வல்லுரசொலியாக (Affricate) நிகழ்கிறது. கன்னடத்தில் ஈற்றயலசை இகரம் தெலுங்கில் உகரமாக நிகழ்கின்றது. ஆயினும் பின்வரும் தெலுங்கு வினைகளில் ஞகர மெல்லொற்றின் (அகரமுதலிகளில் இது னகரமாகக் குறிக்கப்படுகிறது) முன் இகரத்தின் நிகழ்ச்சி காணப்படுகிறது. மெல்லொற்று கெடும் நிலையில் இகரம் உயிரொலி இயைபின் காரணமாக உகரமாகத் திரிகிறது.

*2 (1) அகலிஞ்ச்உ, அகுலுச்உ 'அகைத்தல்'* (DED 17)
*(2) அமரிஞ்ச்உ, அமருச்உ/அமர்ச்உ 'அமர்த்து'* (DED 1934a)
*(3) அலியிஞ்ச்உ 'அலைத்தல்' (?)* (DED 200)
*(4) ஊறிஞ்ச்உ 'வாயில் நீர் ஊறச் செய்தல்'* (DED 648)
*(5) எதிரிஞ்ச்உ/எதுருச்உ 'எதிர்த்தல்'* (DED 680)
*(6) எனயிஞ்ச்உ 'இணைத்தல்'* (DED 387)
*(7) எரியிஞ்ச்உ 'எரித்தல்'* (DED 694)
*(8) ஓடிஞ்ச்உ 'தோற்பி'* (DED 870)
*(9) ஆடிஞ்ச்உ 'ஆட்டு'* (DED 290)
*(10) மாயிஞ்ச்உ 'அழித்தல், மாய்த்தல்'* (DED 3946)

இந்த எடுத்துக்காட்டுக்களிலிருந்து ஓர் உண்மை புலனாகின்றது. மேலே *(1)* மற்றும் *(2)*-இல் குறிக்கப் பெற்றுள்ள தெலுங்கு, கன்னட வினைகள் ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றி நிகழ்கின்றன என்பதே அந்த உண்மை. அந்த வாய்பாட்டு அடிநிலை வடிவம் **செயுந்த்உ* அமைப்பினதாக இருக்க வாய்ப்பில்லை. ஏனெனில் இது இறவாக்கால வினையாகக் கொள்ளத்தக்கதாகும். *அமரிஞ்ச்உ* என்பதில் உள்ள இகரத்தை இந்த இறவாக்கால அடிநிலை வடிவத்தைக் கொண்டு விளக்கமுடியாது. எனவே மேலே குறிக்கப் பெற்றுள்ள தெலுங்கு, கன்னட வினைகளை இறந்தகாலத் தன்மையதாகிய அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியனவாகக் கொள்வதற்கான வாய்ப்பைப் பற்றி இனிச் சிந்திக்கலாம்.

6.2 தமிழில் ஆடின்று/ஆடிற்று ஆகிய வாய்பாட்டு வினைகள் இறந்தகால ஒன்றன்பால் குறிப்பினவாக நிகழ்கின்றன. ஆயினும் இந்த வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுக்களாகவும் நிகழும் போக்கினைத் தமிழில் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

*3 (1) யாத னுருபிற் கூறிற் றாயினும்*
*பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்*
*(தொல். சொல். சேனா. 106)*

*(2) உலகில் அன்பர் கருதிற்று உதவு சேவடி (கம்பரா. 2560)*

*2 (1) சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன் (நற். 147.9)*

*(2) நீர்யாரெனக் கேட்பப் பெயரும் சொல்லிற்றிலன்*
*நும்முடைய நாடு எந்நாடோ வென்று கேட்ப நாடும்*
*சொல்லிற்றிலன் (புறம். 150 உரை, உ.வே.சா. பதிப்பு)*

*4 (1) கூறின்றும் உடையரோ (நற். 294.7)*

*(2) கேட்டன்றோ இலமே (நற். 239.9)*

*(3) புலவி, உட்கொண்டு ஊடின்றும் இலையே (நற். 237.4, 5)*

ஆடிற்று வாய்பாட்டு ஒன்றன்பால் இறந்தகால வினைகள் பார்ப்பன வழக்கில் *ஆடித்து* வாய்பாட்டினவாகவும் பொதுப் பேச்சு வழக்கில் *ஆடிச்சு/ஆடிச்சி* வாய்பாட்டினவாகவும் திரிந்து வழங்குகின்றன. *ஆடின்று, ஆடிற்று* வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களின் அடிநிலை வடிவம் **ஆடின்ற்உ* எனக் குறிக்கத்தக்க தாகும். இந்த அடிநிலை வடிவம் தமிழில் *ஆடின்று* எனவும், *ஆடிற்று* எனவும் திரிந்தமைகின்றது. *ஆறு, ஊறு* ஆகிய வினைகள் துளு மொழியில் *ஆஜு, ஊஜு* எனத் திரிந்தமைகின்றன. பேச்சுத் தமிழில் *ஆடிற்று* என்பது *ஆடிச்சு* எனத் திரிகிறது. இதனின்றும் **ஆடின்ற்உ* என்ற தொன்மொழிப் பொதுவினையானது **ஆடிஞ்ச்உ* எனத் திரிந்து முற்றுவினைத் தகுதியை இழந்து தெலுங்கில் முற்றுவினைப்பகுதியாக நிகழ்வதாகக் கருதலாம். இவ்வாறு நிகழ்கையில் *ஆடிஞ்ச்உ* என்பது தெலுங்கில் பிற வினைத் தன்மையதாகிறது. **ஆடிஞ்ச்உ* என்பது மெல்லொற்றை இழந்து **ஆடிச்உ* என அமைந்து கன்னடத்தில் *ஆடிசு* (a:Disu) என்ற பிறவினைத் தன்மையதாகிய முற்றுவினைப்பகுதியாக நிகழ்கிறது. மெல்லொற்று வீழ்ந்துபடுகையில் தெலுங்கில் உயிரொலி இயைபின் காரணமாக இகரம் உகரமாகத் திரிகிறது. *ஆறுச்உ*, 'ஆற்று', *சேருச்உ* 'சேர்த்தல்', *வாருச்உ* 'வார்த்தல்' ஆகிய

முற்றுவினைப்பகுதிகள் இவ்வாறு தோன்றியவையே. இத்தகைய முற்றுவினைப்பகுதிகள் உகரத்தை இழத்தலும் தெலுங்கில் இயல்பான நிகழ்ச்சியாகக் காணப்படுகிறது. எ-டு. *ஆருச்உ/ஆர்ச்உ* 'ஆர்த்தல்', *மாறுச்உ/மார்ச்உ* 'மாற்று'. **ஆடிஞ்ச்உ* வாய்பாட்டு வினைகள் தெலுங்கில் ஞகரத்தை இழக்காமல் பிறவினைத் தன்மையோடு கூடிய முற்றுவினைப் பகுதிகளாக நிகழும் நிலையும் இயல்பாகக் காணப்படுகிறது. எ-டு. *பூடிஞ்ச்உ/பூடுச்சுஉ, பூட்ச்உ* 'புதைத்தல்', *எதிரிஞ்ச்உ/எதுருச்உ* 'எதிர்த்தல்'. கன்னடத்தில் நிகழும் *-இசு* ஈற்று முற்றுவினைப்பகுதிகள் *ஆடிஞ்ச்உ* வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-இஞ்ச்உ* (< *-இன்ற்உ) ஈற்று வினைகளின் திரிபுகளாகும். இந்த ஆய்வினின்றும் தெலுங்கு வினைப் பகுதிகளில் நிகழும் *-இஞ்ச்உ*, கன்னட வினைப்பகுதிகளில் நிகழும் *-இசு* (-isu) ஆகிய ஈறுகளின் அடிநிலை வடிவம் **-இன்ற்உ* என்பது கண்டறியப்பட்டுள்ளது.

6.3 தெலுங்கில் *-இஞ்ச்உ* என்பதும் கன்னடத்தில் *-இசு* (-இஸு) என்பதும் பிறவினைகளில் நிகழ்வதால் வண்ணனை ஆய்வில் இவை பிறவினை விகுதிகளாகக் கருதப்படுகின்றன. இதேபோல் தமிழிலும் *ஆட்டு, ஓட்டு, கூட்டு, வாட்டு, காட்டு, ஊட்டு, பூட்டு, ஆற்று, தேற்று, மாற்று, ஏற்று, தூற்று* முதலான பிற வினைக் கிளவிகளில் துகரக் கிளவி பிறவினை விகுதியாக வண்ணனை ஆய்வில் இனங்காணப்படுகிறது. ஆனால் *பாட்டு, ஊற்று, காற்று* ஆகியவற்றை இவ்வாறு ஆராய்வதற்கு வாய்ப்பு உள்ளதாகத் தோன்றவில்லை. எனவே *ஆட்டு, மாற்று, பாட்டு* முதலானவை ஒரு குறிப்பிட்ட பொதுவினைத்தன்மையதாகிய வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றி நிகழ்வனவாகக் கொள்ள வேண்டும். *ஆடிஞ்ச்உ* (தெ.), *ஆடிசு* (கன்) ஆகியவற்றின் அடிநிலை வடிவம் **ஆடின்ற்உ* எனக் கொள்ளப்பட்டது. தமிழில் நிகழும் *ஆட்டு, மாற்று, பாட்டு* ஆகியவற்றை இத்தகைய அடிநிலை வடிவத்திலிருந்து பெறுவதற் கான வாய்ப்பு இருப்பதாகத் தோன்றவில்லை. **ஆடின்ற்உ* என்பது *ஆடிஞ்ச்உ, ஆடிசு* ஆகியவற்றைப் பொறுத்தவரை ஏற்புடைய அடிநிலை வடிவம் என்பதில் ஐயமில்லை. இந்த அடிநிலை வடிவம் **ஆடின்-த்உ* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் தோன்றி யமைந்ததாகும். *ஆட்டு, மாற்று, பாட்டு* ஆகியவற்றை **ஆடின்-த்உ* என்ற அடிநிலை வடிவத்தின் வழித்தோன்றல்களாகக் கருத வாய்ப்புள்ளதாயின் பின்வரும் ஆய்வானது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

5 (1) *ஆடின்-து > ஆடிந்த்உ (ன் > ந்/-த்)
(2) *ஆடிந்த்உ > ஆடித்த்உ (ந் > த்/-த்)
(3) *ஆடித்து > ஆடுத்த்உ (இ > உ/-த்த்உ)
(4) *ஆடுத்து > ஆட்த்த்உ (உ > 0/-த்த்உ)
(5) *ஆட்த்து > ஆட்ட்டு (த்த் > ட்ட்/ட்-)
(6) *ஆட்ட்டு > ஆட்டு (ட்ட் > ட்/-ட்)

இந்த ஆய்வில் (3)-ஆம் விதி நெருடலாக உள்ளது. இரட்டித்த வல்லொற்றின் முன் இகரம் உயிரொலி இயைபு விதிக்கு உட்படு வதற்கான வாய்ப்பு ஐயத்திற்கு இடமானது. எனவே பின்வரும் மாற்று ஆய்வையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

6 (1) *ஆடின்-த்உ > ஆடிந்த்உ
(2) *ஆடிந்த்உ > ஆடித்உ
(3) *ஆடித்உ > ஆடுத்உ
(4) *ஆடுத்உ > ஆட்த்உ
(5) *ஆட்த்உ > ஆட்டு (த் > ட்/ட்-)

*மாற்று* என்ற வினையையும் இவ்வாறே வருவிக்கலாம். கருதுக:

7 (1) *மாறின்-த்உ > மாறிந்த்உ
(2) *மாறிந்த்உ > மாறித்உ
(3) *மாறித்உ > மாறுத்உ
(4) *மாறுத்உ > மாற்த்உ
(5) *மாற்த்உ > மாற்று (த் > ற்/ற்-)

இங்கே முன்மொழியப்பட்டுள்ள மாற்று ஆய்வானது *காட்டு, ஊட்டு* ஆகியவற்றை மட்டுமல்ல *பாட்டு, தேட்டு (தேட்டம்* என்பதில் நிகழ்வது), *காற்று, கூற்று, ஊற்று* ஆகியவற்றுக்கும் பொருந்தும். இந்த ஆய்வில் குறிக்கப்பெற்றுள்ள விதிகள் அனைத்தும் தொன்மொழிக்கு உரியனவாகக் கொள்ளப்படும். எனவே வண்ணனை ஆய்வில் தமிழுக்கு வகுக்கப்படும் விதிகளினின்றும் இவை மாறுபட்டவையாகும். (6), (7)-இல் மூன்றாவது விதியைப் பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். இந்த விதியானது உயிரொலி இயைபு பற்றியதாகும். இகரம் உகரமாகத் திரிவதையடுத்து மொழியிறுதி உகரத்தோடு இந்தத் திரிபு சமநிலையை ஏற்படுத்துகிறது. இந்தச் சமநிலையே இகரமாகத் திரிந்த உகரம் கெடுவதற்கான வாய்ப்பை உருவாக்குகிறது. இந்த ஆய்வினின்றும் **ஆடின்-த்உ* என்ற அடிநிலை வடிவமும் **ஆடின்ற்உ* என்ற அடிநிலை வடிவமும் இருவேறு கிளைமொழிகளில்

தொன்மொழியில் நிகழ்ந்திருக்கக்கூடும் என்ற கருதுகோளை வகுக்கலாம். அல்லது வரலாற்று நிலையில் *ஆடின்+த்உ* என்பதை முந்தியதாகவும் **ஆடின்ற்உ* என்பதைப் பிந்தியதாகவும் கருதலாம். *ஆடின்-* என்பதை **ஆடிம்* என்பதன் திரிபாகக் கொண்டால் (5), (6), (7)-இல் முதல் விதியானது **ஆடிம்-த்உ > ஆடிந்த்உ*, **மாறிம்-த்உ > மாறிந்த்உ* என அமையும்.

6.4 தமிழில் நிகழும் *பேசு-பேச்சு, வீசு-வீச்சு, பூசு-பூச்சு, ஏசு-ஏச்சு* முதலானவற்றின் அடிநிலை வடிவங்களை **ஆடின்ற்உ* வாய்பாட்டினவாகக் கொள்ள முடியுமா? முடியும் என்றால் *பூசு-பூச்சு* ஆகியவற்றை எடுத்துக்காட்டாக இந்த அடிப்படையில் பின்வருமாறு ஆராயலாம்.

8 (1) *பூயின்ற்உ > பூயிஞ்ச்உ
(2) *பூயிஞ்ச்உ > பூயிச்சு
(3) *பூயிச்சு > பூய்ச்சு
(4) *பூய்ச்சு > பூச்சு

9 (1) *பூயின்ற்உ > பூயிஞ்ச்உ
(2) *பூயிஞ்ச்உ > பூயிச்உ
(3) *பூயிச்உ > பூயிசு (pu:yisu)
(4) *பூயிசு > பூய்சு
(5) *பூய்சு > பூசு

கன்னடத்தில் *மேயிசு* 'மேய்த்தல்' என்பது *மேசு* (me:su) என்பதனோடும், *காயிசு* 'காய்ச்சு' என்பது *காசு* (ka:su) என்பதனோடும் உறழ்கின்றன. இந்த உறழ்ச்சிக்குக் காரணமான *மேசு, காசு* ஆகிய வினையடிகளையும் (9)-இல் உள்ளவாறு வருவிக்கலாம். *மேயிசு/மேசு, காயிசு/காசு* ஆகியவை முறையே **மேயின்ற்உ*, **காயின்ற்உ* ஆகிய அடிநிலை வடிவங்களைக் கொண்டவையாகும். தமிழில் *கூச்சல், நீச்சல், எரிச்சல், அலைச்சல்* ஆகியவற்றில் நிகழும் **கூச்சு, *நீச்சு, *எரிச்சு, *அலைச்சு* ஆகியவற்றை (8)இல் உள்ளவாறு ஆராய முடியுமா என்பது சிந்திக்கத்தக்க தாகும். *பூசு-பூச்சு, வீசு-வீச்சு* முதலானவற்றைப் பொறுத்தவரை அவற்றை முறையே **பூயுந்த்உ, *வீயுந்த்உ* முதலான இறவாக்கால அடிநிலை வினையமைப்புகளிலிருந்து வருவிப்பது பற்றிய ஆய்வு 3.1.9-இல் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதேபோல் *அலசு, உரசு, கிழிசு-* (கிழிசல்), *விரிசு-* (விரிசல்), *நெரிசு-* (நெரிசல்) முதலானவையும் **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களோடு தொடர்புள்ளனவாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

எனவே ஏற்கனவே முன்மொழியப்பட்ட இவை தொடர்பான ஆய்வு மறுபரிசீலனைக்கு உரியதாகிறது. தெலுங்கில் *கனியு* 'கனிதல்', *புலியு* 'புளித்தல்' ஆகியவற்றின் மாற்றுருபுகளாக நிகழும் *கனிசு* (kanisu) *புலுசு* (< புலிசு) (pulisu) ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் தொடர்பான ஆய்வு முன்னதாக 3.1.7-இல் நிகழ்த்தப் பெற்றுள்ளது. இவற்றை இறந்தகாலப் பொது வினைகளாகக் கொள்ள முடியுமா என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

6.5 *ஆடிஞ்ச்உ* (தெ.), *ஆடிசு* (கன்.) ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களைக் கருத்தில் கொண்டு தமிழில் நிகழும் *ஆட்டு*, *மாற்று* ஆகியவற்றையும் இறந்தகாலப் பொதுவினைமுற்றுக்களி னின்றும் வருவிக்கலாம் என்ற கருதுகோளை வலுவானதாகக் கொள்வதற்கான வாய்ப்பு ஆய்வுக்குரியதாகவே தோன்றுகிறது. ஏனெனில் *ஆட்டு*, *மாற்று* ஆகிய பிற வினைகளை ஏன் *ஆடுந்த்உ, **மாறுந்த்உ* ஆகிய **செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களி லிருந்து வருவிக்க முடியாது என்பதற்கு வலுவான சான்று ஏதும் இல்லை. கருதுக:

9 (1) *ஆடுந்த்உ > ஆடுத்த்உ > ஆட்த்த்உ > ஆட்ட்ட்உ > ஆட்டு

(2) *மாறுந்த்உ > மாறுத்த்உ > மாற்த்த்உ > மாற்ற்ற்உ > மாற்று

இந்த ஆய்வைப் *பூசு/பூச்சு*, *அலசு*, *விரிசு-*, *நெரிசு-* முதலான வற்றுக்கும் விரிவுபடுத்துவதற்கான வாய்ப்பை 3.1.9 பகுதியில் காணலாம். சிறந்த ஆய்வு எது என்பது கோட்பாட்டு நிலையில் மதிப்பீடு செய்யப்பட வேண்டியதொன்றாகும்.

❀ ❀ ❀

# 7. தன்வினை-பிறவினை வியூகங்களும் எழுச்சி வினைப்பெயர்களும்

7.1 திராவிட மொழிகளில் வினையடிகளே தன்வினை - பிறவினைப் பண்புகளைக் கொண்டவையாகும். *கரை, கவை, மறை, தேய், சேர்* முதலான வினையடிகள் எடுத்துக்காட்டாகத் தன்வினையாக மட்டுமின்றி பிற வினையாகவும் நிகழவல்லன. ஆனால் முற்றுவினைப்பகுதிகள் இந்த நிலைக்கு எதிராக அமைகின்றன. *கலங்கு-கலக்கு, நட-நடத்து, ஆடு-ஆட்டு* முதலானவை இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். பொதுவினைமுற்றுக்கள் என்பவை தொன்மொழி நிகழ்வு களாகும். ஆனால் முற்றுவினைப் பகுதிகளை அவ்வாறு கருதமுடியாது. இவை தொன்மொழிக் கிளைமொழிகள் தனிமொழிகளாக இனங்காணப்பட்ட நிலையில் அவற்றில் நிகழ்வனவாகும். எடுத்துக்காட்டாகப் பொதுவினைமுற்றுக் களிலிருந்து தோன்றியமைந்த *நடத்து, கலங்கு-கலக்கு, ஆட்டு* ஆகியவை தமிழிலும் *ஆடிசு* (a:Disu) 'ஆட்டு', *மாறிசு* (ma:Risu) 'மாற்று' முதலானவை கன்னடத்திலும், *ஆடிஞ்சஉ* 'ஆட்டு', *மாறுச்உ* 'மாற்று' முதலானவை தெலுங்கிலும் முற்றுவினைப் பகுதிகளாக அமைந்து பிறவினைகளாக இனங்காணப்படு கின்றன. முற்றுவினைப் பகுதிகளின் தோற்றத்துக்கு அடிப்படைக் காரணம் என்ன? ஒரு குறிப்பிட்ட முதன்மை வினையடியானது (Primary Verbal base) தன்வினையாகவும் பிறவினையாகவும் நிகழ்கையில் வினைத் திரிபுகள் இதனைப் பிரதிபலிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, *சேர்* என்பது *சேர்ந்து, சேர்த்து* ஆகிய மாறுபட்ட வினைத்திரிபுகள் மூலம் தன்வினை-பிறவினை வேறுபாட்டினைப் புலப்படுத்துகின்றது. ஆனால் இந்த வாய்ப்பு *ஆடு* என்பது *-இன்/-இ* என்னும் இறந்தகால இடைநிலையை ஏற்குமாயின் **ஆடின்/ஆடி* என்பது எடுத்துக்காட்டாகத் தன்வினைப் பண்பையும் பிறவினைப் பண்பையும் உணர்த்தியாக வேண்டும். மொழிப்பயன்பாட்டிலும் அமைப்பியல் விளக்கத்திலும் இத்தகைய நிலை ஒரு மயக்கத்தை ஏற்படுத்திவிடுகிறது. சொல்லியல் நிலையில் (Morphological Level) எடுத்துக் காட்டாக, **சேரினான்* என்பதைத் தன்வினையாகக் கொள்வதா

பிறவினையாகக் கொள்வதா என்ற சிக்கல் எழுகின்றது. இதனைத் தவிர்க்கும் வகையில் பொது வினைமுற்றுக்கள் முற்றுவினைப் பகுதிகளாக மாறி அமைகின்றன. இத்தகைய மாற்றம் நிகழும்போது முதன்மை வினையடியானது தன்வினையாகவும், அதனின்றும் பொதுவினைமுற்றின் வழியாகத் தோன்றியமைந்த முற்றுவினைப் பகுதியானது பிறவினைப் பகுதியாகவும் நிகழத் தலைப்படுகின்றன. கருதுக: *நட-நடத்து, ஆடு-ஆட்டு.* ஆனால் *கலங்கு-கலக்கு* ஆகிய இணையைப் பொறுத்தவரை இதற்கான வாய்ப்பு இன்மையால் இரண்டுமே முற்றுவினைப்பகுதிகளாக அமைந்துவிடுகின்றன. திராவிட மொழிகளில் தன்வினை- பிறவினை வியூகங்கள் பற்றி ஆய்வாளர்கள் (Robert Caldwell 1961: 450-455; Ramaswamy Aiyar, L.V. 1936: 50, 51; Krishnamurthi, Bh. 1972: 194-200. 227-229; Subrahmanyam, P.S. 1971: 1-101) சிந்தித்திருந்தாலும் இவை தொடர்பான ஆய்வுகள் விரிவாக மேற்கொள்ளப்பட வேண்டியவையாகும்,.

*7.2* தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் நிகழும் ஒருசார் வினைப்பகுதிகள் இறந்தகாலப் பொதுவினை முற்றுக்களை அடிநிலை வடிவங்களாகக் கொண்டவை என்பது பற்றி முன்னர்ப் பேசப்பட்டது. *ஆடிஞ்ச்உ* (தெ.), *ஆடிசு* (கன்.) ஆகியவை இறந்தகாலப் பொதுவினைகளினின்றும் தோன்றி யமைந்தவை என்பது இந்த ஆய்வில் பெறப்பட்ட செய்தியாகும். தமிழில் நிகழும் *வளர்ச்சி, முயற்சி, மகிழ்ச்சி, ஆட்சி, காட்சி* முதலான வினைப்பெயர்களும் இறந்தகாலப் பொது வினை முற்றுக்களை அடிநிலை வடிவங்களாகக் கொண்டவை என்ற கருதுகோள் இங்கே முன்மொழியப்படுகின்றது. மலயாளத்தில் இத்தகைய வினைப்பெயர்கள் அகர ஈற்றினவாக நிகழ்கின்றன. எ-டு. *தளர்ச்ச, வளர்ச்ச.* தமிழில் இகர ஈற்றினையும் மலயாளத்தில் அகர ஈற்றினையும் கொண்ட இந்த வினைப் பெயர்கள் *-அய்* (= ஐ) ஈற்றனவாக மீட்டுருவாக்கம் செய்யப்படும். எ-டு *வளர்ச்சி* (த), *வளர்ச்ச* (மல.): **வளர்ச்சய்.* மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள இந்த வடிவத்தில் நமது ஆய்வுக்குத் தேவையான பகுதி *வளர்ச்சு-* என்பது மட்டுமே. *வளர்ச்சு* என்பது **வளரின்ற்உ* என்ற அடிநிலை இறந்தகாலப் பொது வினைமுற்றினின்றும் பின்வருமாறு வருவிக்கப்படும்.

1 (1) *வளரின்ற்உ > வளரிஞ்ச்உ

(2) *வளரிஞ்ச்உ > வளரிச்சு

(3) *வளரிச்சு > வளர்ச்சு (+அய்)

**வளர்ச்சய்* என்பது தமிழில் *வளர்ச்சி* என்றும், மலயாளத்தில் *வளர்ச்ச* என்றும் திரிந்து வழங்குகின்றன. *காட்சி* என்ற வினைப் பெயரும் இதேபோல் **காணின்றஉ* என்ற இறந்தகாலப் பொதுவினை முற்றினின்றும் வருவிக்கப்படும். கருதுக:

2(1) *காணின்ற்உ > காணிஞ்ச்உ

(2) காணிஞ்ச்உ > காணிச்சு

(3) காணிச்சு > காண்ச்சு

(4) காண்ச்சு > காட்ச்சு

(5) *காட்ச்சு > *காட்சு(+அய்)

**காட்சய்* என்பது *காட்சி* எனத் திரிந்து தமிழில் வழங்குகிறது. மலயாள வடிவம் *காட்ச* என்று அமையவேண்டும். ஆயினும் மிகைத்திருத்தம் (Hyper Correction) காரணமாகக் *காழ்ச்ச* என்ற வடிவம் மலயாளத்தில் வழக்கில் உள்ளது. *வளரிற்று* (கம்ப.ரா. 9643) என்ற இறந்தகால ஒன்றன்பால் வினையைக் கருத்தில் கொண்டு ஒரு மாற்று ஆய்வையும் இங்கே எண்ணிப் பார்க்கலாம். கருதுக:

3(1) *வளரின்ற்உ > வளரிற்று

(2) *வளரிற்று > வளரிச்சு

(3) *வளரிச்சு > *வளர்ச்சு(+அய்)

மேலே குறிப்பிட்ட இரண்டு வகை ஆய்வுகளிலும் *வளரிச்சு, காணிச்சு* ஆகிய இடைநிலை வடிவங்கள் உயிரொலி இயைபு விதிக்கு உட்படவில்லை. அதற்கான வாய்ப்பு இருப்பதாகத் தோன்றவில்லை. காரணம் *வளர்ச்சி, காட்சி* முதலான வினைப் பெயர்கள் ஓர் மாறுபட்ட படிநிலையின் வெளிப்பாடுகளாகத் தோன்றுகின்றன. *எழுச்சி* என்ற வினைப்பெயரின் அடிநிலை வடிவம் **எழின்ற்உ* (< எழின்-த்உ) எனக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்பு உள்ளதாயின் *எழுச்சி* என்பதன் பகுதியாகிய *எழுச்சு* என்பதை *எழின்ற்உ > எழிஞ்ச்உ > எழிச்சு > எழுச்சு* என்ற முறையில் வருவிக்கலாம். இது மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

❀ ❀ ❀

# 8. எதிர்மறை வினைகளின் உடன்பாட்டு நிலைக்களன்கள்

8.1 *செய்மின், செய்மார், செய்க* ஆகிய வாய்பாட்டு உடன்பாட்டு வினைகள் வண்ணனை ஆய்வில் *செய்+மின்/மார், செய்+க* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கொள்ளப் பட்டாலும் உண்மையில் அவை *செய்ம்+இன்/ஆர், செய்கு+அ* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகும். இந்த வினைகளின் எதிர்மறை வடிவங்கள் *செயன்மின்* (=செய்யன்மின்), *செயன்மார்* (=செய்யன்மார்), *செயற்க* (=செய்யற்க) (மலயாளத்தில், *செய்யாய்க*/ Ramaswami Aiyar L.V. 1936: 96-99) என்ற வாய்பாட்டில் அமைகின்றன. உடன்பாட்டு வினைகளில் நாம் மேற்கொண்ட ஆய்வைப்போல் (அதாவது, *செய்ம்+இன்/ஆர், செய்கு+அ*) அவற்றின் எதிர்மறை வடிவங்களை ஆராய முடியாது. காரணம் *செயன்மின், செயன்மார், செயற்க* ஆகியவற்றில் எதிர்மறை விகுதியை அடுத்து நிகழும் மகரமெய்யும் ககரமெய்யும் *கொண்டு சேர்க்கை விதி* (Carry Over Rule) மூலம் இடம்பெற்ற இலக்கணச் சிறப்பு ஏதுமற்றவையாகும். ஆகவே இந்த எதிர்மறை வினைகளை முறையே *செயன்+மின், செயன்+மார், செயல்+க* என்று ஆராய்வதைத் தவிர வேறு வழியில்லை. *கொண்டு சேர்க்கை விதி* மூலம் எதிர்மறையில் இடம்பெறும் மெய்களுள் தகரமும் ஒன்று. இவ்வாறு தகரம் இடம்பெற்ற எதிர்மறை வினைகளின் உடன்பாட்டு நிலைக்களன்களைக் கண்டறியும் முயற்சி சிறிய அளவில் இங்கே மேற்கொள்ளப்படுகிறது.

8.2 பழந்தமிழில் *செய்யாதி* வாய்பாட்டு ஒருமை எதிர்மறை ஏவல்வினைகளின் நிகழ்ச்சி கலித்தொகையில் பரவலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவற்றின் உடன்பாட்டு நிலைக்களனாக விளங்குபவை *செயுதி/செய்தி* வாய்பாட்டு ஒருமை ஏவல் வினைகளாகும். கருதுக:

1 (1) அஞ்சாதி (84.36) x அஞ்சுதி

(2) அழியாதி (13.24) x அழியுதி

(3) உரையாதி (28.21) x உரைதி (< உரையுதி)

(4) கதியாதி (83.24) x கதியுதி

(5) கொள்ளாதி (79.7) x கொள்ளுதி

(6) சூழாதி (18.2) x சூழுதி

(7) நில்லாதி (79.21) x நில்லுதி

(8) நுவலாதி (42.25) x நுவலுதி

(9) புலவாதி (33.27) x புலவுதி

(10) வாளாதி (31.22) x வாளுதி

உடன்பாட்டில் நிகழும் ஏவல்வினைகள் அடிப்படையில் இறவாக்கால முன்னிலை ஒருமை வினைமுற்றுக்களாகும். இதனைக் கருத்தில் கொண்டு மேல் எடுத்துக்காட்டில் நிகழும் உடன்பாட்டு வினைகளை *செயுது+இ* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகக் கருதமுடியும். இந்த அமைப்பில் *செயுது* வாய்பாட்டு வினைகள் இறவாக்காலப் பகுதிகள் ஆகும். ஆனால் ஏவல்வினைகளாக நிகழ்கையில் இவற்றை அவ்வாறு கொள்ள முடியும் என்று தோன்றவில்லை. *செயுதி* வாய்பாட்டு வினைகளில் நிகழும் தகர மெய் இறவாக்கால விகுதியாகும். செய்யாதி வாய்பாட்டு வினைகளில் நிகழும் தகரம் உடன்பாட்டு வினைகளில் இருந்து கொண்டுசேர்க்கப்பட்டதாகும். எனவே இதனை இலக்கண உருபனாகக் கருத முடியாது. இதனைக் கருத்தில் கொண்டு வண்ணனை ஆய்வில் *செய்யாதி* வாய்பாட்டு வினைகளைச் *செய்+ஆத்+இ* அல்லது *செய்+ஆ+தி* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படும். இக்காலத் தமிழில் நிகழும் *செய்யாதே, செய்யாதீர்* வாய்பாட்டு எதிர்மறை ஏவல்வினைகளில் நிகழும் தகரமும் கொண்டுசேர்க்கப்பட்டதாகும். இவற்றின் உடன்பாட்டு ஏவல் வினைகள் **செய்யுதெ, *செய்யுதிர்* என்ற வாய்பாட்டினவாக இருக்க வேண்டும். ஆனால் இக்காலத் தமிழில் இவற்றின் நிகழ்ச்சி காணப்படவில்லை.

8.3 எதிர்மறை வினை மற்றும் பெயரெச்சங்கள் தமிழில் தெரிநிலை வினைகளாக நிகழாமல் குறிப்பு வினைகளாவே நிகழ்கின்றன. *செய்து* வாய்பாட்டு வினையெச்சமும் *செய்த, செய்கிற/செய்கின்ற, செய்யும்* வாய்பாட்டுப் பெயரெச்சங்களும் தெரிநிலைத் தன்மையனவாகும். இவற்றுக்கு எதிரான வினைகள் முறையே *செய்யாது* மற்றும் *செய்யாத* வாய்பாட்டினவாய் அமைகின்றன. இந்த எதிர்மறை எச்சவினைகள் குறிப்பு

வினைகளாக இருந்தாலும் இவை எந்த உடன்பாட்டு எச்சங்களை- அதாவது எந்தக் காலத்துக்குரிய உடன்பாட்டு எச்சங்களை- நிலைக்களன்களாகக் கொண்டு தோன்றியவை என்பதைக் கண்டறிய வேண்டும். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது *செய்யாது, செய்யாத* வாய்பாட்டு எதிர்மறை எச்சவினைகளின் உடன்பாட்டு நிலைக்களன்கள் *செய்து, செய்த* வாய்பாட்டு இறந்தகால வினைகள் போல் தோன்றுகின்றன. எதிர்மறை எச்ச வினைகளில் கொண்டு சேர்க்கையாக நிகழும் தகரமானது *செய்து, செய்த* வாய்பாட்டு வினைகளிலும் நிகழ்வதால் அவ்வாறு கருதத் தோன்றலாம். ஆனால் உண்மை அதுவல்ல. எதிர்மறை எச்ச வினைகளின் உடன்பாட்டு நிலைக்களன்கள் இறவாக்கால எச்ச வினைகளாக இந்த ஆய்வில் கொள்ளப்படுகின்றன. இதற்கான தடயங்கள் கீழே ஆராயப்படுகின்றன.

8.4 *படிக்காது, படிக்காத* ஆகிய வல்வினை சார்ந்த எதிர்மறை எச்சங்கள் *படிக்கு* என்ற வினைப்பகுதியின் மீது தோன்றியவையாகும். ஆனால் *படித்து, படித்த* ஆகிய உடன்பாட்டு எச்சங்கள் *படி* என்னும் வினைப்பகுதியின்மீது தோன்றி நிகழ்வனவாகும். இவ்வாறே *கற்று-கற்ற, கேட்டு-கேட்ட* ஆகியவற்றின் வினைப்பகுதிகள் *கல், கேள்* என்று அமைய, *கற்காது-கற்காத, கேட்காது-கேட்காத* ஆகிய எதிர்மறை எச்சவினைகளின் வினைப்பகுதிகள் *கற்கு, கேட்கு* என்று அமைகின்றன. *கண்டு, கண்ட* ஆகிய உடன்பாட்டு எச்சவினைகள் *காண்* என்பதன் மாற்றுருபாகிய *கண்* என்பதன் அடியாகத் தோன்றியவையாகும். இவற்றுக்கு எதிரான *காணாது, காணாத* ஆகிய எதிர்மறை வினைகள் *காண்* என்ற வினையடி யாகத் தோன்றி நிகழ்கின்றன. *நொந்து-நொந்த, வெந்து-வெந்த, செத்து-செத்த* ஆகியவற்றின் வினைப்பகுதிகளும் *நோகாது-நோகாத, வேகாது-வேகாத, சாகாது-சாகாத* ஆகிய எதிர்மறை எச்சவினைகளின் வினைப்பகுதிகளும் மாறுபடுகின்றன. எதிர் மறை எச்சங்களின் வினைப்பகுதிகள் குமரிமாவட்டக் கிளை மொழியில் நிகழும் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங் களிலும் போற்றப்படுகின்றன. கருதுக:

| | உடன்பாடு | எதிர்மறை | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 2 (1) | படிக்குத 'படிக்கிற' | படிக்காத | படிக்கு |
| (2) | பார்க்குத 'பார்க்கிற' | பார்க்காத | பார்க்கு |
| (3) | கற்குத 'கற்கிற' | கற்காத | கற்கு |

| | | | |
|---|---|---|---|
| (4) | கேட்குத 'கேட்கிற' | கேட்காத | கேட்கு |
| (5) | காணுத 'காண்கிற' | காணாத | காண் |
| (6) | நோகுத 'நோகிற' | நோகாத | நோகு |
| (7) | வேகுத 'வேகிற' | வேகாத | வேகு |
| (8) | சாகுத 'சாகிற' | சாகாத | சாகு |
| (9) | அறியுத 'அறிகிற' | அறியாத | அறி |

இந்த எடுத்துக்காட்டுக்களில் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங்களிலும், எதிர்மறைப் பெயரெச்சங்களிலும் ஒரே வடிவினவாகிய வினைப்பகுதிகளின் நிகழ்ச்சி காணப்படுவதால் எதிர்மறைப் பெயரெச்சங்கள் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங்களை நிலைக்களனாகக் கொண்டு தோன்றியவை என்ற உண்மை புலனாகின்றது. எதிர்மறை வினைகள் தமிழில் குறிப்பு வினைகளாதலின் இவை இறந்தகால உடன்பாட்டு எச்சவினைகளுக்கும் எதிர்மறையாக அமைகின்றன. மேலே (2)-இல் காணப்படும் எதிர்மறை வினைகளில் உள்ள தகரமெய் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங்களிலிருந்து *கொண்டு சேர்க்கை* விதி மூலம் அமைந்ததாகும். *செய்து-செய்த* வாய்பாட்டு உடன்பாட்டு வினைகளில் நிகழும் தகரத்துக்கும் *செய்யாது-செய்யாத* வாய்பாட்டு எதிர்மறை எச்சவினைகளில் நிகழும் தகரத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இதில் ஒரு குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில் (2)-இல் குறிக்கப் பெற்றுள்ள உடன்பாட்டு இறவாக்காலப் பெயரெச்சங்களின் நிகழ்ச்சி செவ்வியல் தமிழில் இடம்பெறவில்லை. செவ்வியல் தமிழைப் பொறுத்தவரை இதனை ஓர் அமைப்பியல் இடைவெளி (Structural Gap) என்றே கருத வேண்டும்.

8.5 *ஆடு, பாடு* முதலான வினையடிகளின் மீது தோன்றி நிகழும் இறந்தகால வினையெச்சங்களுக்கும் (எ-டு. ஆடி, பாடி முதலியன), பெயரெச்சங்களுக்கும் (எ-டு. ஆடிய, பாடிய முதலியன) எதிரான எதிர்மறை எச்சங்கள் *ஆடாது, பாடாது* என்றும் *ஆடாத, பாடாத* என்றும் அமைகின்றன. *ஆடாத, பாடாத* ஆகிய பெயரெச்சங்களுக்கு உரிய உடன்பாட்டு நிலைக் களன்களாக *ஆடிய, பாடிய* ஆகியவற்றைக் கருத முடியாது. மாறாக *ஆடுத, பாடுத* (குமரித்தமிழில் நிகழ்பவை) ஆகிய இறவாக்காலப் பெயரெச்சங்களையே *ஆடாத, பாடாத*

ஆகியவற்றின் நிலைக்களன்களாகக் கொள்ளவேண்டும். *ஆடாது, பாடாது* ஆகிய வினையெச்சங்களுக்கு உரித்தான உடன்பாட்டு எச்சங்கள் **ஆடிது, *பாடிது* என அமைய வேண்டும். ஆனால் இத்தகைய உடன்பாட்டு வினையெச்சங்கள் (கன்னடத்தில் காணப்படுவது போல்) தமிழில் காணப்படவில்லை.,

8.6 இறவாக்காலத் தன்மையனவாகிய *ஆடுத, பாடுத* ஆகிய பெயரெச்சங்கள் (செய்த வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செய்து வாய்பாட்டுப் பொதுவினைமுற்றுக்களின் மீது அமைவதைப் போல்) *ஆடுது, பாடுது* ஆகிய இறவாக்காலப் பொது வினை முற்றுக்களின் மீது தோன்றி நிகழ்கின்றன. *ஆடுது, பாடுது* ஆகியவை பொதுப் பேச்சுத் தமிழிலும் குமரித் தமிழிலும் ஒன்றன்பால் நிகழ்கால வினைகளாக நிகழ்ந்தாலும் *ஆடுத, பாடுத* ஆகிய பெயரெச்சங்களில் அவை பொதுவினை முற்றுக்களாகவே கருதப்படும். மலயாளத்தில் *செய்யுந்து* வாய்பாட்டு நிகழ்காலப் பொதுவினைமுற்றுக்களின் மீது தோன்றி நிகழும் *செய்யுந்த* வாய்பாட்டு நிகழ்காலப் பெயரெச்சங்கள் இங்கே கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். இதனடிப்படையில் தமிழில் நிகழும் *செய்கின்ற* வாய்பாட்டுப் பெயரெச்சங்களும் *செய்கின்று* வாய்பாட்டுப் பொதுவினைகளின்மீது அமைந்தனவாகத் துணியப்படும்.

8.7 *ஆடாத, பாடாத* முதலான எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கு எதிரான உடன்பாட்டுப் பெயரெச்சங்கள் *ஆடுத, பாடுத* முதலானவை என்றும், இவை இறவாக்கால உடன்பாட்டுத் தன்மையன என்றும் மேலே விளக்கப்பெற்றது. இதனின்றும் *செய்து, செய்த* ஆகிய வாய்பாட்டு எச்சவினைகளை முறையே **செயுது, *செயுத* ஆகிய வாய்பாட்டு இறவாக்கால வினைகளின் ஒடுக்கங்களாகக் கொள்ள முடியுமா என்ற வினா எழுகிறது. கோட்பாட்டுத் தன்மையிலான இந்த வினா தகர மெய்யை இறந்தகால இடைநிலையாகக் கொண்ட வினைகளின் அமைப்பை மறு ஆய்வுக்கு உரியதாக்குகின்றது. இது பற்றிய ஆய்வு விரிவஞ்சி இங்கே மேற்கொள்ளப்படவில்லை. எதிர்காலத்தில் மேற்கொள்ளப்பட வேண்டிய அடிப்படை ஆய்வுகளில் இதுவும் ஒன்றாகும்.

8.8 *நடந்து-நடக்காது, கண்டு-காணாது, படித்து-படிக்காது, நொந்து-நோகாது, வெந்து-வேகாது, செத்து-சாகாது* ஆகிய

இணைகளில் உடன்பாடு மற்றும் எதிர்மறை வடிவங்களில் காணப்படும் வினைப்பகுதிகள் மாறுபட்ட வடிவங்களைக் கொண்டவையாய்க் காணப்படுகின்றன. இந்த மாறுபாடுதான் *செய்யாது* வாய்பாட்டு எதிர்மறை வினையெச்சங்களின் உடன்பாட்டு நிலைக்களன்களைச் *செய்து* வாய்பாட்டு வடிவங்களாக இருக்க முடியாது என்று கருதச் செய்கிறது. எதிர்மறை வினையெச்சங்களின் வினைப்பகுதிகள் ஏன் *செயுது* (அதாவது *நடக்காது, காணாது, படிக்காது, நோகாது, வேகாது, சாகாது)* வாய்பாட்டு இறவாக்கால வடிவங்களுடன் இசைந்தனவாய் அமையவேண்டும்? செய்து வாய்பாட்டு இறவாக்கால வினைகள் ஏன் வினையெச்சங்களாகச் செயல்பட வில்லை? கொண்டு சேர்க்கை விதியின்படி *அறிந்து, பார்த்து* ஆகியவற்றின் எதிர்மறை வடிவங்கள் **அறியாந்து, *பார்க்காத்து* என அமையாமல் *அறியாது, பார்க்காது* என ஏன் அமைய வேண்டும்? செய்து வாய்பாட்டு எச்சவினைகளைப் பொறுத்தவரை சொல்லியல் நிலையில் அவை இறந்தகாலத்தின வாகத் தோன்றினாலும் தொடரனியல் நிலையில் முதன்மை வாக்கிய வினைப் பயனிலையின் (Verbal Predicate of Main Clause) அடிப்படையில் தான் அவற்றின் காலப்பொருண்மை விளக்கம் பெறுகிறது. எ-டு. *எழுந்து வா, எழுந்து வந்தான், எழுந்து வருவான், எழுந்து வந்தால்.* இவற்றையெல்லாம் கருதுகையில் செய்து வாய்பாட்டு இறந்தகால வினைகள் வரலாற்று நிலையில் ஆராயப்பட வேண்டியவையாகின்றன.

8.9 மலயாளத்தில் எதிர்மறைப் பெயரெச்சங்கள் *செய்யாத்த* வாய்பாட்டினவாக அமைகின்றன. எ-டு. *காணாத்த, பாடாத்த.* இவற்றுக்கு நேரான உடன்பாட்டுப் பெயரெச்சங்கள் *செயுத்த/ செய்த்த* வாய்பாட்டினவாக அமையவேண்டும். ஆனால் இத்தகைய பெயரெச்ச வடிவங்கள் மலயாளத்தில் காணப்பட வில்லை. *காணாத்த, பாடாத்த* எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கு நேரான *காணுத்த, பாடுத்த* ஆகிப் உடன்பாட்டுப் பெயரெச்சங்கள் இறவாக்காலத்தினவாகும். மலயாளத்தில் இவற்றின் நிகழ்ச்சி காணப்படாமையை அமைப்பியல் இடைவெளியாகவே கருதத் தோன்றுகிறது. *செயுத்து* (=செய்யுத்து) வாய்பாட்டு வினைகள் கன்னடத்தில் நிகழ்கால வினைப்பகுதிகளாக நிகழ்கின்றன. எ-டு: *பாளுத்தானெ* (ba:Lutt-a:ne) 'வாழ்கிறான்', *பரெயுத்தாளெ* (bareyutt-a:Le) 'எழுதுகிறாள்'. மலயாளத்தில் *காணாத்த* என்பதில் நிகழும் *காணாத்து* என்ற வடிவம் *செயுத்து* வாய்பாட்டு

வினையின் எதிர்மறையாகும். எனவே *காணாத்த, பாடாத்த* ஆகியவை தொல்வழக்கின் எச்சங்களாக மலயாளத்தில் இடம்பெற்றுள்ளன என்றே கருதத் தோன்றுகின்றது. இங்கே இன்னொரு சிக்கலும் எழுகிறது. *குடித்த* (மலயாளத்தில் குடிச்ச) என்பது *குடித்து* என்பதை நிலைக்களனாகக் கொள்வதைப் போல் *குடிக்காத்த* என்ற மலயாளப் பெயரெச்சம் *குடிக்காத்து* என்பதை நிலைக்களனாகக் கொள்ள வேண்டும். ஆனால் *செய்யாத்து* வாய்பாட்டு எதிர்மறை வினைகளின் நிகழ்ச்சி மலயாளத்தில் பதிவாகவில்லை. இதுவும் ஓர் அமைப்பியல் இடைவெளியாகக் கொள்ளத்தக்கதா என்பது ஆய்வுக்குரியதாகிறது. இதேபோல் *குடித்து* என்பதன் எதிர்மறை வடிவம் தமிழில் *குடிக்காத்து* என்று அமையாமல் *குடிக்காது* என்று அமைவதும் ஆய்வுக்குரிய ஒன்றாகும். இந்த ஆய்வில் ஒப்புமையாக்கத்தின் பங்களிப்பு எத்தகையது என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

8.10 மலயாளத்தில் இருவகை எதிர்மறைப் பெயரெச்சங்களின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. ஒன்று, இறந்தகாலப் பெயரெச்சம்; பிறிதொன்று இறவாக்காலப் பெயரெச்சம். *செய்யாஞ்ஞ* வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சங்கள் இறந்தகாலத்தின வாகவும், *செய்யாத்த* வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சங்கள் இறவாக்காலத்தினவாகவும் கருதப்படுகின்றன. *கிழிஞ்ஞ, கரைஞ்ஞ* முதலான உடன்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சங்களின் தாக்கத்தால் *கிழியாஞ்ஞ, கரையாஞ்ஞ* முதலான எதிர்மறைப் பெயரெச்சங்கள் தோன்றியனவாதல் வேண்டும். இவற்றில் நிகழும் ஞகரம் உடன்பாட்டுப் பெயரெச்சங்களிலிருந்து கொண்டு சேர்க்கப்பட்டதாகும். ஒப்புமையாக்கத்தின் காரணமாக *காணாஞ்ஞ, வாராஞ்ஞ, கேள்க்காஞ்ஞ* (P.S. Subrahmanyam 1971:341) முதலான எதிர்மறைப் பெயரெச்சங்கள் மலயாளத்தில் நிகழ்கின்றன. இதனால்தான் *கண்ட, வந்த, கேட்ட* முதலான இறந்தகாலப் பெயரெச்சங்களோடு இவற்றைத் தொடர்புபடுத்த முடியவில்லை. இதனின்றும் வரலாற்று நிலையில் *செய்யாஞ்ஞ* வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் பிந்தியவையெனக் கருதத்தக்கவை ஆகின்றன. இங்கே இன்னொரு உண்மையையும் கருத்தில் கொள்ள வேண்டும். எதிர்மறைப் பெயரெச்சங்களும் வினை யெச்சங்களும் திராவிடமொழிகளில் தெரிநிலை வினைகள் அல்ல; அவை குறிப்பு - அதாவது காலம் கரந்த - வினைகளே.

*செய்யாஞ்ஞ* வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கும் இது பொருந்த வேண்டும். ஆனால் நடைமுறையில் நிலைமை வேறாக இருக்கிறது.

8.11 கன்னடத்தைப் பொறுத்தவரையில் எதிர்மறைப் பெயரெச்சங்களாகிய *பரெயத* (bareyada), 'எழுதாத', *காணத* 'காணாத', *மாடத* 'செய்யாத' முதலானவற்றுக்கு எதிரான செயுது வாய்பாட்டு இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங்கள் அந்த மொழியில் காணப்படவில்லை. *பரெயுவ* (bareyuva) 'எழுதும்/எழுதுகிற', *காணுவ* 'காணும்/காண்கிற', *மாடுவ* 'செய்யும்/செய்கிற' முதலானவையே கன்னடத்தில் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சங்களாக நிகழ்கின்றன. இவற்றோடு *பரெயத* (bareyada), *காணத, மாடத* முதலானவற்றைத் தொடர்புபடுத்த முடியாது. *மாடுத, காணுத, கேளுத* 'கேட்கும்/கேட்கிற' முதலான இறவாக் காலப் பெயரெச்சங்கள் கன்னடத்தில் காணப்படவில்லை. இதை ஓர் அமைப்பியல் இடைவெளியாகக் கொள்ள முடியமா என்பதும் *மாடத* 'செய்யாத', *கேளத* 'கேட்காத, கேளாத' முதலானவற்றின் உடன்பாட்டு வடிவினவாக *மாடித* 'செய்த', *கேளித* 'கேட்ட' முதலானவற்றைக் கொள்ள முடியுமா என்பதும் ஆய்வுக்குரியனவாகும். இந்த ஆய்வில் *மாடத, கேளத* முதலான வற்றில் கொண்டு சேர்க்கையாக நிகழும் தகரத்தின் நிகழ்ச்சி எத்தகைய உடன்பாட்டுப் பெயரெச்சங்களில் இடம்பெறுகிறது என்பதையும் தெளிவுபடுத்தியாக வேண்டும்.

8.12 கன்னடத்தின் நிலையே தெலுங்கிலும் காணப்படுகிறது. *தினின* 'தின்ற', *பாடின* 'பாடிய' ஆகியவற்றுக்கு நேரான எதிர்மறைப் பெயரெச்சங்களாகத் *தினனி* 'தின்னாத', *பாடனி* 'பாடாத' ஆகியவற்றின் நிகழ்ச்சி தெலுங்கில் காணப்படுகின்றது. *பாடனி* என்பதிலுள்ள னகரம் எடுத்துக்காட்டாக, *பாடின* என்பதிலுள்ள னகரத்தின் கொண்டு சேர்க்கையாகக் கருதத் தோன்றுகிறது. ஆயினும் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சமாகிய *பாடே* (< *பாடுயெ < *பாடுகெ < *பாடுகய்) 'பாடும் / பாடுகிற' (இந்த ஆய்வாளரின் கிளைமொழி வழக்கு) என்பதற்கு நேரான எதிர்மறைப் பெயரெச்சமாகவும் *பாடனி* என்பது நிகழ்வதால் பிந்தியதை எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமாகக் கருதலாம். ஆயினும் இங்கே ஒரு சிக்கலை நாம் அவிழ்த்தாக வேண்டும்.

8.13 *பாடின* (= பாடிய), *பாடனி* (= பாடாத) ஆகிய உடன்பாடு மற்றும் எதிர்மறைப் பெயரெச்சங்களின் வினைப் பகுதி பாடு என்றே அமைகிறது. ஆனால் இத்தகைய நிலைக்கு எதிராக உடன்பாட்டுப் பெயரெச்சத்தில் ஒரு வினைப் பகுதியும், எதிர்மறைப் பெயரெச்சத்தில் இயல்பான வேறொரு வினைப்பகுதியும் துணைநிலை வழக்கில் நிகழும் நிலையும் தெலுங்கில் காணப்படுகிறது. கருதுக:

| | உடன்பாடு | எதிர்மறை | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 3(1) | கோசின 'கொய்த' | கோயனி 'கொய்யாத' | கோசு, கோயு |
| (2) | நடச்இன 'நடந்த' | நடவனி 'நடக்காத' | நடச்உ, நடவு |
| (3) | சூசின 'பார்த்த' | சூடனி 'பார்க்காத' | சூசு, சூடு (cu:su, cu:Du) |

இந்த எடுத்துக்காட்டுக்களில் மாற்றுருபுகளாக நிகழும் வினைப்பகுதிகளில் எதிர்மறையில் நிகழ்பவை- அதாவது *கோயு, நடவு, சூடு* ஆகியன- காலத்தால் முந்தியவையாகும். (*நடவு, சூடு* இரண்டும் முறையே **நடமு* (< *நடம் < *நடய்ம் < *நடயும்), **சூழ்* (> சூடு, *சூய்) ஆகியவற்றின் திரிபுகளாகும்). உடன்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சங்களிலும் காலத்தால் முந்திய வினைப்பகுதிகள் நிகழ்வதே ஏற்புடையதாகக் கருதப்படும். ஆனால் தெலுங்கில் இத்தகைய வினைப்பகுதிகள் எதிர்மறைப் பெயரெச்சத்தில் நிகழ்வது ஓர் உண்மையைப் புலப்படுத்துவதாகத் தோன்றுகிறது. அப்படியானால் அந்த உண்மை என்ன? இரண்டு நிலைகளில் இந்த உண்மையைக் கண்டறிய முற்படலாம். ஒன்று: மேலே குறிப்பிட்ட உடன்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சங்களை முறையே **கோயின, *நடவின, *சூடின* எனக் கொள்வது. இப்படிக் கொள்வதால் உடன்பாடு, எதிர்மறை இரண்டிலும் ஒரே வடிவிலான வினைப்பகுதியே அமையும். இரண்டு: எதிர்மறைப் பெயரெச்சங்களைக் கருத்தில் கொண்டு மேலே குறிப்பிட்ட இறந்தகால உடன்பாட்டுப் பெயரெச்சங்களை முறையே **கோயினி, *நடவினி, *சூடினி* என்ற வடிவங்களாகக் கொள்ளமுடியுமா என்பது பற்றியதாகும். இதற்கு வாய்ப்பு இருப்பதாகத் தோன்றவில்லை. இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது. தெலுங்கில் நிகழும் எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கு நேரான உடன்பாட்டுப் பெயரெச்சங்களை இறந்தகாலப் பெயரெச்சங்களாகக் கொள்வதற்குப் பதிலாக இறவாக்கால

உடன்பாட்டுப் பெயரெச்சங்களாகக் கொள்ளலாம். இதன் அடிப்படையில் எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கு நேரான உடன்பாட்டுப் பெயரெச்சங்களை **பாடுனி,* 'பாடும்', **கோயுனி* 'கொய்யும்', **நடவுனி* 'நடக்கும்', **சூடுனி* 'பார்க்கும்' என அக மீட்டுருவாக்கம் (Internal Reconstruction) செய்யலாம். இத்தகைய மீட்டுருவாக்கம் தமிழில் நிகழும் *செய்யாதி* வாய்பாட்டு எதிர்மறை ஏவல் வினைகளுக்கு எதிராகச் *செய்யுதி* வாய்பாட்டு உடன்பாட்டு ஏவல் வினைகள் அமைவதற்கு ஒப்பாகும். ஆனால் இதில் ஒரு சிக்கல் என்ன வெனில், **செயுனி* வாய்பாட்டு வினைகள் வினைப்பகுதிகளைக் குறிக்கும் வகையில் துளு மொழியில் அமைவதாகும். எ-டு. *பாடுனி* 'பாடு'. வரலாற்று நிலையில் *பாடுனி* என்பது **பாடும்-அய்* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து தோன்றியமைந்ததாகும். துளுவில் வினைப் பகுதிகளைக் குறிக்க வழங்கும் *செயுனி* வாய்பாட்டு வடிவங்கள் ஒரு குறிப்பிட்ட நிலையில் அமைந்த தொல்வழக்கில் இறவாக்கால உடன்பாட்டுப் பெயரெச்சமாக நிகழ்ந்து, அதன் தாக்கத்தால் *சேயனி* வாய்பாட்டு எதிர்மறை வினையெச்சங்கள் தெலுங்கில் நிலைகொண்டிருக்கலாம் என்றும் யூகிக்கத் தோன்றுகிறது. *சேயுனி* வாய்பாட்டு உடன்பாட்டு இறவாக்காலப் பெயரெச்ச வினைகள் தெலுங்கில் இடம்பெறாமற் போனது ஓர் அமைப்பியல் இடைவெளியாகக் கொள்ளத்தகுமா என்பது ஆய்வுக்குரியது. **சேயுனி* *(=செய்யும்) வாய்பாட்டு வினைகள் தொடர்பான கருதுகோள் இனி மேற்கொள்ள வேண்டிய ஆய்வுக்கான ஒரு குறிப்புரையே தவிர அதன்மீது எந்தத் தெளிவான, வலுவான முடிவையும் நாம் இங்கே முன்மொழிய வில்லை. *சேயனி* வாய்பாட்டு எதிர்மறைத் தெலுங்குப் பெய ரெச்சங்களின் நிலைக்களன் *சேசின* வாய்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சங்களாக இருக்க முடியாது என்ற நிலைப்பாட்டை புறக்கணிக்க வேண்டும் என்று நாம் கருதவில்லை. தமிழில் காணப்படும் நிலை தனிமொழி சார்ந்ததா அல்லது திராவிட மொழிகள் அனைத்திற்கும் பொதுவானதா என்பதே நம் முன் உள்ள கேள்வி. இந்தக் கேள்விக்கு விடை தேடும் முயற்சியாகத் தான் நாம் மேலே மேற்கொண்ட ஆய்வைக் கருத வேண்டும். இது ஒரு முற்றுப்பெறாத ஆய்வே.

❀ ❀ ❀

# 9. தடம்புரண்ட வினைத்திரிபு மரபுகள்

9.1 குமரித்தமிழில் இறவாக்கால அல்லது நிகழ்கால வினைத் திரிபுகளில் ஓர் ஒழுங்கமைதி போற்றப்படுகிறது. பின்வரும் இரண்டு வகையான நிகழ்கால வினைத் திரிபுகள் இந்த வகையில் கருதத்தக்கனவாகும். பொதுப் பேச்சுத் தமிழில் நிகழும் நிகழ் வினைகள் கிளைமொழி-2-இன் அடைப்பில் கொடுக்கப் பட்டுள்ளன.

| கிளைமொழி–1 | கிளைமொழி–2 |
|---|---|
| 1 (1) ஓடுகான் | 2 (1) ஓடுதான் (ஓடுரான்) |
| (2) ஓடுகாள் | (2) ஓடுதாள் (ஓடுராள்) |
| (3) ஓடுகாரு | (3) ஓடுதாரு (ஓடுராரு) |
| (4) ஓடுகு | (4) ஓடுது (ஓடுது)/(ஓடரது - பார்ப்பன வழக்கு) |

இந்த எடுத்துக்காட்டில் நான்காவதாக நிகழும் *ஓடுகு, ஓடுது* ஆகிய ஒன்றன்பால் நிகழ்கால வினைமுற்றுக்கள் ஆய்வுக்கு உரியனவாகும். *ஓடுக, ஓடுத* ஆகிய பெயரெச்சங்களில் பொது வினைமுற்றுக்களாக நிகழும் *ஓடுகு, ஓடுது* ஆகியவை (1), (2)-இல் ஒன்றன்பால் வினைமுற்றுக்களாகவும் *-ஆன், -ஆள், -ஆர்* ஆகிய விகுதிகளின் முன் காலப்பகுதிகளாகவும் (Tense Bases) நிகழ்கின்றன. இதனை இயல்பான வளர்ச்சியாகக் கருதலாம். ஆனால் இத்தகைய வளர்ச்சி செவ்வியல் தமிழில் மாறுபடுகிறது. பின்வரும் வினைத்திரிபுகளைக் கருதுக.

| வினைத்திரிபு–1 | வினைத்திரிபு–2 | வினைத்திரிபு–3 |
|---|---|---|
| 3 (1) மறைகின்றான் | 4 (1) மறைக்கின்றான் | 5 (1) ஓடுகின்றான் |
| (2) மறைகின்றாள் | (2) மறைக்கின்றாள் | (2) ஓடுகின்றாள் |
| (3) மறைகின்றார் | (3) மறைக்கின்றார் | (3) ஓடுகின்றார் |
| (4) மறைகின்றது | (4) மறைக்கின்றது | (4) ஓடுகின்றது |

இங்கே துணை எண் (4)-இல் காணப்படும் ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் குமரித்தமிழில் போற்றப்படும் வினைத்திரிபு மரபுப்படி **மறைகின்று, *மறைக்கின்று, *ஓடுகின்று* என்று அமைய வேண்டும். இந்த வினைகள் *மறைகின்ற, மறைக்கின்ற, ஓடுகின்ற* ஆகிய பெயரெச்சங்களில் பொதுவினைமுற்றுக் களாகவும் தன்மை, முன்னிலை மற்றும் படர்க்கை உயர்திணை விகுதிகளின் முன் காலப்பகுதிகளாகவும் நிகழ்வது கருதற்பாலன வாகும். இந்த அடிப்படையில் (3), (4), (5)-இல் ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் *செய்கின்று* வாய்பாட்டினவாகவே இருக்க வேண்டும். அப்படியானால் *செய்கின்றது* வாய்பாட்டு வினைகள் இந்த வினைத்திரிபில் எப்படி இடம்பிடித்தது? இந்தக் கேள்விக்கு விடைகாண்பதற்கு முன் பின்வரும் இறந்தகால வினைத் திரிபுகளையும் கருத்தில் கொள்க:

| வினைத்திரிபு-1 | வினைத்திரிபு-2 | வினைத்திரிபு-3 |
|---|---|---|
| 6(1) மறைந்தான் | 7(1) மறைத்தான் | 8(1) ஓடினான் (ஓடியான்) |
| (2) மறைந்தாள் | (2) மறைத்தாள் | (2) ஓடினாள் (ஓடியாள்) |
| (3) மறைந்தார் | (3) மறைத்தார் | (3) ஓடினார் (ஓடியார்) |
| (4) மறைந்தது | (4) மறைத்தது | (4) ஓடிற்று (ஓடியது) |

இங்கேயும் ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் **மறைந்து, *மறைத்து, *ஓடின்/ஓடி(ய்)* என்றே இருக்க வேண்டும். இவை பொதுவினை முற்றுக்களாக நிகழ்வதை *மறைந்த, மறைத்த, ஓடின/ஓடிய* ஆகிய பெயரெச்சங்களில் காணலாம். இதன் அடிப்படையில் உயர்திணை விகுதிகளின் முன் நிகழும் *மறைந்து, மறைத்து, ஓடின்/ஓடி(ய்)* ஆகியவை காலப்பகுதிகளாகக் கொள்ளப்படும். இதனின்றும் *செய்து, ஓடின்/ஓடி(ய்), செய்கு, செயுது* ஆகிய வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தொடக்கத்தில் பொதுவினைகளாக நிகழ்ந்து பின்னர் ஒன்றன்பால் வினைமுற்றுக்களாகவும் தன்மை, முன்னிலை மற்றும் உயர்திணை விகுதிகளின் முன் காலப் பகுதிகளாகவும் நிகழத் தொடங்கின என்பது தெளிவாகிறது. இந்தக் கட்டமைப்பில் *செய்கின்றது, செய்தது, ஓடிற்று/ஓடியது* ஆகிய வாய்பாட்டு வினைகளுக்கு இடமில்லை. இவற்றின் நிகழ்ச்சியானது வேறொரு கட்டமைப்பில் அமைந்த வினைத் திரிபு மரபுக்குரியதாகும். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக:

| வினைத்திரிபு-1 | வினைத்திரிபு-2 | வினைத்திரிபு-3 |
|---|---|---|
| 9(1) மறைகின்றவன் | 10 (1) மறைக்கின்றவன் | 11(1) ஓடுகின்றவன் |
| (2) மறைகின்றவள் | (2) மறைக்கின்றவள் | (2) ஓடுகின்றவள் |
| (3) மறைகின்றவர் | (3) மறைக்கின்றவர் | (3) ஓடுகின்றவர் |
| (4) மறைகின்றது | (4) மறைக்கின்றது | (4) ஓடுகின்றது |

| வினைத்திரிபு-1 | வினைத்திரிபு-2 | வினைத்திரிபு-3 |
|---|---|---|
| 12(1) மறைந்தவன் | 13 (1) மறைத்தவன் | 14(1) ஓடினவன்/ஓடியவன் |
| (2) மறைந்தவள் | (2) மறைத்தவள் | (2) ஓடினவள்/ஓடியவள் |
| (3) மறைந்தவர் | (3) மறைத்தவர் | (3) ஓடினவர்/ஓடியவர் |
| (4) மறைந்தது | (4) மறைத்தது | (4) ஓடினது, ஓடிற்று/ ஓடியது |

இந்த இரண்டு கட்டமைப்பிலும் இடம்பெற்றுள்ள வினைத்திரிபு வடிவங்களை மரபிலக்கணிகள் வினையாலணையும் பெயர்களாகக் கருதுவர். இங்கே நிகழும் ஒன்றன்பால் வினையாலணையும் பெயர்களே (3) முதல் (8) வரை உள்ள கட்டமைப்புகளில் *செய்கின்று, ஓடுகின்று, செய்து, ஓடின்/ஓடி(ய்)* ஆகிய ஒன்றன்பால் வினைகளை ஒழித்துவிட்டு அவற்றின் இடத்தில் தம்மை நிலைநிறுத்திக் கொண்டன.

9.2 இனி எதிர்காலத்துக்கு வருவோம். பின்வரும் வினைத் திரிபுகளைக் கருத்தில் கொள்க:

| வினைத்திரிபு-1 | வினைத்திரிபு-2 | வினைத்திரிபு-3 |
|---|---|---|
| 15(1) மறைவான் | 16(1) மறைப்பான் | 17(1) ஓடுவான் |
| (2) மறைவாள் | (2) மறைப்பாள் | (2) ஓடுவாள் |
| (3) மறைவார் | (3) மறைப்பார் | (3) ஓடுவார் |
| (4) மறையும் | (4) மறைக்கும் | (4) ஓடும் |

இந்த வினைத்திரிபுகளில் நிகழும் *செய்யும்* வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால், பலவின்பால் இரண்டுக்கும் பொதுவானதாகும். பழந்தமிழில் இவை ஆண்பால், பெண்பாலுக்கும் பொருந்தும். எ-டு. இக்காலத்தமிழ்: *அது/அவை வரும்;* பழந்தமிழ்: *அவன்/ அவள்/அது/அவை வரும்.* மேல் எடுத்துக்காட்டில் நிகழும் *செய்யும்* வாய்பாட்டு வினைகள் *மறைவான், மறைப்பான், ஓடுவான்* ஆகிய வினைத்திரிபு மரபுக்கு ஏற்றவையல்ல. செய்யும் வாய்பாட்டு வினைகள் நிகழும் இடங்களில் முறையே *மறைவு*

(< ? மறைபு), *மறைப்பு,* *ஓடுவு* (< ? *ஓடுபு) ஆகிய செய்பு(?) வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி ஏற்புடையதாகும். *மறைவு, மறைப்பு, ஓடுவு* ஆகியவை உயர்திணை விகுதிகளின் முன் காலப் பகுதிகளாக நிகழ்ந்தாலும் *மறைவ, மறைப்ப, ஓடுவ* ஆகிய பெயரெச்சங்களின் நிகழ்ச்சி தமிழில் காணப்படாமையால் மேற்படி *செய்பு* (?) வாய்பாட்டு வினைகளை பொதுவினை முற்றுக்களாக இனங்காண்பதற்கான வாய்ப்பு அடிபட்டுப் போகின்றது. இந்த வினைத்திரிபு கட்டமைப்பில் *செய்யும்* வாய்பாட்டு வினைகளுக்கு இடமில்லை என்றாலும் அவை பெய ரெச்சமாக இந்த வினைத் திரிபு வரிசையில் இடம்பெறுகிறது. கன்னடத்தில் இத்தகைய கட்டமைப்பில் *செய்யும்* வாய்பாட்டு வினைகள் நிகழும் இடத்தில் *செய்வது* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது (R. Narasimhacharya 1969:130). *செய்தான், செய்கின்றான்* வாய்பாட்டு வினைத்திரிபு வரிசையில் *செய்தது, செய்கின்றது* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைமுற்றுக் களின் நிகழ்ச்சி தமிழில் காணப்படுகிறது. இந்த மரபுப்படி *செய்வான், செய்வாள்* வாய்பாட்டு வரிசையில் *செய்வது* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகளின் நிகழ்ச்சி ஏற்புடையதே. ஆனால் அதற்கும் இந்த வரிசையில் வாய்ப்பு மறுக்கப் பட்டுள்ளது. இதனின்றும் ஒன்றன்பால் வினைத் திரிபைப் பொறுத்தவரையில் எதிர்கால வினைத்திரிபு மரபுகள் சீராக அமையவில்லை என்பது தெளிவாகிறது. *செய்பவன், செய்பவள்* வாய்பாட்டு வினையாலணையும் பெயர்களுக்கான வினைத்திரிபு வரிசையில் *செய்வது* வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் வினையாலணையும் பெயர்களாக இடம்பெறுகின்றன. இந்த மரபானது *செய்தான், செய்கின்றான்* வாய்பாட்டு வரிசையில் மீறப்பட்டுள்ளது பற்றி ஏற்கனவே பேசப்பட்டுள்ளது.

9.3 *செய்தனன்* வாய்பாட்டு வரிசையில் *செய்தன்று* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் இடம்பெறுகின்றன. ஆனால் *செய்வனன்* வாய்பாட்டு வரிசையில் *செய்வன்று/செய்பன்று* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகளின் நிகழ்ச்சி காணப்பட வில்லை. *ஓடினான்* வாய்பாட்டு வரிசையில் *ஓடின* வாய்பாட்டுப் பெயரெச்சம் செவ்வியல் தமிழில் இடம்பெற வேண்டும். ஆனால் இது வழக்கிழந்து *ஓடியான்* வாய்பாட்டு வரிசைக்குரிய *ஓடிய* வாய்பாட்டுப் பெயரெச்சம் அதன் இடத்தில் நிகழ்கிறது. *ஓடிய* வாய்பாட்டுப் பெயரெச்சம் நிகழும் வினைத்திரிபு வரிசையில்

*ஓடியான், ஓடியாள், ஓடியார்* ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி வழக்கிழந்து விட்டது. இதனின்றும் தமிழில் வினைத்திரிபு மரபுகள் முறைபிறழ்ந்து நிகழ்வது புலனாகின்றது.

9.4 வினைத்திரிபு மரபுகள் பற்றிய இந்த அடிப்படை ஆய்வில் *செய்தான், ஓடினான்/ஓடியான்* ஆகிய வரிசைகளில் *செய்து, ஓடின்/ஓடி(ய்)* ஆகிய வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளன. இதேபோல் *செய்கின்றான், ஓடுகின்றான்* வரிசையில் *செய்கின்று, ஓடுகின்று* ஆகிய வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் வினைமுற்றுக்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. இந்த ஆய்வுக்குப் பின்புலமாக அமைவது குமரித் தமிழில் வழங்கும் நிகழ்கால வினைத்திரிபுகளாகும்.

9.5 *செய்வான், செய்வாள்* வாய்பாட்டு வினைத் திரிபு வரிசையில் *செய்யும்* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சிக்கு இடமில்லை என்று முன்னர்க் குறிப்பிட்டு இருந்தோம். அப்படியானால் தமிழ் வினைத்திரிபு மரபுகளில் *செய்யும்* வாய்பாட்டு வினைகளின் இடம்தான் என்ன? *செய்யும்* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சிக்குரிய ஓர் வினைத்திரிபு மரபும் பழந்தமிழில் காணப்படுகிறது. ஆனால் இந்த வினைத் திரிபு மரபு சிதிலமடைந்து காணப்படுகின்றது. *உண்மர், தின்மர், காண்மர், என்மர்* ஆகிய பலர்பால் வினைகளின் நிகழ்ச்சி பழந் தமிழில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்த வினைகள் தொடர்பான வினைத்திரிபு மரபைப் பின்வருமாறு மீட்டுருவாக்கம் செய்யலாம்.

18 (1) *செய்மன் 'செய்வான்'

(2) *செய்மள் 'செய்வாள்'

(3) *செய்மர் 'செய்வர்'

(4) *செய்ம் (< *செயும்)

(*கொல்வை* (சிலம்பு. 7.18), *வாழ்வை* (சிலம்பு. 7.17) மற்றும் செய்வள், செய்வன் ஆகிய வினைகள் (18)-இல் குறிக்கப்பெற்றுள்ள வினைத்திரிபு மரபுக்கு உரியவையா என்பது ஆய்வுக்குரியது. ஆனால் கலித்தொகையில் பதிவாகியுள்ள *வலிப்பென்* (29.19), *கரப்பென்* (29.15), *திறப்பென்* (29.11), *மறைப்பென்* (34.9), *காண்பென்* (39.43) மற்றும் சிலம்பில் நிகழும் *கேட்பன்* (19.12) = கேட்பேன், *காண்பன்* (19.10) = காண்பேன் ஆகியவை 18-இல்

உள்ள வினைத்திரிபு மரபுக்கு இசைந்தவை அல்ல). பழந்தமிழில் *செயுமவர்* வாய்பாட்டு வினைகளின் திரிபாகிய *செய்மார்* வாய்பாட்டுப் பலர்பால் வினைகளின் நிகழ்ச்சியும் பரவலாகக் காணப்படுகிறது. இவை தொடர்பான வினைத்திரிபு மரபும் பின்வருமாறு மீட்டுருவாக்கப்படும்.

19 (1) *செய்மான் 'செய்வான்'
(2) *செய்மாள் 'செய்வாள்'
(3) *செய்மார் 'செய்வார்'
(4) *செய்மது (< *செயுமது) 'செய்வது'

*செய்மார்* வாய்பாட்டு வினைகளைத் தவிர *அறியுமோன், கொய்யுமோன், உணருமோர்* முதலான வினைகளின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் காணப்படுகின்றது. இவையும் **செயுமவன், *செயுமவள், *செயுமவர்* வாய்பாட்டு வினைகளின் திரிபாகும். இவை தொடர்பான வினைத்திரிபு மரபும் பின்வருமாறு மீட்டுருவாக்கம் செய்யப்படும்.

20 (1) *செய்யுமோன் 'செய்வோன்'
(2) *செய்யுமோள் 'செய்வோள்'
(3) *செய்யுமோர் 'செய்வோர்'
(4) *செய்யுமது 'செய்வது'

மேலே மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள மூன்று வகையான வினைத்திரிபு மரபுகளில் (18)-இல் மட்டும் *செய்ம்* (< செயும்) வாய்பாட்டு வினையின் நிகழ்ச்சியினைக் காணலாம். இந்த வினைத்திரிபு மரபில் *செயும்* வாய்பாட்டு வினைகள் பெயரெச்சமாக நிகழ்வதுடன் உயர்திணை விகுதிகளின் முன் *செய்ம்* வாய்பாட்டுக் காலப்பகுதிகளாகவும் நிகழ்கின்றன. இதனின்றும் *செயும்* வாய்பாட்டு வினைகள் பொது வினைமுற்றுக்களாகவும் வரலாற்று நிலையில் நிகழ்ந்துள்ள செய்தி பெறப்படுகின்றது.

9.6 இந்தப் பகுதியை முடிக்குமுன் முன்னதாக விடுபட்டுப் போன ஒரு செய்தியையும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். அது இந்த ஆய்வின் போக்கை மாற்றி அமைக்கவல்லதாகும். *செய்தான், செய்தாள்* வாய்பாட்டு வினைத்திரிபு வரிசையிலும் *செய்தவன், செய்தவள்* வாய்பாட்டு வினைத்திரிபு வரிசையிலும் *செய்தது* வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் வினைகளாக இடம்பெறுகின்றன. *செய்தான், செய்தாள்* வாய்பாட்டு வினைகள் *செய்தவன், செய்தவள்* வாய்பாட்டு வினைகளின் திரிபாகும்.

எனவே இந்த வினைத்திரிபு வரிசையில் *செய்தது* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் இடம்பெறுவது இயல்பான நிகழ்ச்சி யாகவே தோன்றுகிறது. இந்த வகையில் நமது முந்தைய சிந்தனை மறுபரிசீலனைக்குரியது. *செய்து* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் இடம்பெறவேண்டிய வினைத்திரிபு வரிசையில் குறில் இயைபு விகுதிகளைக் கொண்ட **செய்தன், *செய்தள், *செய்தர்* வாய்பாட்டு வினைகள் நிகழவேண்டும். பாலக்காட்டுப் பார்ப்பனர் தமிழில் *செய்தன், செய்தள்* ஆகியவற்றின் வழக்கும் *செய்வன், செய்வள்* ஆகியவற்றின் வழக்கும் காணப்படுகின்றன. பொதுப்பேச்சுத் தமிழில் *செய்தென்/செய்தன்* (=செய்தேன்), *செய்தம்/செய்தொம்* (=செய்தோம்), *செய்தெ, செய்தி* (=செய்தாய்), *செய்திங்கள்* (=செய்தீர்கள்) ஆகிய வாய்பாட்டு இறந்தகால வினைகளின் நிகழ்ச்சியும் *செய்வென்/செய்வன்* (=செய்வேன்), *செய்வம்/செய்வொம்* (=செய்வோம்), *செய்வெ/செய்வி* (=செய்வாய்), *செய்விங்கள்* (=செய்வீர்கள்) ஆகிய வாய்பாட்டு எதிர்கால வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படுகின்றன. ஆனால் இத்தகைய வினைத்திரிபு மரபுக்கு இக்காலச் செவ்வியல் தமிழில் வாய்ப்பில்லாமற் போயிற்று. ஆயினும் *செய்தவன், செய்தவள்* வாய்பாட்டு வினைத்திரிபு மரபின் வளர்ச்சிக்கு முதல் தளமாக அமைவது *செய்து* வாய்பாட்டுப் பொது வினைமுற்றுக்களே என்பதையும் இங்கே கருத்திற் கொள்ள வேண்டும்.

❀ ❀ ❀

# 10. இலக்கண விளக்க மரபுகள்

*10.1* ஒரு மொழியின் வண்ணனை இலக்கணம் (Descriptive Grammar) என்பது அதன் அமைப்பியல்புகளைப் பற்றிய விளக்கமாகும். இலக்கணம் எதனை விளக்குகின்றதோ அதனின்றும் அதைப் பிரித்துப் பார்க்க முடியாது. எனவே இலக்கணம் படைத்துக் கொள்ளப்படுவதோ விதிக்கப்படுவதோ அன்று. இதனின்றும் இலக்கணி என்பவன் மொழியின் அமைப்பியல் மரபுகளைக் கண்டறிந்து அவற்றை அறிவார்ந்த நிலையில் விளக்கும் ஓர் ஆய்வாளன் என்ற உண்மை பெறப்படு கின்றது. எந்த நிலையிலும் அவன் அமைப்பியல் மரபுகளை மீறிய ஓர் இலக்கண விளக்கத்தை மேற்கொள்ளவோ மொழியின்மீது அதனைத் திணிக்கவோ முடியாது. ஆனால் அமைப்பியல் மரபுகளைக் கருத்தில்கொண்டு இலக்கண விளக்க மரபுகளை உருவாக்கிக் கொள்ளும் உரிமை இலக்கணியாகிய ஆய்வாளனுக்கு உண்டு என்பதை மறுக்க முடியாது. இலக்கண விளக்க மரபுகள் என்பவை அமைப்பியல் மரபுகளை விளக்கும் உத்திகளாகும். இந்த உத்திகள் ஆய்வாளனின் இலக்கண விளக்கக் கோட்பாட்டின் பிரதிபலிப்புகளாகும். இலக்கண விளக்கக் கோட்பாடு என்பது ஆய்வாளன் மேற்கொள்ளும் இலக்கண விளக்க உத்திகளைப் பொறுத்து மாறுபடக் கூடியதாகும். *காண்டும்* 'காண்போம்' என்பதைத் தொல்காப்பியர் *காண்+டும்* என்று விளக்குவது ஒருவகை இலக்கண விளக்க உத்தியாகும். இதே வினைமுற்றை இன்னொரு ஆய்வாளன் *காண்-த்+உம்* என்றும் விளக்கலாம். இந்த இரண்டு வகையான இலக்கண விளக்க உத்திகளும் அமைப்பியல் மரபை விளக்கும் இரண்டு வகையான இலக்கண விளக்கக் கோட்பாடுகளாகும். இவற்றுள் எதனைச் சிறந்த ஒன்றாகத் தேர்ந்தெடுப்பது? இங்கேதான் தமிழ் இலக்கண ஆய்வு முடங்கிப் போய்விட்டது. என்ன காரணம்? சிந்திப்போம்.

*10.2* தொல்காப்பியரின் தொல்காப்பியமாகட்டும், பாணினியின் வடமொழி இலக்கணமாகிய அஷ்டாத்யாயி ஆகட்டும் அவை

தமிழ், வடமொழி ஆகியவற்றின் அமைப்பியல் மரபுகளை விளக்கும் முயற்சிகளே தவிர அவற்றை ஏத்திப் பரவும் வேத மந்திரங்களின் தொகுப்புக்களல்ல. தொல்காப்பிய நூற்பாக்களாயினும் சரி அஷ்டாத்யாயி நூற்பாக்களாயினும் சரி அவை ஒட்டுமொத்தமாகத் *தத்வமஸி, சத்யமேவ ஜயதே* போன்ற மகா வாக்கியங்கள் அல்ல. ஆனால் இந்தியக் கல்வி மரபு, குறிப்பாகத் தமிழர் போற்றிய கல்வி மரபானது மரபிலக்கணங்களை வேதங்களுக்கு நிகராகவும் அவற்றில் காணப்படும் நூற்பாக்களை மறுபரிசீலனை செய்ய முடியாத மகாவாக்கியங்களுக்கு நிகராகவும் பரவி வழிபடும் தன்மையதாக அமைந்துவிட்டதால் இலக்கண விளக்க மரபுகளைக் கண்டறிதல், அவற்றை மதிப்பீடு செய்தல், அவற்றுள் சிறந்த ஒன்றைத் தெரிவு செய்தல் ஆகியவை தொடர்பான சிந்தனைகளுக்கு இடமில்லாமற் போய்விட்டது. அதனால்தான் இன்றளவும் *காண்டும், சேறும், வருதும், காண்கும்* ஆகியவற்றில் நிகழும் தன்மைப்பன்மை விகுதிகளைத் தொல்காப்பியர் சொன்னதைப் போலவே *-டும், -றும், -தும், கும்* என்று நாம் சுரம் பிசகாமல் சொல்லிக் கொண்டிருக்கிறோம். மேற்குறிப்பிட்ட பழந்தமிழ் வினைகளின் அமைப்பை முறையே *காண்-உத்+உம்/காண்-த்+உம், செல்-உத்+உம், வர்-உத்+உம், காண்-க்+உம்* என்று ஏன் ஆராயக் கூடாது என்பதை நம்மில் எத்தனை பேர் எண்ணிப் பார்த்திருப்பார்கள்? இந்திய விடுதலைக்குப்பின் மேற்கொள்ளப்பட்ட இலக்கண விளக்க மரபுகள் பற்றிய ஆய்வுகளின் எண்ணிக்கையும், போக்கும், தரமும் நமக்குச் சோர்வளிப்பனவாகவே உள்ளன. மரபிலக்கணங்களை விளக்கமுறை (Descriptive) இலக்கணங்களாகக் கருதாமல் விதிமுறை (Prescriptive) இலக்கணங்களாகக் கருதும் மனோபாவம் இருக்கும்வரை இந்த நிலை நீடிக்கத்தான் செய்யும். விளக்கமுறை இலக்கணம் என்பது மொழியின் அமைப்பியல்புகளைக் கண்டறியும் முயற்சி என்பதையும், விதிமுறை இலக்கணம் என்பது மொழியைக் கற்பிக்கும் விதிகளின் தொகுப்பு என்பதையும் நம்மில் பலர் இன்னும் உணரவில்லை.

10.3 மரபிலக்கணங்கள் போற்றும் இலக்கண விளக்க மரபுகள் சில சமயங்களில் மொழியின் அமைப்பியல் மரபுகளை உள்ளது உள்ளபடி அறிந்துகொள்ள முடியாமல் செய்து விடுவதும் உண்டு. தொல்காப்பியரின் *-டும், -தும், -றும், -கும்* ஆய்வு இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். நன்னூலாரும் இதற்கு

விதிவிலக்கல்ல. *செங்கதிர், வெஞ்சுடர், பைங்கொடி* ஆகிய தொடர்களின் அமைப்பை முறையே *செம்மை+கதிர், வெம்மை+சுடர், பசுமை+கொடி* என்று நான்காம் வகுப்பு தொடங்கி மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட்டு வருகிறது. இதேபோல் *செய்யன், கரியன்* ஆகிய குறிப்புவினை 'முற்றுக்களும் *செம்மை+அன், கருமை+அன்* என்ற அமைப்பினவாக கருதப்படுகின்றன. இத்தகைய ஆய்வுக்கு வித்திட்ட பெருமை நன்னூலாரையே சாரும் (நன்னூல் 135, 136). *செய்யன், கரியன்* ஆகியவற்றை முறையே *செம்மை+அன், கருமை+அன்* என்று கொள்ளும்போது *செய், கரி* ஆகியவை *செம்மை, கருமை* ஆகியவற்றின் மாற்றுருபுகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. இந்த ஆய்வு நமக்கு உடன்பாடே. ஆனால் *செங்கதிர், பைங்கொடி, வெம்பரல்* ஆகிய தொடர்களில் நிகழும் நிலைமொழிகளாகிய *செம்* (< செய்+ம்), *பைம்* (< பை+ம்), *வெம்* (< வெய்+ம்) ஆகியவை குறிப்புப் பெயரெச்சங்களாகும். இவற்றை எப்படி *செம்மை, பசுமை, வெம்மை* ஆகிய பகாநிலைப் பண்புப் பெயர்களின் மாற்றுருபுகளாகக் கொள்ளமுடியும்? இந்த ஆய்வை நாம் மதிப்பீடு செய்யாமைக்குக் காரணம் முன்பே குறிப்பிட்டபடி மரபிலக்கண நூற்பாக்களை இறைத்தன்மை பொருந்திய மகாவாக்கியங்களாக நாம் கருதத் தலைப்பட்டமை யேயாகும்.

*10.4* இலக்கண விளக்கம் என்பது மொழியின் அமைப் பியல்புகளை அறிவார்ந்த நிலையில் புரிந்துகொள்ளும் ஒரு முயற்சியாகும் என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டது. ஆயினும் இலக்கணம் இத்துடன் அமைந்துவிடுவதில்லை. அதற்கு ஒரு நோக்கம் உண்டு. பாணினியின் அஷ்டாத்யாயி இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் வாழ்ந்த உயர்வகுப்பினரின் பேச்சு மொழியைச் சிதைவினின்றும் மீட்பதற்கு வகுக்கப்பட்ட இலக்கணமாகக் கருதப்படுகின்றது. ஏறத்தாழ நாலாயிரம் நூற்பாக்களைக் கொண்ட அஷ்டாத்யாயி வேதமொழியை விளக்கும் 420 நூற்பாக்களை உள்ளடக்கியதாகவும் இவற்றுள் “250க்கு மேற்பட்ட சூத்திரங்கள் ஒலியமுத்தத்தை விளக்குவதாக அமைகிறது” என்றும் கருதப்படுகிறது (மீனாட்சி. கு. 1994:126). இதனின்றும் பாணினி பேச்சுமொழியையும் வேதமொழியையும் விளக்கும்வகையில் தமது இலக்கண விளக்க முயற்சியை மேற்கொண்டார் என்று புலனாகிறது. தொல்காப்பியரின்

எழுத்தும் சொல்லும் இலக்கியவியலாகிய பொருளதிகாரத்துக்கு அடிப்படையாக அமைவதாக இறையனார் களவியலின் உரையாசிரியராகிய நக்கீரர் குறிப்பாக உணர்த்துகின்றார். சங்க இலக்கியம் பிரதிபலிக்கும் பழந்தமிழின் அமைப்பியல் மரபுகளை விளக்கும் முயற்சியாகவே தொல்காப்பியரின் எழுத்தும் சொல்லும் அமைந்துள்ளனவாகத் தோன்றுகின்றன. தொல்காப்பியரின் மொழி இலக்கணம் வழக்குமொழி, செய்யுள் மொழி இரண்டையும் ஒருசேர விளக்கும் முயற்சி என்று பனம்பாரனார் குறிப்பிடுவார் (தொல். எழுத்து. இளம். சிறப்புப் பாயிரம்). சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ள பழந்தமிழை ஆராயும்போது அதில் பல கிளைமொழிகளின் தாக்கத்தை உணரமுடிகிறது. இதன் பிரதிபலிப்பைத் தொல்காப்பிய மொழி இலக்கணத்தில் தெளிவாகக் காணமுடிகிறது. ஒரு செவ்வியல் மொழியில் பல்வேறு கிளைமொழிகள் ஊடாடும்போது அமைப்பியல் மரபுகள் ஆய்வாளனுக்கு அறைகூவலாக அமைகின்றன. இதனால்தான் ஆய்வாளன் ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கண விளக்க மரபுகளைக் கருத்தில் கொள்ள வேண்டிய தாகிறது. இத்தகைய நிலையில் ஒருங்கிணைந்த ஆய்வு மரபைப் போற்றுவது ஆய்வாளனின் தலையாய கடமையாகும். ஆனால் தொல்காப்பிய எழுத்தியல் ஆய்வில் இந்த மரபு பெரிதும் புறக்கணிக்கப்பட்டுள்ளது. சில எடுத்துக்காட்டுகள் மூலம் இத்தகைய நிலையைப் புலப்படுத்தலாம்.

10.5 *புளிங்கூழ்/புளிக்கூழ்* (தொல். எழுத்து. இளம். 246, 247) *பூங்கொடி/பூக்கொடி* (தொல். எழுத்து. இளம். 269) ஆகிய இணைகளில் மெல்லெழுத்து மிகுதியும் வல்லெழுத்து மிகுதியும் குறிக்கப்படுகின்றன. இந்த மெல்லெழுத்தும் வல்லெழுத்தும் புணர்ச்சி நிலையில் தொடர்புள்ளவை என்பதைப் புலப்படுத்தும் இலக்கண விளக்கம் சிறப்புடையதாகக் கருதப்படும். இந்த இரண்டையும் எடுத்துக்காட்டாக, மகரத்தின் திரிபாகக் கொள்ளும்போது அவை ஒன்றோடொன்று தொடர்புடையவை என்ற உண்மை பெறப்படுகின்றது. இதனைப் பின்வரும் எழுத்தியல் விதிகள் மூலம் விளக்கலாம்.

(1) புளி-ம்+கூழ் > { புளிங்கூழ்<br>புளி-ங்+கூழ் > புளிக்கூழ் }

(2) பூ-ம்+கொடி> { பூங்கொடி<br>பூ-ங்+கொடி > பூக்கொடி }

தொல்காப்பியரின் ஆய்வு இதற்கு மாறுபட்டதாகும். இதற்கான காரணம் பின்னர்ப் புலனாகும்.

10.6 தொல்காப்பியர் மெல்லொலித் திரிபினை இரண்டு நிலைகளில் ஆராய்கிறார். ஒன்று, ஒலிப்புத் தன்மையையும் (Manner of Articulation) இன்னொன்று, ஒலிப்பிடத்தையும் (Place of Articulation) அடிப்படையாகக் கொண்டதாகும். ஒலிப்புத் தன்மையை முதன்மையாகக் கொண்ட ஆய்வில் மெல்லொலி யானது அதன்பின் நிகழும் வல்லொற்றின் ஒலிப்பிடத்துக்கேற்ப இன மெல்லொற்றாகத் திரிந்தாலும் தொடர்ந்து அது இன வல்லொற்றாகத் திரிவதில்லை. எடுத்துக்காட்டாக, *பாலம்+கள்* என்பது *பாலங்கள்* என்று திரியுமே தவிர **பாலக்கள்* என்று திரியாது. ஒலிப்பிடத்தை முதன்மையாகக் கொண்ட ஆய்வில் மெல்லொற்றானது அதன்பின் நிகழும் வல்லொற்றின் ஒலிப்பிடத்துக்கு ஏற்பத் திரிவதுடன் தொடர்ந்து இன வல்லொற்றாகவும் திரிந்து முடிகின்றது. எடுத்துக்காட்டாக, *அறம்+செயல்* என்பது **அறஞ்-செயல்* எனத்திரிந்தும் பின்னர் *அறச்செயல்* என்று திரிந்தும் முடிகின்றது. தொல்காப்பியரின் ஆய்வில் **அறஞ்-செயல்* என்ற இடைநிலை வடிவத்துக்கு வாய்ப்பே இல்லை. மாறாக, *அறம்+செயல்* என்பதில் உள்ள மகரம் கெட்டு, அங்கே வருமொழி முதல் வல்லொற்று மிகுவதாகத் தொல்காப்பிய ஆய்வு அமைகிறது. இந்த ஆய்வை *அறங்காவல்* என்ற தொடரை வருவிப்பதற்கும் தொல்காப்பியர் பயன்படுத்துகிறார். *அறம்+காவல்* என்பதில் மகரம் கெட்டு அங்கே வருமொழி முதல் வல்லொற்றின் இன மெல்லொற்று மிகுவதாகக் கொள்கிறார் தொல்காப்பியர். நிலைமொழியீற்று மெல்லொற்றைக் கெடுத்து அங்கே வருமொழி முதல் வல்லொற்றின் இன வல்லொற்றையும் இன மெல்லொற்றையும் மிகுவிக்கும் ஒரு செயற்கையான ஆய்வை *வெரிந்+குறை* (தொல். எழுத்து. இளம். 301, 302), *குளம் + கரை* (தொல். எழுத்து. இளம். 311, 313), *தேன்+கூடு* (தொல். எழுத்து. இளம். 341, 342) ஆகிய அடிநிலை வடிவங்களுக்கும் விரிவுபடுத்துகிறார் தொல்காப்பியர். *செருவக்களம்* (<செரு-அம்+களம்) (தொல்.எழுத்து.இளம். 261) என்ற தொடரை வருவிக்கவும் இதே ஆய்வுதான். சுற்றி வளைத்துப் பார்க்கும்போது, *நிலக்கு* (குறள். 570, 572, 1003) (< நிலம் + கு) என்பதற்கும் இந்தத் தொல்காப்பிய ஆய்வு பொருந்தும். இந்த ஆய்வில் உள்ள ஒரு நெருடல் அல்லது

பலவீனம் என்னவென்றால், நிலைமொழியீற்று மெல்லொற்று கெடுவதற்கான எழுத்தியல் அல்லது ஒலியனியல் காரணம் எதுவும் குறிப்பிடப்படவில்லை. இங்கே மெல்லொற்றுக்கேடு இலக்கை மட்டுமே கருத்தில் கொண்டதாகத் தோன்றுகிறது. ஓர் ஆய்வில் இலக்கு எந்த அளவுக்கு முக்கியமோ அந்த அளவுக்கு அதையடைய மேற்கொள்ளும் நெறிமுறைகளும் முக்கியமானவை யாகும். ஒரு மெல்லொலி நேரடியாகத் தனக்குத் தொடர்பில்லாத ஒரு வல்லொலியாகத் திரிய வாய்ப்பில்லை. அந்த மெல்லொலி யானது வல்லொற்றின் இன மெல்லொற்றாகத் திரிந்த பிறகே இன வல்லொற்றாகத் திரிய முடியும். இந்தப் புணரியல் மரபைத் தளர்த்தி அல்லது புறந்தள்ளி ஒரு மாற்றுப் புணரியல் மரபைத் தொல்காப்பியர் மேற்கொண்டதற்கான காரணம் சிந்திக்கத் தக்கதாகும்.

*10.7* மெல்லொற்றைக் கெடுத்து வருமொழி முதல் வல்லொற்றை மிகுவிக்கும் தொல்காப்பியரின் மாறுபட்ட புணரியல் மரபு தொடர்பாக இரண்டு காரணங்களை இங்கே குறிப்பிடலாம். அவை:

(3) ஒரு குறிப்பிட்ட மெல்லொலியை அடுத்து நிகழும் வல்லொலியானது முன்னதன் தாக்கத்தால் தனது நிலையொலித் தன்மையை (Voiceless Character) இழந்து அலையொலித் தன்மையதாக (Voiced Character) அமையுமாயின் அந்தக் குறிப்பிட்ட மெல்லொலியானது (இன) வல்லொலியாகத் திரிய வாய்ப்பில்லை. எடுத்துக்காட்டு: *செம் + தளிர் > செந்தளிர், அறம் + காவல் > அறங்காவல்.* இங்கே வருமொழி முதல் வல்லொற்றுக்கள் அலையொலி யாகத் திரிந்தமையால் **செத்தளிர் *அறக்காவல்* என்ற வடிவங்கள் தோன்றியமைய வாய்ப்பு இல்லாமற் போய்விட்டது.

(4) ஒரு குறிப்பிட்ட மெல்லொலியை அடுத்து நிகழும் வல்லெ :லியானது நிலையொலித் தன்மையை இழக்காத நிலையில் முன்னது இனமெல்லொற் றாகத் திரிந்து பின்னர் இன வல்லொற்றாகத் திரிகின்றது. எ-டு: *நிலம்+கரி > *நிலங்-கரி > நிலக்கரி, நிலம்+கு > *நிலங்-கு > நிலக்கு, தேன்+ கூடு > தேங்-கூடு > தேக்கூடு, அழன்+குடம் >*

**அழங்-குடம் > அழக்குடம், வெரிந்+குறை > *வெரிங்-குறை > வெரிக்குறை, நிலம்+து > *நிலந் + து > நிலத்து.*

மேலே (3), (4)-இல் குறிப்பிட்ட இரண்டு காரணங்களுள் முதல் காரணம் தொல்காப்பிய ஆய்வுக்கு இசைவானதாகும். ஆனால் மெல்லொலித்திரிபு தொடர்பாக (4)-இல் குறிப்பிடப்பட்டுள்ள காரணத்தைத் தொல்காப்பியர் பொருட்படுத்தவில்லை. காரணம், மெல்லொற்றை அடுத்து நிகழும் வல்லொற்று எங்கும் அலையொலித் தன்மையதாகவே அமையுமென்று எழுதப்படாத ஒரு நிலைப்பாட்டினைத் தொல்காப்பியர் மேற்கொண்டு விட்டார். இது நிகழ்நிலை உண்மையாக இருக்கலாம். ஆனால் *நிலக்கு, நிலக்கரி* ஆகியவை ஒரு தொன்மையான புணரியல் மரபின் பிரதிபலிப்புகளாகும். இதனை விளக்கும் வகையில் ஓர் இயல்பான இலக்கண விளக்க மரபை அமைத்துக் கொள்வதில் தமிழ் எழுத்தியல் தனக்கு இசைவாக அமையவில்லை என்று தொல்காப்பியர் கருதியிருக்கக்கூடும். தமிழில் வல்லொற்றுக்கள் அலையொலியன்களாகவும் (Voiced Phonemes) அமைந்திருக்கு மாயின் தொல்காப்பியரின் இலக்கண விளக்க மரபுகள் மேலே (4)-இல் குறிப்பிட்டுள்ள உண்மைகளைக் கருத்தில் கொண்டிருக்கும். ஆனால் இந்த ஒரு காரணத்தாலேயே மெல்லொலிக்கேடு தொடர்பாகத் தொல்காப்பியர் மேற்கொண்ட இலக்கண விளக்க மரபுக்கு மாற்று இல்லை என்று நாம் கருதிவிடக்கூடாது.

10.8 இலக்கண விளக்கம் பல்வேறு வகையான கட்டுப்பாட்டு விதிகளைக் (Rules of Constraints) கொண்டதாகும். தொல்காப்பிய ஆய்வில் இத்தகைய விதிகளை மிகுதியாகக் காணலாம். இது போன்ற விதிகள் மெல்லொற்றை அடுத்து நிகழும் வல்லொற்று அலையொலியாகத் திரிவதைக் கட்டுப்படுத்தும். *நிலம்+கு* என்பது **நிலங்+கு* எனத் திரிந்து *நிலக்கு* என அமைகிறது. இதில் **நிலங்-கு* என்பதில் ககரம் அலையொலியாகத் திரியும் என்று ஏன் கருத வேண்டும்? இந்த அமைப்பில் மெல்லொற்றை அடுத்து நிகழும் ககர மெய் நான்கன் உருபாகலின் அது அலையொலியாகத் திரியாது. இது ஒரு கட்டுப்பாட்டு விதி. இந்த விதியானது வல்லொற்றின் முன் நிகழும் மெல்லொற்றை இனவல்லொற்றாகத் திரியச் செய்கிறது. இதுபோன்ற கட்டுப்பாட்டு விதிகள் தொல்காப்பியர் எதிர்நோக்கும் சிக்கலைத் தீர்த்து வைக்கிறது. எங்கெல்லாம் மெல்லொற்றினை அடுத்து நிகழும் வல்லொற்று

அலையொலியாகத் திரியாது என்பதை வரையறுத்துவிட்டால் அங்கெல்லாம் வலி முன் நிகழும் மெல்லொற்று வல்லொற்றாகத் திரியும் என்பது தானாகவே பெறப்படும். *வெரிங்குறை (வெரிந்+ குறை)* (தொல். எழுத்து. இளம். 301), *அறங்காவல் (< அறம் + காவல்)* (தொல். எழுத்து. இளம். 313), *தேங்கூடு (< தேன் + கூடு)* (தொல். எழுத்து. இளம். 342) ஆகியவை இந்த வரையறைக்குள் அடங்காது. இதற்கான காரணம் மேலே (3)-இல் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பிய ஆய்வு மேலே (4)-இல் கூறப்பட்டுள்ள புணரியல் மரபுகள் தொடர்பான உண்மையைக் கருத்தில் கொள்ளாமைக்குக் காரணம் அந்த ஆய்வானது புற நிறைவை (External Adequacy) அடிப்படையாகக் கொண்டதாகும். இந்த அடிப்படையில் அமையும் இலக்கண விளக்கம் இலக்கை மட்டுமே குறியாகக் கொண்டதாகும். இலக்கை அடையும் நெறிகளின் வன்மை-மென்மை இயல்புகளைப் பற்றி அது அக்கறை கொள்வதில்லை.

10.9 மெல்லொலித் திரிபைப் போலவே லகர ளகர மருங்கொலிகளின் திரிபும் சில புணரியல் மரபுகளைக் கொண்டதாக உள்ளது. தொல்காப்பியர் மருங்கொலிப் புணர்ச்சியை விரிவாக ஆராய்ந்தாலும் அவர் இது தொடர்பாக மேற்கொண்ட இலக்கண விளக்க மரபுகள் சில அடிப்படை உண்மைகளை உய்த்துணரச் செய்யும் வகையில் அமைந்துள்ளன. ஆயினும் *கல்+தீது > கஃறீது/கற்றீது* (தொல். எழுத்து. இளம். 150, 333, 370), *வேல் + தீது > வேறீது/வேற்றீது* (தொல். எழுத்து. இளம். 150, 161, 370- உரைக்குறிப்பு) ஆகியவை தொடர்பான புணரியல் மரபுகள் நுண்ணாய்வுக்கு உரியனவாகும்.

10.10 மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொலியானது நிலையொலித் தன்மையை இழக்காத நிலையில் முந்தையவை ஒலிப்பிட நிலையில் மாறுபடாமல் வல்லொற்றுக்களாகத் திரிகின்றன. எ-டு: *கல்+குவியல் > கற்குவியல், முள் + புதர் > முட்புதர்* (இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள *தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயரில* என்ற ஆய்வுரையையும் கருத்தில் கொள்க). தகர வல்லொலியாயின் அது மருங்கொலிகளின் இனவல்லொற்றாகத் திரிவதுடன் மருங்கொலிகளும் இன வல்லொற்றுக்களாகத் திரிகின்றன. எ-டு: *நல்+திணை > *நல்+றிணை > நற்றிணை, தோள்+துணை > *தோள்+ டுணை > தோட்டுணை.* ஆனால் மருங்கொலிகளையடுத்து நிகழும் தகரம் அவற்றின் தாக்கத்தால்

அலையொலியாகத் திரியும்போது மாறுபட்ட இருவகைத் திரிபுகள் நிகழ்கின்றன. அவை:

(5) அலையொலியாகத் திரியும் தகரம், மருங்கொலிகளின் இனவல்லொற்றாகத் திரிய நெடிலடுத்தும், ஈரசைச் சொற்களின் ஈற்றிலும் நிகழும் மருங்கொலிகள் கெடுகின்றன. எடுத்துக்காட்டு: *தோள்+தோய் > *தோள்-டோய் > தோடோய்* (குறள். 149), *கோல்+தீது > கோல்-றீது > கோறீது* (தொல்.எழுத்.இளம். 161), *புனல்+தரு > *புனல்+றரு > புனறரு* (குறுந். 292.2), *கழல்+தொடி > *கழல்-றொடி > கழறொடி* (குறுந். 1.3)

(6) தனிக்குறிலையடுத்து நிகழும் ஈற்று மருங்கொலிகள் வருமொழி முதல் தகரம் அலையொலியாகத் திரிந்த நிலையில் ஒலிப்பிடம் மாறாமல் அலையொலித் தன்மையதாகிய வல்லொற்றுக்களாகத் திரிகின்றன. இவ்வாறு திரியும் வல்லொற்றுக்களை ஆய்தம் (ஃ) என்ற பொதுக் குறியீட்டினால் உணர்த்துவது மரபாகும். எ-டு: *அல்+திணை > *அல்-றிணை > அஃறிணை, முள் + தீது > *முள்-டீது > முஃடீது (தொல். எழுத்து. இளம். 400).*

மருங்கொலிகளும், மெல்லொலிகளும், அவற்றையடுத்து நிகழும் வல்லொலிகளும் புணர்ச்சியில் திரிந்தமையும் போக்கு தொல்காப்பியத்தில் பேசப்பட்டாலும் வல்லொலிகள் நிலையொலித் தன்மையதாகவும் அலையொலித் தன்மையதாகவும் நிகழும் பின்னணியில் புணரியல் திரிபுகள் மரபிலக்கணிகளால் விளக்கப்படவில்லை. இதனால் மொழியின் அமைப்பியல்புகள் பற்றிய பல அரிய உண்மைகளை அறிந்துகொள்ள முடியாமல் போகிறது. இதனை மேலும் ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம்.

10.11 தொல்காப்பியத்தைப் பொறுத்தவரை எழுத்தியல் தொடர்பான இலக்கண விளக்க மரபுகள் வெளிப்படையாக அறிவிக்கப்படாத ஒரு கோட்பாட்டுப் பின்னணியில் அமைந்தனவாகக் காணப்படுகின்றன. புணரியல் ஆய்வுக்கு அடிநிலை வடிவங்களை அமைக்கையில் நிகழ்வழக்கில் மிகுதியாகப் புழக்கத்தில் உள்ள வடிவங்களையே தொல்காப்பியர்

கருத்தில் கொள்வதாகத் தெரிகிறது. *பழூஉப்பல், குழூஉக்குறி, பருஉத்திரி, குரூஉச்சுடர்* ஆகியவற்றின் அடிநிலை அமைப்புகளில் நிலைமொழியாக *பழு, குழு, பரு, குரு* ஆகியவற்றைக் கொள்ளும் வகையில் "ழகர வுகரம் நீடிடன் உடைத்தே, உகரம் வருதல் ஆவயின் ஆன" (தொல்., எழுத்து, இளம். 262) என்ற குறியீட்டு நூற்பா அமைகிறது. இந்த நூற்பா *பழு+பல்* என்ற அடிநிலை அமைப்பிலிருந்து *பழூஉப்பல்* என்ற புறநிலை வடிவத்தைப் படைக்க முற்படுகிறது. இந்த ஆய்வில் உயிர்நெடில் தோற்றத்துக் கான ஒலியனியல் உந்துதல்கள் எதுவும் விளக்கப்படவில்லை. இதற்குக் காரணம், நிகழ் வழக்கில் காணப்படும் *பழு* என்பது அடிநிலை அமைப்பில் நிலைமொழியாகக் கொள்ளப்பட்டதே யாகும். இந்த ஆய்வுமுறை புற நிறைவினைக் கருத்தில் கொண்டதாகும். அடிநிலை வடிவங்கள் வழக்கில் நிகழும் வடிவங்களாகத் தான் இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை.

10.12 இலக்கண விளக்கம் என்று வரும்போது இலக்கண ஆசிரியனுக்குச் சில கடமைகளும் உரிமைகளும் உண்டு. கடமைகள் என்பது இலக்கண விளக்கத்தை மொழியில் காணப் படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைப் (Deep-Seated Regularities) புலப்படுத்தும் வகையில் தனக்குள்ள பொறுப்புக்களை இலக்கண ஆசிரியன் உணர்தலாகும். உரிமைகள் என்பது உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளை அறிவார்ந்த நிலையில் விளக்குவதற்கான அடிநிலை வடிவங்களை அமைத்துக் கொள்வது பற்றியதாகும். இந்த அடிப்படையில் அமையும் அமைப்பியல் மரபுகள் மீதான இலக்கண விளக்கம் அகநிறைவைக் (Internal Adequacy) கருத்தில் கொண்டதாகும். அக நிறைவின் அடிப்படையில் அமையும் ஆய்வில் அடிநிலை வடிவங்கள் அகமீட்டுருவாக்கத்தின் (Internal Reconstruction) மூலம் இனங்காணப்பட்டவையாகவோ அல்லது வரலாற்று நிலையில் நிகழக் கூடியவையாகவோ இருக்கலாம்; அல்லது கற்பித வடிவங்களாகக்கூட இருக்கலாம். பெரும்பாலும் கற்பித வடிவங்கள் வரலாற்று நிலையிலோ, ஒப்பீட்டு நிலையிலோ, அகமீட்டுருவாக்கம் செய்யப்பட்ட நிலையிலோ இனங்காணப் படலாம். இதனைக் கருத்தில் கொண்டு *பழூஉப்பல்* என்பதன் அடிநிலை அமைப்பைப் **பழுவ்+பல்* என்று குறிக்கலாம். இந்த அமைப்பில் நிகழும் **பழுவ்* என்ற நிலைமொழியானது *பழூஉ, பழூஉ* என்று திரிவதற்கான எழுத்தியல் உந்துதல்களைக்

கொண்டதாக அமைகிறது. **பமுவு* என்பதில் உள்ள வகர மெய்க் கேட்டினைத் தொடர்ந்து அந்த இழப்பை ஈடு செய்யும் வகையில் முந்துகரம் நெடிலாகத் திரிகிறது.

10.13 அமைப்பியல் மரபுகள் மீதான இலக்கண விளக்கம் இரண்டு வகையில் அமையலாம் என்பது மேலே உணர்த்தப் பட்டது. இவற்றுள் ஒன்று புற நிறைவையும், இன்னொன்று அக நிறைவையும் கருத்தில் கொண்டதாகும். தொல்காப்பிய ஆய்வு முறையானது புற நிறைவை அடிப்படையாகக் கொண்டதாகும். தொல்காப்பியரின் எழுத்தியல் தரவுகளை அக நிறைவைக் கருத்தில் கொண்ட இலக்கண விளக்கத்திற்கு உட்படுத்த முடியும். இது மொழியின் உண்மையான அமைப்பைப் புரிந்து கொள்ளத் துணைபுரிவதுடன் தொல்காப்பிய எழுத்தியலை மதிப்பீடு செய்யவும் உதவும். இந்த வகையில் இலக்கண ஆய்வுக்கு மொழியியலின் பங்களிப்பு தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

10.14 தமிழில் தெரிநிலை வினைமுற்றுக்களில் கால இடைநிலைகளாகிய த, க, ப ஆகியவற்றின் முன் இன வல்லொற்றுக்கள் மிகும் நிலை வல்வினைத் திரிபுகளில் காணப் படுகிறது. எ-டு: *பறித்தான், பறிக்கான்/பறிக்கிறான், பறிப்பான்.* மெல்வினைத் திரிபுகளில் இறந்தகால விகுதியாகிய தகரத்தின் முன் இன மெல்லொற்றாகிய நகரத்தின் நிகழ்ச்சி காணப்படுகிறது. எ-டு: *அறிந்தான்.* இந்த இனமெல்லொற்று பத்து வினைகளில் கெடுகிறது. எ-டு: *செய்து-, பெய்து-, கொய்து-, நெய்து-, வைது-, எய்து-, உழுது-, அழுது-, தொழுது-, பொருது-.* பழந்தமிழில் *அளித்தும்* (=அளிப்போம்), *அளித்தி* (=அளிப்பாய்), *அளித்திர்* (=அளிப்பீர்) ஆகிய இறவாக்கால வல்வினைமுற்றுக்களிலும் கால இடைநிலையின் முன் இனவல்லொற்றின் மிகுதி காணப்படுகிறது. இவ்வாறு கால இடைநிலைகளின் முன் நிகழும் வல்லொற்று, மெல்லொற்று மிகுதிகளைப் பற்றிய விளக்கம் மரபிலக்கணங் களில் காணப்படவில்லை. நன்னூலார் இவற்றைச் சந்தி எனக் குறிப்பதாகத் தோன்றுகிறது (நன். 133). இதனை இலக்கண விளக்கமாகக் கொள்ள முடியாது. இந்த வல்லொற்று, மெல்லொற்று மிகுதிகளை மகரத்தின் திரிபாகக் கொள்ள முடியும். இதனைக் கருத்தில் கொண்டு *பறித்து-/அறிந்து-, பறிக்கு-, பறிப்பு-* ஆகிய காலப்பகுதிகளை (Tense Bases) முறையே **பறிம்+து/அறிம்+து, பறிம்+கு, பறிம்+பு* என்று ஆராயலாம். வினையடிகளைப் பொறுத்தும் அவற்றின் வேறுசில

இலக்கணப் பண்புகளைப் பொறுத்தும் (எ-டு: செயப்படு பொருள் குன்றுதல், செயப்படுபொருள் குன்றாமை) மகரம் வல்லொற்றாகவோ, மெல்லொற்றாகவோ திரிந்தமையும். எ-டு: *பறிம்+து > *பறிந்-து> பறித்து; அறிம்-து > அறிந்-து.* இந்த ஆய்வில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில் *செய்* வாய்பாட்டு வினைப்பகுதிகளின் மாற்றுருபாகச் *செய்ம்* வாய்பாட்டு வினைப்பகுதிகள் அமைவதாகும். அகநிறைவைக் கருத்தில் கொண்டு வகுக்கப்படும் இலக்கணங்கள் இத்தகைய ஆய்வுக்குத் தடையாக நிற்பதில்லை. கருதுக: தெலுங்கில் *சேயுமு* (= செய்யும்) வாய்பாட்டு வினைகள் முன்னிலை ஏவற்பொருண்மையை உணர்த்தும் வினைகளாகவும் நிகழ்கின்றன. *செய்ம்* வாய்பாட்டு வினைகள் வரலாற்று உண்மையாகலின் இவற்றை வினைப் பகுதிகளின் மாற்று வடிவங்களாகக் கொள்வது ஏற்புடையதே யாகும். மொழியமைப்பில் எங்கெல்லாம் வல்லொற்றும் மெல்லொற்றும் மிகுகின்றதோ அங்கெல்லாம் அடிநிலை அமைப்பில் மகர மெய்யைப் பெய்து மேற்படி மிகுதிகளை விளக்கலாம். எ-டு: *அவன்-ஐம்+பார் > அவனைப்பார். ஊர்-உம்+கு > *ஊருங்கு > ஊருக்கு. ஐம்* (=அய்ம்) என்பது இரண்டாம் வேற்றுமை உருபாகிய *ஐ* என்பதன் மாற்றுருபாகும். இந்த மாற்றுருபு *அம்* எனத் திரிந்து பழங்கன்னடத்தில் இரண்டாம் வேற்றுமை உருபாக நிகழ்கின்றது. (S.V. Shanmugam 1971:297). மொழியின் நுண்ணிய அமைப்பியல் மரபுகள் அக நிறைவைக் கருத்தில்கொண்டு விளக்கப்படும்போது அத்தகைய இலக்கண விளக்கமானது மொழியின் அமைப்பியல் நிகழ்வுகளை நன்கு புரிந்துகொள்ள வகை செய்கின்றது.

*10.15* இந்த உரையை முடிக்குமுன் தமிழ் நெடுங்கணக்கில் இடம்பெற்றுள்ள ஆய்தம் பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். தொல்காப்பியமும் நன்னூலும் இதனைச் சார்பெழுத்தாகக் கொள்ளும். மொழியியலார் சார்பெழுத்தைச் சார்ந்தொலி (Allophone) என்று குறிப்பிடுவர். தொல்காப்பியர் ஆய்தத்தை ஆய்தப் புள்ளி (எழுத்து. இளம். 38) எனக் குறிப்பிடுவதைக் கருத்தில் கொண்டு ''புள்ளி என்றதனால் ஆய்தத்தை மெய்ப்பாற்படுத்துக் கொள்க'' என்று இளம்பூரணர் ஆய்தம் மெய்யொலி என்பதை உறுதிப் படுத்துவார். வடமொழியில் உயிர் நெடுங்கணக்கின் ஈற்றில் 'அஹ' என ஒலிக்கப்படும் விசர்க்கம் குறிக்கப்படுவதைப் போல் தமிழிலும் உயிர் நெடுங்கணக்கின்

ஈற்றில் ஆய்தம் குறிக்கப்பட்டு 'அஹ்' என்று ஒலிக்கப்படுகிறது. ஆய்தத்தின் இந்த ஒலிப்பு தவறானது. இது விசர்க்கத்தின் தாக்கத்தால் ஏற்பட்டது.

10.16 ஆய்தத்தின் ஒலிப்பிடம் அல்லது ஒலித்தன்மை பற்றிய தொல்காப்பியர் கருத்தும் நன்னூலார் கருத்தும் மாறுபடுகின்றன. 'ஆய்தக்கு இடந்தலை, அங்கா முயற்சி' (நன். 87) என்று ஆய்தத்தின் இயல்பைக் குறிப்பிடுவார் நன்னூலார். 'ஆய்தம் பிறத்தற்கு இடம் தலை, தொழில் வாயைத் திறத்தலாம்' என்று இதற்கு உரை வகுக்கப்படுகிறது (காண்டிகை உரை, ஆறுமுக நாவலர் பதிப்பு). தான் சார்ந்து வரும் வல்லொற்றுக்களின் பிறப்பிடத்தையே தனக்குரிய பிறப்பிடமாக உடையது ஆய்தம் என்பது தொல்காப்பியரின் (எழுத்து. இளம். 101) முடிவு. ஆய்தம் தனிமொழியிலும் (தொல். எழுத்து. இளம். 38), புணர்மொழி யிலும் (தொல். எழுத்து. இளம். 39, 380, 370, 400) நிகழும் பெற்றியது. நன்னூலாரின் ஆய்தம் பற்றிய விளக்கம் தெளிவின்றிக் காணப்படுகின்றது. இந்த ஆய்வுரையில் தொல்காப்பியரின் கருத்து ஏற்கப்படுகிறது.

10.17 தொல்காப்பியர் ஆய்தத்தை ஒரு பொது ஒலியனுக்கு (Archi Phoneme) உரிய குறியீடாகவே பயன்படுத்துகிறார். தொல்காப்பியர் கருத்தை அடியொற்றி ஆய்தத்தின் ஒலியியற் பண்பைப் பின்வருமாறு பொதுமைப்படுத்தலாம்.

(7) ஆய்தம்: [+வல்லொற்று, +அலைமை (Voicing)]

ஆய்தம் பற்றிய இந்தக் குறிப்பு ஒரு பொது விளக்கமாகும். [+வல்லொற்று] என்ற குறிப்பு இந்த விளக்கத்தில் காணப் பட்டாலும் அந்த வல்லொற்று எதுவாக இருக்கும் என்ற குறிப்பு இந்தப் பொது விளக்கத்தில் குறிக்கப்படவில்லை. காரணம், சார்ந்து வரும் வல்லொற்றைப் பொறுத்தே ஆய்தம் குறிப்பிடும் வல்லொற்று எது என்பது பெறப்படும். எடுத்துக்காட்டாக, தகரத்தின் முன் ஆய்தம் நிகழ்ந்தால் மேலே (7)-இல் குறிக்கப்பட்டுள்ள விளக்கம் பின்வருமாறு அமையும்.

(8) ஆய்தம் (சிறப்பு): [+வல்லொற்று, +அலைமை, +அண்பல் (Dental)]

இந்தக் குறிப்பானது *அஃது, பஃது* ஆகியவற்றில் நிகழும் ஆய்தம் அலையொலித் தன்மை பொருந்திய தகர மெய் என்பதை

உணர்த்துகிறது. எனவே இந்தச் சொற்கள் addu. paddu என்று ஒலிக்கப்படும். புணரியல் மொழியில் வகர மெய்யும் லகர ளகர மருங்கொலிகளும் ஆய்தமாகத் திரிகின்றன. (பார்க்க: இந்த உரையின் 10-ஆம் பிரியில் குறிக்கப்பெற்றுள்ள 6-ஆம் குறிப்பு) எடுத்துக்காட்டு: *அவ்+பெரிய > அஃபெரிய* (தொல். எழுத்து. இளம். 380), *அல்+திணை > அஃறிணை, முள் + தீது > முஃடீது* (தொல். எழுத்து. இளம். 370, 400). இங்கே பெறப்பட்டுள்ள *அஃபெரிய, அஃறிணை, முஃடீது* ஆகிய புறநிலை வடிவங்களின் ஒலிப்பு தொல்காப்பியரின் விளக்கத்தையொட்டி முறையே **abberiya, addiNai, muDDi:tu** என்று அமையும். ஆனால் ஆய்தத்தின் ஒலிப்புமுறை எல்லா இடத்திலும் பிற்காலத்தில் வடமொழி விசர்க்கத்தின் தாக்கத்தால் ககர உரசொலியாக (Velar Fricative) மாறிவிட்டது. *எஃகு* என்பதில் உள்ள ஆய்தம் பலரால் நிலையொலித்தன்மை பொருந்திய ககர உரசொலியாகவும் (Voiceless Velar Fricative), சிலரால் அலையொலித் தன்மையதாகிய ககர வல்லொலியாகவும் (Voiced Velar Plosive) இன்று ஒலிக்கப் படுகின்றது. பிந்தியதே அதன் உண்மையான ஒலிப்பாகும்.

❀ ❀ ❀

# 11. இலக்கியம் தேடும் இலக்கணம்

## *11.1.* பேசுதுக்கு எவ்வளவோ இருக்கு

*11.1.1.* இக்காலத் தமிழுக்கு ஒரு புதிய இலக்கணம் வகுக்க வேண்டும் என்ற எண்ணம் சிலகாலமாக மேலோங்கி வருகிறது. தமிழில் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் இலக்கியங்களில் சிதறிய வழக்கில் (Complementary Distribution) நிகழும் நிலை பொதுவாகக் காணப்படுகிறது. தமிழ் ஓர் இரட்டை வழக்கு மொழியாகலின் (Diglossic Language) இது இலக்கியங்களில் - குறிப்பாக வட்டார வழக்கு இலக்கியங்களில் - தவிர்கக முடியாத ஒன்றாகும். இலக்கியத்தில் செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் இடம்பெற வாய்ப்புள்ளதால் இலக்கியமொழி என்ற ஒன்றைத் தனியாகச் சுட்ட முடியாது. இந்த நிலையில் இக்காலத் தமிழுக்கான இலக்கணம் எந்தத் தமிழுக்கு எதனை அடிப்படையாகக் கொண்டு அமைய வேண்டும் என்பது பற்றிச் சிந்திக்க வேண்டியது அவசியமாகிறது.

*11.1.2.* புதிதாக வகுக்கப்படும் எந்த இலக்கணமும் மொழியின் பயன்பாட்டுக் களங்களைக் கருத்தில் கொள்ள வேண்டும். இந்தக் களங்கள் வேறு எப்போதையும்விட இப்போது பல்கியும் விரிந்தும் பரந்தும் காணப்படுகின்றன. ஒரு பக்கம் அறிவியல் மற்றும் தொழில்நுட்பச் சாதனைகள் உலகை ஒரு கையடக்கப் பதிப்பாக்கிவிட்டன. இன்னொரு பக்கம் இலக்கியம் பல சோதனை முயற்சிகளைக் கண்டுவருகிறது. மொழிப் பயன்பாடு என்று வரும்போது எது சரி எது தவறு என்ற மயக்கம் தொடர்கிறது. *இஃதொத்தன்* (கலி. 62.1) போல *யார் அது* (மு.வ. 1978:10) என்பதும் இலக்கணப் புலவர்களைச் சீண்டுவது போல இலக்கியத்தில் பதிவாகியுள்ளது. *இருபத்தியாறு* என்பதும் *நாட்கள்* என்பதும், *செய்திகள் வாசிப்பது கிறிஸ்டி* என்பதும், *அங்கே நிற்பது யார்* என்பதும் பிழை வழக்குகள் என்று சொல்லி நம்மை ஆழம் பார்ப்போர் ஒரு புறம்; நீண்ட நெடுங்காலமாக வழக்கில் இருந்துவரும் தமிழ் எழுத்தியல் மரபுகளைச் சிதைக்காத புதனும், சனியும் வேண்டாம்; அறிவனும் காரியும் தான்

வேண்டும் என்று அடம்பிடிக்கும் குழந்தைகள் இன்னொரு புறம். புதிய இலக்கணிகளுக்குத்தான் எத்தனைச் சோதனைகள்! எத்தனை அறைகூவல்கள்!

11.1.3. வட்டார வழக்கு இலக்கியங்கள் வேரூன்றி வெற்றிக் கொடி நாட்டிவரும் காலம் இது. குமரித்தமிழில் வழங்கும் செய்கு வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ்வினைகள் நாம் அறியாதவை. செய்யுது வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ்வினைகள் பொது வினைகளாக நிகழ்ந்து வேற்றுமையுருபேற்கும் பாங்கினையும் (எ-டு. *பேசுதுக்கு*/ஆ.மா 1974:17) வட்டார வழக்கு இலக்கியம்தான் நமக்குக் காட்டுகிறது. இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுக்க முற்படுவோர் வட்டார வழக்கு இலக்கியங்களைப் புறந்தள்ள முடியாது. அவ்வாறு செய்வது குருடர்கள் யானையை விளக்கியது போலாகும். விண்டுரை இலக்கணம் (Descriptive Grammar) சான்றுறுதி செய்யப்பட்ட தரவுகளின் மீது அமைய வேண்டும். இல்லாவிட்டால் கச்சியப்பருக்கு நேர்ந்த கதிதான்.

## 11.2. கச்சியப்பரின் தடுமாற்றம்

11.2.1 கச்சியப்பர் தான் இயற்றிய கந்தபுராணத்தை அரங்கேற்றுகையில் தனது முதல் காப்புச் செய்யுளில் நிகழும் *திகட சக்கரம்* என்ற தொடர் தனக்குச் சோதனையாக வந்து சேரும் என்று எதிர்பார்க்கவில்லை. *திகழ், தசம், கரம்* ஆகியவை சேர்ந்த தொடராகும் *திகட சக்கரம்*. இந்தத் தொடரில் *திகழ் + தசம்* என்பது *திகடசம்* என்று புணர்ந்தமைக்கு இலக்கணம் உள்ளதா என்று ஒரு தடை எழுந்தது. கச்சியப்பர் திகைத்தார். கடைசியில் வீரசோழியம் என்ற இலக்கண நூலில் சந்திப்படலம் பதினைந்தாம் நூற்பா தடைக்கு விடையாக அமைந்து கச்சியப்பரைக் காத்தருளியது. ஆழ்வார்களும் நாயன்மார்களும், தமிழகத்தில் வேரூன்ற முயன்ற சமண பௌத்த சமயங்களைக் கடுமையாகச் சாடிய காலம் ஒன்று உண்டு. கந்தபுராணம் ஒரு சைவக் காப்பியம்; திருமாலைக் கூடச் சிறுமைப்படுத்தத் தயங்காத ஒரு பெருங்காப்பியம். வீரசோழியம் புத்த சமயத்தைச் சார்ந்த புத்தமித்திரன் என்பவரால் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வீரராஜேந்திர சோழன் ஆட்சிக் காலத்தில் தமிழுக்கு வடமொழி மரபையொட்டி எழுதப்பட்ட இலக்கணமாகும். கடைசியில் பௌத்தம் கந்தபுராணத்தின் அரங்கேற்றத்துக்குத் துணை நின்று சைவத்தைக் காத்தது!

11.2.2. *திகட சக்கரம்* தொடர்பாக நமக்குச் சில நெருடல்கள் உண்டு. கச்சியப்பரே கந்தபுராணம் 168-ஆம் பாடலில் *சூழ்ச்சி* என்பதைச் *சூட்சி* என்றும் *தாழ்ச்சி* என்பதை *தாட்சி* என்றும் எதுகை நோக்கித் திரித்து இலக்கியம் படைக்கிறார். அதுபோல, *திகட சக்கரம்* என்பதும் மற்ற மூன்று அடிகளில் நிகழும் *சகட சக்கரம், அகட சக்கரம், விகட சக்கரன்* ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு எதுகை நோக்கி அமைந்தது என்று அமைதி கூறியிருக்கலாம். எதுகை நோக்கிய திரிபுகளைப் படைத்துக் கொள்ள கவிஞனுக்கு உரிமை உண்டு. இந்த உரிமையை ஏன் கச்சியப்பர் நிலை நாட்டிக் கொள்ளவில்லை? இன்னொரு நெருடல் வீரசோழியம் என்ற இலக்கணத்தின் நம்பகத்தன்மை தொடர்பானது. ழகரம் சந்தியில் டகரம் போல் திரிவது தொடர்பான வீரசோழிய இலக்கணத்துக்கு இலக்கிய ஆதாரம் என்ன? எதுகை நோக்கிய திரிபுகளை நடப்பியல் சான்றாகக் கொள்ள முடியாது. புத்தமித்திரனே தன்னுடைய நூற்பாக்களில் *செந்தமிட்சொல்* (நூற்பா 7) என்ற தொடரையும் நூற்பா 104-இல் *இகட்சி* (இகழ்ச்சி), *திகட்சி* (திகழ்ச்சி) ஆகிய சொற்களையும் நூற்பாக்கள் 104, 149-இல் *புகட்சி* (புகழ்ச்சி) என்ற சொல்லையும் பயன்படுத்தினாலும் இவற்றை அவரது ழகரத்தின் புணர்ச்சித் திரிபுகளுக்குச் சான்றாகக் கொள்ள முடியாது. ஏனெனில் இலக்கண வரைவுக்கான மொழித் தரவுகள் வழக்கில் நிகழ்வனவாக அமைய வேண்டும். *தாழ்ச்சி* என்பது சம்பந்தர் தேவாரத்தில் (3-ஆம் திருமுறை. 474-ஆம் பாடல், திருக்கழிப் பாலை) *தாட்சி* என எதுகை நோக்கித் திரிந்துள்ளது. *சூழ்ச்சி* என்பது சேக்கிழாரின் பெரியபுராணத்தில் (1795-ஆம் பாடல்) *சூட்சி* என எதுகையின்றியே நிகழ்கின்றது. கம்பனில் *கீட்டிசை* ( < கீழ்த்திசை/ யு.கா. 6538, 6963) என்பதில் ழகரம் டகரமாகத் திரிகிறது. இத்திரிபில் 6963-ஆம் பாடலில் எதுகையின் தாக்கம் காணப்படுகிறது. *தாட்சி* (= தாழ்ச்சி), *சூட்சி* (= சூழ்ச்சி) ஆகிய வழக்குகளும் கம்பனில் யு.கா. (6382)-இல் காணப்படுகின்றன. இவை *காட்சி, மாட்சி* ஆகியவற்றின் எதுகைக்கு இசைந்தவை யாகும். *தாழ்ச்சி, சூழ்ச்சி* ஆகியவை *மாட்சி, ஆட்சி* ஆகியவற்றின் எதுகை வடிவங்களாக நிகழும் போக்கும் கம்பனில் (யு.கா. 6081) காணப்படுகின்றது. வீரசோழியம் இந்தச் சான்றுகளை ஆதாரமாகக் கொண்டதா என்று தெரியவில்லை. எள்ளினின்றும் எண்ணை எடுபடுவது போல இலக்கியத்தினின்றும் இலக்கணம் அறியப்படும் என்பதில் நம் இலக்கணப் புலவர்களுக்குக் கருத்து

வேறுபாடு இருக்க வாய்ப்பில்லை. வீரசோழியத்தில் கூறப்படும் ழகரத்தின் புணர்ச்சித் திரிபுகள் பற்றிய இலக்கணம் இலக்கண ஆசிரியனே படைத்துக் கொண்டதா அல்லது இலக்கிய வழக்கையோ பேச்சு வழக்கையோ ஆதாரமாகக் கொண்டதா என்பதை இலக்கணப் புலவர்கள் தெளிவுபடுத்தியாக வேண்டும். இலக்கணம் என்பது மொழியின் சான்றாவணம். இந்தச் சான்றாவணம் நம்பகத் தன்மையுடையதாக இருக்க வேண்டியது மிக மிக அவசியம்.

### 11.3. உயர்ந்தோர் வழக்கு

11.3.1 செவ்வியல் வழக்கும் பேச்சு வழக்கும் அமைந்த மொழியாகும் தமிழ். இவை இரண்டும் இக்கால இலக்கியங்களில் பயன்படுத்தப்படுகின்றன. இலக்கணம் வகுத்தல் என்று வரும்போது எந்த வழக்கைக் கருத்தில் கொள்வது? செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு இரண்டுக்கும் தனித்தனியாக இலக்கணம் வகுக்கும்போது இந்தச் சிக்கல் எழ வாய்ப்பில்லை. ஆனால் இக்காலத் தமிழுக்கு எழுதப்படும் இலக்கணம் மொழியின் பல முகங்களையும் புலப்படுத்துவதாக அமைய வேண்டுமாயின் பேச்சு மொழியையும் செவ்வியல் மொழியையும் ஒருங்கிணைக்கும் ஒரு நிலையை இலக்கண ஆசிரியரின் மேற்கொள்ள வேண்டும். 'வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே, நிகழ்ச்சி அவர்கட் டாக லான' (பொருள். இளம். 638) என்ற தொல்காப்பிய நூற்பா 'உயர்ந்தோர் வழக்கு' என்ற ஒன்றை வலியுறுத்துகிறது.

11.3.2 மேலே குறிப்பிட்ட தொல்காப்பிய நூற்பாவுக்கு 'வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் மேலது நூலின் நிகழ்ச்சி அவர் மாட்டு ஆகலான்' என்று இளம்பூரணர் உணர்த்து வதாகத் தோன்றுகிறது. மொழிக்கும் இது பொருந்துமா? அப்படியானால் உயர்ந்தோர் எனப்படுவோர் யார்? கல்வியை அளவுகோலாகக் கொண்டு 'உயர்ந்தோர் வழக்கு' என்பதைக் 'கற்றோர் வழக்கு' என்று கொள்ளலாம். மொழியைப் பொறுத்தவரை கற்றோர் வழக்கு என்றும் மற்றோர் வழக்கு என்றும் பாகுபடுத்த முடியாது. செவ்வியல் வழக்கில் திளைக்கும் கற்றோர் கூடக் குடும்பத்தில் உள்ளவர்களோடு பேச்சு வழக்கைத் தான் பயன்படுத்துவர். 'உயர்ந்தோர் வழக்கு' என்பது மொழியைப் பொறுத்தவரையில் செவ்வியல் வழக்கை மட்டும் குறிக்குமாயின் அது மொழியைப் பற்றிய ஒரு முழுமையான, அறிவார்ந்த ஆக்கபூர்வமான மதிப்பீடாக இருக்க முடியாது. ஏனெனில்

மொழி என்பது செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு இரண்டையும் உள்ளடக்கியது மட்டுமல்ல; உயர்ந்தோர் எனப்படும் கற்றோர்க்குத் தாய்மொழியாக அமைவதும் பேச்சு வழக்கே யன்றிச் செவ்வியல் வழக்கல்ல. செவ்வியல் வழக்கில் அமைந்த இலக்கியங்கள் உயர்ந்தவை என்றும் வட்டார வழக்கு அல்லது பொதுப் பேச்சு வழக்கில் அமைந்தவை தரமற்ற இலக்கியங்கள் என்றும் கருதப்படுமாயின் உயர்ந்தோர் வழக்கு என்ற கூற்றும், பிறப்பை மட்டுமே கருத்தில் கொண்ட பார்ப்பனர் உயர்ந்தோர் என்ற கூற்றும் ஒன்றாகிவிடும். ஒருவன் பிறப்பால் பார்ப்பன மரபைச் சேர்ந்தவன் என்பதாலேயே உயர்ந்தவன் என்று கருதுவதை எப்படி ஏற்க முடியாதோ, அப்படியே ஒரு வழக்கு செவ்வியல் மொழிக்கு உரியது அல்லது ஓர் இலக்கியம் செவ்வியல் மொழியில் படைக்கப்பட்டது என்பதாலேயே அதை உயர்வழக்கு என்றோ உயர்ந்த இலக்கியம் என்றோ ஏற்றுக் கொள்ள முடியாது. இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போர் இதனை நினைவில் கொள்ள வேண்டும்.

### *11.4.* எதன் பொருட்டு எழுத்தும் சொல்லும்?

*11.4.1.* தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்றுக்கும் இலக்கணம் வகுத்தார். இவற்றுள் எழுத்தும் சொல்லும் மொழியைப் பற்றிய இலக்கணமாகும். பொருளானது இலக்கியவியல் (Literistics) தொடர்பானது. இலக்கியத்தின் அமைப்பியல்புகள், இலக்கிய மரபுகள் ஆகியவற்றை விண்டுரைப்பது பொருளதிகாரம். மொழி என்பது பேச்சினை அடிப்படையாகக் கொண்டது. பேச்சு இல்லையென்றால் மொழி இல்லை. பேச்சின் வழியாக அமைவது இலக்கியம். இது வாய்மொழி இலக்கியமாகவும் இருக்கலாம்; எழுத்தில் வடிக்கப்பட்ட இலக்கியமாகவும் இருக்கலாம். அப்படியானால் தொல்காப்பியரின் எழுத்தும் சொல்லும் எந்த மொழியை விண்டுரைக்கும் இலக்கணம்? விதிமுறை (Prescriptivism) / விண்டுரை முறை (Descriptivism) இவற்றுள் எந்த மரபைக் கருத்தில் கொண்டு தொல்காப்பியர் மொழிக்கும் இலக்கியத்துக்கும் இலக்கணம் வகுத்தார்? விதிமுறை இலக்கணம் என்பது மொழி எப்படி இருக்க வேண்டும் என்று கட்டுப்பாடுகளை விதிப்பதாகும். விண்டுரை இலக்கணம் என்பது மொழியும் இலக்கியமும் இப்படி இருக்கின்றன என்று விண்டுரைப்பதாகும். இவற்றுள் தொல்காப்பியர் எங்கே

வருகிறார்? இதற்கான விடையை ஓராற்றான் இறையனாரின் களவியல் தோன்றிய வரலாறு விளக்கும்.

*11.4.2.* உக்கிரப் பெருவழுதியின் காலமாக இருக்கலாம். பாண்டிய நாடு பன்னிரண்டு ஆண்டுகள் கடும் வறட்சியால் பாதிக்கப்பட்டபோது அரசன் தன்னைச் சார்ந்தோரையெல்லாம் அழைத்து 'யான் உங்களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் நுமக்கு அறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னையுள்ளி வம்மின்' என்றான். பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்து 'நாடு மலிய மழை பெய்தது'. அரசன் 'இனி நாடு நாடாயிற்றாகலின் நூல் வல்லாரைக் கொணர்க' என்று எல்லாப் பக்கமும் ஆட்போக்க, எழுத்தும் சொல்லும் யாப்பும் வல்லாரைக் கண்டு கொணர்ந்து 'பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேம்' என்று வந்தனர். எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டேயாகலின், பொருளதிகாரம் கிடைக்கப்பெறவில்லையெனில் 'இவை பெற்றும் பெற்றிலேம்' என்று அரசன் பெரிதும் வருந்த 'மதுரை ஆலவாயில் அழல் நிறக்கடவுள் சிந்திப்பான்'. அறுபது நூற்பாக்கள் கொண்ட களவியல் என்ற நூல் ஆலவாயில் அழல்நிறக் கடவுளின் அருளால் கிடைக்கப்பெற்று நக்கீரரால் பின்னர் அதற்கு உரை வகுக்கப் பெற்றது. இறையனார் களவியலின் முதல் நூற்பாவுக் கான உரையில் காணப்படும் செய்தியாகும் இது.

*11.4.3.* மேலே குறிப்பிட்ட நிகழ்ச்சி கதையா வரலாறா என்பதல்ல கேள்வி. இன்னும் சொல்லப் போனால் இது தொல்காப்பியரின் பொருளதிகாரத்தை இருட்டடிப்பு செய்யும் முயற்சியாகக் கூட இருக்கலாம். பிரச்னை அதுவுமல்ல. மொழியின் இலக்கணம் என்பது இலக்கியத்தைப் பின்புலமாகக் கொண்டது என்பதையே இறையனாரின் களவியல் வரலாறு வலியுறுத்துகிறது. இலக்கியம் இல்லாத நிலையில் எழுத்தும் சொல்லும் யாப்பும் வெற்று வெளியில் சுற்றித் திரிவது போலாகும் என்ற உண்மையை இறையனார் களவியல் உரை தெளிவுபடுத்துவதாக உள்ளது. இதனின்றும் தொல்காப்பியரின் எழுத்தும், சொல்லும் பொருளதிகாரத்தை முதன்மைப்படுத்தி வகுக்கப்பட்ட இலக்கணங்கள் என்று தெரிகின்றது. மொழிக்கும் இலக்கியத்துக்கும் இலக்கணங்கள் வகுக்கத் தொல்காப்பியர் மேற் கொண்ட நெறியைப் பனம்பாரனார் தான் தொல்காப்பியத்துக்கு எழுதிய சிறப்புப் பாயிரத்தில் இப்படிக் குறிப்பிடுவார்:

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே (எழுத்து. இளம். சிறப்புப்பாயிரம்)

இந்தப் பாயிரக் குறிப்பானது வழக்கு, செய்யுள் இரண்டையும் தொல்காப்பியர் தன்னுடைய இலக்கணத்துக்கு அடிப்படையாகக் கொண்டார் என்பதைப் புலப்படுத்துவதாக உள்ளது. இதனின்றும் இலக்கியம், மொழி ஆகியவை பற்றிய தொல்காப்பியரது இலக்கணங்கள் விண்டுரை இலக்கணங்கள் என்பது தெளிவாகின்றது.

### 11.5. இலக்கணத்தின் களங்கள்

*11.5.1.* மொழிக்கான இலக்கணம் என்பது இலக்கியத்தில் இடம்பெறும் மொழியைப் பற்றியது என்ற வரையறைக்கு உட்படுமாயின் அது செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு இரண்டையும் பற்றியதாக இருக்க வேண்டும். ஆயினும் செவ்வியல் வழக்குக்கே உரிய மொழி மரபுகளை இலக்கணம் சுட்டியாக வேண்டும். தொல்காப்பியர் அவ்வப்போது இவையிவை செய்யுள் வழக்கின என்று குறிப்பிடத் தவறவில்லை. *செஞ்ஞாயிறு, வெண்திங்கள்* போன்றவை செய்யுளில் மட்டுமே நிகழ்வதைக் கருத்தில் கொண்டு "இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை, வழக்கா றல்ல செய்யுளாறே" (சொல். சேனா. 18) என்று விண்டுரை விதி வகுப்பார் தொல்காப்பியர். இங்கே 'வழக்காறு' என்ற குறிப்பு பேச்சு வழக்கை உணர்த்துவதாகக் கருதலாம். *வில்லோன், நல்லோர்* முதலானவை செய்யுள் வழக்கில் மட்டுமே பயில்பவை என்பதை "ஆஒ வாகும் பெயருமார் உளவே, ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே" (சொல். சேனா. 195) என்றும் *ஆன், ஆள், ஆர்* ஆகிய முற்றுவிகுதிகளைக் கொண்ட வினைகள் (எ-டு: செய்தான், செய்தாள், செய்தார்) செய்யுள் வழக்கில் *ஓன், ஓள், ஓர்* ஈற்றினவாக (எ-டு: செய்தோன், செய்தோள், செய்தோர்) வழங்குவதைப் "பாலறி மரபின் அம்மூ ஈற்றும் ஆஒ வாகும் செய்யுளுள்ளே" (சொல். சேனா. 211) என்றும் *செய்தாய்* என்பது *செய்தோய்* எனவும் செய்யுள் வழக்கில் நிகழற்பாலது என்பதை

"ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்" (சொல். சேனா. 212) என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுவது மொழி வழக்குகளை ஒருங்கிணைக்கும் இலக்கண ஆய்வை அவர் பெரிதும் போற்றினார் என்பதைத் தெளிவுப்படுத்துகிறது. இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுக்க முற்படுவோர் தொல்காப்பியரின் இந்த அணுகுமுறையை நினைவில் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இக்கால இலக்கியங்களில் நிகழும் செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு இரண்டையும் ஒருங்கிணைத்து இலக்கணம் வகுக்க முடியாமல் போய்விடும்.

*11.5.2.* தமிழகத்தின் தென் மாவட்டங்களில் வழங்கும் பேச்சுத் தமிழில் ககரமும் தகரமும் நிகழ்கால விகுதிகளாகும் (எ-டு: சொல்லுகான், சொல்லுதான்) யாழ்ப்பாணத் தமிழில் ஐ என்பதும் *இன்* சாரியையை அடுத்து நிகழும் *அம்* என்பதும் பலர்பால் விகுதிகளாகும் (James W. Gair, et al. 1978). (எ-டு: *வந்தவை* (= வந்தவர்கள்), *குடிக்கிறவை* (= குடிக்கிறவர்கள்), *போகாதவை* (= போகாதவர்கள்), *அவை* (= அவர்கள்), *செய்தினும், செய்கினும், செய்வினும்*). குமரி மாவட்டத்தின் தென்பகுதியில் இதே சூழலில் *உம்* என்பது பலர்பால் விகுதியாகிறது (எ-டு: *வருவினும், போவினும்*). ஒன்றன்பால் நிகழ்வினைகள் குமரி மாவட்டத்தில் *ஓடுகு, ஓடுவு* என்றும், குமரி மாவட்டம் உள்ளிட்ட பிற பகுதிகளில் *ஓடுது* என்றும், பார்ப்பன வழக்கில் *ஓடறது* என்றும் செவ்வியல் வழக்கில் *ஓடுகிறது* என்றும் வழங்குகின்றன. முற்று விகுதிகளும் இவ்வாறே, *ஈங்க/இங்க* (எ-டு: செய்தீங்க/செய்திங்க), *ஈக* (எ-டு: செய்தீக), *இய* (எ-டு: செய்திய), *ஏள்* (எ-டு: செய்தேள்) ஆகியவை இலங்கை, இந்தியப் பேச்சு வழக்கிலும், *ஈர்கள்* (எ-டு: செய்தீர்கள்) என்பது செவ்வியல் வழக்கிலும் நிகழும் முன்னிலை (உயர்வுப்) பன்மை விகுதிகளாகும். இக்காலத் தமிழ் இலக்கணம் தொல்காப்பியரின் அணுகுமுறையைக் கருத்தில் கொண்டு இவற்றையெல்லாம் தொகுத்துச் சுட்ட வேண்டும். தொல்காப்பியரைப் போலவே இவையிவை செவ்வியல் வழக்குக்கு உரியவை என்றும் குறிப்பிட வேண்டும்.

## 11.6. தொடர்க தொல்காப்பிய மரபை

*11.6.1.* செவ்வியல் தமிழ் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சி. ஒரு காலத்தில் அதுவும் பேச்சுத் தமிழே. பேச்சுத் தமிழ் என்பது ஓர் நடப்பியல் உண்மை. செவ்வியல் தமிழுக்குத் தாய்மொழியாளர் இல்லை. பேச்சுத் தமிழுக்குத் தாய்மொழியாளர் உண்டு. பேச்சுத்

தமிழ் என்பதாலேயே அது கொச்சை வழக்கு ஆகிவிட முடியாது. *குருவி, தழுவி, தழுவியது* ஆகியவை முந்தையதோர் தமிழில் *குரீஇ* (குறுந். 374.5), *தழீஇ* (நற். 47.4), *தழீஇயது* (குறள். 425) எனத் திரிந்து வழங்குகின்றன. இவற்றைக் கொச்சை வழக்கு என்று சொல்ல முடியுமா? மொழியில் கொச்சை வழக்கு என்று ஒன்று கிடையாது. இலக்கியத்தில் வேண்டுமானால் நசிவிலக்கியம், நல்லிலக்கியம் என்ற பாகுபாடு இருக்கலாம். ஆனால் மொழியைப் பொறுத்தவரையில் பேச்சு வழக்கு என்பது இழிவழக்கு என்றும், செவ்வியல் வழக்கு என்பது உயர்வழக்கு என்றும் உயர்வு தாழ்வு பார்க்க முடியாது. மொழி வழக்குகள் மாறுபடலாம்; அவற்றின் நிலைக்களன்கள் மாறுபடலாம். ஆனாலும் ஒரு மொழியைச் சார்ந்த அனைத்து வழக்குகளும் ஒரே நிலையில் வைத்து எண்ணப்பட வேண்டியவை என்பதை இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுக்க முனைவோர் கருத்தில் கொள்ள வேண்டும்.

11.6.2. வட்டார மொழி இலக்கியங்களில் நிகழும் மொழி வழக்கைப் புறக்கணித்துவிட்டு எழுதப்படும் எந்த இலக்கணத்தையும் முழுமையான உயிர்த்துடிப்புள்ள இலக்கணமாகக் கருத முடியாது. வட்டார வழக்குகளில் சில, பிற பகுதிகளில் உள்ளவர்களுக்கு விளங்காமல் போக வாய்ப்புண்டு. எடுத்துக்காட்டாக, குமரி மாவட்டத்தில் வழங்கும் *சுள்ளை* (ஆ.மா 1974:8), *குட்டை* (ஆ.மா 1974:17), *எக்கு* (தோ 1995:25), *திக்கு* (தோ 1995: 165) முதலானவற்றைக் குறிப்பிடலாம். இவை முறையே *சூளை, கூடை, எனக்கு* (பார்க்க: *எற்கு.* பரி 20.18), *தினக்கு* (பார்க்க: *திற்கு,* க.பு. 8688) எனச் செவ்வியல் வழக்கிலும் பிற வட்டார வழக்குகளிலும் வழங்கும். இதுபோன்ற வட்டார வழக்குச் சொற்களைத் திரட்டி வகைப்படுத்தி இலக்கண ஆய்வுக்குள் கொண்டுவர வேண்டும். இத்தகைய முயற்சியைத் தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் உரியியலிலும், பொருளதிகாரத்தில் மரபியலிலும் மேற்கொண்டதை இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போர் நினைவில் கொள்ள வேண்டும்.

### 11.7. உயிர்கள் பத்தே

தமிழ் நெடுங்கணக்கை அறிவியல் உணர்வோடு இயன்றவரை சீரமைப்பதில் இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போர் கவனம் செலுத்த வேண்டும். இது மொழியை ஆற்றலுடன்

பயன்படுத்தப் பெரிதும் உதவும். உயிர் நெடுங் கணக்கில் ஐகார ஔகாரங்களின் நிகழ்ச்சி பிரச்சனைக்குரியவை; அறிவியலுக்கு ஒவ்வாதவை. பொதுவாக வட்டார வழக்கை அல்லது பேச்சு வழக்கை இலக்கியத்தில் பயன்படுத்துவோர் ஐ, ஔ ஆகியவற்றை *'அய்', 'அவ்'* ஆகியவற்றின் குறியீடுகளாகவே கருதுகின்றனர். நோக்குக: *பய்யன்/பையன்* (ஆ.மா. 1974:168). பழந்தமிழிலும் இந்த நிலையைக் காணலாம். கருதுக: *கௌவை* (அகம். 50.3) / *கவ்வை* (அகம். 20.11); *நௌவி* (பத்துப். 6.275)/ *நவ்வி* (குறுந். 282.3); *வெளவி* (நற். 360.3) / *வவ்வி* (அகம். 346.23); *பௌவம்* (ஐங். 121.3)/ *பவ்வம்* (புறம். 380.1). *கௌவு* என்பது சங்க இலக்கியத்தில் *கவ்வு* என்றே குறிக்கப்படுகிறது. எ-டு: *கவ்வி* (குறுந். 282.3), *கவ்விய* (அகம் 199.7), *வாவல்* (நற். 87.1) என்பதன் குறில் வடிவம் *வௌவால்*. எனவே அதனை *வவ்வால்* என்றே எழுதலாம். *தாவு* என்பதன் குறில் வடிவம் *தவ்வு* என்பதாகும். இதனை ஔகாரம் பெய்து *தௌவு* என்று குறிக்க வேண்டிய தில்லை. 'மழுங்கின' என்று பொருள்படும் *தௌவின* (நற். 397.3) என்பதைத் *தவ்வின* என்று எழுதுவதால் எந்தக் குழப்பமும் வந்து விடாது. உரைக்கோவைச் சூழல் (Discourse Context) பொருளைத் தெளிவுபடுத்திவிடும். இந்த எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் ஐகாரம் ஔகாரம் இரண்டையும் இரண்டு மாத்திரை அளவுள்ள நெடிலாகக் கொள்ளமுடியாது என்பதை உறுதிப்படுத்துகின்றன. இவை *அய், அவ்* என்பவற்றின் மாற்றுக் குறியீடுகளே. *தஞ்சை, புஞ்சை, எண்ணை* என்பவை *நன்செய், புன்செய், எண்ணெய்* என்பவற்றின் மாற்று வடிவங்களே. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கையில் ஐகார ஔகாரங்களை உயிரொலியன் களாகக் கொள்ள வாய்ப்பே இல்லை. பிராமி நெடுங்கணக்கின் தாக்கத்தால் இவை தமிழில் நுழைந்தன. இவற்றைத் தவிர்ப்பதால் தமிழுக்கு எந்தப் பாதிப்பும் இல்லை. எனவே இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போர் அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து குறில்களையும் அவற்றுக்கு நிகரான ஐந்து நெடில்களையும் கருத்தில் கொண்டு தமிழ் நெடுங்கணக்கில் பத்து உயிர்களை மட்டும் குறித்தால் போதுமானது. பழந்தமிழில் நிகழும் *வளைஇ, குவைஇ* ஆகியவற்றை *வளய்இ, குவய்இ* என்றே குறிப்பிடலாம். ஏனெனில் *வளய்* என்பதும் *வளை* என்பதும் மாறுபட்ட பொருண்மையை உணர்த்தும் முரண் இணை (Contrastive Pair) உறுப்புக்கள் அல்ல.

## 11.8. வேண்டும் ஒருங்கிணைந்த ஆய்வு

11.8.1. கள ஆய்வின் மூலமும் இலக்கியங்களிலிருந்தும் திரட்டப்பட்ட தரவுகளை அடிப்படையாகக் கொண்டு மொழியின் அமைப்பியல்புகளை விண்டுரைப்பதே இலக்கணம். இலக்கணத்தைப் பற்றிய ஒரு பொதுவான கருத்து இது. பார்வையில் பட்டதை எப்படி உள்ளதோ அப்படியே விண்டுரைப்பது ஒருவகை இலக்கண ஆய்வு. இங்கே அமைப்புகளை ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்தும் அவசியமில்லை. எடுத்துக்காட்டாக இந்த ஆய்வு முறையானது *படிக்கிறான்* என்ற சொல்லின் அமைப்பை எப்படி விண்டுரைக்கிறதோ அப்படியே *படிக்கான், படிக்யான், படிக்கியான்* ஆகிய வட்டார வழக்கு வினைகளையும் விண்டுரைக்கும். *படிக்கான், படிக்யான், படிக்கியான்* மூன்றையும் ஒருங்கிணைத்து அவை ஒன்றோடொன்று தொடர்புடையவை என்று விண்டுரைக்கும் இலக்கணமானது அவற்றைத் தொடர்புபடுத்தாமல் அவற்றின் அமைப்பைத் தனித்தனியே விண்டுரைக்கும் இலக்கணத்தைவிட மேலானதாகும். ஒருங் கிணைந்த ஆய்வைப் போற்றும் இலக்கணம் ஒருங்கிணைக்க வேண்டிய மொழியமைப்புக்களை விண்டுரைக்க, பார்வையில் படாத வடிவங்களையும் சில சமயம் கருத்தில் கொள்ளும். இத்தகைய வடிவங்கள் அடிநிலை வடிவங்கள் எனக் குறிக்கப் படும். மேலே குறிப்பிட்ட *படிக்கான், படிக்யான், படிக்கியான்* ஆகிய ஆண்பால் நிகழ்வினைகளின் அடிநிலை வடிவம் **படிய்க்கான்* என்று குறிக்கப்படும். இகர ஐகார வீற்றுச் சொற்கள் யகர ஈற்றின என்ற கோட்பாட்டின் அடிப்படையில் படி என்பதன் அடிநிலை வடிவம் **படிய்* என்று கொள்ளப்பட்டு **படிய்க்கான்* என்ற அடிநிலை வினையமைப்பு குறிக்கப்படுகிறது. சங்க இலக்கியம் தொடங்கி இக்கால இலக்கியம் வரை அடிநிலை வடிவங்களைக் கொண்டு ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய பலவினையமைப்புகள் அவற்றில் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, *குடிக்கிய* (குறுந். 356.4) என்பதும் *குடிக்க* என்பதும் **குடிய்க்க* என்ற அடிநிலை வடிவத்தின் துணை கொண்டு ஒருங்கிணைக்கப்பட வேண்டியவையாகும். இதே போல் *உரைக்கியம்* (நம். திருவி. 55) என்பதும் *உரைக்கம்* என்பதும் **உரய்க்கம்* என்ற அடிநிலை

வடிவத்திலிருந்து பெறப்படுவதன் மூலம் அவை ஒன்றோடொன்று தொடர்புள்ள வினைகள் என்ற உண்மை பெறப்படும். இத்தகைய ஆய்வில் சில சமயங்களில் அடிநிலை வடிவமும் ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படும் வடிவமும் ஒன்றாகவே அமைந்துவிடுவதும் உண்டு. *உரைக்கம்* (*உரய்க்கம்) என்பது இதற்கு ஓர் எடுத்துக்காட்டு. ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படும் வகையில் இலக்கியங்களில் நிகழும் சில வடிவங்கள் அடிநிலை வடிவங்களுடன் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

அட்டவணை –1

| வ. எண் | ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படும் வினையமைப்புகள் | | அடிநிலை வடிவம் |
|---|---|---|---|
| 1. | அளக்கிய (சீ.சி. 2593) | அளக்க | *அளய்க்க |
| 2. | விளைக்கிய (சீ.சி. 2867) | விளைக்க | *விளய்க்க |
| 3. | உரிக்கிய (வ.கு. 1986:112) | உரிக்க (பெ.எ) | *உரிய்க்க |
| 4. | கவனிச்ச (வ.கு. 1986:113) | கவனிக்க | *கவனிய்க்க |
| 5. | நெனக்ய (வ.நி. 1979:58) | நெனய்க்க(பெ.எ) | *நெனய்க்க |
| 6. | ஒதக்ய (வ.நி. 1979:10) | ஒதய்க்க (பெ.எ) | *ஒதய்க்க |
| 7. | மேய்க்கிய (நாலா.3917/ நம்.திருவா) | மேய்க்க | *மேய்க்க |
| 8. | வக்யும் (வ.நி. 1979:121) | வய்க்கும் | *வய்க்கும் |
| 9. | நெனய்க்கியேன்(ஐசக். 1975:143) | நெனய்க்கேன் | *நெனய்க்கேன் |
| 10. | சிரிக்கியேன் (தோ. 1995:50) | சிரிக்கேன் | *சிரிய்க்கேன் |
| 11. | படிக்கியேன் (தோ. 1991:90) | படிக்கேன் | *படிய்க்கேன் |
| 12. | நடக்யது (ஹெ. 1964:106) | நடக்கது | *நடய்க்கது |

11.8.2. அடிநிலை வடிவங்களில் நிகழும் யகரமெய்யானது தானே இடம்பெயரும் போதும் பிரதி செய்யப்பட்டு இடம் பெயரும் போதும் நிகழும் மாற்றங்களைத் தொடர்ந்து தோன்றி யமைந்தவையே மேலே குறிக்கப்பட்டுள்ள வினையமைப்புக்கள். மொழியில் நிகழும் இந்த இயல்பான, விளக்கத்துக்குரிய மாற்றம் ஒப்புமையாக்கத்தின் காரணமாக இரண்டு வல்லொற்றுக்கள் மயங்கும் வினையமைப்புக்களையும் பாதிக்கிறது. இத்தகைய வினையமைப்புக்களின் அடிநிலை வடிவங்களில் யகர மெய்யின் நிகழ்ச்சிக்கு வாய்ப்பே இல்லை. ஆனால் ஒப்புமையாக்கத்தின் விளைவாக அழையாத விருந்தாளியாக யகரமெய்யானது மயங்கும் வல்லொற்றுக்களையடுத்து இடம்பெற்றுவிடுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

அட்டவணை – 2

| வ. எண் | ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படும் வினையமைப்புகள் | | அடிநிலை வடிவம் |
|---|---|---|---|
| 1. | உகுக்கிய (சீ.சி. 2636) | உகுக்க | *உகுக்க |
| 2. | எடுக்கிய (சீ.சி. 65) | எடுக்க | *எடுக்க |
| 3. | கேட்கிய (சீ.சி. 397) | கேட்க | *கேட்க |
| 4. | விடுக்கிய (சீ.சி. 3034) | விடுக்க | *விடுக்க |
| 5. | காக்கிய (க.ரா. 7555) | காக்க | *கா(ய்)க்க |
| 6. | குடுக்கியார் (வ.கு.1986:111) | குடுக்கார் | *குடுக்கார் |
| 7. | விக்யது (ஹெ. 1964.73) | விக்கது 'விற்பது' | *விக்கது |
| 8. | விக்கியது (ஹெ.1964:72) | விக்கது 'விற்பது' | *விக்கது |
| 9. | பாக்யது (ஹெ.1964:173) | பாக்கது 'பார்ப்பது' | *பாக்கது |

மேலே அட்டவணைகளில் காணப்படும் வினையமைப்புகள் இலக்கியங்களில் பதிவானவை. இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போர் இவற்றை ஒதுக்கித் தள்ள முடியாது. அது மட்டுமல்ல; இதுபோன்ற வினையமைப்புகளைத் தொடர்பு படுத்தும் வகையில் ஒருங்கிணைந்த ஆய்வு முறையை இலக்கணம் வகுப்போர் மேற்கொள்ள வேண்டும். ஆழ்ந்த மொழியியற் பயிற்சியும் மொழிப்புலமையும் இத்தகைய ஆய்வுக்கு வேண்டற் பாலனவாகும்.

### 11.9. பலாஅப்பழம் போயிற்றே!

11.9.1. தமிழ் ஓர் உயிர்த்துடிப்புள்ள மொழி. அதன் உயிரானது பேச்சு வழக்கில்தான் உள்ளது. அத்தனையும் வாழும் சமுதாயத்தின் வெளிப்பாடுகள். இந்த வெளிப்பாடுகள் எல்லாம் இலக்கணத்தில் இடம்பெற்றாக வேண்டும். உயிருள்ள மொழிகளில் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே தான் இருக்கும். இதை உணர்ந்தே *கடிசொல் இல்லை காலத்துப் படினே* (சொல். சேனா. 452), *சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்* (சொல். சேனா. 402) என்று தொல்காப்பியரும், *பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே* (நன். 462) என்று பவணந்தியும் கூறிச் சென்றனர். தொல்காப்பியர், பவணந்தி இவர்கள் பார்வையில் படாமல் போன மொழியமைப்புக் கூறுகள் எத்தனையோ உள்ளன. அவர்கள் கூறிய இலக்கணம் அவர்கள் காலத் தமிழுக்குத் தான். காலமெல்லாம் அவர்களையே மேற்கோள் காட்டிக் கொண்டிருக்க முடியாது. அவர்கள் கூறியவற்றுள் இக்கால மொழிக்குப் பொருந்துவனவும் உண்டு;

பொருந்தாதனவும் உண்டு. இக்காலத் தமிழில் *முப்பெரும் விழா, இளம் வயது* இங்கெல்லாம் நிலைமொழியீற்று மகரம் நிகழும். *புளியம் இலை, புளியம் வேர்* இவற்றில் மகரம் குறுகி ஒலிக்கும். *இருபத்தாறு, இருபத்தியாறு* இரண்டும் உறழும். பகுதியும் விகுதியும் கொண்டு புணர்ந்த *நாட்கள்* இன்றும் நல்ல தமிழே. தொல்காப்பியர் *பலவின் கனி, பலவின் காய், பலவின் பழம், பலவின் சுளை* ஆகியவற்றைத் தன் காலத்தில் *பலாஅக்கனி, பலாஅக்காய், பலாஅப்பழம், பலாஅச்சுளை* என்றே கண்டார். ஆனால் இன்றோ அவை அகரம் இழந்து *பலாக்கனி, பலாக்காய், பலாப்பழம், பலாச்சுளை* என்றாயின. பலாவைக் குறித்த *பலாஅம்* என்பது தொல்காப்பியரின் பார்வையில் படாமலே போயிற்று. கருதுக: *பலாஅம் பழுத்த பசும்புண் அரியல்* (பதி. 61.1). இந்த எடுத்துக்காட்டில் *அம்* என்பது சாரியையாகும்.

*11.9.2.* பெயரும் வினையும் எதிர்நிலைச் சொல் வகையின என்று கருதும் நிலை மாறி, இன்று வினை என்பது பெயரில் ஒரு வகை என்று துணியும் நிலை ஏற்பட்டுள்ளது. *வரகுக்கதிர், விறகுக்கடை, முதுகுத்தண்டு* இவையெல்லாம் இக்காலத் தமிழில் ஏற்புடையன. இவற்றில் ஒற்று மிகாது என்று *ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே, அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே* (எழுத்து. இளம். 413) என்ற தொல்காப்பிய நூற்பாவைக் காட்டி மிரட்ட வேண்டாம். உயிர் நெடுங்கணக்கில் ஐகார ஔகாரங்களின் நிகழ்ச்சி தவிர்க்கப்படுதல் போல வேற்றுமை உருபுப் பட்டியலிலிருந்து உடனிகழ்ச்சிப் பொருளில் அமையும் *ஓடு* (எ-டு: *வள்ளி முருகனோடு வந்தாள்*), ஆறாம் வேற்றுமை (எ-டு: *முருகனது வேல்*), கருத்தாப் பொருண்மையதாகிய *ஆல்* (எ-டு: *முருகனால் சூரபதுமன் கொல்லப்பட்டான்*) ஆகியவை தொடரனியல் காரணங்களுக்காகத் தவிர்க்கப்பட்டு அவை இலக்கணத்தில் வேறு பகுதியில் ஆராயப்பட வேண்டும். இக்காலத் தமிழுக்குப் புதிய இலக்கணம் வகுக்க முயல்வோர் இவற்றையும் இவை போன்ற பிறவற்றையும் எண்ணிச் செயல்பட வேண்டும்.

### *11.10.* எப்படி வந்தது இருபத்தியாறு?

புதிய இலக்கணம் கவனத்தில் கொள்ள வேண்டியவற்றுள் எண்ணுப் பெயர்ப் புணர்ச்சியும் ஒன்றாகும். குற்றியலுகரப் பேரெண்களையடுத்துச் சிற்றெண்கள் புணரும்போது இகரம் நிகழும் போக்கு இக்காலப் பேச்சு வழக்கிலும், இலக்கியங்

களிலும் பெருவழக்காகக் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாக *இருபத்தாறு* என்பது *இருபத்தியாறு* என்று வழங்குவதைக் குறிப்பிடலாம். *இருபத்தாறு, இருபத்தியாறு* இரண்டுமே உறழ்ந்து வழங்கும் நிலை இக்காலத் தமிழில் காணப்பட்டாலும் இலக்கணப் புலவர்கள் *இருபத்தியாறு* என்பது பிழையான வழக்கு என்று திருத்த முற்படுகின்றனர். இவர்கள் காவலையும் மீறி *இருபத்தியாறு* இன்று வழக்கில் நிலைத்துவிட்டது. இது எப்படி நடந்தது? பேரெண்களையடுத்து *இரண்டு* என்னும் பெயர் புணரும்போது *இருபத்திரண்டு, நூற்றிரண்டு, ஆயிரத்திரண்டு* என்ற அமைப்புகள் கிடைக்கும். *இருபது* புணரும் போதும் *நூற்றிருபது, ஆயிரத்திருபது* என்ற அமைப்புகள் தோன்றும். இந்த அமைப்புகளில் நிகழும் இகரமானது *இரண்டு, இருபது* இவற்றில் உள்ள இகரமாகும். இந்த இகரமே பிற எண்ணுப் பெயர்கள் பேரெண்களையடுத்து புணரும்போதும் ஒப்புமையாக்கத்தின் விளைவால் அங்கெல்லாம் நிகழத் தொடங்கியது. *இருபத்தியாறு* இப்படி வந்ததுதான். *ஒருத்தி* என்பது *ஒருவன்* என்பதை *ஒருத்தன்* என்று மாற்றியதைப் போன்றது எண்ணுப் பெயரில் இடம்பெற்ற இந்த இகரம். ஓர் அமைப்பின் தாக்கம் இன்னோரிடத்தில் உணரப்படுவது மொழியில் இயல்பாக நிகழ்ந்துகொண்டிருப்பதுதான். *ஏமாறு* என்ற வினையின் இறந்த கால வடிவங்களை எண்ணிப் பார்க்கவும். *ஏமாறி, ஏமாறின, ஏமாறிய, 'ஏமாறினான்* என்று இருக்க வேண்டியவை *ஏமார்* என்று இன்னொரு வினையடியாகத் தோன்றிய இறந்தகால வடிவங்களின் தாக்கத்தால் *ஏமாந்து, ஏமாந்த, ஏமாந்தான்* என்று பிறழ்ந்து மொழி வழக்கில் இந்தப் பிறழ் வடிவங்கள் வலுவாக ஆட்சியும் பெற்றுவிட்டன. இருபத்தியாறில் இடம்பெற்ற இகரத்தை இனி ஒன்றும் செய்ய முடியாது. இந்த இகரத்தை இனி ஒரு புதிய சாரியையாகப் புதிய தமிழ் இலக்கணம் இனங்காண வேண்டும்.

### 11.11. வானொலியில் தமிழ் மயக்கம்

*11.11.1.* சில ஆண்டுகளுக்கு முன் வரை வானொலியில் தமிழில் செய்தி வாசிப்பவர் *செய்திகள் வாசிப்பது இன்னார்* என்று தொடங்கிச் செய்திகளை வாசிக்கத் தொடங்குவார். இலக்கணக் காவலர்கள் *செய்திகள் வாசிப்பது இன்னார்* என்பது இலக்கணப் பிழையுள்ள வாக்கியம் என்று எதிர்ப்பு தெரிவித்து, *செய்திகள் வாசிப்பவர் இன்னார்* என்று வானொலி நிலையம் தன் தவறைத்

திருத்திக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தினர். வானொலி நிலையம் குழம்பித் தவித்தது. செய்திகளை வாசிப்பவர் உயர்திணையாளர்; *வாசிப்பது* என்பது அஃறிணை வினை. எனவே *செய்திகள் வாசிப்பது இன்னார்* என்ற வாக்கியம் ஏற்புடையதன்று என்பது இலக்கணக் காவலர்களின் வாதம். தமிழில் எழுவாய் - பயனிலை ஒத்திசைவு விரிவாக ஆராயப்பட வேண்டிய ஒன்று. *செய்திகள் வாசிப்பது இன்னார்* என்பது உண்மையிலேயே இலக்கணப் பிழையுள்ள வாக்கியம் தானா? இல்லை, இல்லவே இல்லை. இது ஒரு கவை வாக்கியம் (Cleft Sentence). *இன்னார் செய்திகள் வாசிக்கிறார்* என்ற இயல்பு வாக்கியத்தின் திரிபே இந்தக் கவைவாக்கியம். இதேபோல் *நான் சொன்னது என்ன? நீ செய்தது என்ன?* என்பதும் *நான் என்ன சொன்னேன்? நீ என்ன செய்தாய்?* என்பவற்றின் கவை வாக்கியங்களாகும். கவை வாக்கியங்களில் நிகழும் செய்தது, செய்வது வாய்பாட்டு வினைமுற்றுக்கள் அஃறிணை வினை முற்றுக்கள் அல்ல: அவை பொது வினைமுற்றுக்கள் (Impersonal Finite Verbs) *இன்னார் செய்திகள் வாசிப்பது உண்மை* என்ற வாக்கியத்தில் நிகழும் *வாசிப்பது* எப்படிப் பொதுவினைமுற்றோ அப்படியே *செய்திகள் வாசிப்பது இன்னார்* என்பதில் உள்ள *வாசிப்பது* என்பதும் பொதுவினை முற்றாகும். பொதுவினை முற்று இருதிணை ஐம்பால் மூவிட எழுவாய்க்கும் பொதுவாக அமைவது. கவை வாக்கியங்களில் முதன்மைப்படுத்தப்படும் உறுப்பு எழுவாயாக இருக்கும்போது அவற்றில் சிறப்பு வினைகளும் பொதுவினைகளும் உறழும். *முருகன் வள்ளியை மணந்தான்* என்பது இயல்பு வாக்கியம். இதன் கவை வாக்கியம் *வள்ளியை மணந்தவன் / மணந்தது முருகன்* என்பதாகும். இந்த வாக்கியத்தில் *மணந்தவன்* என்ற சிறப்பு வினையும் *மணந்தது* என்ற பொதுவினையும் உறழ்வதைக் காணலாம்.

*11.11.2.* பொதுவினைகளும் அஃறிணை வினைகளும் வடிவில் ஒன்று போல இருக்கும். இதை வைத்துக் கொண்டு கவை வாக்கியங்களில் நிகழும் பொது வினைகளை அஃறிணை வினைகள் என்று துணியக்கூடாது. அஃறிணை வினையும் பொது வினையும் வேறுபட்ட வாக்கிய அமைப்புகளில் நிகழ்பவை யாகும். இந்த வேறுபாட்டை அறியாமல் இலக்கணப் புலவர்கள் தொடுத்த எதிர்ப்பை வானொலி நிலையமும் அதில் உண்மை இருக்கிறது என்று நம்பித் தமிழுக்கு நம்மால் தலை குனிவா?

என்று பதைத்து உடனே *செய்திகள் வாசிப்பவர் இன்னார்* என்று திருத்திக் கொண்டது. இதிலே திருத்தத்துக்கு எங்கே இடம் இருக்கிறது? *வாசிப்பது, வாசிப்பவர்* இரண்டும் இந்தக் கவை வாக்கியத்தில் சரியான வழக்குகள்தான். வானொலி நிலையத்துக்கு இதை விளக்க வேண்டிய கடமையும் பொறுப்பும் உண்டு. இதை வானொலி நிலையம் செய்யவில்ல யென்றாலும் இக்காலத் தமிழுக்கு இலக்கணம் வகுப்போருக்குக் கவை வினையையும் அஃறிணை வினையையும் வேறுபடுத்திக் காட்ட வேண்டிய பொறுப்பும் கடமையும் உள்ளது. இலக்கண ஆசிரியன் மொழியின் அமைப்பை விண்டுரைப்பது நுண்ணோக்கு அடிப்படையில் (Empirical Basis) அமைய வேண்டும். இந்த வகையில் இக்காலத் தமிழுக்கு இலக்கணம் எழுத முற்படும் எந்த இலக்கண ஆசிரியனும் இலக்கியங்களை ஒதுக்கித் தள்ள முடியாது. ஏனெனில் அவை தரவுச் சுரங்கம்; மக்களின் இன்னொரு பண்பாட்டுப் பரிமாணம்.

❀ ❀ ❀

# 12. எழுத்துச் சீரமைப்பும் ஐகார ஔகாரங்களும்

12.1. தமிழ் எழுத்தியல் பன்னிரண்டு உயிர்களையும், பதினெட்டு மெய்களையும் ஓர் ஆய்தத்தையும் கொண்டதாக இருந்தாலும் வரிவடிவம் என்று வரும்போது உயிர், மெய், உயிர்மெய் என்று மூன்று வகையான வடிவங்கள் எழுத்து முறையில் காணப்படுகின்றன. *அகல்* என்ற சொல்லில் இந்த மூவகை வரிவடிவங்களின் நிகழ்ச்சியையும் காணலாம். இவற்றுள் உயிர்மெய் எழுத்துக்களின் வரிவடிவ அமைப்பு ஒரு நியதிக்கு உட்படாத நிலையில் உள்ளது. உயிர்மெய்யெழுத்துக்கள் ஒலிக்கப் படுகையில் மெய்யும் உயிரும் முறையே முன்னும் பின்னுமாகவே நிகழ்கின்றன. இதுபற்றியே தொல்காப்பியரும் *மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே* (எழுத்து. இளம். 18) என்று வலியுறுத்துவார் ஆயினார். எனவே இவற்றின் வரிவடிவங்களில் மெய்யொலிக் குறிகளையடுத்தே உயிரொலிக்குறிகள் நிகழ வேண்டும். கா, தா, சா என்பனவற்றில் இந்த நியதி போற்றப் படுவதைப் போல் கெ, கே, கை, கொ, கோ, கௌ முதலான வற்றில் போற்றப்படவில்லை. உயிர்மெய்க்குரிய பெரும்பான்மை யான வரி வடிவங்களில் மெய் முன்னும் உயிர் பின்னும் என்ற நியதி குறியீட்டு நிலையில் சீர்குலைந்துள்ளது.

12.2. முதல்முறையாக அ.இ.அ.தி.மு.க. ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது தமிழ் எழுத்துச் சீரமைப்புத் தொடர்பாகச் சில நடவடிக்கைகளை மேற்கொண்டது. இதன் விளைவாக ்ன, ்ண, ிூல, ிூள, ிூன, ிூண, ொன, ொண, ோன, ோண ஆகிய உயிர்மெய் வடிவங்கள் முறையே னா, ணா, லை, ளை, னை, ணை, னொ, ணொ, னோ, ணோ என்று சீரமைக்கப்பட்டன. கிடைத்தவரை ஆதாயம் என்றுதான் இந்த எழுத்துச் சீரமைப்பைக் கருத வேண்டும். அரசின் இந்த நடவடிக்கை உயிர்மெய் வரி வடிவங்களின் அமைப்பில் செய்யவேண்டிய அடிப்படை மாற்றங்களை ஒருசிறிதும் கருத்தில் கொள்ளவில்லை. காரணம் பழமைவாதிகளின் கண்மூடித்தனமான எதிர்ப்பாகும். மொழியியல் வல்லுநர்களையும் மொழி வளர்ச்சியில் நாட்டம் கொண்ட முற்போக்குச் சிந்தனையாளர்களையும் கொண்ட ஒரு குழுவின்

துணைகொண்டு அரசு வரிவடிவங்களைச் சீரமைக்கும் முயற்சியை மேற்கொண்டிருந்தால் தமிழ் நெடுங்கணக்கில் காணப்படும் அலங்கோலங்கள் வெகுவாகத் தவிர்க்கப்பட்டிருக் கலாம். மெய்க் குறி முன்னும் உயிர்க்குறி பின்னுமாக அமைந்த உயிர்மெய் வரி வடிவங்களைக் காண்பதே எழுத்துச் சீரமைப்பின் இலக்காக இருக்க வேண்டும். இந்த முயற்சியில் சிக்கல்களும் இடர்ப்பாடுகளும் உள்ளதை நாம் அறியாமல் இல்லை. ஆயினும் படிப்படியாக நாம் இலக்கை எட்டியே ஆகவேண்டும். இத்தகைய முயற்சியில் சில வரிவடிவங்கள் தமிழ்நெடுங்கணக்கில் இடம் பெறவேண்டுமா என்பதையும் நாம் சிந்திக்க வேண்டும். இந்தக் கட்டுரை அத்தகைய சிந்தனையை அடிப்படையாகக் கொண்டதாகும். சந்தியக்கரங்களாகக் கருதப்படும் ஐகார ஔகாரங்களின் நிகழ்ச்சியானது தமிழ் எழுத்தியலில் உடனடி யாகத் தவிர்க்கத்தக்க ஒரு சுமை என்பது இக்கட்டுரையின் மையக்கருத்தாகும்.

*12.3.* தமிழ் எழுத்தியலில் காணப்படும் பன்னிரண்டு உயிர்களில் ஐகாரமும் ஔகாரமும் தொல்காப்பியரால் உயிர் நெடில்களாகக் கருதப்படுபவையாகும் (எழுத்து. இளம். 4). இவற்றை இரண்டு மாத்திரை அளவுள்ள உயிர்நெடில்களாகக் கொண்டது அவை முறையே அகரமும் இகரமும், அகரமும் உகரமும் மயங்கிய சந்தியக்கரங்கள் (எழுத்து. இளம். 54, 55) என்று கருதியதன் விளைவாகும். மெய்கள் மயங்குவது போல் தமிழில் உயிர்கள் மயங்குவதில்லை. அசை அமைப்பு (Syllabic Structure) என்று வரும்போது ஐகார ஔகாரங்களை இரண்டு அசைகொண்ட அமைப்பினவாகக் கருதுவது இல்லை. ஆ, ஈ, ஊ, ஏ, ஓ ஆகிய உயிர்நெடில்களுக்கு இணையான உயிர்க் குறில்கள் இருப்பது போல் ஐகார ஔகாரங்களுக்கு இல்லை. இந்தச் சந்தியக்கரங்களில் அகரத்தையடுத்து நிகழ்வதாகக் கருதப்படும் இகர உகரங்கள் அசைத்தன்மை குன்றிய உயிர்களாகும். இது பற்றியே ஒலியனியல் ஆய்வில் இத்தகைய உயிர்களை யகர வகரங்களின் சார்ந்தொலிகளாக (Allophones) மொழியியலார் கொள்கின்றனர். ஐகார ஔகாரங்கள் முறையே *அய், அவ்* ஆகியவற்றுடன் முரண் வழக்கில் (Contrastive Distribution) அமையும் நிலை தமிழில் காணப்படவில்லை. *ஐயம்/அய்யம், ஐந்து/அய்ந்து, ஐவர்/அய்வர், வலை/வலய், பௌவம்/பவ்வம்* ஆகிய இணைச் சொற்கள் முரண்வழக்கில் அமையாமையால் ஐகாரத்தை *அய்* என்றும், ஔகாரத்தை *அவ்* என்றும் கொள்வது தவிர்க்க முடியாததாகின்றது.

12.4. தொல்காப்பியர் ஐகார ஔகாரங்களை நெடிலாகக் கொள்வதால் இவற்றில் அகரத்தையடுத்து நிகழும் இகர உகரங்களை ஒலிப்பு (Phonetic) நிலையில் யகரவகரங்களைக் குறிக்கும் ஒலியன்களாகக் கருத வாய்ப்பில்லாமல் போகின்றது. ஆயினும் ஐகாரத்தைப் பொறுத்தவரை அது *அய்* எனவும் குறிக்கற்பாலது என்று தொல்காப்பியரே குறிப்பிடுகிறார் (எழுத்து. இளம். 56). இந்தக் குறிப்பு ஐகாரத்தை உயிர்நெடிலாகக் கொள்ள வழியில்லாமல் செய்துவிடுகின்றது. மேலும் தொல்காப்பியரின் இத்தகைய இருநிலை ஆய்வானது *இய், உய், எய், ஒய்* ஆகிய வற்றையும் இகரம் மயங்கிய சந்தியக்கரங்களாக ஏன் கொள்ளக்கூடாது என்ற வினாவுக்கு வழிகோலுகின்றது. ஐகாரத்தை உயிர்நெடிலாகக் கொள்ளும் ஆய்வைத் தவிர்த்து விட்டால் இத்தகைய வினா எழ வாய்ப்பில்லை.

12.5. ஐகாரம் *அய்* என்றும் குறிக்கத்தக்கது என்றது போல ஔகாரமும் *அவ்* எனக் குறிக்கத்தக்கது என்று தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. ஆனால் *பௌவம்* (பத்துப்பாட்டு 6.113), *கௌவை* (அகம். 312.5) ஆகியவை *பவ்வம்* (பத்துப்பாட்டு 2.135), *கவ்வை* (அகம். 256.13) எனவும் வழங்கும் நிலை பழந்தமிழில் காணப்படுகின்றது. ஔகாரம் உண்மையில் *அவ்* என்றே குறிக்கத்தக்கது என்பது *வௌவால்* என்பது *வாவல்* (நற்றிணை 87.1) எனவும் வழங்குவதைக் கொண்டே உறுதிப்படுத்திக் கொள்ளலாம். *வாவல்* சான்றினைக் குறிப்பிட்டவர் விழுப்புரம் அரசினர் கலைக்கல்லூரியில் முதல்வராக இருந்த கொண்டல் சு. மகாதேவன் என்ற தமிழ்ப்பேராசிரியர் ஆவார். *ஐ* என்னும் முன்னிலை ஒருமை விகுதி (எ-டு. நீ பாடினை) *ஆய்* என்பதன் குறில் வடிவம் ஆகலின் சந்தியக்கரமாகிய ஐகாரத்தை *அய்* என்றே குறிப்பிட வேண்டும் என்று வலியுறுத்துவார் வேங்கடராஜுலு ரெட்டியார்.

12.6. ஐகார ஔகாரங்களைத் தமிழ் நெடுங்கணக்கில் தக்க வைத்துக் கொள்வது தமிழ் ஒலியனியலுக்குப் பொருந்தியதன்று என்பதற்குப் பல சான்றுகள் மேலே காட்டப்பட்டன. இந்த வகையில் மேலும் ஒரு சான்றினைக் கருத்தில் கொள்ளலாம். ஐகாரத்தை உயிர் நெடிலாகக் கொள்வது சில சொற்களின் கட்டுக்கோப்பை ஆராயத் துணைபுரியவில்லை. *சிலம்பு, வரம்பு* ஆகிய சொற்களைக் கொண்டு இதனை விளக்கலாம். இந்த இரண்டு சொற்களும் முறையே *சிலய்* (=சிலை), *வரய்* (=வரை) என்ற பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். முதல்

நிலையில் சிலம்பும் வரம்பும் முறையே *சிலம்-பு, வரம்-பு* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படுகின்றன. அடுத்த நிலையில் **சிலம், *வரம்* ஆகியவற்றின் அமைப்பு ஆய்வுக்கு உரியதாகின்றது. ஐகாரம் உயிர்நெடில் என்ற தொல்காப்பியரின் கோட்பாட்டைக் கருத்தில் கொண்டால் **சிலம், *வரம்* இரண்டும் *சிலை-ம், வரை-ம்* என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் பகுதிச் சொற்களாகிய *சிலை, வரை* ஆகியவற்றில் நிகழும் ஐகாரத்தை அகரமும் இகரமும் மயங்கிய உயிர்நெடிலாகத் தொல்காப்பியர் கொள்வதால், இகரம் மகரமெய்யின் முன்கெட்டு *சிலை-ம், வரை-ம்* ஆகிய அமைப்புகள் முறையே *சில-ம், வர-ம்* என்று அமைந்தனவர்கக் கருதவேண்டும். இகரம் மகரத்தின் முன் கெடுதல் தமிழின் இயல்பான புணர்ச்சிக்கு மாறுபட்டதாகும். மாறாகச் *சிலை-ம், வரை-ம்* ஆகியவற்றை முறையே *சிலய்-ம், வரய்-ம்* என்று கொண்டால் யகர மெய் மகர மெய்யின் முன் கெடுதல் இயல்பான நிகழ்ச்சியாக அமைகின்றது. மகரத்தின்முன் யகர வீழ்ச்சியானது *சிலய்-ம், வரய்-ம்* ஆகியவற்றை முறையே *சில-ம், வர-ம்* என மாற்றியமைக்கின்றது. **பாய், *தேய், *பொய்* என்பவற்றின் அடியாகத் தோன்றிய *பாம்பு, தேம்பு, பொங்கு* ஆகிய சொற்கள் யகரம் மகரத்தின் முன் வீழ்ந்துபடும் நிகழ்ச்சியினை உறுதிப் படுத்துகின்றன. இந்த ஆய்வின்மூலம் ஐகாரத்தை உயிர்நெடிலாகக் கொள்ள வாய்ப்பில்லை என்பது மட்டுமல்ல, அதனை ஓர் ஒலியனாகவும் கருதுவதற்கில்லை என்பது தெளிவாகின்றது. ஐகாரத்தை உயிர் நெடிலாகவோ, ஒலியனாகவோ கொள்வதற்கு வாய்ப்பில்லாத நிலையில் ஔகாரத்தையும் அவ்வாறு கொள்வதற்கில்லாமல் போகின்றது. எனவே தமிழ் எழுத்தியலில் ஐகார ஔகாரங்கள் தவிர்க்கப்பட வேண்டிய சுமைகளாகின்றன. தமிழ் எழுத்தியலில் இவற்றின் நிகழ்ச்சி பிறமொழி எழுத்தியலின் தாக்கத்தால் நேர்ந்திருக்க வேண்டும். ரிக்வேத பிராதி சாக்கியத்தில் சாகடாயனர் ஐகார ஔகாரங்களை முறையே அகரமும் இகரமும், அகரமும் உகரமும் மயங்கிய உயிர் நெடில்களாகக் கொள்வது இங்கே கருதத்தக்கதாகும். வட மொழியில் ஐகார ஔகாரங்களின் நிகழ்ச்சிக்கான நிலைக்களன்களுள் சந்தியும் ஒன்றாகும். ஆகவே ஐகார ஔகாரத்தை வடமொழியில் தவிர்க்க முடியாது. ஆனால் தமிழில் ஐகார ஔகாரங்கள் சந்தியின் மூலம் பெறப்படுவன வல்ல. எனவே அவற்றின் நிகழ்ச்சிக்குத் தமிழில் இடமில்லை.

12.7. ஐகார ஔகாரங்களைப் பற்றி மேலே நாம் சிந்தித்த கருத்துக்கள் தமிழ் நெடுங்கணக்கைச் சீரமைக்க எப்படி உதவும் என்பதை இனிக் காண்போம். இந்த இரண்டு எழுத்து வடிவங்களை முறையே *அய், அவ்* என்று எழுதுவதால்' தமிழ் ஒலியனியல் எவ்விதப் பாதிப்புக்கும் உள்ளாகவில்லை. இதனைக் கருத்தில் கொண்டு ஐகார ஔகாரங்களை மட்டுமல்ல கை/கௌ முதல் கௌ/னௌ ஈறாகவுள்ள முப்பத்தாறு உயிர்மெய்களையும் தமிழ் நெடுங்கணக்கிலிருந்து தவிர்த்துவிடலாம். ஐகார ஔகாரங்களை முறையே *அய், அவ்* எனக் குறிப்பதன் மூலம் கை... னை (18), கௌ...னௌ (18) ஆகிய முப்பத்தாறும் இனி கய்...னய், கவ்...னவ் என்று குறிக்கப்படும். இதனால் ஏற்படும் பலன்கள் பலவாகும். குழந்தைகளுக்கு உயிரெழுத்துக்களை அறிமுகப்படுத்துகையில் இனி *ஐ, ஔ* வரிவடிவங்கள் நீங்கலாக எஞ்சியுள்ள பத்து உயிர்களின் வரிவடிவங்களைக் கற்பித்தால் போதும். இதன் மூலம் கிடைக்கும் எளிமையின் பலனை அச்சகங்களும், தட்டச்சு, தொலையச்சு (Teleprinter), தொலைத் தட்டச்சு (Telex), கணினி ஆகியவற்றைப் பயன்படுத்துவோரும் பெறலாம். ஐகார ஔகாரங்கள் நிகழும் உயிர்மெய் எழுத்துக்களின் வரிவடிவங்களைத் தவிர்த்துவிடுவதால் கை...னை, கௌ...னௌ ஆகியவற்றில் சீர்குலைந்து காணப்படும் உயிரொலிக் குறிகளின் நிகழ்ச்சியானது கய்...னய், கவ்...னவ் என எழுதுவதன் மூலம் முற்றிலுமாகத் தவிர்க்கப்படுகின்றது.

12.8. தமிழ் எழுத்துச் சீரமைப்பைப் பொறுத்தவரையில் ஐகார ஔகாரங்களையும் அவை நிகழும் உயிர்மெய்யெழுத்துக் களையும் தமிழ்நெடுங்கணக்கிலிருந்து தவிர்ப்பது மிக எளிமையான சிக்கலற்ற சீரமைப்பாகும். தமிழக அரசு இத்தகைய சீரமைப்பை நடைமுறைக்குக் கொண்டுவருவது பற்றி முனைப்பாகச் சிந்தித்து விரைந்து செயல்படவேண்டும்.

❋ ❋ ❋

# 13. ஐகாரம் - நெஞ்சில் ஒரு முள்

### *13.1. முருகன் காட்டிய வழி*

*13.1.1.* ஐகார ஔகாரங்கள் தமிழ் நெடுங்கணக்கில் தவிர்க்கப்பட வேண்டிய ஒரு பெருஞ்சுமை என்ற உண்மை முந்தைய ஆய்வுரையில் சுட்டப்பெற்றது. அதன் தொடர்ச்சியாக ஐகாரம் தமிழ் எழுத்தியலுக்குப் புறம்பான ஒன்று என்பது இந்த ஆய்வுரையில் மேலும் பேசப்படுகிறது. முருகக் கடவுளையும் தமிழையும் இரண்டு கண்களாகக் கருதுவது தமிழ் நெறியாகும். அவ்வைக்கும் முருகப்பெருமானுக்கும் உள்ள புலனெறித் தொடர்பை அறியாதவர் யார் உளர்? அருணகிரியின் திருப்புகழ் முருகனின் அருட்கொடையாகும். திருப்புகழ்ப் பாடல்களில் காணப்படும் சந்தமரபுகள் அருணகிரிக்கு முருகனருளால் கைவரப்பெற்றவையாகும். இந்தச் சந்த மரபுகள் தமிழ் நெடுங் கணக்கில் நெஞ்சில் ஒரு முள்ளாய் இடம்பெற்று, நெடிலாக மாறுவேடம் புனைந்துள்ள ஐகாரத்தின் எழுத்தொலித்தன்மையை (Phonological Character) இனங்காணப் பெரிதும் துணைபுரிவனவாய் உள்ளன. இந்த வகையில் பின்வரும் மூன்று சந்த வாய்பாடுகளும் அவற்றின் அடியாக அருணகிரியார் புனைந்த தெய்வத் தமிழ்ப் பாடல்களின் முதல் அடிகளும் கருதத்தக்கனவாகும்.

***சந்த வாய்பாடு 1***

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | தந்ததன | தந்ததன | தந்ததன | தந்ததன |
| | தந்ததன | தந்ததன | | தந்ததான |
| (2) | கொங்கைகள்கு | லுங்கவளை | செங்கையில்வி | ளங்கஇருள் |
| | (2.1) | (2.2) | (2.3) | (2.4) |
| | கொண்டலைய | டைந்தகுழல் | | வண்டுபாட |
| | (2.5) | (2.6) | | (2.7) |

***சந்த வாய்பாடு 2***

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | தந்ததன | தந்தனம் | தந்ததன | தந்தனம் |
| | தந்ததன | தந்தனம் | | தந்ததான |
| (4) | தண்டையணி | வெண்டையங் | கிண்கிணிச | தங்கையும் |
| | (4.1) | (4.2) | (4.3) | (4.4) |
| | தண்கழல்சி | லம்புடன் | | கொஞ்சவேநின் |

சந்த வாய்பாடு 3

| | | | | |
|---|---|---|---|---|
| (5) | தத்தன | தனதன | தத்தன | தனதன |
| | தத்தன | தனதன | | தனதான |
| (6) | மத்தள | வயிறனை | உத்தமி | புதல்வனை |
| | (6.1) | (6.2) | (6.3) | (6.4) |
| | மட்டவிழ் | மலர்கொடு | | பணிவேனே |
| | (6.5) | (6.6) | | (6.7) |

இந்த எடுத்துக்காட்டுக்களில் ஐகாரம் நிகழும் சந்தத் தொடர்களும் அவற்றுக்கு இணையான சந்தவாய்பாடுகளும் கீழே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

| (7) சந்தவாய்பாடு | சந்தத்தொடர் | |
|---|---|---|
| (1) தந்ததன | (1) கொங்கைகள்கு | (2.1) |
| | (2) -லுங்கவளை | (2.2) |
| | (3) செங்கையில்வி | (2.3) |
| | (4) கொண்டலைய | (2.5) |
| | (5) -டைந்தகுழல் | (2.6) |
| | (6) தண்டையணி | (4.1) |
| | (7) வெண்டையங் | (4.2) |
| | (8) -தங்கையும் | (4.4) |
| (2) தத்தன | (1) வயிறனை | (6.2) |
| | (2) புதல்வனை | (6.4) |

13.1.2 அருணகிரியின் சந்தத் தொடர்களில் நிகழும் ஐகார வரிவடிவத்துக்கு (Graphological Representation) இணையாகச் சந்த வாய்பாடுகளில் அகரமே நிகழ்கிறது. அதாவது, மரபிலக்கணங்கள் இரண்டு மாத்திரை அளவினதாகக் கொண்டு நெடிலாகக் கருதும் ஐகாரம் சந்தவாய்பாட்டில் ஒரு மாத்திரை அளவின தாகிய குறிலாக அருணகிரியாரின் பாடல்களில் நிகழ்கின்றன. ஐகாரம் சந்தவாய்பாட்டில் அகரத்துக்கு இணையாக நிகழ்ந்தாலும் அதன் எழுத்தியல் வடிவம் (Phonological Representation) *அய்* என்றே கருதப்படும். காரணம் எழுத்தியல் நிலையில் ஐகாரமும் அகரமும் ஒன்றல்ல. இந்த நிலையை அருணகிரியாரின் சந்தத் தொடர்களுக்கு நேரான எழுத்தியல் வடிவங்களிலேயே காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

| (8) ஐ=அய் சந்த வாய்பாடு | சந்தத் தொடர் | எழுத்தொலி வடிவம் |
|---|---|---|
| (1) தந்ததன | (1) கொங்கைகள்கு - (2.1) | கொங்கய்கள்கு |
| | (2) -லுங்கவளை (2.2) | -லுங்கவளய் |
| | (3) -டைந்தகுழல் (2.6) | -டய்ந்தகுழல் |
| (2) தத்தன | (1) வயிறனை (6.2) | வயிறனய் |
| | (2) புதல்வனை (6.4) | புதல்வனய் |

13.1.3 சந்தத்தொடரில் நிகழும் ஐகாரம் சந்த வாய்பாட்டில் அகரத்துக்கு இணையாக நிகழும் இடங்களில் எல்லாம் ஐகாரத்தையடுத்து யகரமெய் நிகழ்கிறது. இந்த யகரம் உடம்படுமெய் அன்று. இதனைக் கருத்தில் கொண்டு சந்தத் தொடரில் நிகழும் *-ஐய்-* என்ற வரிவடிவமானது *அய்* என்ற எழுத்தொலி வடிவத்துக்கு இணையானதாகும் என்று துணியலாம். பின்வரும் எடுத்துக்காட்டுகள் இதனைத் தெளிவுபடுத்தும்.

| (9) ஐய் > அய் சந்த வாய்பாடு | சந்தத் தொடர் | எழுத்தொலி வடிவம் |
|---|---|---|
| (1) தந்ததன | (1) செங்கையில்வி (2.3) | செங்கயில்வி |
| | (2) கொண்டலைய (2.5) | கொண்டலய |
| | (3) தண்டையணி (4.1) | தண்டயணி |
| | (4) வெண்டையங் (4.2) | வெண்டயங்- |

இதனின்றும் அருணகிரியாரின் சந்தத் தொடர்களில் நிகழும் ஐகாரம், *ஐய்* ஆகிய வரிவடிவங்கள் *அய்* என்பதன் குறியீடுகள் என்பதும், ஐகாரம் என்பது இரண்டு மாத்திரை அளவினதாகிய நெடிலாகக் கொள்ளத்தக்கதன்று என்பதும் புலனாகின்றன. *ஐய் - அய்* என்ற சமன்பாட்டின் அடிப்படையில் *கைதை* என்ற வரிவடிவம், *கய்தய்* என்ற எழுத்தொலி வடிவமாகவும் *வளையல், புதையல், நிலையம்* ஆகிய வரிவடிவங்கள் முறையே *வளயல், புதயல், நிலயம்* என்ற எழுத்தொலி வடிவங்களாகவும் கொள்ளப்படும். ஆயினும் *பையன், ஐயர்* ஆகியவற்றில் நிகழும் வரிவடிவங்கள் *பய்யன், அய்யர்* என்ற எழுத்தொலி வடிவங்களாக அமையும். இந்த எழுத்தொலி வடிவங்களில் *அய்* என்பதை யடுத்து நிகழும் யகரமெய் உடம்படுமெய்யன்று. இந்த யகரமெய் யானது *அய்* என்பதில் நிகழும் குறிற்கீழ் யகரம் இரட்டித்துத் தோன்றியதாகும்.

*13.1.4.* மேலே நிகழ்த்திய ஆய்வில் இன்னொன்றையும் கருத்தில் கொள்ள வேண்டும். *வளையல், புதையல், நிலையம்* ஆகிய வரிவடிவங்கள் இக்காலத் தமிழில் *வளயல், புதயல், நிலயம்* என்றே ஒலிக்கப்படுகின்றன. இந்த வரிவடிவங்களில் நிகழும் ஐகாரம் பழந்தமிழில் *அய்* என்ற எழுத்தொலி வடிவத்துக்கு இணையாகக் கருதப்படுமாயின் மேற்படி வரிவடிவத்தை அடுத்து நிகழும் யகரம், *அய்* என்ற எழுத்தொலி வடிவத்தில் நிகழும் யகரத்தின் இரட்டித்த மெய்யாகக் கொள்ளப்படும். ஆனால் இவ்வாறு கொள்வதற்கு வாய்ப்பிருப்பதாகத் தோன்றவில்லை. காரணம் *வளையல், புதையல், நிலையம்* ஆகியவற்றில் மொழிமுதல் அசையின் உறுப்பாக ஐகாரம் நிகழாமல் இரண்டாம் அசையின் உறுப்பாக நிகழ்கிறது. இரண்டாம் அசையானது பழந்தமிழில் எடுத்தொலிக்கப்பட்டிருந்தால் *வளையல்* என்பதிலுள்ள ஐகாரமானது *அய்* எனக் கொள்ளப்பட்டு மேற்படி வடிவம் *வளய்யல்* என்பதற்கு நிகராகக் கொள்ளப்படும். இந்த ஆய்வில் *வளையல்* என்பதில் நிகழும் யகரம் உடம்படு மெய்யன்று. அது *அய்* என்பதில் நிகழும் யகரத்தின் இரட்டித்த ஒலியாகும். ஐகாரத்தை நெடிலாகக் கொள்ள முடியாது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாக அமைகிறது.

*13.1.5* ஐகாரம் பற்றி மேற்கொண்டு சிந்திப்பதற்கு முன் அருணகிரியாரின் சந்தத் தொடரின் ஈற்றில் நிகழும் ஏகாரத்தின் எழுத்தொலி வடிவம் பற்றியும் கருத வேண்டும். பின்வரும் சந்த வாய்பாடுகளையும் அவற்றின் அடியாகத் தோன்றிய அருணகிரியாரின் சந்தத் தொடர்களையும் நோக்குக.

*(10) தந்ததான (3) / கொஞ்சவே நின் (4.7)*

*(11) தனதான (5) / பணிவேனே (6.7)*

எடுத்துக்காட்டு (10)-இல் *தந்ததான* என்ற சந்த வாய்பாட்டில் நிகழும் *தா* என்ற சந்தநெடிலுக்கு இணையாக, *கொஞ்சவேநின்* என்ற சந்தத் தொடரில் ஏகார எழுத்தொலி (Phoneme) நிகழ்கிறது. இதேபோல் (11)-இல் *தனதான* என்ற சந்த வாய்பாட்டில் நிகழும் *தா* என்ற சந்த நெடிலுக்கு இணையாக, *பணிவேனே* என்ற சந்தத்தொடரில் ஏகார நெடிலின் நிகழ்ச்சி காணப்படுகிறது. இந்த இரண்டிலும் *தா* என்ற சந்த நெடில் சந்த வாய்பாட்டின் இடையில் நிகழ்கின்றது. ஆகவே இதற்கு இணையான எழுத்தொலியும் சந்தத்தொடரின் இடையில் நெடிலாகவே அமைகிறது. ஆனால் *தனதான* என்ற சந்த

வாய்பாட்டின் ஈற்றில் நிகழும் ன என்ற சந்தக் குறிலுக்கு இணையாக, *பணிவேனே* என்ற சந்தத்தொடரின் ஈற்றில் ஏகார நெடிலின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. சந்த வாய்பாட்டைக் கருத்தில் கொண்டு இந்தச் சந்தத்தொடரின் ஈற்றில் நிகழும் ஏகாரத்தின் எழுத்தொலி வடிவமாக எகரக்குறிலைக் கொள்ள வேண்டியுள்ளது. அவ்வாறு கொள்ளவில்லையெனில் சந்தச் சிதைவு ஏற்பட்டுவிடும். இதனின்றும் ஓர் உண்மை புலனாகின்றது.

*13.1.6* தமிழில் மொழியிறுதியில் எகரக்குறில் நிகழ்வதில்லை. இந்த மொழியில் எகர ஏகாரங்கள் மொழியிறுதியில் முரண் வழக்கில் (Contrastive Distribution) அமைவதில்லை. செவ்வியல் வழக்கில் மொழியிறுதியில் நிகழும் ஏகார நெடிலை ஒலியனாகக் கொண்டு அதன் சார்ந்தொலியாக (Allophone) எகரக்குறில் நிகழ்வதாகக் கருத வேண்டும். இதனால்தான் எகரக் குறிலுக்கு இணையாக, *தனதான* என்ற சந்த வாய்பாட்டின் ஈற்றில் குறிலோசை அமைகிறது. இந்த எகரக்குறில் *அய்* என்பதன் திரிபாகும். எப்படி?

### 13.2. இலங்கை வழக்கும் இந்திய வழக்கும்

இக்காலச் செவ்வியல் தமிழில் ஏகாரத்தில் முடியும் *அங்கே, இங்கே, எங்கே* ஆகியவை இந்தியப் பேச்சுத் தமிழில் *அங்க/அங்கெ, இங்க/இங்கெ, எங்க/எங்கெ* என்றும் இலங்கைப் பேச்சுத் தமிழில் *அங்கை* (டொமினிக். 1962:50), *இங்கை* (மேற்படி. 1962:91), *எங்கை* (மேற்படி 1962:49) என்றும் அமைகின்றன. இதேபோல் *வேற* (=வேறு), *போல* (=போல்), *-ஒட* (=ஒடு), -(=இ)ல (=இல்), *-ஆல* (=ஆல்) ஆகிய இந்தியப் பேச்சுத் தமிழ் வடிவங்கள் இலங்கைப் பேச்சுத் தமிழில் ஐகார ஈற்றினவாக நிகழ்கின்றன. பின்வரும் இலங்கைத் தமிழ் எடுத்துக்காட்டுக் களைக் கருத்தில் கொள்க.

(12) அதுக்கு *வேறை* ஆளைப்பார் (டொமினிக். 1962:32)

(13) தம்பியைப் *போலை* ரெண்டொருத்தர் வந்தா உண்டு (மேற்படி, 1962:37)

(14) *ஊரோடை* வீடு: *ஊரோடை* வேலை (மேற்படி, 1962:51)

(15) *கொழும்பிலை* ஏதோ ஒரு *கொம்பனியிலை* வேலை (மேற்படி 1962:92)

(16) வேதக் கோயிலுக்கு *முன்னாலை* (மேற்படி, 1978:41)

இக்காலச் செவ்வியல் தமிழிலும் இந்தியப் பேச்சுத் தமிழிலும் மேலே காட்டியவாறு ஈற்றில் நிகழும் அகர, எகர, ஏகாரங்கள் இலங்கைப் பேச்சுத் தமிழில் *அய்* என்பதன் வரிவடிவாக நிகழும் ஐகாரத்தின் திரிபுகளாகும். இந்த உண்மையை, *தனதான* என்ற சந்த வாய்பாட்டின் ஈற்றில் நிகழும் அகரக் குறிலானது சந்தத்தின் மூலம் உணர்த்துகிறது. இதனைக் கருத்தில் கொண்டு மேற்படி சந்தவாய்பாட்டின் சந்தத் தொடராகிய *பணிவேனே* என்பதை, **பணிவேனய்* என்று மீட்டுருவாக்கம் செய்யலாம்.

### 13.3. ஐகாரம் நெடிலன்று

*13.3.1.* மீண்டும் ஐகாரத்துக்கு வருவோம். ஐகாரத்தை இரண்டு மாத்திரை அளவுள்ள நெடிலாகக் கொள்ள முடியாது என்றும், அது *அய்* என்ற எழுத்தொலி வடிவத்தின் வரி வடிவமே என்றும், அதனைத் தமிழ் நெடுங்கணக்கில் தொடரச் செய்வது தமிழ் எழுத்தியல் மரபுக்கு முரணானது என்றும் ஏற்கனவே சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளது. இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *இலக்கியம் தேடும் இலக்கணம்* என்ற கட்டுரையைக் காண்க. இந்த நிலைப்பாடுகளை வலியுறுத்தும் வகையில் மேலும் சில சான்றுகள் இங்கே கருத்தில் கொள்ளப்படுகின்றன.

*13.3.2. வெம்பரல், செம்புலம்* இரண்டிலும் நிகழும் *வெம், செம்* ஆகிய குறிப்புப்பெயரெச்சங்கள் *வெய்-ம், செய்-ம்* என்ற அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைந்தவையாகும். இதேபோல் *பைம்பொழில்* என்பதில் நிகழும் *பைம்* என்ற குறிப்புப் பெயரெச்சமும் *பை-ம்* என்ற அமைப்பினதாகும். இந்த அமைப்பில் நிகழும் *பை* என்பது பசுமை என்ற பொருண்மையைக் குறிக்கும். *வெய்-ம், செய்-ம்* ஆகிய அமைப்புக்களில் *உம்* என்பதன் மாற்றுருபாகிய (Allomorph) மகர மெய்யானது யகரத்தின் கீழ் நிகழ்கையில் கெட்டு *வெம், செம்* ஆகிய வடிவங்கள் தோன்றியமைகின்றன. ஆனால் *பைம்* இவ்வாறு தோன்றியமைந்ததல்ல. காரணம், இதில் நிகழும் ஐகாரம் தனிக்குறிலன்று. *வெம், செம்* ஆகியவற்றோடு செய்யுளில் *பைம்* என்பதும் இணையசையாக (Parellel Syllable) நிகழவல்ல தாகலின் அதில் நிகழும் ஐகாரத்தைத் தனி நெடிலாகவும் கொள்ள முடியாது. இதனின்றும் *பைம்* என்பதன் அடிநிலைவடிவம் *வெம், செம்* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களைப்போல் அமையும் என்று தெரிகிறது. பின்வரும் பாடலில் நிகழும் அடிமுதற் சீர்களை ஊன்றி நோக்குக.

('17) பைந்தார் எங்கள் இராமன் பத்தினி
செந்தாள் வஞ்சி திறத்து இறந்தவன்
மைந்தார் எம்பி வரம்பில் சீர்த்தியோடு
உய்ந்தான் அல்லது உலந்தது உண்மையே
(க.ரா.கிட். 4798, அ.ப.வெ.)

இந்தப் பாடலின் ஈற்றடியில் நிகழும் *உய்ந்தான்* என்ற வடிவம் முதலடியில் நிகழும் *பைம்,* மூன்றாம் அடியில் நிகழும் *மைந்து* ஆகிய வரிவடிவங்களை முறையே **பய்ம், *மய்ந்து* என்ற எழுத்தொலி வடிவங்களாகக் கொள்ள வகை செய்கின்றது. இதேபோல் இரண்டாம் அடியிலுள்ள *செந்தாள்* என்பதில் நிகழும் *செம்* என்பதன் அடிநிலை வடிவத்தை *உய்ந்தான்* என்பதைக் கருத்தில் கொண்டு **செய்-ம்* என்று அமைக்க முடியும். யாப்பியல் தடயத்தைக் கொண்டு அமைக்கப்பட்ட **பய்ம்* என்ற எழுத்தொலி வடிவத்தின் அமைதிப்பாட்டினை மொழியியல் சான்றின்மூலம் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

13.3.3. *பயிர்* (< பய்-இர்) என்ற சொல்லில் *பய்-* என்பதன் மூலப் பொருண்மை பசுமை என்பதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *பைம்* என்பதில் நிகழும் *பை* என்ற வரிவடிவத்தின் எழுத்தொலி வடிவத்தை, **பய்* என்று குறிப்பிடலாம். இந்த எழுத்தொலி வடிவமே *பயிர்* என்பதில் நிகழும் பகுதியுமாகும். *வெய்-ம், செய்-ம்* ஆகிய அடிநிலை வடிவங்கள் யகரம் கெட்டு *வெம், செம்* என்று அமைந்தது போல் *பைம்* என்பதன் எழுத்தொலி வடிவமாகிய *பய்ம்* என்பது யகரம் கெட்டு **பம்* என்று அமைந்திருக்க வேண்டும். ஆனால் அவ்வாறு அமையவில்லை. என்ன காரணம்? *பய்ம்* என்பது *பைம்* என்பதன் அடிநிலை வடிவமல்ல; அது பிந்தியதன் எழுத்தொலி வடிவமே என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, *பைம்* என்பது *களமர்* (அகம். 366.3, நற். 125.9) என்பதைக் போலாகும். *புனம்+அன்* என்பது *புனவன்* (அகம். 140.11, குறுந். 105.1) என்றும், *புலம்+அன்* என்பது *புலவன்* (அகம். 345.6, புறம், 201.7) என்றும், *முடம்+அன்* என்பது *முடவன்* (குறுந். 60.2) என்றும் ஆனதைப் போல் *களம்+அர்* என்பது **களவர்* என்று ஆகவில்லை. காரணம் *களமர்* என்பதும் *புனவன்/புலவன்/முடவன்* என்பதும் இருவேறு படிநிலைகளுக்கு உரியவையாகும். இதேபோல் *வெம்* (<வெய்-ம்), *செம்* (<செய்-ம்) ஆகியவையும் *பய்-ம்* (=பைம்) என்பதும் இருவேறு படிநிலைகளுக்கு உரியவையாகும். ஆகவேதான் *பய்ம்* என்பதில் யகர்ம் கெடவில்லை. ஒரு குறிப்பிட்ட (எழுத்தியற்)

சூழலில் ஒரு குறிப்பிட்ட மாற்றம் சிலவற்றில் நிகழ்வதற்கும், சிலவற்றில் நிகழாமற் போவதற்கும் மாறுபட்ட காலப்பகுதியும், மாறுபட்ட கிளைமொழி நிலையும், பரவல் கட்டுப்பாடுகளும் (Diffusionary Constraints) காரணமாக அமையலாம். *பைம், களமர்* ஆகியவை இந்தப் பின்னணியில் நோக்குதற்குரியனவாகும். இந்த ஆய்வினின்றும் *பைம்* என்பதன் எழுத்தொலி வடிவம் *பய்-ம்* என்று கொள்ளத்தக்கதாகலின் ஐகாரம் என்பது *அய்* என்ற எழுத்தொலி வடிவத்தின் குறியீடு என்பதும், ஆகவே அதனை இரண்டு மாத்திரை அளவினதாகக் கொள்ளமுடியாது என்பதும் புலனாகின்றன.

13.3.4. *ஐம்பது* என்பது பேச்சுத் தமிழில் *அம்பது* என்று வழங்குகிறது. *அம்பது* என்பது *அய்ம்பது* என்பதன் திரிபாகும். மகரத்தின் முன் நிகழும் யகரம் கெட்டு *அம்பது* என்ற வடிவம் தோன்றியமைகிறது. *ஐம்பது* என்பதில் ஐகாரத்தை நெடிலாகக் கொண்டால் *அம்பது* என்ற பேச்சுத்தமிழ் வடிவம் தோன்ற வாய்ப்பில்லை. ஆகவே *ஐ* என்பதன் எழுத்தொலி வடிவம் *அய்* என்று அறியப்படுகிறது.

13.3.5. *மை (=மய்)* என்பது கருமை என்ற பொருண்மைய தாகும். இதன் நெடில் வடிவம் *மாய்* என்பதாகும். *மாயவன்* (கலி. 145.64), *மாயன்* (திருப். 51), *மாயவள்* (கலி. 29.7), *மாயோள்* (ஐங். 145.3), *மாயோன்* (புறம். 57.2) ஆகியவற்றின் பகுதியாகிய *மாய்-* என்பது மை என்பதன் பொருண்மையதாகும். *மயில், மயிர்* ஆகியவற்றின் பகுதி *மய்-* என்பதாகும். இது *மை* என்பதன் எழுத்தொலி வடிவமாகும். ஐகாரம் நெடிலாயின் *மை* என்பதன் நெடில் வடிவமாக *மாய்* என்பது எப்படி அமைய முடியும்? அல்லது *மயில், மயிர்* என்பவற்றில் ஐகாரம் எப்படிக் குறுகி ஒலிக்க முடியும்? எனவே, ஐகாரம் நெடிலாகக் கொள்ளத்தக்கதன்று என்பது மேலும் தெளிவாகிறது.

### 13.4. மயினியும் மைனியும்

*மதனி* என்ற சொல் வட்டார வழக்கில் *மயினி* (பொன். 1995: 470, 550, 690, 748) என்றும், *மைனி* (பொன். 1995: 322, 340, 578) என்றும் திரிந்து அமைகிறது. *பதனீர்* என்பது பேச்சுத்தமிழில் *பதனி* என்றும், *பயினி* என்றும், *பய்னி* என்றும் வழங்குகிறது. *பசிக்குது* என்ற பொதுப்பேச்சுத் தமிழ் (Standard Spoken Tamil) ஒன்றன்பால் நிகழ்வினையானது *பயிக்குது* (தோ. 1993:269) / *பைய்க்குது* (தோ. 1993:73) / *பைக்குது* (தோ. 1995:126) என்றும், பசித்து என்பது *பைச்சு* (தோ. 1995:126) / *பைச்சி* (தோ. 1995:366)./

*பைய்ச்சி* (தோ.1993:262), *பய்ச்சி* (தோ. 1993:238) என்றும், *தசுக்கி* என்பது *நைக்கி* (தோ. 1995:182) என்றும், *பயல்கள்* என்பது *பைலுவோ* (தோ. 1993:44) என்றும், *மயிரும்* என்பது *மைரும்* (தோ. 1993:262) என்றும் வட்டார வழக்கு இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. இவற்றில் எல்லாம் ஐகாரத்தை நெடிலாகக் கொள்ள வாய்ப்பே இல்லை. காரணம் இது நிகழும் அடிநிலை வடிவங்களில் இதற்கு இணையான நெடிலுயிர் காணப்பட வில்லை. *அய்* என்பதன் குறியீடாகவே ஐகாரம் மேலே குறிப்பிட்ட வட்டார வழக்குகளில் கொள்ளப்படுகிறது. இவ்வாறு கொள்ளப் படுவதற்குக் காரணம் ஐகாரம் என்ற வரிவடிவம் *அய்* என்ற எழுத்தொலி வடிவத்தினின்றும் வேறுபட்டதல்ல என்பதேயாகும்.

### 13.5. கையும் செய்யும்

*கை* (=கய்) என்ற தமிழ் வடிவம் தெலுங்கில் *செய்* எனத் திரிகிறது. ஐகாரம் நெடிலாயின் *கை* என்பது தெலுங்கில் எங்ஙனம் *செய்* எனத் திரிய முடியும்? *கை* என்பதன் எழுத்தொலி வடிவம் *கய்* என்பதாகும். அதனால்தான் *கை* தெலுங்கில் *செய்* என்றாகிறது. இதனின்றும் ஐகாரம் நெடிலாகக் கொள்ளத்தக்க தன்று என்பது உறுதிப்படுகின்றது. (கை, செய் ஆகியவற்றின் தொல்வடிவம் **கெய்* என்று மீட்டுருவாக்கம் செய்யத் தக்கதாகும். இது தனி ஆய்வுக்குரியது).

### 13.6. முத்து உதிர்த்த முத்து

*அகர இகரம் ஐகாரமாகும்* (எழுத்து. இளம். 54) என்று கருதும் தொல்காப்பியர் *அகரத்து இம்பர் யகரப் புள்ளியும், ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்* (எழுத்து. இளம். 56) என்று துணிகிறார். *ஐ* என்பது *அஇ* எனவும், *அய்* எனவும் எழுத்தொலி வடிவங்களாகக் கொள்ளத்தக்கவை என்ற செய்தியை இந்த நூற்பாக்கள் மூலம் தொல்காப்பியர் உணர்த்து வதாகத் தோன்றுகிறது. இதனைக் கருத்தில் கொண்டு ஒரு தருக்கவியல் வாதத்தை ஐகாரத்துக்கு எதிராக முன்மொழிகிறார் நெல்லை சு. முத்து (1994). *அஇ=அய்* என்ற சமன்பாட்டின் அடிப்படையில் *இய்* (=இ+இ), *உய்* (=உ+இ), *எய்* (=எ+இ), *ஒய்* (=ஒ+இ) என்பவற்றையும் ஏன் நெடிலாகக் கொள்ளக்கூடாது என்று ஓர் வினாவை எழுப்பி, அவ்வாறு இவற்றைக் கொள்வதற்கு வாய்ப்பில்லையாதலால் *ஐ* என்பதன் எழுத்தொலி வடிவமாகிய *அய்* என்பதையும் நெடிலாகக் கொள்ள முடியாது என்கிறார் முத்து. இந்தத் தருக்கவியல் வாதத்தை ஆதாரமாகக் கொண்டு "அய், அவ் என்று ஒலிக்கும் ஐ, ஔ ஆகிய தனி

நெடில்களை உயிரெழுத்து நிரலிலிருந்து அகற்றிவிடலாம்" என்று துணிகிறார் முத்து. முன்னதாகப் பல சான்றுகளின் அடிப்படையில் ஐகாரத்தை நெடிலாகக் கொள்ள முடியாது என்றும், அது *அய்* என்பதன் குறியீடாகலின் அதனைத் தமிழ் நெடுங்கணக்கிலிருந்து எந்தவிதத் தயக்கமுமின்றி நீக்கிவிடலாம் என்றும் அமைந்த நமது முடிவுக்கு முத்துவின் தருக்கவியல் வாதம் ஏற்புடையதாகவே அமைகிறது. ஐகாரத்துக்கு நெடுங்கணக்கில் இடமில்லை என்றால் ஔகாரத்துக்கு மட்டும் என்ன சலுகை இருக்க முடியும்? இரண்டுமே தமிழ் நெடுங்கணக்கில் நெஞ்சில் தைத்த முட்கள் தான். இதற்கு உடந்தையாக இருந்தவர்கள் நுண்மாண் நுழைபுலமிக்க நமது மரபிலக்கணிகள்தான்.

### 13.7. ஐகாரம் பிராமியின் தாக்கம்

ஐகாரத்தை இரண்டு மாத்திரை அளவினதாகிய நெடிலாகக் கொள்ளமுடியாது என்பதையும் அது *அய்* என்ற எழுத்தொலியின் வரிவடிவமே என்பதையும் நிலைநிறுத்தப் பல சான்றுகள் இருந்தும் மரபிலக்கணிகள் எப்படி அதனைத் தமிழ் நெடுங்கணக்கில் ஏற்றுக் கொண்டனர்? இந்திய மொழிகளின் நெடுங்கணக்கு பிராமி எழுத்துக்களின் வழித்தோன்றலாகக் கருதப்படுகிறது. பிராமி ஒரு மொழியல்ல. அது ஒரு எழுத்தியல் மரபாகும். இந்த மரபில் ஐ, ஔ இரண்டும் நெடில் உயிர்களாகக் கொள்ளப்படுகின்றன. இந்த மரபைத் தமிழ்நெடுங்கணக்கை வகுத்தவர்கள் ஏற்றுக் கொண்டதால் அழையாத விருந்தாளி களாக, மேற்படி ஐ, ஔ இரண்டும் தமிழ் நெடுங் கணக்கிலும் இடம்பெற்றன. தமிழ் எழுத்தியல் மரபைச் சிறிதும் எண்ணிப் பார்க்காமல் தமிழ் மரபிலக்கணிகள் இவற்றைத் தமிழில் ஏற்றுக் கொண்டதன் விளைவு ஐகார ஔகாரக் குறுக்கங்களைப் பற்றிப் பேசவேண்டிய ஒரு நெருக்கடிக்கு அவர்கள் தள்ளப்பட்டனர். உண்மையில் இத்தகைய குறுக்கங்களுக்குத் தமிழில் இடமில்லை.

### 13.8. கால்டுவெல்லின் சறுக்கல்

தமிழில் ஐகாரம் பற்றிய கால்டுவெல்லின் (Robert Caldwell *1961:133, 136*) சிந்தனை முற்றிலும் மாறுபட்டதாகும். தொல் திராவிட அகரம் எகரமாகத் திரிந்து அதனின்றும் *எய்*தோன்றியதாகக் கருதும் கால்டுவெல் தமிழ் அல்லது திராவிட ஐகாரம் என்பது உண்மையில் *எய்* என்பதேயாகும் என்று துணிகிறார். *எய்* என்பதை *எஇ (ei)* எனக் குறிக்கும் கால்டுவெல் இதன் தோற்றத்தை இவ்வாறு குறிப்பிடுவார்: *"The diphthong into which final a and a: are weakened in Tamil is represented more properly as*

*ei than as ai. The origination of the Tamil ei from a, and the analogy of Sanskrit diphthong ai... might lead us to regard the Tamil diphthong as* ai *rather than ei,* (Page 133). *This represents e and i and not a and i. The primitive Dravidian a changes into e, and this again into ei"* (Page 136). திராவிட நெடுங்கணக்கில் ஔகாரத்தின் நிகழ்ச்சி வடமொழியின் தாக்கத்தால் நேர்ந்த விபத்து என்று கருதும் கால்டுவெல்லின் திராவிட மொழிகளில் குறிப்பாகத் தமிழில் ஐகாரத்தின் நிகழ்ச்சி பற்றிய ஆய்வு திராவிட ஒலியனியலுக்கு முற்றிலும் பொருந்தாத ஒன்றாகும்.

### *13.9.* வெளிச்சம் காட்டும் வேங்கடராஜுலு

ஐகார ஔகாரங்கள் தமிழ் மரபுக்கு எதிரானவை என்பதை வலியுறுத்தும் வேங்கடராஜுலு ரெட்டியாரின் ஒரு கருத்து இங்கே சிந்தனைக்குரியதாகும். தமிழில் *ஏன், ஏம், ஈர், ஆன், ஆள், ஆர்* ஆகிய நெடில் இயைபு விகுதிகளுக்கு இணையாக அன் சாரியையை அடுத்து நிகழும் *என், எம், இர், அன், அள், அர்* ஆகிய குறில் இயைபு விகுதிகளைக் கருதுகையில் *ஆய்* என்னும் முன்னிலை ஒருமை நெடில் இயைபு விகுதிக்கு இணையாக அன் சாரியையை அடுத்து நிகழும் குறில் இயைபு விகுதி *அய்* என்றே அமையும். இந்தக் குறில் விகுதி தமிழில் *ஐ* எனக் குறிக்கப்படு வதால், ஐகாரத்தை நெடிலாகக் கொள்ள வாய்ப்பில்லை. இதைப் பற்றி வேங்கடராஜுலு ரெட்டியார் "*ஆய்* என்பதன் குறுகிய விகுதியாகிய *அய்*' என்பதே *ஐ* என்று நிற்கின்றது என்பது தெளிவாதல் கூடும்" என்று குறிப்பிடுவார். (The Journal of Oriental Research of the University of Madras, pp. 1-16. Vol. I, Parts 1 & 2).

### *13.10.* தடையும் விடையும்

*13.10.1.* இந்தச் சிற்றாய்வை முடிக்குமுன் இன்னொரு தடைக்கும் விடை கண்டாக வேண்டும். பழந்தமிழில் ஐகார ஈற்று வினைப்பகுதிகள் இகர விகுதியேற்று இறந்தகால வினையெச்சமாக நிகழும் போக்கும் *இய/இயர்* விகுதியேற்று வியங்கோள் முற்று அல்லது செயவென் எச்சத்துக்கு நிகரான வினையெச்சமாக நிகழும் போக்கும் பரவலாகக் காணப்படு கின்றது. எ-டு: *கலைஇ* (அகம். *266.5*, குறுந். *291.7*), 'கலந்து/ கலைந்து', *சினைஇ* (நற். *247.1*) 'சினந்து', *அலைஇயர்* (அகம். *106.13*) 'அலைக', *இழைஇயர்* (குறுந். *85.3*) 'இழைக்க'. இந்த வினையமைப்புக்கள் அளபெடைத் தொடர்புடையனவாகக் கருதத்தக்கவை அல்ல. ஆனால் ஐகாரத்தை நெடிலாகக் கொண்ட மரபிலக்கணிகள் இகரத்தை அதன்இனக் குறிலாகக் கொள்ளத்

துணிந்தனர். இகரக் குறில் ஈகார நெடிலுக்குத்தான் இனக்குறிலாக இருக்க முடியுமே தவிர, ஐகாரத்துக்கு இனக்குறிலாக இருக்க முடியாது. ஓர் குறில் இரண்டு நெடில்களுக்கு இன உயிராக இருக்க வாய்ப்பில்லை. ஐகாரத்தை நெடிலாகக் கொள்ள முடியாது என்றால் *கலைஇ, அலைஇயர்* ஆகியவற்றைத் திருந்திய வரி வடிவில் எப்படி எழுதுவது என்று மரபுவழிப்பட்ட புலமையாளர்கள் தடை எழுப்ப முற்படுவர். இந்திய நெடுங்கணக்கியல் மரபைப் போற்றும் வகையில் பிராமி நெடுங்கணக்கு மரபை ஏற்றுக் கொண்டதன் மூலம் அந்த மரபில் நெடிலாகக் கருதப்பெற்ற ஐகார ஔகாரங்களையும் தமிழ் ஏற்றுக்கொண்டது என்று முன்பே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகவே (பழந்)தமிழில் ஐகார ஔகாரங்களின் ஒலிப்புத்தன்மை பற்றிய ஆராய்ச்சிக்கு இடமில்லை.

13.10.2. பழந்தமிழில் *நினையினை* (நற். 253.4), *மறையினள்* (நற். 113.8), *துடையினள்* (நற். 120.8) முதலான இறந்தகால முற்று வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. *கலைஇ, சினைஇ* ஆகிய வினைகளின் எழுத்து வடிவங்களைக் கருதுகையில் மேலே குறிப்பிட்ட முற்றுவினைகளின் எழுத்து வடிவம் முறையே **நினைஇனை, *மறைஇனள், *துடைஇனள்* என்று இருக்க வேண்டும். ஆயினும் இதற்கு மாறாக *நினையினை, மறையினள், துடையினள்* ஆகிய எழுத்து வடிவங்களில் நினைந்தனை, மறைந்தனள், துடைத்தனள் ஆகிய வினை முற்றுக்கள் பழந் தமிழில் குறிக்கப்பெற்றுள்ளன. இதனின்றும் இகரம் ஐகாரத்தின் இனக்குறில் அல்ல என்ற உள்ளுணர்வும் பழந்தமிழ்ப் புலமையாளர்களுக்கு இருந்திருக்கிறது என்பது தெளிவாகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு *கலைஇ, சினைஇ, அலைஇயர், இழைஇயர்* என்று எழுத்து வடிவில் அமைந்த வினையமைப்புக் களை முறையே *கலையி, சினையி, அலையியர், இழையியர்* என்றோ *கலயி, சினயி, அலயியர், இழயியர்* என்றோ அசையமைப்புச் சிதையாமல் எழுதலாம்.

13.10.3. *கலைஇ, அலைஇயர்* ஆகியவற்றில் இகரத்தைத் திருந்திய முறையில் எழுத்து வடிவில் அப்படியே குறிக்க வேண்டுமாயின் *கலய்இ, அலய்இயர்* என்று அசையமைப்புச் சிதையாமல் எழுதலாம். *கலைஇ, அலைஇயர்* ஆகிய எழுத்து வடிவங்களில் ஐகாரத்தை *அய்* என்பதன் குறியீடாகவே கருத முடியும். ஆயினும் *கலையி* என்று எழுதுகையில் ஐ என்பதை அகரத்தின் குறியீடாகக் கருதலாம். மாறாக அதனை மேற்படி எடுத்துக்காட்டில் *அய்* என்பதன் குறியீடாகக் கொண்டால்

*கலையி* என்பதில் இகரம் ஊர்ந்த யகரம் இரட்டித்த யகரமாகக் கருதப்படும். எனவே *கலைஇ* என்பதைக் *கலையி* என்றோ, *கலயி* என்றோ, *கலய்இ* என்றோ எழுதுவதால் எந்தவிதமான அமைப்பியல் சிக்கலுமில்லை. ஆனால் ஒன்றை இங்கே கருத்தில் கொள்ள வேண்டும். பழந்தமிழில் *கலைஇ* என்ற வினையெச்சத்தின் ஒலிப்பு *கலய்யி* என்று உணரப்பட்டு இருந்தால் மொழியியல் அடிப்படையில் மேற்படி வினையின் இரண்டாவது அசை எடுத்தொலிக்கப்பட்டிருக்க வேண்டும். அது படுத்தொலிக்கப்பட்டிருக்கமாயின் *கலைஇ* என்பது *கலயி* என்பதுபோல பழந்தமிழில் ஒலிக்கப்பட்டிருக்க வேண்டும். இது விரிவாக ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும். *கலைஇ, அலைஇயர்* ஆகிய பழந்தமிழ் மரபில் அமைந்த எழுத்து வடிவங்கள் ஐகாரத்தை நெடிலாகக் கொள்ளத் துணைபுரியவில்லை என்பது மட்டுமல்ல, அவற்றில் நிகழும் இகரம் ஐகாரத்தின் இனக்குறில் அல்ல என்பதையும் புலப்படுத்துகின்றன. எனவே *கலைஇ, அலைஇயர்* முதலான பழந்தமிழ் வினைகளை உணர்த்தும் எழுத்து வடிவங்களை ஐகாரத்தை நெடிலாகக் கொள்வதற்கான சான்றாகக் கருத முடியாது; கருதவும் கூடாது. ஐகார ஔகாரங்கள் தொடர்பான மேலும் ஓர் ஆய்வை இரா. கோதண்டராமனில் (2002அ) காணலாம்.

❀ ❀ ❀

# 14. ஆய்தம் - ஒரு தீர்வை நோக்கி

14.1 தொல்திராவிட ஒலியனாகக் கருதப்படும் ஆய்தம் தமிழ் நெடுங்கணக்கில் மட்டுமே இடம்பெற்றுள்ளதாகக் கருதப் படுகிறது. இதன் ஒலித்தன்மை மொழியியலார்க்கு ஒரு புதிராகவே இருந்து வருகிறது. *எஃகு* என்ற சொல்லில் ஆய்தம் ஒலிக்கப்படுவதைப் போலவே ஏனைய வல்லொற்றுக்களின் முன்பும் இக்காலத் தமிழில் அது ஒலிக்கப்பட்டாலும் வரலாற்று நிலையில் அதன் உண்மையான ஒலித்தன்மை எல்லா வல் லொற்றுக்களின் முன்பும் ஒரே தன்மையது என்று கருதமுடியாது. தமிழ் நெடுங்கணக்கில் ஆய்தத்தின் வைப்பிடம் வடமொழி நெடுங்கணக்கில் விசர்க்கம் குறிக்கப்படுவதைப் போலவே உயிர் நெடுங்கணக்கின் இறுதியில் குறிக்கப்படுகிறது. ஒலித்தன்மையைப் பொறுத்தவரை ஆய்தத்தை வடமொழி விசர்க்கத்தோடு ஒப்பிட்டு ஆராயமுடியாது என்றாலும், ஆய்தம் எல்லா வல்லொற்றுக்களின் முன்பும் ஒரே தன்மையதாக ஒலிக்கப்படுவதற்கு விசர்க்கம் ஒரு காரணமாக இருந்திருக்க வேண்டும் என்றே கருதத் தோன்று கிறது. விசர்க்கம் வடமொழியில் எந்த ஒலியனோடு நிகழ்ந்தாலும் ஒலித்தன்மையில் வேறுபடுவதில்லை.

14.2. ஆய்தத்தின் நிகழிடத்தைத் தொல்காப்பியம் திட்ட வட்டமாக வரையறை செய்கிறது. தனிச் சொற்களிலும் தொடர் மொழிகளிலும் ஆய்தம் தனிக் குறிலையடுத்தே நிகழ்கிறது. எ-டு: தனிச்சொற்கள். *அஃது, எஃகு, கஃசு, கஃபு, பஃறி.* தொடர்மொழி: *அஃறிணை, பஃறுளி, பஃறொடை, பஃறாரம்* (பத்துப். 4.361), *பஃறிணை* (பத்துப். 2.221), *பஃறேர்* (பத்துப். 2.130), *பஃறுகில்* (பத்துப். 1.296), *பஃறோல்* (மேற்படி. 10.377), *கொஃறேர்* (மேற்படி. 6.633), *முஃடீது, அஃகடிய, அஃபெரிய.* தனிமொழியிலும் தொடர்மொழியிலும் தனிக்குறிலையடுத்து நிகழும் ஆய்தத்தினை யடுத்து வல்லொற்றுக்கள் மட்டுமே நிகழ்கின்றன. தொடர் மொழிகளைப் பொறுத்தவரை நிலைமொழி யீற்று லகர ளகரங்களும், வகரமும் வருமொழி முதல் வல்லொற்றின்முன் ஆய்தமாகத் திரிகின்றன. எ-டு: *பல்+திணை > பஃறிணை; முள்+ தீது > முஃடீது, அவ்+கடிய > அஃகடிய.*

14.3. தொடர்மொழியில் தகரத்தின் முன் லகர ளகரங்கள் ஆய்தமாகத் திரிகையில், தகரமும் முறையே றகர டகரங்களாகத் திரிகின்றது. பதப்புணர்ச்சியில் ஆய்தம் மெய்யொலிகளின் திரிபாக அமைவதால் அதனை மெய்யொலியாகக் கருதுவதைத் தவிர்க்கமுடியாது. ஆய்தம் மெய்யொலியாயின் அதன் ஒலித்தன்மை எத்தகையது என்பது அடுத்து எழும் வினாவாகும். இந்த ஆய்வுரையில் இதுபற்றிச் சுருக்கமாகச் சிந்திக்கப்படும்.

14.4. பொதுவாக மொழியில் ஓர் மெல்லொலியும் நிலையொலித் தன்மையதாகிய (Voicelessness) வல்லொலியும் மயங்குகையில் பலவகையான திரிபுகளை எதிர்பார்க்கலாம். இதனை NP என்ற குறியீட்டின்மூலம் விளக்கலாம். இந்தக் குறியீட்டில் N என்பது எல்லா மெல்லொலிகளையும், P என்பது நிலையொலித்தன்மையனவாகிய எல்லா வல்லொலிகளையும் உணர்த்தும் பொதுக் குறியீடுகளாகும். NP என்ற குறியீட்டில் மெல்லொலியும் வல்லொலியும் பின்வரும் ஐந்து வகையான திரிபுகளாக அமைய வாய்ப்பு உண்டு.

| | | |
|---|---|---|
| (1) | NP > NP | (*na:NTu>na:NTu (Telugu) 'நாட்டு', *ta:NTu> da:NTu (Telugu) 'தாண்டு'. |
| (2) | NP > NB | (*ta:NTu>ta:NDu (phonetically) (Tamil) 'தாண்டு', *kuNT(u) > kuND(u)/kuND-am (phonetically) (Tamil) 'குண்டு/குண்டம்', *pantu>pandu (phonetically) (Malayalam) 'ten'. |
| (3) | NP > PP | *na:NTu>na:TTu (Tamil) 'நாட்டு', *kuNT(u)>kuTT-am/kuTT-ai (Tamil) 'குட்டம்/குட்டை', *pantu> pattu (Tamil) 'பத்து', *kunt->gutt-a/gutt-e (Kan) 'hillock'. gutt-a (Tel) 'hill/hillock'. |
| (4) | NP>(NB)>BB | *ku<u>nt</u>->gudd-u/gudd-a (Kan), gudd-e (Tul) 'hill, mountain', gudd-e (Kan) 'heap. pile' DED/1402, *kaNT->gaDD-e (Kan, Tul), gaDD-a (Tel) 'bulbous root' - DED 084. கண்டல் mangrove, kaNTa (kaNDa, phonetically (Mal)) 'bulbous root as of lotus, plantain'. kaNTal (Mal) 'what is bulb-like, half-ripe jack fruits and the green fruits'. kaNDe (Kod) root-stock from which small roots grow, kaNDe/gaDDe (Tul) 'a bulbous root'. |
| (5) | NP>(NB)>NN | DED3792 Eg. (*mayntu > *mayñcu >) mañcu (Tel.) 'dew, mist, fog', Tulu. maindu 'dew, mist, fog'; Tamil. |

mañcu (phonetically, *mañju*) `cloud, white cloud, fog, dew', Mal. maññu *(மஞ்ஞு)* 'dew, mist, snow'.

மேலே குறிக்கப்பெற்றுள்ள NP-யின் ஐந்து வகையான திரிபுகளில் முதல் வகைத் திரிபு இயல்பாக அமைந்த ஒன்றாகும். NP-யின் திரிபுகளில் இரண்டாம் திரிபும் மூன்றாம் திரிபும் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் காணப்படுகின்றன. நான்காம் திரிபு தமிழ் மலையாளம் நீங்கலாகத் தெலுங்கு, கன்னடம் முதலான திராவிட மொழிகளில் காணப்படுகின்றது. *NP என்பது NB எனத் திரிந்து பின்னர் BB என்றாகிறது. ஐந்தாம் திரிபு மலயாளத்தில் பரவலாகக் காணப்படுவதாகும். இந்தத் திரிபு NP > (NB) என்பதை அடித்தளமாகக் கொண்டதாகும்.

14.5. தமிழில் நான்காம் வகைத் திரிபு காணப்படவில்லையென்றாலும் தனிக்குறில் மொழிகளில் உயிரிடை நிகழும் ஒற்றை வல்லொற்றுக்களை BB-யின் ஒடுக்கமாகக் கருத வாய்ப்பு உள்ளது. *பத்து* என்ற எண்ணுப்பெயரின் மாற்றுருபாகிய *பது* (எ-டு. இருபது, எழுபது) என்பதை நேரடியாக அதன் தொல்வடிவமாகிய *pantu (*பந்த்உ) என்பதன் திரிபாகக் கருதமுடியாது. பத்து என்பதன் திரிபாகவும் இதனைக் கருதமுடியாது. *pantu என்ற தொல்வடிவம் முதல்கட்டமாக ஒலிப்புநிலையில் (Phonetic Level) *pandu என்று திரிந்து பின்னர் *pandu என்பது *paddu எனத்திரிந்து, இறுதியில் *பது* என ஒடுங்கியதாகல் வேண்டும். தமிழில் *பத்து* என்ற எண்ணுப்பெயர்க்கு *பஃது* என்ற மாற்றுருபும் காணப்படுகிறது. தமிழ் நெடுங்கணக்கைக் கொண்டு *paddu என்பதைக் குறிக்க வாய்ப்பில்லை. ஆனால் தமிழில் நிகழும் *பஃது* என்பதைக் கருதுகையில் இச்சொல் *paddu என்பதை உணர்த்துவதாகக் கருதத்தோன்றுகிறது. *எஃகு* என்ற சொல் eggu என்றும் சிலரால் ஒலிக்கப்படுவதை இங்கே கருத்தில் கொள்ளலாம். இதனைக் கருத்தில்கொண்டு *அது* என்பதன் மாற்றுருபாகிய *அஃது* என்பதை addu என்பதன் தமிழ் வடிவமாகக் கருதலாம். இந்தக் கருதுகோள் *அது* என்பதை addu என்பதன் ஒடுக்கமாகக் கருத வகை செய்கிறது. தமிழில் அலையொலித் தன்மையதாகிய இரண்டு இனவல்லொற்றுக்கள் மயங்குவதற்கு வாய்ப்பில்லையாதலால் இத்தகைய மயக்கத்தை உணர்த்துவதற்கு ஆய்தம் ஒரு பொதுக் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டதாகல் வேண்டும். ஆய்தம் க, ச, த, ப ஆகிய நான்கு அலை வல்லொற்றுக்களை (voiced plosives) உணர்த்துவதால் இதன் ஒலிப்பு விளக்கத்தை [+வன்மை, +அலைமை] என்று குறிப்பிடலாம். எத்தகைய ஒலிப்பிடத்தைக்

கொண்ட வல்லொற்றை ஆய்தக் குறியீடு உணர்த்துகிறது என்பதைப் பின்வரும் சந்தி விதியின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

6) [+வன்மை, +அலைமை] > [+வன்மை, +அலைமை + X] /-X

இந்தச் சந்தி விதியில் X என்பது வல்லொற்றுக்களின் ஒலிப்பிடத்தைக் குறிப்பதாகும். எடுத்துக்காட்டாக X என்பது அண்பல் ஒலிப்பிடத்தைக் குறிக்குமாயின் ஆய்தம் அலையொலித்தன்மை பொருந்திய அண்பல் வல்லொற்றாக (Voiced Dental Plosive) அறியப்படும்.

14.6. மேலே நிகழ்த்திய ஆய்வினைக் கருத்தில் கொண்டு NPயின் திரிபாகிய BB என்பதில் காணப்படும் முதல் மெய்யொலி தமிழில் நிகழுமாயின் அதனைக் குறிக்கும் ஒரு பொதுக் குறியீடாக ஆய்தம் தொடக்கத்தில் பயன்பட்டிருக்க வேண்டும் என்று துணியலாம். இது உண்மையாயின் ஆய்தம் தொடக்கத்தில் அலையொலித் தன்மை (Voiced Character) பொருந்திய வல்லொலிகளைக் குறித்ததாகல் வேண்டும். இந்தக் கருதுகோள் தொல்காப்பியரின் சார்பெழுத்துக்களின் பிறப்புக் கோட்பாட்டுக்குப் பொருந்துவதாக உள்ளது. *சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத், தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும், தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி, ஒத்த காட்சியில் தம்மியல் பியலும்* (தொல். எழுத்து. 101. நச்.) என்ற தொல்காப்பிய நூற்பா ஆய்தம் வல்லொற்றுக்களின் ஒலிப்புத்தன்மையுடன் பொருந்தும் என்று உணர்த்துவது கருதற்பாலது. இந்த ஆய்வில் தெளிவாகாத இடங்களும் உண்டு. தமிழில் பதப்புணர்ச்சியில் லகர ளகரங்களும், வகரமெய்யும் ஆய்தமாகத் திரியும் நிலை காணப்படுகிறது. ஆய்தம் BB என்பதோடு தொடர்புடையது என்ற கருதுகோளைக் கருத்தில்கொண்டு லகர ளகரங்களும் வகர மெய்யும் மெல்லொலியைப் போல் P என்ற வல்லொலியின் முன் B எனத் திரிந்ததாக இப்போதைக்குத் துணியலாம். இந்த ஆய்வினின்றும் ஆய்தத்தைத் தொல்திராவிட ஒலியனாக மீட்டுருவாக்கம் செய்ய வாய்ப்பிருப்பதாகத் தோன்றவில்லை.

❊ ❊ ❊

**பின்குறிப்பு:** ஆய்தம் பற்றிய மேலும் விரிவான ஆய்வு இரா. கோதண்டராமனில் (2001: 49-76) மேற்கொள்ளப்பட்டுள்ளது.

# 15. தொல்காப்பியரின் மிகுதிக் கோட்பாடு

15.1 தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்று மூன்று அதிகாரங்களைக் கொண்ட தொன்மை சான்ற இலக்கண நூலாகும். எழுத்ததிகாரம் எழுத்துக்களின் பிறப்பு, எழுத்துக்களின் வகை, மயக்கம், புணரியல் மரபு முதலானவை பற்றி விரிவாக ஆராயும் பகுதியாகும். தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் மேற்கொண்ட புணரியல் ஆய்வினைப் பற்றிய மதிப்பீடுகள் அவ்வப்போது நிகழ்ந்திருந்தாலும் தொல்காப்பியரின் சாரியைக் கோட்பாட்டின் குறைநிறைகளைப் பற்றி இன்னும் அழுத்தமாகச் சிந்திக்க வாய்ப்புள்ளது. இந்தச் சிந்தனையின் ஒரு தோற்றுவாயாக இந்த ஆய்வுரை அமைவதாகக் கருதலாம்.

15.2. இலக்கணிகளும், மொழியியலாரும் புணரியல் ஆய்வில் பதப்புணர்ச்சி, விகுதிப் புணர்ச்சி என்ற இருவகையான புணர்ச்சிகளைக் கருத்தில் கொள்கின்றனர். சொல்லுடன் சொல் பொருந்துவது பதப்புணர்ச்சி என்றும், சொல்லுடன் விகுதி புணர்வது விகுதிப்புணர்ச்சி என்றும் குறிக்கப்படும். இந்த இருவகைப் புணர்ச்சியும் நிகழும்போது தோன்றல், திரிதல், கெடுதல் என்ற மூன்று வகையான விகாரங்களைப் பற்றிப் பேசுவது இன்றியமையாததாகின்றது. *தமிழ்ப்பணி* என்பதில் நிலைமொழியை அடுத்து நிகழும் பகர மிகுதியும் *எனது* என்பதில் *என்* என்பதையடுத்து நிகழும் அகரமிகுதியும் தோன்றல் விகாரமாகும். *உண்டான்* என்பதில் இறந்தகால உருபன் ஆகிய தகரம் டகரமாகத் திரிவதும், *மட்பாண்டம்* என்பதில் நிலை மொழியீற்று ணகரம் டகரமாகத் திரிவதும் திரிதல் விகாரமாகும். *வீரவாள், மரநிழல்* ஆகியவற்றில் நிலைமொழியின் ஈற்று மகரம் கேடுறுதல் கெடுதல் விகாரமாகும். இந்த மூன்று வகை விகாரங்களுள் தோன்றல் விகாரம் பற்றிய தொல்காப்பியரின் அணுகுமுறை மறுபரிசீலனைக்கு உரியதாக நமக்குத் தோன்றுகிறது.

15.3. தோன்றல் விகாரத்தைத் தொல்காப்பியர் *மிகுதல்* என்று குறிப்பிடுவார். மிகுதற் புணர்ச்சியில் எழுத்து, சாரியை என்று இருவகைக் கூறுகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். எழுத்தின் மிகுதியை இங்கே எழுத்துப்பேறு என்று குறிப்பிடலாம். இந்தக் கலைச்சொல் மரபிலக்கணிகளின்

விளக்கத்திலிருந்து சற்று மாறுபட்டது. புணர்ச்சியில் நிகழும் மெய்யெழுத்துப் பேறுகளும், உயிரெழுத்துப் பேறுகளும் எழுத்துப் பேறுகளாகக் குறிக்கப்படும். *பனிக்காலம், மாம்பழம், ஐந்தேமுக்கால்* ஆகிய அமைப்புகளில் நிகழும் வல்லெழுத்து, மெல்லெழுத்து, உயிரெழுத்து மிகுதிகள் எல்லாம் எழுத்துப்பேறு களாகும். *புளியம்பழம், உறவினர், அதனை* ஆகிய அமைப்புக்களில் நிகழும் *அம், இன், அன்* ஆகியவை சாரியைகளாகும். எழுத்துப் பேறுகளையும், சாரியைகளையும் ஒன்றுக்கொன்று தொடர் பில்லாத உறுப்புக்களாகவே கருதுகிறார் தொல்காப்பியர். எழுத்துப் பேறுகளைப் பொறுத்தவரையில் வல்லெழுத்து, மெல்லெழுத்துப் பேறுகளும்கூடத் தொடர்பற்ற உறுப்புக் களாகவே தொல்காப்பியரின் புணரியல் ஆய்வில் காணப்படு கின்றன. இவற்றைப் பொறுத்தவரையில் மாற்றிலக்கண மொழியியலார் வலியுறுத்தும் ஒருங்கிணைந்த ஆய்வுமுறையைத் தொல்காப்பியர் போற்றவில்லை என்றே தோன்றுகிறது. இதனால் தொல்காப்பியருக்கு இத்தகைய ஆய்வு முறையைப் பற்றிய சிந்தனை இல்லை என்று நாம் கருதவில்லை. சாரியை-எழுத்துப் பேறு ஆகியவற்றைப் பொறுத்தவரை ஒருங்கிணைந்த ஆய்வு முறைக்கு (Integrated Analysis) வாய்ப்பு இருந்தும் தொல்காப்பியர் ஏன் அத்தகைய ஆய்வினை மேற்கொள்ளவில்லை என்பது விளங்காத புதிராகவே இருக்கின்றது. ஒருங்கிண்ணந்த ஆய்வு முறையைப் பற்றி இங்கே சிந்திப்பதற்கு முன் அதற்கான பின்னணியை அ்மைத்துக் கொள்வது அவசியமாகின்றது.

15.4. அம் சாரியையில் நிகழும் மகரம் *எருவங்குழி* என்ற தொடரில் ககரத்தின் மெல்லொற்றாகத் திரிவதாகவும், *செருவக்களம்* (< செரு - அம் + களம்) என்ற தொடரில் கேடுற்று ககரமெய் மிகுவதாகவும், *புளியமரம்* (< புளி-அம் + மரம்) என்ற தொடரில் கேடுறுவதாகவும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். புணர்ச்சியில் நிலைமொழியீற்று மகரத்தின் நிலைபற்றிப் பேசுகையில் *மரக்கிளை, அறங்காவல்* என்ற தொடர்களில் அது கெட்டு முறையே வருமொழி முதலின் இனவல்லொற்றும், இன மெல்லொற்றும் இடம்பெறுவதாகவும், *மரவேர்* என்பதில் கேடுறுவதாகவும் குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர். *செருவக் களம், மரக்கிளை, அறங்காவல்* ஆகிய அமைப்புக்களில் சம்பந்தப் பட்ட மகரம் வருமொழி முதலின் இனவல்லொற்றாகவும், இனமெல்லொற்றாகவும் திரிந்ததாகத் தொல்காப்பியர் கருத வில்லை. மெல்லொற்றைக் கெடுத்து அந்த இடத்தில் வருமொழி முதலின் இனவல்லொற்றையோ, இனமெல்லொற்றையோ

மிகுவிப்பது தான் தொல்காப்பியர் மேற்கொண்ட ஆய்வு மரபாகும். தொல்காப்பியரின் இத்தகைய ஆய்வு முறைக்கான காரணங்களைப் பற்றி நாம் இங்கே பேசப் போவதில்லை. ஒன்றை நாம் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். தொல்காப்பியர் மேற்கொண்ட இந்த ஆய்வுமுறையானது நாம் பின்னர்க் குறிப்பிடப் போகும் மாற்று ஆய்வுக்கும் பொருந்தும்.

15.5. தொல்காப்பியர் காலத்தமிழில் மெய்யெழுத்துப் பேறுகளையும் உயிரெழுத்துப் பேறுகளையும் பல அமைப்புகளில் காண முடிகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் அறியலாம்.

1. வல்லெழுத்துப்பேறு

விள-க்+குறிது, கிளி-க்+கால், ஈ-ச்+சிறகு, கடு-க்+காய், யானை-க்+கால், தேர்-ப்+படை, நாய்-க்+கால், பூழ்-க்+கால்.

2. மெல்லெழுத்துப்பேறு

உதி-ங்+கோடு, ஒடு-ம்+பூ, சே-ங்+கோடு, நமை-ந்+தோல், ஆர்-ஞ்+செதிள், வெதிர்-ங்+கோடு, சார்-ம்+பூ.

3. மெல்லெழுத்துப்பேறும் வல்லெழுத்துப்பேறும் உறழ்தல்

பூ-ங்/க்+கொடி, புளி-ஞ்/ச்+சோறு, பாழ்-ங்/க்+கிணறு, வேய்-ம்/ப்+புறம்.

4. உகரப்பேறு

பொருந்-உ+வலிது, மண்-உ+வலிமை, பின்-உ+மாட்சி.

5. உகரப்பேறும் வல்லொற்றுப்பேறும்

மண்-உக்+கடுமை, பின்-உப்+பெருமை, செம்-உச்+சிறுமை.

உகரப்பேறு பெரும்பாலும் தொழிற்பெயர்களையடுத்தும் *ஈம், கம், உரும், வல், தெவ், புள், வள்* முதலான பெயர்களை யடுத்தும் நிகழ்வதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். வருமொழி முதல் வல்லொற்றாக இருந்தால் உகரப் பேற்றினைத் தொடர்ந்து வல்லொற்றுப் பேறும் நிகழும். இதனை (5)-ஆம் எடுத்துக்காட்டில் காணலாம்.

6. அகரப்பேறு

பொருந்-அ+மாட்சி, வல்-அ+நாய், எகின்-அ+வலிமை, கன்-அ+வலிமை.

7. அகரப்பேறும் வல்லொற்றுப்பேறும்

பொருந்-அக்+கடுமை, பலா-அக்+காய், வல்-அப்+பலகை, எகின்-அச்+செவி, கன்-அக்+குடம்.

8. அகரப்பேறும் மெல்லொற்றுப்பேறும்

மா-அங்+காய்

9. அகரப்பேற்றினை அடுத்து வல்லொற்று மெல்லொற்றுப் பேறுகள் உறழ்தல்

யா-அங்+கோடு / யா-அக்+கோடு, தளா-அம்+பூ / தளா-அப்+பூ, பிடா-அஞ்+செதிள் / பிடா-அச்+செதிள்

15.6. மேலே குறிப்பிட்ட எடுத்துக்காட்டுக்களில் நிகழும் எழுத்துப் பேறுகளைக் கருத்தில் கொண்டு தொல்காப்பியரின் ஆய்வு முறையில் காணப்படும் நெருடல்களை நாம் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். சில அடிப்படை வினாக்கள் மூலம் இந்த நெருடல்களைப் புலப்படுத்தலாம். (1) மெல்லொற்றுப் பேறுகளையும் வல்லொற்றுப் பேறுகளையும் மகரப் பேற்றின் திரிபாக ஏன் கருதக்கூடாது? (2) அகர உகரப் பேறுகளை முறையே அம், உம் சாரியைகளின் எச்சங்களாக ஏன் கருதலாகாது? அதேபோல் வல்லொற்று மெல்லொற்றுப் பேறுகளுடன் கூடிய அகர உகரப்பேறுகளையும் ஏன் அம், உம் சாரியைகளின் திரிபாகக் கொள்ளக் கூடாது? (3) *ஈமக்குடம், கம்மக்குடம், தாழக்கோல், தமிழக்கன்னி* ஆகிய தொடர்களில் அக்குச் சாரியை நிகழ்வதாகக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். இந்தச் சாரியை ஒரு கற்பிதச்சாரியை ஆகும். மேலே குறிப்பிட்ட நான்கு எடுத்துக்காட்டுகளிலும் அக்குச்சாரியையின் எச்சமாக நிகழ்வது நிலைமொழிகளையடுத்து நிற்கும் அகரம் மட்டுமேதான். அதனை யடுத்து நிகழும் வல்லொற்று எழுத்துப்பேறாகும். *ஈமக்குடம், கம்மக்குடம், தாழக்கோல், தமிழக்கன்னி* ஆகிய தொடர்களில் அக்குச் சாரியை நிகழ்வதாகக் கொள்ளாமல் அகரப்பேறும் வல்லொற்றுப்பேறும் நிகழ்வதாகக் கொண்டு, இந்த எழுத்துப் பேற்றினையும் அம் சாரியையையும் ஏன் தொடர்பு படுத்தக் கூடாது? ஒரு வாதத்துக்காக இன்னொரு வினாவையும் நாம் இங்கே எழுப்ப முடியும். அது அகரப்பேறு நிகழ்வதாகத் தொல்காப்பியர் குறிப்பிடும் எடுத்துக்காட்டுகளில் அக்குச் சாரியை நிகழ்வதாகக் கொண்டால் ஏற்படும் இடர்ப்பாடு என்ன என்பதாகும். இந்த வினாக்களுக்கெல்லாம் தொல்காப்பியரின் புணரியல் கோட்பாட்டில் தெளிவான, திட்டவட்டமான விடையைக் காண முடியவில்லை.

15.7. மொழியின் அமைப்பியல்பு தொடர்பான ஆய்வைப் பற்றிப் பேசும்போது புற நிறைவு (External Adequacy), அகநிறைவு (Internal Adequacy) என்று இரண்டு வகையான நிறைவுகளைக் கருத்தில் கொள்வது மரபாகும். இவற்றுள் எதனைத் தேர்ந்தெடுப்பது என்பது ஆய்வாளர் மேற்கொள்ளும் விளக்க வியல் கோட்பாட்டைப் பொறுத்ததாகும். இவற்றுள் புறநிறைவைப் பின்புலமாகக் கொண்ட ஆய்வானது மொழியமைப்பில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகள் (Deap Seated Regularities) பற்றிக் கவலைப்படுவதில்லை. தொல்காப்பியரின் புணரியல் கோட்பாடு பெரும்பாலும் புற நிறைவினைக் கருத்தில் கொண்டதாகும். உயிரெழுத்துப் பேறுகளையும், அக்குச் சாரியையையும் தனது ஆய்வில் தொல்காப்பியர் குறிப்பிடுவதற்குக் காரணம் அவரது புணரியல் கோட்பாட்டில் புறநிறைவுப் பண்பு தலைமையிடம் பெறுவதாகும். அக நிறைவைக் கருத்தில் கொண்ட ஆய்வானது மொழி அமைப்பில் புதையுண்டு கிடக்கும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைப் புலப்படுத்துவதில் கவனம் செலுத்துகிறது.

15.8. அகநிறைப் போற்றும் ஆய்வில் உறுப்புக்களையும் அமைப்புக்களையும் ஒருங்கிணைப்பது பற்றிய சிந்தனையும் சிறப்பிடம் பெறுகிறது. தொல்காப்பியர் ஆய்வில் நாம் சற்றுமுன் எழுப்பிய வினாக்களுக்கு அகநிறைவைக் கருத்தில் கொண்ட ஆய்வில் இடமில்லை. இத்தகைய ஆய்வின் விளைவுகள் எத்தகையதாக இருக்கும் என்பதை நாம் இங்கே தெளிவுபடுத்தியாக வேண்டும். தொல்காப்பியர் குறிப்பிடும் வல்லொற்று மெல்லொற்றுப் பேறுகளை மகரப்பேற்றின் திரிபாகக் கொள்வதன்மூலம் இந்த இருவகைப்பேறுகளும் மகரப் பேற்றுடன் ஒருங்கிணைக்கப்படு கின்றன. இதேபோல் அகர உகரப் பேறுகளை அம், உம் சாரியைகளின் எச்சங்களாகக் கொள்வதன் மூலம் இந்த இருவகைப் பேறுகளும் முறையே அம், உம், சாரியைகளுடன் ஒருங்கிணைக்கப்படுகின்றன. அக்குச் சாரியை தவிர்க்கப்பட்டு அதன் இடத்தை அம் சாரியை பெறுகிறது. இதன் விளைவாகத் *தமிழவேள், தாழக்கோல்* ஆகிய அமைப்புகள் *தமிழ்-அம்+வேள், தாழ்-அம்+கோல்* என்ற அமைப்பினவாகின்றன. இவற்றை *மரவேர், மரக்கிளை* ஆகியவற்றுடன் ஒப்புநோக்குக. *தமிழம், தாழம்* (> தாளம்) ஆகியவை தெலுங்கில் ஒரு சொல் நீர்மையனவாக நிகழ்வது கருதற்பாலது. இது பிந்திய வளர்ச்சி. அம் சாரியை சொல்லின் ஒருங்கிணைந்த உறுப்பாவது

திராவிடமொழிகளில் காணப்படும் இயல்பான நிகழ்ச்சியாகும். எ-டு: *எகினம், வானம், கானம், மீனம், எஃகம், புற்றம்.*

*15.9.* தொல்காப்பியரின் ஆய்வுமுறையானது புறநிறைவுத் தன்மையதாகையால் மொழியின் அமைப்பை விளக்க அவர் பல்வேறு செயற்கை விதிகளை வகுக்கவேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறார். எடுத்துக்காட்டாக, *எனக்கு* என்ற அமைப்பை ஆராய்கையில் நிலைமொழியாகிய *என்* என்பதையடுத்து அகரப் பேறும் அதனையடுத்து நிகழும் குகர வேற்றுமையின் முன் ககரப் பேறும் நிகழும் என்று செயற்கையான இரண்டு விதிகளைப் படைக்கிறார் தொல்காப்பியர். மாறாக *எனக்கு* என்ற அமைப்பை அக நிறைவைப் போற்றும் ஆய்வுக்கு உட்படுத்துகையில் அதன் அமைப்பில் அம் சாரியை குறிக்கப்படும். இந்த அமைப்பியல் விளக்கமானது *எனக்கு* என்ற சொல்லின் அமைப்பை *என்-அம்+கு* என்று ஆராய வகை செய்கின்றது. இந்த அமைப்பில் நிகழும் அம் சாரியையின் மகரம் ககரத்தின் முன் முதலில் இன மெல்லொற்றாகத் திரிந்து பின்னர் இன் வல்லொற்றாகத் திரிகின்றது. *செருவக்களம்* என்ற அமைப்புக்குத் தொல்காப்பியர் மேற் கொண்ட ஆய்வு நாம் மேலே குறிப்பிட்ட மாற்று ஆய்வுக்கு வகை செய்கின்றது.

*15.10.* அகநிறைவைக் கருத்தில் கொண்ட புணரியல் ஆய்வில் அத்துச் சாரியை பற்றியும் நாம் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். தனது ஆய்வில் அத்துச்சாரியை சிதைந்தும், 'முழுமையாகவும் நிகழும் இடங்களைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். அத்துச் சாரியை முழுமையாக நிகழும் *மழையத்து, வளியத்து, வெயிலத்து* முதலான அமைப்புகளைப் பொறுத்தவரையில் ஆய்வுச் சிக்கல் ஏதுமில்லை. வேற்றுமைப் பொருண்மையதாகக் கருதத்தக்க மேற்படி சாரியை சிதைந்து வருவதாகத் தொல்காப்பியர் கருதும் அமைப்புக்களைப் பற்றிய அவரது ஆய்வு மறுபரிசீலனைக்குரிய தாகின்றது. *மரத்துவேர், மரத்தில், அழத்தை (< அழன்-அத்து+ஐ), புழத்தை (<புழன்-அத்து+ஐ), மகத்துக்கை (< மக-அத்து+கை)* ஆகிய அமைப்புகளில் அத்துச் சாரியையைக் குறிப்பதன் மூலம் தொல்காப்பியர் ஆய்வினைச் சிக்கல் மிகுந்ததாக ஆக்குகின்றார். இந்த அமைப்புகளில் *மரம், அழன், புழன்* ஆகியவற்றில் நிகழும் ஈற்றுமெய் கெடுவதாகவும் தொடர்ந்து அத்தின் அகரம் கெடுவதாகவும் தொல்காப்பியர் கருதுகிறார். மரபிலக்கண ஆய்வுப் போக்கை மேற்கொண்டால் *மகத்துக்கை* என்ற அமைப்பில் *மக* என்பது நிலைமொழியாகும். அதனையடுத்து நிகழும் அத்துச் சாரியையின் அகரம் (தொல்.எழுத்து.நச். 125)

ஒரு பொதுவிதியின் மூலம் தவிர்க்கப்பட்டு *மகத்துக்கை* பெறப்படுகிறது. ஆனால் அக நிறைவைப் பின்புலமாகக் கொண்ட ஆய்வில் மேலே குறிப்பிட்ட அமைப்புகள் அனைத்திலும் அத்துச் சாரியையானது துகரச் சாரியையாகக் குறிக்கப்படும். ஆய்வில் துகரச் சாரியையின் வருகையால் *மரத்து, அழத்து, புழத்து* ஆகிய வேற்றுமைப் பகுதிகளின் நிலைமொழிகளாகிய *மரம், அழன், புழன்* ஆகியவற்றின் ஈற்றுமெய் தவிர்க்கப்பட்டுத் துகரச் சாரியை முன் தகரமெய் எழுத்துப் பேறாக இடம்பெறும். இத்தகைய ஆய்வு தொல்காப்பியருக்கு ஏற்புடையதேயாகும். *மரக்கிளை, செருவக் களம்* ஆகியவற்றின் மீதான தொல்காப்பியரின் புணரியல் ஆய்வு இங்கே கருதத்தக்கதாகும்.

*15.11.* ஒன்றைக் கெடுத்து இன்னொன்றை மிகுவித்தல் என்பது தொல்காப்பியரின் புணரியல் கோட்பாடுகளில் ஒன்றாகும். ஒன்று இன்னொன்றாகத் திரிகிறது என்பதையே தொல்காப்பியர் இந்தக் கோட்பாட்டின் மூலம் மறைமுகமாக உணர்த்த முற்படுகிறார். இதில் மறைமுகம் என்ன வேண்டியிருக்கிறது? நேர்முகமாகவே *மரம்+கிளை* > *மரங்-கிளை (maraṅ-[k]iLai) > *மரக்கிளை* என்று மொழியிறுதி மகரம் இருநிலைகளில் இனமெல்லொற்றாகவும், இனவல்லொற்றாகவும் திரிந்தது எனக் கொள்வது நேரிய ஆய்வாகத் தோன்றுகிறது. இத்தகைய வெளிப்படையான ஆய்வின்மீது அமையும் இலக்கணம் அகநிறைவைக் கருத்தில் கொண்டதாகும். *மகத்துக்கை* என்ற அமைப்பைப் பொறுத்தவரை நிலைமொழியை *மக* என்று கொள்ளாமல் *மகம் என்று கொள்வதன் மூலம் மேற்படி அமைப்பில் அத்துச்சாரியையின் நிகழ்ச்சியைத் தவிர்த்துவிட முடியும். *மகம் என்பது வண்ணனை நிலையில் ஓர் கற்பித வடிவம்தான். தொல்காப்பியரின் அக்குச் சாரியையும் ஓர் கற்பித வடிவம் என்பதை நாம் இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டும். *மக* என்னும் சொல் துகரச் சாரியை முன் *மகம் என்ற மாற்றுருபாக நிகழும் என்று ஓர் விதியை வகுத்துக் கொள்வதன் மூலம் *மகத்துக்கை* என்ற அமைப்பில் நிகழும் *மகத்து* என்பதை *மகம்+து* என்ற அமைப்பினதாகக் கொள்ளலாம் (*மகம் பால்யாடு, மகப்பால்யாடு,* (தொல். எழுத்து. நச். 219 உரை) ஆகிய தொடர்களில் *மகம்* என்ற சொல்லின் நிகழ்ச்சியைக் காணலாம்). இந்த அமைப்பில் நிலைமொழியீற்று மகரம் துகரச் சாரியை முன் கெட்டுத் தகரமெய் தொல்காப்பிய ஆய்வின்படி தோற்றம் கொள்கிறது. *மகப்பேறு* (< *மகம்+பேறு), *பேரப்பிள்ளை* (<*பேரம்+பிள்ளை) ஆகியவற்றுக்கும் இந்த ஆய்வு

மரபு பொருந்தும். இந்த ஆய்வினை *அழன், புழன்* ஆகியவற்றுக்கும் விரிவுபடுத்தி **அழம், *புழம்* என்ற கற்பித வடிவங்களைப் படைத்துக் கொண்டு *அழத்து, புழத்து* ஆகியவற்றின் அமைப்பை முறையே *அழம்+து, புழம்+து* என்று கொள்ளலாம். *அழன், புழன்* ஆகியவற்றை *அழம், புழம்* ஆகியவற்றின் மாற்றுருபுகளாகக் கொள்ளலாம். (*அழம்* என்பது **சழம்* என்பதன் திரிபாகும். நெல்லை-குமரி வழக்கில் இன்றும் *சழம்* என்பதன் நிகழ்ச்சி *சழத்து* என்ற அமைப்பில் போற்றப்படுகிறது).

*15.12.* மொழியமைப்பைப் பற்றிய ஆய்வில் மொழியின் தனித் தன்மையும், அதில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளும் போற்றப்பட வேண்டும். இந்த இரண்டினையும் போற்றாத ஆய்வு முறையைச் சிறந்த ஒன்றாகக் கருத முடியாது. அகநிறைவைப் போற்றும் ஆய்வில் மொழியின் தனித்தன்மையும், அதில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளும் கருத்தில் கொள்ளப் படுகின்றன. தொல்காப்பியரின் புணரியல் ஆய்வானது புறநிறைவைப் பின்புலமாகக் கொண்டதால் இந்த இரண்டும் அத்தகைய ஆய்வில் விளக்கம் பெறாமற் போகின்றன. ஆயினும் ஆய்வு முறைகளில் புறநிறைவின்மீதான ஆய்வுக்கும் இடமுண்டு என்பதை நாம் மறுக்கவில்லை. மொழியமைப்பைப் புரிந்து கொள்ள எந்த ஆய்வு சிறந்தது என்பதை நாம் கருத்தில் கொள்ளாமல் இருக்க முடியாது.

❊ ❊ ❊

# 16. மருங்கொலிப் புணர்ச்சி

## *16.1. மருங்கொலிப் புணர்ச்சி - ஒரு மேல் நோக்கு*

*16.1.1.* கன்னியாகுமரி, திருநெல்வேலி ஆகிய தமிழகத் தென் மாவட்டங்களின் வட்டாரத் தமிழை முதன்மைப்படுத்தி எழுதி வெளியாகியுள்ள இலக்கியப் படைப்புகளில் லகர ளகர மருங் கொலிகளையடுத்துப் புணர்ச்சியில் க, ச, த, ப ஆகிய வல்லொற்றுக்களின் மிகுதியைக் காணலாம். இத்தகைய வல்லொற்று மிகுதியானது பெரும்பாலும் பதப்புணர்ச்சியில் மேற்படி மாவட்டங்களைச் சேர்ந்த வட்டாரமொழி இலக்கியங்களில் காணப்படுகின்றது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*குமரி மாவட்டம்*

| | | |
|---|---|---|
| 1(1) | மணல்ப்புரை | (ஆ. மா. 1974:46) |
| (2) | கால்ப்பெட்டி | (ஆ. மா. 1974:49) |
| (3) | மேல்ப்புறம் | (ஆ. மா. 1974:59) |
| (4) | கல்த்துறை | (ஆ. மா. 1974:94) |
| (5) | வயல்க்கரை | (ஆ. மா. 1974:188) |
| (6) | விரல்த்தடம் | (பொன். 1979:136) |
| (7) | மதில்ச்சுவர் | (பொன். 1995:917) |
| (8) | கால்ச்செருப்பு | (பொன். 1995:66) |
| (9) | தோல்ப்பை | (பொன். 1995:549) |
| 2(1) | ஆள்க்கூட்டம் | (ஆ.மா. 1974:134) |
| (2) | தேள்க்கொடுக்கு | (பொன். 1995:671) |
| (3) | தோள்த்துண்டு | (பொன். 1995:158) |
| (4) | தோள்ப்புயம் | (பொன். 1995:1186) |

*நெல்லை மாவட்டம்*

| | | |
|---|---|---|
| 3(1) | கல்த்தூண் | (கி. ரா. 1976:4) |
| (2) | முதல்த்தோன்றல் | (கி. ரா. 1976:36) |
| (3) | முக்கால்ப்பாகம் | (கி. ரா. 1976:43) |
| (4) | சமையல்ப்புரை | (கி. ரா. 1976:51) |
| (5) | வேல்க்கம்பு | (கி. ரா. 1976:89) |

(6) மேல்த்தட்டு (கி. ரா. 1976:102)
(7) கல்ச்சட்டி (கி. ரா. 1976:140)
(8) விரல்க்கடை (கி. ரா. 1976:146)
(9) வைக்கோல்ப்போர்(கி. ரா. 1976:192)
(10) கல்க்கண்டு (கி. ரா. 1991:215)
(11) கால்ச்சுளுக்கு (கி. ரா. 1991:216)
(12) பால்ப்பட்டை (கி. ரா. 1991:223)
(13) வேல்க்கத்தி (சோ.த. 1996:63)
(14) உரல்க்கட (சோ.த. 1996:12)
(15) நெல்ச்சோறு (சோ.த. 1991:59)
(16) கால்ச்சகதி (சோ.த. 1996:65)

4 (1) ஆள்க்கணக்கு (சோ.த. 1996:156)
(2) முள்க்கம்பி (அ.மு. 1991:24)
(3) ஆள்க்காட்டி (கி. ரா. 1976:1)
(4) நாள்க்கணக்கு (கி. ரா. 1976:5)
(5) உள்த்தகராறுகள் (கி. ரா. 1976:5)

*வேல்த்தேவர்* (சோ.த. 1996:147) என்ற இயற்பெயரிலும் மருங்கொலியை அடுத்து வல்லொற்று மிகுதி காணப்படுகிறது. இந்தப் பெயரானது *வேலுத்தேவர்* என்பதன் ஒடுக்கமாகும். *மேல்க்கொண்டு* (கி.ரா. 1976:175), *நாள்ப்பட்ட* (பூ. 1979:163) ஆகியவற்றைப் பதப்புணர்ச்சியினவாகக் கொள்ளமுடியுமா என்பது சிந்திக்கத்தக்கது.

16.1.2. தமிழில் இருவகைப் புணர்ச்சிகள் உண்டு. ஒன்று, பதமும் பதமும் புணரும் பதப்புணர்ச்சியாகும். மேலே குறிக்கப் பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் பதப்புணர்ச்சியின் பாற்படுவனவாகும். இன்னொன்று, பதமும் விகுதியும் புணரும் விகுதிப் புணர்ச்சியாகும். எ-டு: *கண்+இல்>கண்ணில், நிலம்+கு> நிலக்கு* (திருக். 570), *நாள்+கள்> நாட்கள், கல்+கள்>கற்கள்.* தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில், குறிப்பாகக் கி. ராஜநாராயணனின் படைப்புகளில் விகுதிப் புணர்ச்சியில் லகர மருங்கொலியை அடுத்து வல்லொற்று மிகுதி காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

5 (1) பூணூல்க்காரன் (கி.ரா. 1976:16)
(2) காவல்க்காரன் (பொன். 1979:136)
(3) சொல்ப்படி (கி.ரா. 1976:91)

*இல், ஆல்* ஆகிய விகுதிகளை அடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியையும் விகுதிப்புணர்ச்சியின் பாற்பட்டதாகக் கருதலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

6 (1) வானத்தில்த் தேடினான் (கி.ரா. 1991:213)
(2) காதில்ப் படும்படி (கி.ரா. 1991:217)
(3) கையால்த் தடுத்தான் (அ.மு. 1991:44)

*எத்தினால்த்தான்* (கி.ரா. 1984:212), *தவறாமல்ப் போய்* (கி.ரா. 1984:215), *குத்துவது போல்த்தூக்கு* (கி.ரா. 1984:213) ஆகியவற்றை விகுதிப்புணர்ச்சியினவாகக் கொள்ள முடியுமா என்பது சிந்திக்கத் தக்கது.

16.1.3. மருங்கொலிகளையடுத்து வல்லொற்றுக்களை மிகுத்து எழுதும் மரபைப் போற்றிய முன்னோடியாக இந்த நூற்றாண்டில் யாரைக் குறிப்பிடலாம் என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை. ஆயினும், டி.கே.சி. என்று அறியப்படும் டி.கே. சிதம்பரநாத முதலியாரின் ஆய்வுப் படைப்புக்களில் இந்த மரபு வெகுவாகப் போற்றப்பட்டது என்பது கருத்தில் கொள்ளத்தக்க தாகும். இவருடைய ஆய்வுப் படைப்புக்களில் *இதய ஒலி* (1981), *கம்பர் தரும் ராமாயணம் - முதல்ப்பாகம்* (1953) ஆகியவற்றில் இத்தகைய போக்கைக் காணலாம். கம்பராமாயணப் பாடல்களின் மூலபாடங்களைச் சிதைத்து மருங்கொலிகளையடுத்து வல்லொற்றுக்களை மிகுவித்துப் புதிய பாடங்களைத் தோற்று விக்கும் அளவுக்குத் துணிந்தவர் டி.கே.சி. என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் நன்கு புலப்படுத்தும்.

| மூலபாடம் (அ.ப.பதிப்பு) | டி.கே.சி.யின் பாடம் |
|---|---|
| 7 (1) கருங்கடற்பள்ளி (பா.கா.601) | கருங்கடல்ப்பள்ளி (1953:69) |
| (2) பாற்கடற்படுதிரை (அயோ1537) | பாற்கடல்ப்படுதிரை (1953:200) |
| (3) நற்றாயும் (அயோ. 1555) | நல்த்தாயும் (1953:212) |
| (4) வேற்கண் (அயோ. 1806) | வேல்க்கண் (1953:312) |
| (5) விற்றடம் (அயோ. 1856) | வில்த்தடம் (1953:338) |
| (6) அகிற்புகை (அயோ. 1895) | அகில்ப்புகை (1953:348) |
| 8 (1) இருட்பகை (அயோ. 1644) | இருள்ப்பகை (1953:257) |
| (2) மனத்துட்கோடி (அயோ.1937) | மனத்துள்க்கோடி (1953:506) |
| (3) புட்டகுசோலை (அயோ. 1937) | புள்த்தகுசோலை (1953:371) |
| (4) கடவுட்டிரு நதி (அயோ. 2025) | கடவுள்த்திருநதி (1953:427) |

டி.கே.சி. இத்துடன் அமையாமல், *மாவியறானை* (அயோ. 930) (< மாவியல் + தானை) என்ற கம்பனின் தொடரை *மாஇயல்த்தானை* (1953:368) எனவும் சிதைத்துப் புதிய பாடம் கண்டுள்ளார். இந்தச் சிதைவு ஒருபுறமிருக்க, *கோற்றுறந்து* (அயோ. 1399), *காறாக்க* (அயோ. 1816) ஆகிய கம்பனின் தொடர்களை முறையே *கோல்த்துறந்து, கால்த்தாக்க* என்று கொள்ளாமல் *கோல்துறந்து* (1953:150), *கால்தாக்க* (1953:315) என்று இயல்பாக்கித் தன் பாடமாகக் கொள்வது டி.கே.சி.யின் தடுமாற்றத்தையே காட்டுவதாக உள்ளது. *கம்பர் தரும் ராமாயணம்* (1953) என்ற தன் நூலில் ஓரிடத்தில் *முதல்ப்பாகம்* (முன் அட்டை முதற்பக்கம்) என்றும் பிறிதோரிடத்தில் *முதற்பாகம்* (பதிப்புத் தகவல் பக்கம்) என்றும் இரண்டு பாடங்களைக் கொள்ளும் டி.கே.சி. கம்பர். மேற்கொண்டதாகக் கருதப்படும் பாடங்கைளச் சிதைக்க முற்பட்டது தமிழின் புணர்ச்சி வரலாற்றைக் கண்டறிய முடியாமல் செய்து விடுகிறது. தன்னுடைய கூற்றாக அமைந்த மொழியில் *கல்லுகள்* (1953:46), *வில்லுகள்* (1953:101), *வில்த்திறம்* (1953:91), *பால்க்கடல்பள்ளி* (1953:351) என்று தன் போக்கில் ஒரு மொழி மரபைப் படைத்துக் கொள்ள அல்லது பின்பற்ற டி.கே.சி.க்கு உள்ள உரிமையை யாரும் குறை கூறவோ மறுக்கவோ முடியாது. ஆனால் இன்னொருவர் படைப்பில் தலையிட்டு அவர் மேற்கொண்ட பாடங்களைத் தன்போக்கில் சிதைக்க முயலும் டி.கே.சி.யின் போக்கு வருந்தத்தக்கதும் வன்மையாகக் கண்டிக்கத் தக்கதுமாகும்.

*16.1.4.* டி.கே.சி.யின் கம்பராமாயண மூலபாட ஆய்வைப் பற்றிப் பேசுகையில் "இதுவரை அறிமுகமான பதிப்பாசிரியர்களில், ஏடுகளின் துணையின்றித் தம் உள்ளுணர்வு அறிவித்தவாறு மூலபாடத் திறனாய்வை மேற்கொண்டு நூல்களைப் பதிப்பித்த ஒரே பதிப்பாசிரியர் டி.கே.சி.யே ஆவார்" என்று குறிப்பிடுவார் ஈஸ்வரன் (1995:80). மேலும் குறிப்பிடுகையில் "போதிய இலக்கணப் புலமையும் இலக்கியப் பயிற்சியும் இன்மையாலும், எளிமையையே கருத்தில் கொண்டதாலும் இவர் எழுத்துக்களில் பிழையற்றதும் செம்மையானதுமான மொழிநடையைக் காணவியலாது" என்று டி.கே.சி.யின் மொழி நடையை மதிப்பீடு செய்யும் ஈஸ்வரன் (1995:182, 183), "டி.கே.சி. யின் எழுத்தில் ஒற்று மிக வேண்டிய இடத்து ஒற்று மிகாது; ஒற்று மிகக் கூடாத இடங்களில் தேவையில்லாது ஒற்றுமிகும். புணர்ச்சியாக வருமிடங்களில் புணர்ச்சி விதிகளைப் பின்பற்றாது அவ் விடங்களிலும் ஒற்று மிகுதலைக் காணலாம்" (1995:185, 186)

என்று முடிக்கிறார். டி.கே.சி.யின் மொழிப்புலமையைப் பற்றிய ஈஸ்வரனின் இந்தக் குறிப்பு முழுக்க முழுக்க ஏற்புடையதாகும்.

### 16.2. மலயாளத்தில் மருங்கொலிப்புணர்ச்சி

16.2.1. மருங்கொலிகளையடுத்து வல்லொற்று மிகுதியின் நிகழ்ச்சியானது தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் மட்டுமின்றி, தென்திராவிட மொழிகளுள் ஒன்றாகிய மலயாளத்திலும் காணப்படுகிறது. மலயாளத்தில் பதப்புணர்ச்சியிலும் விகுதிப் புணர்ச்சியிலும் போற்றப்படும் இந்த மரபு வட்டார மொழி மரபாக இல்லாமல் தகுமொழிக்குரிய ஒரு பொது மரபாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

#### பதப்புணர்ச்சி

9(1) கடல்க்குதிர 'கடற்குதிரை'
(2) கடல்க்கொள்ளைக்காரன் 'கடற்கொள்ளைக்காரன்'
(3) கடல்ப்பாம்பு 'கடற்பாம்பு'
(4) கடல்ப்புரம் 'கடற்புரம்'
(5) கடல்ப்பாயம் 'கடற்பாசி'
(6) கடல்க்காற்று 'கடற்காற்று'
(7) கடல்த்தோணி 'கடற்றோணி, கடல்தோணி'
(8) கடல்த்தலைவன் 'கடற்றலைவன், கடல்தலைவன்'
(9) கடல்ப்பசு 'கடற்பசு'
(10) கடல்ப்பச்ச 'கடற்பச்சை'
(11) கடல்க்காக்க 'கடற்காக்கை'
(12) கல்க்கரி 'நிலக்கரி'
(13) கல்ப்பணி 'கற்பணி'
(14) பல்ப்பொடி 'பற்பொடி / பல்பொடி'
(15) புல்த்தர 'புல்தரை'
(16) மேல்ப்புர 'மேற்புரை' (= மாடியறை)
(17) நெல்ச்செடி 'நெற்பயிர்' (?)
(18) பகல்க்கினாவு 'பகற்கனவு'

10(1) ஆள்க்கூட்டம்
(2) முள்க்காடு
(3) முள்ச்செடி
(4) முள்ப்படர்ப்பு 'முட்புதர்'
(5) வாள்ப்பட்ட 'வாள்பட்டை'
(6) வாள்ப்பயற்று 'வாட்போர்'

விகுதிப்புணர்ச்சி

11 (1) ஏல்க்குந்நு (நிகழ்கால வினைமுற்று)
(2) நில்க்குந்நு (நிகழ்கால வினைமுற்று)
(3) வில்க்குந்நு (நிகழ்கால வினைமுற்று)
(4) நூல்க்குந்ந 'நூற்கின்ற'
(5) நூல்ப்பு 'நூற்பு'
(6) காவல்க்காரன்
(7) பால்க்காரி

12 (1) கேள்க்குந்நு (நிகழ்கால வினைமுற்று)
(2) அயாள்க்கு 'அவருக்கு'
(3) ஞங்ஙள்க்கு 'எங்களுக்கு'

மலயாள எடுத்துக்காட்டுக்கள் ஓர் உண்மையை உணர்த்துவன வாக உள்ளன. மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதி தமிழகத்தின் தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் காணப்படுவது ஒரு தற்செயல் நிகழ்ச்சியோ மொழி மரபுக்குப் பொருந்தாத நிகழ்ச்சியோ அல்ல. மலயாளத் திலும் இத்தகைய நிலை காணப்படுவதால் இந்த மரபு மொழி வளர்ச்சியின் ஒரு படிநிலையாகக் கொள்ளத்தக்கதாகும். தொல் திராவிடப் புணர்ச்சியின் எச்சமாகவே மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியைக் கருத வேண்டும். புணர்ச்சியில் மருங்கொலிகள் இன வல்லொற்றுக்களாகத் திரிவதற்கும் இந்த வல்லொற்று மிகுதிக்கும் தொடர்பு உண்டு.

16.2.2. இக்காலச் செவ்வியல் தமிழில் பதப்புணர்ச்சியில் மருங் கொலிகள் வருமொழி வல்லொற்றுக்களின்முன் இனவல்லொற்றுக் களாகத் திரிந்தும் திரியாமலும் அமையும் போக்கு காணப்படு கிறது. பதப்புணர்ச்சி, விகுதிப்புணர்ச்சி இரண்டிலும் வல்லொற்று மிகுதியின் நிகழ்ச்சி புறநிலை வடிவங்களில் போற்றப்படவில்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

பதப்புணர்ச்சி

13 (1) தொழில் + சாலை > தொழிற்சாலை
(2) கடல் + கரை > கடற்கரை

14 (1) வாள் + போர் > வாட்போர்
(2) திங்கள் + கிழமை > திங்கட்கிழமை

15 (1) கடல் + புறா > கடல்புறா / கடற்புறா
(2) பல் + பொடி > பல்பொடி / பற்பொடி

16 (1) முள் + செடி > முள்செடி / முட்செடி
(2) ஆள் + கூலி > ஆள்கூலி / ஆட்கூலி

17 (1) தேள் + கடி > தேள்கடி
(2) தோள் + பட்டை > தோள்பட்டை

**விகுதிப்புணர்ச்சி**

(18) வில் + து > விற்று (இது வரலாற்றுப் புணர்ச்சி அல்ல)

(19) கேள் + து > கேட்டு (இது வரலாற்றுப் புணர்ச்சி அல்ல)

செவ்வியல் தமிழைப் பொறுத்தவரையில் மரபிலக்கணிகளின் புணரியல் ஆய்வு அடிநிலை உண்மைகளைக் கருதாமல், புறநிலை உண்மைகளை மட்டுமே கருத்தில் கொண்டு அமைந்ததாகும். ஆனால் தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் காணப்படும் மருங்கொலி சார்ந்த வல்லொற்று மிகுதியின் நிகழ்ச்சியானது புணரியல் மரபுகள் தொடர்பான ஆய்வுக்கு ஒரு புதிய பரிமாணத்தைச் சேர்க்கிறது. இதன் விளைவாக மருங்கொலிப் புணர்ச்சியைத் தமிழில் ஒரு மாறுபட்ட கோணத்திலிருந்து ஆராய வேண்டியுள்ளது.

16.2.3. செவ்வியல் தமிழைப் பொறுத்தவரை மருங்கொலிகள் புணர்ச்சியில் இனவல்லொற்றுக்களாகத் திரிவதற்கு முன்னுள்ள இடைநிலை வடிவங்களைப் பற்றி மரபிலக்கணங்கள் எதுவும் பேசவில்லை; அதற்கு அங்கே வாய்ப்பும் இல்லை. ஆனால் குமாரசாமி ராஜா (Kumaraswamy Raja, N. 1980:4-10) தன்னுடைய ஆய்வில் *திற்கும், கேட்கும், முயற்சி, மீட்சி* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களாக **தில்க்கும், *கேள்க்கும், *முயல்ச்சி, *மீள்ச்சி* ஆகியவற்றைக் கொள்வது இங்கே கருதத்தக்கதாகும். திராவிட மொழிகளின் புணரியல் வரலாற்றில் திருப்புமுனையாக அமைந்த தனது இரண்டு ஆய்வுகளில் மெல்லொலிகளும் மருங்கொலிகளும் முதல் மெய்யாக அமைந்து நிகழும் மும்மெய் மயக்கங்களையும் புணர்ச்சியில் அவை திரியும் போக்கினையும் விரிவாகவும் நுட்பமாகவும் ஆராயும் குமாரசாமிராஜா (1969, 1980), மருங்கொலிகள் பதப்புணர்ச்சியில் புணருமாற்றினைப் பற்றி எதுவும் பேசவில்லை. ஆயினும் விகுதிப் புணர்ச்சியில் மருங்கொலிகளின் புணர்ச்சி பற்றிய அவரது ஆய்வு பதப்புணர்ச்சிக்கும் பொருந்துவதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *பகற்பொழுது, மக்கட்பெருக்கம்* ஆகியவற்றின் முந்தைய வடிவங்களாக முறையே **பகல்ப்பொழுது, *மக்கள்ப் பெருக்கம்* ஆகியவற்றை அமைக்கவேண்டியது தவிர்க்க முடியாததாகும்.

## 16.3. எழுத்தொலி மிகுதியும் அடிநிலை வடிவமும்

*16.3.1.* தமிழ்ப் புணர்ச்சியில் எழுத்தொலி மிகுதியும், எழுத்தொலித் திரிபும் புணரியல் மரபுகள் பற்றிய ஆய்வின் அடித் தளங்களாக அமைகின்றன. இவற்றுள் எழுத்தொலி மிகுதி பற்றிய ஒரு மாறுபட்ட ஆய்வைக் குமாரசாமி ராஜா தொடங்கிவைத்த போதிலும் புணர்ச்சியில் எழுத்தொலி மிகுதியின் தோற்றம் விடுபடாத புதிராகவே இன்னும் இருந்து வருகிறது. இந்த வகையில் இரா. கோதண்டராமன் (Kothandaraman, R., 1993) மேற்கொண்ட முயற்சியை அடியொற்றி வல்லொற்று மிகுதியின் தோற்றம் பற்றி இங்குச் சிந்திக்கப்படுகிறது. குமாரசாமி ராஜாவின் ஆய்வுப்படி *பகற்பொழுது, மீட்சி* ஆகியவை **பகல்ப்பொழுது, *மீள்ச்சி* ஆகியவற்றினின்றும் பெறப்படுமாயினும், இவற்றில் நிகழும் வல்லொற்று மிகுதிக்கு மூலமாக எந்த வல்லொற்றையும் கொள்ள முடியாது. ஆகவே மருங்கொலிகளையடுத்து மிகும் வல்லொற்றுக்கள் எதனின்றும் திரிந்து அமைந்தவை என்பதைக் கண்டறிய வேண்டும். இந்த ஆய்வு **பகல்ப்பொழுது, *நில்க்கும்* முதலான இடைநிலை வடிவங்களின் அடிநிலை வடிவங்களைக் கண்டறியத் துணைபுரியும். முன்னதாக *வேல்த்தேவர்* என்ற இயற்பெயர் வடிவம் *வேலுத்தேவர்* என்பதன் ஒடுக்கமாகக் கொள்ளத்தக்கது என்று குறிப்பிடப்பட்டது. இந்தக் குறிப்பினின்றும் *வேல்த்தேவர்* என்பதில் மருங்கொலியை அடுத்து நிகழும் வல்லொற்று, உகரம் கெட்டதைத் தொடர்ந்து நகர்ந்து வந்து மேற்படிச் சூழலில் இடம்பெற்றது என்ற உண்மை பெறப்படுகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு நான்காம் வேற்றுமை உருபாகிய குகரம் புணர்ந்த சொற்களின் அமைப்பு பற்றி முதலில் சிந்திக்கலாம். இந்தச் சிந்தனையானது மருங்கொலிகளையடுத்து மிகும் வல்லொற்றுக்கள் எதன் திரிபு என்பதையும் அதன் அடிநிலைவடிவம் எது என்பதையும் கண்டறிய உதவும்.

*16.3.2.* குகர வேற்றுமையானது பிற உயிர்முதல் வேற்றுமை உருபுகளைப் போல் அல்லாமல் வெற்றுருபு ஆகிய சாரியையை அடுத்தே நிகழக் கூடியதாகும்.[1] எடுத்துக்காட்டாக, ஐ என்னும் உயிர்முதல் வேற்றுமை உருபானது *அது, பெயர்* ஆகிய

---

1. மகர ஈற்றுப் பெயர்கள் இந்தப் பொதுவிதிக்கு விலக்காக அமைகின்றன. எ-டு: *நலக்கு* (< நலம்+கு) (திருக். 149), நிலக்கு (< நிலம்+கு) (திருக். 57), *மரக்கிளை* (< மரம்+கிளை). இதற்கான காரணம் தலைமைக் கட்டுரையின் பிற்பகுதியில் ஆராயப்படுகிறது.

பெயர்களை அடுத்து நிகழ்கையில் சாரியை ஏற்றும் ஏற்காமலும் *அதனை/அதை, பெயரினை/பெயரை* என்று நிகழற்பாலதாகும். ஆனால் குகர வேற்றுமையோ தான் புணரும் பெயருக்கு ஏற்ப *அம்* அல்லது *உம்* சாரியையை ஏற்றே நிகழும். எ-டு: *எனக்கு* (< என்-அம்+கு), *மகனுக்கு* (< மகன்-உம்+கு). உம் சாரியையானது இன் மற்றும் அன், து ஆகிய சாரியைகளை அடுத்தும் நிகழ்ந்து குகர வேற்றுமையை ஏற்கும்.[2] எ-டு: *உலகுக்கு* (உலகு-உம்+கு) / *உலகினுக்கு* (< உலகின்-உம்+கு), *அதனுக்கு* (< அதன்-உம்+கு), *மரத்துக்கு* (< மரத்து-உம்+கு). பேச்சுத்தமிழில் அன் சாரியை இன்றியே அது, இது, எது ஆகிய பெயர்ச்சொற்கள் உம் சாரியையை மட்டுமே குகர வேற்றுமைப் புணர்ச்சியில் ஏற்கின்றன. எ-டு: *அதுக்கு* (< அது-உம்+கு) பழங்கன்னடத்தில் இந்த உம் சாரியை இரண்டாம் வேற்றுமை உருபாகிய அன் என்பதன்முன் நிகழ்கிறது (Shanmugam, S.V. 1971:211) எ-டு: *எண்ட்உமன்* (< எண்ட்-உம்+அன்) 'எட்டினை', *பன்னெரடுமன்* (< பன்னெரடு-உம்+அன்), 'பன்னிரண்டினை', *பள்ளியுமன்* (< பள்ளி-உம்+அன்) 'பள்ளியை', *ரிஷியருமன்* (< ரிஷியர்-உம்+அன்) 'ரிஷிகளை'. மத்திய திராவிட மொழியாகிய கோலாமியில் *உங், அங்* ஆகியவை நான்காம் வேற்றுமை உருபுகளாக நிகழ்கின்றன (Emeneau, M.B. 1961). எ-டு: *ஊருங்* (பக். 110, 119) 'ஊருக்கு', *அவ்ருங்* (பக். 119) 'அவர்களுக்கு', *எல்லங்* (பக். 61) 'வீட்டுக்கு', *அன்னங்* (பக். 62) 'எனக்கு'. *உங், அங்* ஆகியவற்றில் நிகழும் அடியண்ண மெல்லொலியின் அடிப்படையில் இந்த வேற்றுமை உருபுகள் **உங்க்* (< உம்+க்), **அங்க்* (< அம்+க்) என்று மீட்டுருவாக்கம் செய்யத்தக்கனவாகும். இந்த மீட்டுருவாக்க வடிவங்களில் *ககர மெய்* வேற்றுமையுருபாகவும் *உம், அம்* இரண்டும் வரலாற்று நிலையில் சாரியைகளாகவும் கொள்ளத்தக்கனவாகும். இத்தகைய சான்றுகளைக் கருத்தில் கொண்டே தமிழில் நான்காம் வேற்றுமை

---

2. அன், இன், து ஆகிய சாரியைகள் இடப் பொருண்மையை உணர்த்தும் சொல்லுருபுகளாகிய அருகே, மேல், கீழ், நடுவே முதலானவற்றின் முன் குகர வேற்றுமையை ஏற்காமல் தாமே நான்காம் வேற்றுமைப் பொருண்மையை உணர்த்தவல்லனவாகும். எ-டு: *அதன்மேல், ஊரின் அருகே, மரத்தருகே.* அன்னும் இன்னும் திசைப்பெயர்கள் முன்னும் நான்காம் வேற்றுமை உருபாக நிகழவல்லனவாகும். எ-டு: *அதன்மேற்கில், ஊரின் கிழக்கே.* இதனைக் கருதுகையில் திராவிட மொழிகளின் வளர்ச்சிப் போக்கில் அன், இன், து ஆகிய விகுதிகள் வேற்றுமை உருபாகவும் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருதத் தோன்றுகிறது. மலயாளம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு (Shanmugam, S.V. 1971:281-282). கருதுக: *இரண்டினு* (<இரண்டு+இனு) (=இரண்டுக்கு), *செலவினு* (< செலவு+இனு) (= செலவுக்கு).

உருபின் முன் *உம், அம்* ஆகிய சாரியைகள் நிகழ்வதாகத் துணியப்படுகிறது. இதுபற்றிய முன்னோடி ஆய்வைக் கோதண்டராமனில் (Kothandaraman, R. 1991, 1993) காணலாம்.

*16.3.3.* நான்காம் வேற்றுமைப்புணர்ச்சியில் வேற்றுமை உருபாகிய குகரத்தின்முன் நிகழும் வல்லொற்று மிகுதியை *வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு, ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்* (எழுத்து. இளம். 115) என்று குறிப்பிடுவார் தொல்காப்பியர். *ஒல்வழி* என்ற குறிப்பின் மூலம் *உலகிற்கு* என்பதில் குகரவேற்றுமையின்முன் ஒற்று மிகவில்லை என்று தொல்காப்பியர் கருதுவதாகத் தோன்றுகிறது. காரணம், *உலகிற்கு* என்பதன் அடிநிலை வடிவமாக **உலகு-இன்+கு* என்பதைக் கொண்டதேயாகும். உண்மையில் இந்த அடிநிலை வடிவம் ஓர் இடைநிலை வடிவமேயாகும். *உலகிற்கு* என்பது *உலகினுக்கு* என்பதன் ஒடுங்கிய வடிவமாகும். *உலகினுக்கு* என்பது **உலகின்க்கு* என ஒடுங்கி அதனின்றும் தோன்றி அமைந்ததாகும் *உலகிற்கு* என்ற வடிவம். ஆனால் *உலகினுக்கு* என்பதும் ஓர் இடைநிலை வடிவமே. *உலகினுக்கு, உலகிற்கு* ஆகிய இரண்டுக்கும் ஆதாரமான அடிநிலை வடிவம் **உலகின்-உம்+கு* [3] என்பதாகும். இந்த அடிநிலை வடிவம் முதலில் *உலகினுக்கு* எனத் திரிந்து பின்னர் உகரம் கெட்டு **உலகின்க்கு* என்று அமைகிறது. **உலகின்க்கு* என்பதில் நிகழும் -ன்க்க்- என்ற மும்மெய்மயக்கம் தமிழுக்கு ஏற்புடையதன்றாகலின் இந்த வடிவம் முதலில் **உலகிற்க்கு* எனத் திரிந்து இறுதியில் *உலகிற்கு* என்று ஒடுங்கியமைகிறது. இந்த மாற்றங்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

20 (1) உலகின்-உம்+கு > உலகினுங்க்உ

(2) உலகினுங்க்உ > உலகினுக்கு

(3) உலகினுக்கு > உலகின்க்கு

(4) உலகின்க்கு > உலகிற்க்கு

(5) உலகிற்க்கு > உலகிற்கு

---

2. **உலகின்-உம்+கு* என்ற அடிநிலை வடிவத்தில் *உலகின்* என்பது ஆய்வு வசதிக்காக அமைத்துக் கொள்ளப்பட்டது. இந்த அடிநிலை வடிவத்தை **உலகு-இனும்+கு* என்றும் கூட அமைத்துக் கொள்ளலாம். இதில் நிகழும் *-இனும்-* என்பதை *-இன்-உம்-*என்றுகூடக் கொள்ள முடியும். ஆனால் ஒரு சொல்லமைப்பில் இரண்டு சாரியைகள் அடுத்தடுத்து நிகழ்வதற்குச் சரியான விளக்கம் கொடுக்க முடியாது. ஆகவேதான் *-இன்-* என்பது பகுதியுடனோ அல்லது உம் சாரியையுடனோ சேர்க்கப்படுகிறது.

மேலே (20)இல் காணப்படும் ஆய்வுக்கு மாறாக, *உலகின்+கு என்ற அடிநிலை வடிவத்தினை மட்டுமே மரபிலக்கணங்கள் கருத்தில் கொண்டன. நமது ஆய்வில் *உலகினுக்கு, உலகிற்கு* ஆகியவை ஒருங்கிணைக்கப்படுகின்றன. மரபிலக்கண ஆய்வில் இவை ஒருங்கிணைக்கப்படாமல் தனித்தனியாகப் பகுப்பாய்வு செய்யப்படுவதால் மேற்படி வடிவங்கள் அமைப்பியல் தொடர்புள்ளவை (Structurally Related) என்ற அரிய செய்தி பெறப்படாமல் போகிறது. சொல்லியல் நிலையிலும், பொருண்மை நிலையிலும் அமைந்த இந்தத் தொடர்பை உணர்த்தும் வகையில் *உலகினுக்கு, உலகிற்கு* ஆகிய இரண்டும் **உலகின்-உம்+கு* என்ற ஒரே அடிநிலை வடிவத்தின் திரிபுகளாகக் கொள்ளப்படுகின்றன. இந்தத் திரிபுகளை வெளிக்கொணர்வதன் மூலம் அமைப்பியல் இடைவெளிகள் (Structural Gaps) தவிர்க்கப்படுகின்றன.

### 16.4. ஆய்வுப்போக்குகள்

மொழியமைப்பு பற்றிய ஆய்வு இரண்டு வகையில் அமையும். ஒன்று புற நிறைவை (External Adequacy) அடிப்படையாகக் கொண்டதாகும். இன்னொன்று, அகநிறைவைக் (Internal Adequacy) கருத்தில் கொண்டதாகும். நான்காம் வேற்றுமை உருபுப் புணர்ச்சி பற்றிய தொல்காப்பியரின் ஆய்வானது புற நிறைவைப் பற்றுக்கோடாகக் கொண்டதாகும். இந்த ஆய்வில் *உலகினுக்கு* என்பதையும், *உலகிற்கு* என்பதையும் ஒருங்கிணைக்க வாய்ப்பில்லை.[4] அகநிறைவின் மீது அமையும் ஆய்வானது மொழியமைப்பில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைக் கருத்தில் கொண்டதாகலின் *உலகிற்கு, உலகினுக்கு* இரண்டும் ஓர் குறிப்பிட்ட அடிநிலை வடிவத்தின் மூலம் ஒருங்கிணைக்கப்படுகின்றன. இந்த அணுகுமுறையானது *மாலுக்கு* (திருவா. திருப்பொன். 8), *மாற்கு* (திருவா. செத்திலா. 1) ஆகியவற்றை **மால்-உம்+கு* என்ற அடிநிலை வடிவத்தினின்றும்

4. *உலகுக்கு* என்ற அமைப்பானது *உலகு-உம்+கு* என்று சொல்லியல் நிலையில் *உலகினுக்கு, உலகிற்கு* ஆகியவற்றினின்றும் மாறுபடுவதால் அதனைப் பிந்தியவற்றோடு ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. ஆயினும் *உலகுக்கு* என்பதை *உலகு+உக்கு* என்ற அமைப்பினதாகக் கொள்வது புறநிறைவின் பாற்பட்ட ஆய்வாகக் கருதப்படும். அக நிறைவைப் போற்றும் ஆய்வில் இந்தச் சொல்லமைப்பானது *உலகு-உம்+கு* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படும். இத்தகைய ஆய்வில் அமைப்பியல் தொடர்பான வரலாற்று உண்மைகளை அறியவும் வாய்ப்பு உள்ளது.

*மக்னுக்கு, மகற்கு* (திருக். 67) ஆகியவற்றை **மகன்-உம்+கு* என்ற அடிநிலை வடிவத்தினின்றும், *அவளுக்கு, அவட்கு* (சீ.சி.2177) ஆகியவற்றை **அவள்-உம்+கு* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் ஒருங்கிணைந்த ஆய்வின் மூலம் பெறுவதற்கு வகை செய்கிறது. புறநிறைவினைக் கருத்தில் கொண்ட ஆய்வானது மொழி கற்றலுக்குத் துணைபுரியலாம்; ஆனால் மொழியின் உள்ளார்ந்த அமைப்பினைக் கண்டறிய இந்த ஆய்வு துணைபுரியாது. இந்த வகையில் அகநிறைவின் அடிப்படையில் அமையும் ஆய்வு மேலானதாகக் கருதப்படும்.

### 16.5. ஓர் இடைப்பிறவரல்

16.5.1. மரபிலக்கணிகள் வினைமுற்றும் வினையாலணையும் பெயரும் மாறுபட்ட சொல்வகையின என்று கருதுகின்றனர். *செய்தான்* என்பதும் *செய்தவன்* என்பதும் மாறுபட்ட சொல்லியல் அமைப்பினவாயினும் இவை மாறுபட்ட சொல் வகையினவாகக் கொள்ளத்தக்கவையல்ல. வினையாலணையும் பெயர்களைப் போலவே வினைமுற்றுக்களும் வேற்றுமை உருபை ஏற்கும் இயல்பினவாகும். இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் தெளிவுப்படுத்தும்.

21 (1) புரள்வேனை (திருவா. திருவே. 8)
(2) முயல்வேனை (திருவா. அச்சோ. 1)
(3) வீழ்வேனை (திருவா. அச்சோ. 6)
(4) கிடந்தேனை (திருவா. திருச். 22)
(5) கெடுகின்றேனை (திருவா. அதிசயப். 5)

22 (1) நின்றாயை (திருவா. திருச். 15)
(2) பந்தாடுகின்றாயை (சீவக. 1589)
(3) வைத்தாய்க்கு (திருவா. திருவெண். 8)
(4) ஆண்டாய்க்கு (திருவா. திருச். 51)
(5) ஒப்பாய்க்கு (சீவக. 1737)

23 (1) ஆண்டானை (திருவா. ஆனந்த. 3)
(2) சிதைத்தானை (திருவா. திருத்தோள். 7)
(3) அறுத்தானை (திருவா. கண்ட. 4)
(4) கடந்தானை (சிலம்பு. 17.37.2)
(5) நடந்தானை (சிலம்பு. 17.37.4)

24 (1) அழுவாளை (சிலம்பு. 19.15)
(2) கண்டாளை (சிலம்பு. 19.30)
(3) தொழுதாளை (சீவக. 2605)
(4) கிடந்தாளை (சீவக. 1810)
(5) அழுதாளுக்கு (சிலம்பு. 9.23)

25 (1) *அகழ்வாரை (திருக். 151)*
(2) *வந்தாரை (சீவக. 1969)*
(3) *மறந்தாரை (சிலம்பு. 7.32.4)*
(4) *சென்றாரை (திருக். 1210)*
(5) *துறந்தாரை (திருக். 1250)*

16.5.2. *ஈன்றாள் பசி காண்பாள்* (திருக். 656), *மலர்மிசை ஏகினான் மாணடி* (திருக். 3), *கலக்கினானும்* (சீவக. 253), *தொடுப்பாயும் நீ* (சீவக. 1668) ஆகியவற்றுள் நிகழும் *ஈன்றாள், ஏகினான், கலக்கினான், தொடுப்பாய்* ஆகிய வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாகவே கொள்ளத்தக்கன வாகின்றன. வினைமுற்றும் வினையாலணையும பெயரும் வேறுபட்ட சொல்வகைகள் (Lexical Categories) அல்ல என்பதை மேலே (21) முதல் (25) வரை குறிக்கப்பெற்ற எடுத்துக்காட்டுகளும், பின்னர்க் குறிக்கப்பெற்றுள்ள *ஈன்றாள்* முதலான எடுத்துக் காட்டுக்களும் தெளிவுப்படுத்துகின்றன. இதனின்றும் மரபிலக்கணங்கள் குறிப்பிடும் வினையாலணையும் பெயர்களும் ஒருவகை வினைமுற்றுக்களே என்பதும் புலனாகிறது. *தின்றாயை, மறந்தாரை* முதலான வினைமுற்றுக்களில் அவற்றைப் பெயராகக் கொள்ளும் வகையில் எந்த விகுதியும் இல்லை. *தின்றாய், மறந்தார்* ஆகியவை பயனிலையாக நிகழ்ந்தாலும், வேற்றுமை உருபு ஏற்றாலும் அவற்றின் அமைப்பில் எந்த வேறுபாடுமில்லை. அப்படியானால் அவை எப்படி வேற்றுமை உருபேற்கின்றன? வினையடி அல்லது வினைப்பகுதியே பெயராக இருந்தாலொழிய அதனடியாகத் தோன்றும் வினைமுற்று வேற்றுமை உருபேற்க வாய்ப்பில்லை. இதனின்றும் வினையடிகள் தமிழில் வினைப் பெயர்களாகக் கொள்ளத்தக்கவை என்ற ஓர் அரிய உண்மை பெறப்படுகின்றது. (Kothandaraman, R. 1978, 1982: 207-225) வினை. யடிகளே வினைப்பெயர்களாகக் குறிக்கப்படுதலின், அவற்றினடி யாகத் தோன்றும் எவ்வகை வினையமைப்பும் - அது முற்றாயினும் சரி எச்சமாயினம் சரி - வினைப்பெயராகவே கொள்ளப்படும். வினைப்பெயராகிய ஓர் வினையமைப்பு வேற்றுமை உருபு ஏற்பதும் ஏற்காததும் அது நிகழும் தொடரனியற் சூழலைப் (Syntactic Context) பொறுத்ததாகும். எடுத்துக்காட்டாக ஒரு வினையமைப்பானது பயனிலை யாகவோ, வினையடையாகவோ, பெயரடையாகவோ நிகழ்கையில் அது வேற்றுமை உருபேற்க வாய்ப்பில்லை. ஆகவே, அனைத்து வகையான வினையமைப்புக் களும் வினையாலணையும் பெயர்களாகக் கருதத்தக்கவை

ஆகின்றன. வினையடிகளை வினைப்பெயர்களாகச் சுட்டிய நிலையில் இத்தகைய முடிவு தவிர்க்க முடியாத ஒன்றாகும். இதனைக் கருத்தில் கொண்டு நான்காம் வேற்றுமைப் புணர்ச்சியில் அமையும் முற்றுவினைப் பெயர்களைப் பற்றி இனிச் சிந்திக்கலாம்.

### *16.6. நான்கன் உருபொடு முற்றுவினைகள்*

16.6.1. முற்றுவினைகளாகிய வினைப்பெயர்கள் வேற்றுமை யுருபேற்கும் பெற்றியினை மேலே கண்டோம். நான்காம் வேற்றுமை உருபேற்கையில் வினைமுற்றுக்களையடுத்து வல்லொற்று மிகும் நிலை ஒரு தொடர் நிகழ்ச்சியாக அமைகிறது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

26 (1) சேர்ந்தாய்க்கு (சீவக. 2958)
(2) வைத்தாய்க்கு (திருவா. திருவெண். 8)
(3) வழங்குகின்றாய்க்கு (திருவா. அடைக்கலம். 10)

27 (1) வந்தீர்க்கு (சிலம்பு. 16.11)
(2) வீழ்ந்தீர்க்கு (சீவக. 307)

28 (1) சேர்ந்தார்க்கு (திருக். 8)
(2) துறந்தார்க்கு (திருக். 42)
(3) இரப்பார்க்கு (திருக். 232)
(4) ஊட்டினார்க்கு (சீவக. 2828)
(5) கூறினார்க்கு (சீவக. 1998)

16.6.2. நான்காம் வேற்றுமை உருபேற்று நிகழும் வினைமுற்றுக் களில் சாரியையின் நிகழ்ச்சியினை உணர்த்தும் வகையில் வேற்றுமை உருபின் முன் நிகழும் வல்லொற்று மிகுதி அமைகின்றது. இதனை வலியுறுத்தும்வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் அமைகின்றன.

29 (1) பணிசெய்வேனுக்கு (சீவக. 1989)
(2) கிடப்பேனுக்கு (திருவா. கண்ட 8)

30 (1) இரங்கினானுக்கு (சீவக. 1599)
(2) ஆடினானுக்கு (திருவா. திருப்பொற். 11)

31 (1) பாடுகிடந்தாளுக்கு (சிலம்பு. 9.15)
(2) அழுதாளுக்கு (சிலம்பு. 9.23)

16.6.3. நான்காம் வேற்றுமை உருபேற்ற இதுபோன்ற முற்று வினைகள் ஒடுங்கியும் நிகழற்பாலன என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் உணர்த்தும்.

32 (1) பருகினேற்கு (சீவக. 2678)
(2) மயங்கினேற்கு (சீவக. 2729)
(3) குறுகினேற்கு (திருவா. கோ.தி. 4)
(4) தேர்வேற்கு (சீவக. 403)
(5) நோக்குவேற்கு (சீவக. 1751)
(6) செல்வேற்கு (சீவக. 1753)
(7) அழுந்துவேற்கு (திருவா. திருவே. 3)

33 (1) பரவினாற்கு (சீவக. 2512)
(2) உயர்ந்தாற்கு (சீவக. 2600)
(3) முரன்றாற்கு (சீவக. 2035)
(4) என்றாற்கு (சீவக. 1594)
(5) இறைஞ்சினாற்கு (சீவக. 1704)
(6) சிந்தித்தாற்கு (சீவக. 1759)
(7) இருந்தாற்கு (சீவக. 1872)

(34) என்றாட்கு (சீவக. 1988)

இந்த எடுத்துக்காட்டுக்கள் *கருதியாய்க்கு* (கலி. 136.15), *சேர்ந்தாய்க்கு* (சீவக. 2958), *வந்தீர்க்கு* (சிலம்பு. 16.11), *துறந்தார்க்கு* (திருக். 42) முதலான வடிவங்கள் *கருதியாயுக்கு*[5], **சேர்ந்தாயுக்கு*, **வந்திருக்கு*, **துறந்தாருக்கு* முதலானவற்றின் ஒடுங்கிய வடிவங்கள் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. இதனின்றும் நான்காம் வேற்றுமை உருபேற்ற வினைமுற்றுப் பெயர்களின் அடிநிலை வடிவங்களை *முற்றுவினைப் பெயர்+ உம்+கு* என்ற அமைப்பின வாகக் கொள்ளலாம் என்பது தெளிவாகிறது. இந்த அடிநிலை வடிவங்கள் பல்வேறு படிநிலைகளைப் பிரதிபலிக்கும் நான்கன் உருபேற்ற முற்றுவினைப் பெயர்களைத் தோற்றுவிக்கும். எடுத்துக்காட்டாக *ஆடினானுக்கு*, *அழுதாளுக்கு* முதலியவை ஒரு படிநிலையையும் *என்றாற்கு*, *என்றாட்கு* இன்னொரு படிநிலையையும் பிரதிபலிப்பனவாகும். இந்தப் படிநிலைகளை விளக்கும் புணர்ச்சி விதிகள் (20)இல் உள்ளது போல் இருக்கும்.

---

5. **சேர்ந்தாயுக்கு* என்பது இங்கே *சேர்ந்தாய்க்கு* என்பதன் முந்தைய வடிவமாகக் கொள்ளப்பட்டாலும் இது மறுபரிசீலனைக்கு உரியதாகும். *சேர்ந்தார்க்கு*, *சேர்ந்தாய்க்கு* இரண்டின் அடிநிலை வடிவங்களில் நிகழும் சாரியையானது வடிவத்தில் மாறுபட்டிருக்க வாய்ப்புள்ளது. *சேர்ந்தார்க்கு* என்பதன் அடிநிலை வடிவத்தில் உம் சாரியையும், *சேர்ந்தாய்க்கு* என்பதன் அடிநிலை வடிவத்தில் அதன் திரிபாகிய மகரச் சாரியையும் நிகழ்வனவாகக் கருதலாம். ஆயினும் இதில் ஒரு வரையறையை நாம் இந்த ஆய்வில் வலியுறுத்தவில்லை.

*என்றாற்கு, என்றாட்கு* ஆகிய வடிவங்கள் **என்றானுக்கு/ *என்றாளுக்கு, *என்றான்க்கு/*என்றாள்க்கு, *என்றாற்க்கு/*என்றாட்க்கு* ஆகிய இடைநிலை வடிவங்களை அடுத்துத் தோற்றம் கொண்டவையாகும். இந்த ஆய்வுமுறையானது *எனக்கு/எற்கு* (பரி. 20.81, புறம். 303.9), *தினக்கு/திற்கு* (க.பு. 8588)> *திக்கு* (தோப்பில். 1995:165) ஆகிய இணைகளை முறையே **என்-அம்+கு, *தின்-அம்+கு* ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து வருவிக்கத் துணைபுரியும்.[6]

## 16.7. உம் சாரியை: ஒரு குறிப்பு

*16.7.1.* முற்றுவினைப் பெயர்கள் நான்காம் வேற்றுமை உருபேற்கையில் அதன்முன் உம் சாரியை நிகழும் என்று மேலே பேசப்பட்டது. தன்மை, முன்னிலை இடப்பெயர்கள் மற்றும் தான், தாம் ஆகிய தற்சுட்டுப் பெயர்கள் ஆகியவை தவிர பிற பெயர்கள் நான்காம் வேற்றுமை உருபேற்கையில் உம் சாரியையின் நிகழ்ச்சி தவிர்க்க முடியாததாகக் காணப்படுகிறது. ஆயினும் இந்தச் சாரியையானது தனது வடிவு திரிந்தும் இந்தப் புணர்ச்சியில் நிகழ்வதுண்டு. இகரம், ஈகாரம், ஐகாரம் மற்றும் யகர ஈற்றுப் பெயர்கள் நான்காம் வேற்றுமை உருபுடன் புணர்கையில் அடிநிலைவடிவத்தில் எழுத்துப் பேறாக நிகழும் மகரமெய் உம் சாரியையின் எச்சமாகும் (Kothandaraman, R. 1993). இதனைக் கருத்தில் கொண்டு *எலிக்கு, தீக்கு, பூனைக்கு, தாய்க்கு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களை **பெயர்-ம்+கு* என்று குறிப்பிடலாம். இந்த அடிநிலை வடிவங்கள் பின்வரும் இரண்டு திரிபுகளுக்கு உள்ளாகி *எலிக்கு, பூனைக்கு* முதலான வடிவங்களைத் தோற்றுவிக்கின்றன.

35 (1) ம் > ங்/-க் (*எலி-ம்+கு > எலி-ங்+கு/எலிங்க்உ)
(2) ங் > க்/-க் (*எலிங்க்உ > எலிக்கு)

---

6. இந்த ஆய்வுமுறையினை *திற்காணின்* (புறம். 167.5), *நத்துறத்து* (குறுந். 174.7) *நப்புலந்து* (நற். 120.8) முதலானவற்றின் அமைப்பாய்வுக்கும் இரண்டு நிலைகளில் விரிவுபடுத்தலாம். முதல் நிலையில் இனமெல்லொற்றானது தனிவல்லொற்றின் முன் இனவல்லொற்றாகத் திரியும். இரண்டாம் நிலையில் இனமெல்லொற்று இரட்டித்த வல்லொற்றுக்களின் முன் இனவல்லொற்றாக இடைநிலை வடிவத்தில் திரிந்து நிகழும் கருதுக: **தினைம்+காணின் > *தினைங்க்ஆணின் > தினைக்காணின் > *தின்க்காணின் > திற்க்காணின் > திற்காணின். நத்துறத்து* (< *நமைம்+துறந்து), *நப்புலந்து* (< **நமைம்+புலந்து)* ஆகியவையும் இதே போல் ஆராயப்படும். இந்த ஆய்வில் அடிநிலை அமைப்பில் நிலைமொழி ஈற்றில் நிகழும் மகரம் வருமொழி வல்லொற்றாகத் திரிகிறது. இதன் நிகழ்ச்சி *தினைக்காணின், நமைத்துறந்து, நமைப்புலந்து* ஆகியவற்றில் நிகழும் வல்லொற்று மிகுதியை விளக்கத் துணைபுரிகின்றது.

இந்த விதிகள் *கருதியாய்க்கு* (கலி. 136.15), *சேர்ந்தாய்க்கு* (சீவக. 2958), *ஒப்பாய்க்கு* (சீவக. 1737), *வைத்தாய்க்கு* (திருவா. திருவெண்பா. 8), *ஆண்டாய்க்கு* (திருவா. திருச்சதகம். 51) ஆகியவற்றையும் **முற்றுவினைப்பெயர்-ம்+கு* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் வருவிக்கும். முன்னிலை ஒருமை முற்றுவினைப் பெயர்கள் நான்கன் உருபை ஏற்கையில் *உம்* சாரியையும் நிகழ வாய்ப்புள்ளதா என்பது சிந்திக்கத்தக்கது.

16.7.2. *உம்* சாரியையானது நான்கன் உருபுப் புணர்ச்சியில் மட்டுமின்றி, பேச்சுத்தமிழில் பன்மை விகுதியாகிய *கள்* என்பதன் முன்னும் நிகழ்கின்றது. எ-டு: *வேருங்கள், காலுங்கள், ஆளுங்கள், ஆணுங்கள், மீனுங்கள், புறாங்கள்.* ஆண்பால், பெண்பால் பன்மை வினைமுற்றுக்களிலும் இதன் நிகழ்ச்சியைக் காணலாம். எ-டு: *வந்தானுங்கள், வந்தாளுங்கள்.* இகர, ஈகார, ஐகார ஈற்றுப் பெயர்களில் உம் சாரியை மகரமாக நிகழ்கிறது. எ-டு: *எலிங்கள், ஈங்கள், பூனைங்கள்.* யகர ஈற்றுப் பெயர்களில் இந்தச் சாரியை இம் எனத் திரிகிறது. எ-டு: *நாயிங்கள்.*[7]

16.7.3. உம் சாரியையும் அதன் மாற்றுருபாகிய மகரச் சாரியையும் நான்கன் உருபுப்புணர்ச்சியில் முறையே *உங், ங்* எனத் திரிந்து பின்னர் இனவல்லொற்றுத் திரிபுக்கு இலக்காகின்றன. ஆனால் பன்மைப் பெயர்களில் இந்த இனவல்லொற்றுத் திரிபுக்கு இடமில்லை. என்ன காரணம்? மெல்லொற்றுக்களைப் போலவே மருங்கொலிகளும் புணர்ச்சியில் இனவல்லொற்றுக் களாகத் திரிந்தும் திரியாமலும் அமைவதால் இதுபற்றிக் கீழே சற்று விரிவாக பேசப்படுகிறது.

### 16.8. படிநிலைகள்

16.8.1 மலை என்பது ஓர் ஒற்றைப் பெரும்பாறையல்ல. அது பல்வேறு பாறைகளின் திரட்சியாகும். அதுபோலவே மொழி என்பது ஓர் ஒற்றை வழக்கை மட்டுமே கொண்ட ஒன்றல்ல. இதனைக் கருத்தில்கொண்டே மொழி என்பதை Langue என்றும், அதன்கண் அமைந்த பேச்சு வழக்குகளை Parole என்றும் சசூர் (Ferdinand de Saussure) என்ற மொழியியல் அறிஞர் மொழியையும் பேச்சுவழக்கையும் இனங்காண்பார் (John Lyons

---

7. பேச்சுத்தமிழில் பன்மைவிகுதியாகிய *கள்* என்பது உயிர்முதல் விகுதிகளின் முன்னும் (எ-டு: *வேருங்கள* 'வேர்களை', *எலிங்களா* 'எலிகளா', *வந்தானுங்களே* 'வந்தார்களே' (ஆண்பால்), *நாயிங்களயும் பூனைங்களயும்* 'நாய்களையும், பூனைகளையும்') ககரமாகிய அதன் மாற்றுருபானது சொல் எல்லையின் (Word Boundary) முன்னும் நிகழ்கின்றன. எ-டு: *வேருங்க.*

1969:51). மொழி என்பது பல பேச்சு மரபுகளின் தொகுப்பாகும். ஒவ்வொரு பேச்சு மரபும் அது சார்ந்த மொழியின் ஒரு குறிப்பிட்ட பேச்சுக் குழுவுக்குரியதாகும். எடுத்துக்காட்டாக, *சொல்கிறான்* என்ற வினைக்கு நேரான *சொல்லுயான்* (பொன்.1995:202) (<*சொல்லுகான்*/ நா.நா. 1977:303) என்ற நிகழ்கால வினை குமரி மாவட்டத்தில் ஒரு பேச்சுக் குழுவுக்கு உரிய ஒரு பேச்சு மரபாகும். ஒவ்வொரு பேச்சு மரபுக்கும் ஒவ்வொரு பேச்சுக் குழு (Speech Community) பின்புலமாக இருக்கிறது ஒவ்வொரு பேச்சுக் குழுவிலும் நிகழும் பேச்சு மரபுகள் ஒரு கிளை மொழியாக (Dialect) இனங்காணப் படுகிறது. செவ்வியல் தமிழ்கூட ஒருவகைக் கிளைமொழிதான். ஏனெனில் தொடக்கத்தில் இதுவும் பேச்சு மொழியாகப் பயின்று வழங்கி, பின்னரே செம்மொழி என்ற தகுதி பெறுகிறது. செவ்வியல் மொழியாகும் தகுதி பெற்ற கிளைமொழியானது காலப்போக்கில் தாய்மொழியாளர்களை இழக்கும் நிலையில் அது பல்வேறு கிளைமொழிகளின் தாக்கத்துக்கு இலக்காகிறது. பழந்தமிழில் நிகழும் *செய்யியர், செய்யிய* வாய்பாட்டு வினைகள் இத்தகைய கிளைமொழித் தாக்கத்தால் ஊடுருவியவையாகும்.

16.8.2. மொழியில் நிகழும் மாற்றங்கள் அனைத்தும் உண்மையில் பேச்சு வழக்கினவாகிய கிளைமொழிகளில் நிகழும் மாற்றங்களே. எனவே, ஒரு மொழிக்குரிய கிளைமொழிகள் அனைத்தும் மொழி வளர்ச்சியில் நிகழ்ந்த, நிகழ்ந்து கொண்டிருக்கும் படிநிலைகளாகும். இது ஒரு வாழை மரத்தைச் சுற்றி அதனடியில் பல்வேறு வளர்ச்சி நிலைகளில் காணப்படும் வாழைக்கன்றுகளுக்கு ஒப்பானதாகும். ஒரு கிளைமொழியில் நிகழும் மாற்றங்கள் இன்னொரு கிளைமொழியிலும் நிகழ்ந்தாக வேண்டும் என்று எதிர்பார்க்கவும் முடியாது; அப்படி ஒரு நியதியும் இல்லை. நிகழலாம்; நிகழாமலும் போகலாம். ஆயினும் இந்த மாற்றங்களின் தாக்கங்கள் மொழியின் ஒட்டுமொத்த அமைப்பில் ஆங்காங்கே உணரப்படுவதற்கான வாய்ப்புகளை ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. இதன் காரணமாகவே புணர்ச்சி நிலைகளை விளக்க இலக்கணிகளால் பொதுவிதிகள் மட்டு மல்லாமல் சிறப்பு விதிகளும் வகுக்கப்படுகின்றன.[8] பழந்தமிழில் காணப்படும் *செய்கும், செய்கம், . செய்கேம், செய்யுதும்,*

8. விதிக்கு உட்படாத புறநடைகளைக் கிளைமொழிகளின் ஊடுருவல்களாகக் கருதலாம். ஒரு குறிப்பிட்ட கிளைமொழியில் நிகழும் மாற்றங்களை எளிதில் விளக்கலாம். அவ்வாறு விளக்கமுடியாத கூறுகள் இன்னொரு கிளைமொழிக்கு உரியனவாகக் கண்டறிந்து அதற்கேற்ப இலக்கண விளக்கக் கோட்பாட்டினை வகுத்துக்கொள்ளலாம்.

*செய்வோம்* ஆகிய வாய்பாட்டுத் தன்மைப்பன்மை இறவாக்கால (Non-past) வினைமுற்றுக்கள் சங்கத்தமிழானது பல கிளைமொழி களின் தொகுப்பு என்பதைப் புலப்படுத்தும். இதனைக் கருத்தில் கொண்டு நோக்குகையில் தொல்காப்பியரின் மொழி இலக்கண மானது கிளைமொழிகளால் ஆகிய செவ்வியல் மொழியை விளக்கும் ஒரு முயற்சியாகும் என்ற உண்மை புலனாகும்.

16.8.3. கிளைமொழிகள் செவ்வியல் மொழியாகச் சங்க இலக்கியத்தில் வழங்குவதைக் கொண்டு தொல்காப்பியரின் மொழி இலக்கணம் தமிழ் மொழியின் அமைப்பியல்புகளை ஒட்டுமொத்தமாக விளக்குவதாகக் கருதமுடியாது. ஆயினும் அது மொழி வளர்ச்சியின் பல்வேறு படிநிலைகளை ஒரு வண்ணனைக் கோட்பாட்டுக்குள் விளக்க முயல்வதை எழுத்தியலில் மேற்கொள்ளப்பட்டிருக்கும் புணரியல் ஆய்வு தெளிவுபடுத்துவதாக உள்ளது. தொல்காப்பியரின் புணர்ச்சி விதிகள் பல்வேறு படிநிலைகளைப் பொதுவிதிகள், சிறப்புவிதிகள் மூலம் விளக்க வகுக்கப்பட்டவையாகும். *குளக்கரை/குளங்கரை* (தொல். எழுத்து. இளம். 311, 313), *புளிங்கூழ்/புளிக்கூழ்* (தொல். எழுத்து. இளம். 246, 247), *பிடாஅம்பூ/பிடாஅப்பூ* (தொல். எழுத்து. இளம். 230, 231), *கானங்கோழி* (குறுந். 242.1) / *கானக்கோழி* (பத்துப். 10.510), *கோரம்பாய்* (< *கோரய்ம்பாய்) (நா.நா. 1977: 103, *ஸ்ரீதர. 1995:149)/ கோரைப்பாய், ஒன்பது/ஒம்பது, என்றன்/எந்தன்* முதலான இணைகள் மொழி வளர்ச்சியின் இருவேறு படிநிலை களின் வெளிப்பாடுகளாகும். இணையின்றித் தனித்து நிகழும் *பலாஅக்கனி* (தொல். எழுத்து. இளம். 227), *சார்க்காழ்* (தொல். எழுத்து. இளம். 365) ஆகியவையும் ஒரு படிநிலையின் வெளிப் பாடே. இவற்றில் நிகழும் வல்லொற்று மிகுதியை **பலா-அம்+ கனி, *சார்-ம்+காழ்* ஆகிய அடிநிலை வடிவங்கள் இல்லாமல் விளக்க முடியாது. புறநிறைவைக் கருத்தில் கொண்ட தொல்காப்பியரின் ஆய்வில் இந்தச் சிக்கல் இல்லை.

16.8.4. எழுத்தியலில் இனங்காணப்படும் படிநிலைகளுள் திரிபு (Assimilation) என்பதும் ஒன்றாகும். புணர்ச்சியில் இந்தத் திரிபானது முன்னிலைத் திரிபாகவோ (Progressive Assimilation), பின்னிலைத் திரிபாகவோ (Regressive Assimilation), இருபுடைத் திரிபாகவோ (Reciprocal Assimilation) அமையலாம். *தின்று* (< தின்+து), *உண்டு* (< உண்+து) ஆகியவை முன்னிலைத் திரிபாகும். *முந்து* (< முன் + து), *பிந்து* (< பின் + து), *மட்குடம்* (< மண் + குடம்), *பொற்காலம்* (> பொன் + காலம்), *உடம்பாடு* (திருக். 890) (< உடன்+பாடு) ஆகியவை பின்னிலைத் திரிபாகும். *என்றன்/*

*எந்தன்* (< என் + தன்), *உன்றன்/உந்தன்* (< உன்+தன்) ஆகியவை முன்னிலை மற்றும் பின்னிலைத் திரிபின் விளைவுகளாகும். இருபுடைத் திரிபாகக் கொள்ளத்தக்கவை *கற்றூண்* (< கல்+தூண்), *மக்கட்டொகை* (< மக்கள்+தொகை) ஆகியவையாகும். செவ்வியல் தமிழில் காணப்படும் இந்தத் திரிபுகள் எல்லாம் பேச்சுத் தமிழில் நிகழ்வதில்லை. ஆயினும் இந்தத் திரிபுகள் ஒரு கிளை மொழியில் நிகழாமல் செவ்வியல் வழக்கில் இடம்பெற வாய்ப்பில்லை; அல்லது இத்தகைய திரிபுகள் நிகழ்ந்த கிளை மொழியே செவ்வியல் மொழியாக இனங்காணப்பட்டதாகவும் கருதலாம். எப்படியாயினும் இந்தத் திரிபுகள் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும்.

### *16.9.* ஒலிவகைகளும் படிநிலைகளும்

*16.9.1.* மொழியொலிகள் இரண்டு நிலைகளில் ஆராயப்படும் ஒன்று, ஒலிப்பிடத்தை (Point of Articulation) மையமாகக் கொண்ட ஆய்வாகும். இன்னொன்று, ஒலிப்புமுறையை (Manner of Articulation) அடிப்படையாகக் கொண்ட ஆய்வாகும். இதழொலி, பல்லொலி, வளைநா ஒலி, இடையண்ண ஒலி, கடையண்ண ஒலி என்ற வகைப்பாடு ஒலிப்பிடத்தைக் கருத்தில் கொண்டதாகும். வல்லொலி, மெல்லொலி, உரசொலி, மருங்கொலி என்ற வகைப் பாடு ஒலிப்பு முறையை அடிப்படையாகக் கொண்டதாகும். இவற்றைத் தவிர மொழியொலிகள் அலையொலிகளாகவும் (Voiced phones), நிலையொலிகளாகவும் (Voiceless phones) இனங் காணப்படும். தமிழில் வல்லொலிகள் தவிர ஏனைய ஒலிகள் அனைத்தும் அலையொலிகளாகும். வல்லொலிகளைப் பொறுத்தவரை அவை நிகழுமிடத்துக்கேற்ப அலையொலி களாகவும் நிலையொலிகளாகவும் தமிழில் அமையும். எடுத்துக் காட்டாக, *கடல்* என்பதில் ககரமெய் நிலையொலியாகவும் *பங்கு* என்பதில் அலையொலியாகவும் நிகழ்வதைக் குறிப்பிடலாம். தமிழ் வல்லொலிகள் அடிப்படையில் நிலையொலிகளாயினும் அவை சூழலுக்கு ஏற்ப அலையொலிகளாகவும் திரிந்தமையும். இந்தத் திரிபானது தமிழ் அல்லது திராவிட ஒலியனியலில் நிகழ்ந்த மாற்றத்தைக் குறிக்கும் ஒரு படிநிலையாகும். இந்தப் படிநிலையானது தமிழ்ப் புணரியல் மரபுகளைப் பெரிதும் பாதித்தது. எடுத்துக்காட்டாக, *கானங்கோழி / கானக்கோழி, பூஞ்செடி / பூச்செடி, புளிங்கூழ் / புளிக்கூழ்* ஆகிய இணைகளில் காணப்படும் புணர்ச்சித் திரிபுகள் இந்த வகையில் கருத்தில்

கொள்ளத்தக்கனவாகும். *கானங்கோழி* என்பதில் வருமொழி முதலாகிய ககரமெய்யானது மெல்லொலியின் தாக்கத்தால் அலையொலியாகத் திரிந்தது ஒரு படிநிலையாகும். இதனால் மேற்படி தொடரில் நிகழும் மெல்லொலியானது வல்லொலியாகத் திரியவில்லை. மேற்படி வல்லொலியானது அலையொலியாகத் திரியாமல் நிலையொலியாகவே நின்ற நிலையில் அதன் முன் நிகழும் இனமெல்லொலி இனவல்லொலியாகத் திரிந்து *கானக் கோழி* என்ற வடிவம் தோற்றம் கொண்டது. இது இன்னொரு படிநிலை. இனமெல்லொலியானது இனவல்லொலியாகத் திரிவதும் திரியாததும் இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடு களாகும். இந்தப் படிநிலைகள் இருவேறு கிளைமொழிகளில் நிகழ்ந்து செவ்வியல் தமிழில் இடம்பெற்றனவாகக் கருதலாம். இந்தக் கிளைமொழிகளை முந்து தமிழ்க் கிளைமொழிகளாகவோ (Pre-Tamil Dialects), தொல்திராவிடக் கிளைமொழிகளாகவோ (Proto Dravidian Dialects) இனங்காணலாம். எப்படியாயினும் *கானங்கோழி/கானக்கோழி, பூஞ்செடி/பூச்செடி, புளிங்கூழ்/ புளிக்கூழ்* ஆகிய இணைகளின் தோற்றத்துக்குக் காரணமான ஒலித் திரிபுகள் இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடுகள் என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

169.2. பேச்சுத்தமிழில் நிகழும் *வேருங்கள்* என்ற பன்மைப் பெயர் மலயாளத்தில் *வேருகள்* என்ற வடிவினதாகி செவ்வியல் தமிழில் *வேர்கள்* என்று அமைகிறது. ஆனால் *ஆளுங்கள்* என்று பேச்சுத் தமிழில் வழங்கும் பன்மைப் பெயரோ செவ்வியல் தமிழில் *ஆட்கள்* என்றும் மலயாளத்தில் *ஆளுகள்* என்றும் அமைகின்றது. செவ்வியல் தமிழில் இந்த வடிவத் திரிபிற்கு என்ன காரணம்? *வேருங்கள், ஆளுங்கள்* ஆகியவற்றைப் பொறுத்த வரையில் பேச்சுத் தமிழில் மெல்லொலியை அடுத்து நிகழும் ககர மெய்யானது அலையொலித் தன்மையதாக (Voiced Character) நிகழ்கிறது. தன்முன் நிகழும் அலையொலித் தன்மையதாகிய மெல்லொலியின் தாக்கத்தால் நிலையொலித் தன்மையதாகிய ககரமெய் அலையொலித் தன்மையதாகத் திரிகிறது. இதன் காரணமாக *வேருங்கள், ஆளுங்கள்* ஆகியவற்றில் நிகழும் மெல்லொலியானது பேச்சுத் தமிழில் இனவல்லொலியாகத் திரிய வாய்ப்பில்லாமல் போகிறது. ஆனால் *ஆட்கள்* (< ஆள்+கள்) என்ற பன்மைப் பெயரில் விகுதியின் ககரமெய்யானது அலையொலித் தன்மையதாகிய மருங்கொலியை அடுத்து நிகழ்ந்த போதிலும் தனது நிலையொலித் தன்மையை (Voiceless Character) அது இழக்கவில்லை. இதன் காரணமாக *ஆள்+கள்* என்பதில்

நிலைமொழியில் நிகழும் மருங்கொலியானது இனவல்லொற்றாகத் திரிந்து *ஆட்கள்* என்ற வடிவம் தோற்றம் கொள்கிறது.[9]

16.9.3. பேச்சுத்தமிழ், செவ்வியல் தமிழ் இரண்டிலும் நிகழும் *ஆளுக்கு* என்ற நான்கன் உருபேற்ற பெயரின் அடிநிலை வடிவம் *ஆள்-உம்+கு* என்பதாகும். அடிநிலை வடிவத்தில் நிகழும் ககரமெய்யானது உம் சாரியையின் மகரமெய்யை இனமெல்லொற்றாகத் திரியச் செய்து **ஆளுங்க்உ* என்ற வடிவத்தைத் தோற்றுவிக்கிறது. ஆயினும் மேற்படி வல்லொலி யானது மெல்லொலியை அடுத்து நிகழ்ந்த போதிலும் தனது நிலையொலித் தன்மையை இழக்கவில்லை. இதன் காரணமாக அதன்முன் நிகழும் இனமெல்லொலியானது இனவல்லொலி யாகத் திரிந்து *ஆளுக்கு* என்ற வடிவம் தோற்றம் கொள்கிறது. மெல்லொலியானது புணர்ச்சியில் இனவல்லொற்றாகத் திரிவதும் திரியாததும் இரண்டு படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும். வல்லொலியின் முன் நிகழும் மெல்லொலி இனவல்லொலியாகத் திரிவதற்குக் காரணம் வல்லொலியின் நிலையொலித் தன்மையே யாகும். வல்லொலியானது அலையொலித் தன்மையதாகத் திரிந்த நிலையில் அதன்முன் நிகழும் மெல்லொலி இனவல்லொலிகளாகத் திரிய வாய்ப்பில்லை. தமிழைப் பொறுத்தவரை இந்தக் கூற்று மருங்கொலித் திரிபுக்கும் அதனையடுத்து நிகழும் வல்லொலிக்கும் பொருந்தும். ஆயினும் இந்தக் கூற்றினைப் பொதுமைப்படுத்த முடியும் என்று தோன்றவில்லை. செவ்வியல் பதப்புணர்ச்சியில்

---

9. செவ்வியல் வழக்கில் *ஆட்கள், நாட்கள்* ஆகிய வடிவங்கள் *ஆள்கள், நாள்கள்* என்றும் வழங்கும் நிலை காணப்படுகிறது. இவற்றில் மருங்கொலியானது ஏன் இனவல்லொற்றாகத் திரியவில்லை? இந்த வடிவங்கள் *ஆளுங்கள், நாளுங்கள்* என்பவற்றினின்றும் தோன்றியமைந் தனவாகும். இவற்றில் நிகழும் ககரமெய் அலையொலித்தன்மையதாகத் திரிந்தமையால், *ஆளுகள், நாளுகள்* ஆகிய இடைநிலை வடிவங்களைத் தொடர்ந்து *ஆள்கள், நாள்கள்* என்பவை தோற்றம் கொண்டன. *ஆட்கள், நாட்கள்* ஆகியவற்றைப் பொறுத்தவரையில் இவற்றின் அடிநிலை வடிவங்களும் *ஆள்-உம்+கள், நாள்-உம்+கள்* என்பவையே. அடியண்ண வல்லொலியாகிய ககரமெய்யின் தாக்கத்தால் உம் சாரியையில் உள்ள மகரமெய் வல்லொலிக்கேற்ற இனமெல்லொலியாகத் திரிந்து *ஆளுங்க்அள், நாளுங்க்அள்* என்ற வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன. இவ்வாறு அமைந்த வடிவங்களில் ககரமெய்யானது நிலையொலித் தன்மையை இழக்காத நிலையில் அதன் முன் நிகழும் மெல்லொலியானது இனவல்லொலியாகத் திரிந்து *ஆளுக்கள், *நாளுக்கள் என்ற இடைநிலை வடிவங்கள் தோன்றியமைகின்றன. இந்த வடிவங்கள் **ஆள்க்கள், *நாள்க்கள்* என ஒடுங்கிப் பின்னர் **ஆட்க்கள், *நாட்க்கள்* என்று திரிந்து இறுதியில் *ஆட்கள், நாட்கள்* என்று ஆகின்றன.

வல்லொலிகள் நிலையொலித் தன்மையை இழக்காத நிலையில் அவற்றின்முன் நிலைமொழி ஈற்றினவாக நிகழும் மருங்கொலிகளும் மெல்லொலிகளும் திரிந்தும் திரியாமலும் அமையும் நிலை காணப்படுகிறது. எ-டு: *கடல்காற்று/கடற்காற்று, மக்கள்பெருக்கம்/மக்கட்பெருக்கம், பொன்குடம்/பொற்குடம், மண்குடம்/மட்குடம்.* இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் இணை வடிவங்கள் இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடுகளாகக் கருதத்தக்கவையாகும்.[10]

### 16.10. திரிபு நிலைகள்

*16.10.1.* திரிபு நிலைகள் பற்றி முற்பகுதியில் பேசப்பட்டிருந் தாலும் அது பற்றிக் கூடுதலாகச் சில செய்திகள் சொல்லவேண்டி யுள்ளது. மொழியொலிகள் பொதுவாக இரண்டு வகையில் திரிகின்றன. ஒன்று ஒலிப்பிடத்தை அடிப்படையாகக் கொண்ட திரிபுநிலை. *வாணாள் (< வாழ்ணாள் < வாழ்+நாள்), வாணுதல் (< வாள்ணுதல் < வாள்+நுதல்)* ஆகியவை இந்தவகைத் திரிபு நிலைக்கு எடுத்துக்காட்டுக்களாகும். இன்னொன்று, ஒலிப்பு முறையை மையமாகக் கொண்ட திரிபுநிலையாகும். *மக்கட்பெருக்கம்* (< மக்கள் + பெருக்கம்), *பற்பொடி* (< பல் + பொடி) ஆகியவை ஒலிப்புமுறையை அடிப்படையாகக் கொண்ட திரிபு நிலையின் வெளிப்பாடுகளாகும். ஏற்கெனவே குறிப்பிட்ட முன்னிலைத் திரிபு, பின்னிலைத் திரிபு, இருபுடைத் திரிபு ஆகிய மூவகைத் திரிபுகளும் மேலே குறிப்பிட்ட இருவகைத் திரிபு களுக்குள் அடங்கும்.

*10.2.* ஒரே அடிநிலைவடிவம் ஒன்றுக்கு மேற்பட்ட திரிபு நிலைகளுக்கு இலக்காவதும் உண்டு. *கேட்டு* (< கேள்-டு < கேள்+ து) என்ற வினையமைப்பில் இதனைக் காணலாம் (இந்த ஆய்வு மறு பரிசீலனைக்குரியது). *தின்று* (< தின்+ து) என்ற வினையமைப்பில் விகுதியாகிய தகரமெய் தனது நிலையொலித் தன்மையை இழந்து அலையொலித்தன்மையதாகத் திரிகின்றது. பின்னர் ஒலிப்பிடத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்வாறு திரிந்த தகரமெய்யானது றகரமாகத் திரிகிறது. இந்த இருவகைத் திரிபுக்கும் காரணமாக அமைவது *தின்* என்பதில் உள்ள மெல்லொலியாகும். *உடம்பாடு* (திருக். 890) (< உடன்+பாடு), *முந்து* (< முன்+து), *பிந்து* (< பின்+து) ஆகியவற்றில் நிலைமை சற்று

---

10. பேச்சு வழக்கில் அமைந்த பதப்புணர்ச்சியில் பொதுவாக மருங் கொலிகளும், மெல்லொலிகளும் நிலையொலித் தன்மையதாகிய வல்லொலிகளின் முன் இன வல்லொலிகளாகத் திரிவதில்லை. செவ்வியல் தமிழில் காணப்படும் *கடல்காற்று, மக்கள்பெருக்கம், பொன்குடம், மண்குடம்* ஆகியவை பேச்சுத் தமிழின் தாக்கமாகக் கருதத்தக்கனவாகும்.

வேறுபட்டதாகும். முதலில் நிலையொலித்தன்மையதாகிய மொழிமுதல் வல்லொற்று அலையொலியாகத் திரிகிறது. நிலைமொழி ஈற்று மெல்லொலியின் அலையொலித் தன்மை இதற்குக் காரணமாக அமைகிறது. பின்னர் இந்த மெல்லொலி இனமெல்லொலியாகத் திரிகிறது. இதற்குக் காரணமாக அமைவது அலையொலியாகத் திரிந்த வருமொழி முதல் வல்லொற்றாகும்.[11] *நிலக்கு* (திருக். 570) என்பதன் அடிநிலை

---

11. *அறிந்து* என்ற வினையமைப்பில் நிகழும் *-ந்த்-* என்ற மெய்ம்மயக்கம் வரலாற்று நிலையில் இத்தகைய ஆய்வுக்கு இசைந்ததாகும். இதன் அடிநிலை வடிவம் **-ன்த்-* என்பதாகும். வரலாற்று நிலையில் இதில் காணப்படும் னகரமெய் *இன்* என்ற இறந்தகால விகுதியின் மாற்று உருபாக அமையும். *போனான், சொன்னான்* ஆகிய வினையமைப்புக்களில் இந்த மாற்றுருபின் நிகழ்ச்சியைக் காணலாம். *-ன்த்-* என்பதில் நிகழும் தகரமெய் முற்று விகுதியாகும். வரலாற்று நிலையில் இது பொது வினைமுற்று விகுதியாக (Impersonal Finite Marker) நிகழ்ந்திருக்க வேண்டும். மலயாளத்தில் இந்த நிலையைக் காணலாம். *-ன்த்-* என்பதில் உள்ள தகரமெய் முதலில் தன்முன் நிகழும் மெல்லொலியின் தாக்கத்தால் அலையொலித் தன்மை யதாகின்றது. பின்னர் தகரமெய்யின் தாக்கத்தால் னகர மெல்லொலி முந்தையதன் இனமெல்லொலியாக, அதாவது நகரமெய்யாகத் திரிகிறது. இந்தத் திரிபுகளைத் தொடர்ந்து *-ந்த்-* என்ற வடிவம் தோன்றியமைகிறது. திராவிடப் புணர்ச்சியில் *ன்த்/-த்* என்பது ஒரு படிநிலையாகும். இந்த ஆய்வுக்கு எதிராக, -ந்த்- என்பதில் நிகழும் நகரமெய்யை *இம்* என்பதன் சிதைவாகிய மகரத்தின் திரிபாகக் கொள்ளும் ஓர் ஆய்வையும் முன்மொழிய வாய்ப்புள்ளது. இதன்படி *-இன்-* என்ற இறந்தகால விகுதி *-இம்-* என்பதன் திரிபாகக் கொள்ளப்படும்.

நகரம் அல்லது தகரத்தைத் தொடர்ந்து தகரத்தை இறந்தகால விகுதியாக ஏற்கும் வினைகள் பழந்தமிழில் *இ, இன்* ஆகியவற்றையும் இறந்தகால விகுதிகளாக ஏற்று நிகழும் போக்கு காணப்படுகிறது. எ-டு: *இயலி* (நற். 260.3) 'இயன்று', *உடலி* (நற். 37.9), 'உடன்று', *பயிலியது* (குறுந். 2.3), 'பயின்றது', *கவைஇ* (நற். 350.10) 'அணைத்து', *நினைஇ* (ஐங். 486.1), 'நினைத்து', *சினைஇ* (நற். 70.4), 'சினந்து', *புனைஇ* (நற். 313.4) 'புனைந்து', *துழைஇ* (நற். 70.4), 'துழவி', *கடைஇ* (நற். 149.7) 'செலுத்தி', *குவைஇ* (நற். 388.6) 'குவித்து'. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் முற்றுவினை களாகும்.

(1) உயிரினை (நற். 253.2) 'உயிர்த்தனை'
(2) நிலையினை (அகம். 220.11) 'நின்றனை'
(3) நினையினை (நற். 253.4) 'நினைந்தனை/நினைத்தனை'
(4) குடியினள் (நற். 271.7) 'குடித்தனள்'
(5) மறையினள் (நற். 113.8) 'மறைந்தனள்'
(6) துடையினள் (நற். 120.8) 'துடைத்தனள்
(7) அசையின (நற். 279.9) 'வருந்தின'
(8) நிலையிற்று (குறுந். 143.3, புறம். 39.9) 'நிலைத்தது'

*நிலம்+கு* என்பதாகும். நிலைமொழி ஈற்று மகரம் நான்கன் உருபின் தாக்கத்தால் இன மெல்லொற்றாகத் திரிந்து **நிலங்க்உ* என்ற இடைநிலை வடிவம் தோன்றியமைகிறது. நான்கன் உருபின் ககரமெய் நிலையொலித் தன்மையை இழக்காமையால் அதன் முன் நிகழும் அடியண்ண மெல்லொலி இனவல்லொலியாகத் திரிகிறது. இந்த இருவகைத் திரிபுகளைத் தொடர்ந்து *நிலக்கு* என்ற வடிவம் தோற்றம் கொள்கிறது.[12] இந்த ஆய்வுமுறை

---

*11-ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி*

(9) சாயினை (நற். 11.2) 'மெலிந்தனை'
(10) சாயினள் (கலி. 121.22, குறுந். 9.3) 'மெலிந்தனள்'
(11) சாயினன் !குறுந். 74.5) 'மெலிந்தனன்'
(12) சாயின்று (புறம். 127.6) 'சாய்ந்தது'
(13) போயின்று (நற். 56.10) 'போந்தது' (பரி. 10.8)
(14) சாயின (அகம். 227.1, குறுந். 239.1) 'மெலிந்தன'
(15) புதல்வற் *கவைஇனன்* தந்தை மென்மொழிப்
புதல்வன் தாயோ இருவரும் *கவையினள்* (ஐங். 409.1,2)

மேலே குறிப்பிட்டுள்ள முற்றுவினைகளுள் முற்றெச்சங்களாக நிகழ்பவையும் உள்ளன. எடுத்துக்காட்டு (15)இல் *கவைஇனன்* 'அணைத்தனன்' *கவையினள்* 'அணைத்தனள்' ஆகிய இரண்டு வினைமுற்றுக்களும் பயனிலைச் செயற்பாட்டில் அமைந்தவையாகும். இந்த எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் *-ந்த்-*, *-த்த-* ஆகிய இறந்தகால இடைநிலைகளை வரலாற்று நிலையில் *-ன்த்-* என்ற வடிவத்தின் திரிபாகக் கொள்ள வகை செய்கிறது. இதில் *-ன்-* என்பது *-இன்-* என்ற இறந்தகால விகுதியின் ஒடுக்கமாக அதாவது, மாற்றுருபாகக் கருதத்தக்கதாகும். ஓர் கன்னட எடுத்துக்காட்டின் மூலம் இதனை மேலும் தெளிவுபடுத்தலாம். **ko:lu muriyitu** (D.N.S. Bhat 2000:15) என்ற கன்னட வாக்கியம் 'கோல் முரிந்தது' என்ற பொருண்மையதாகும். இந்த வாக்கியத்தில் நிகழும் **muriyitu** என்ற வினைமுற்றானது ***muriyintu** (அதாவது *முரியிந்த்உ) என மீட்டுருவாக்கம் செய்யத்தக்கதாகும். இந்த வடிவம் தமிழில் *முரித்து* என்றும் மலயாளத்தில் *முரிஞ்ஞு* (< *முரிஞ்சு) என்றும் ஒடுங்குகிறது. கன்னடத்தில் நிகழும் *முரித மனெ* (= இடிந்த வீடு) (D.N.S. Bhat 2000:15) என்ற பெயர்த் தொடரில் நிகழும் *முரித* (murida) என்ற பெயரெச்ச வினையானது *முரித்த* என்பதன் திரிபாகும். *முரித்த* என்பதன் காலப்பகுதியாகிய *முரித்து* என்பது **முரியித்து* என்பதன் ஒடுக்கமாகும். தமிழில் *முரியிது* என்ற வினைமுற்று **முரியின்று* என்றே நிகழுமாகலின் **முரியித்து*, **முரியின்று* இரண்டும் தொடர்புடையனவாகின்றன. *முரித்து* என்ற வினையைக் கருத்தில் கொண்டு **முரியின்று* என்பது *முரியித்து* எனத் திரிந்ததாகக் கொள்ளலாம்.

12. *பறித்து* என்ற வினையமைப்பின் ஆய்வும் *நிலக்கு* என்ற சொல்லமைப்பின் ஆய்வோடு பொருந்தும். இதன் முந்தைய வடிவம் **பறித்த்உ* என்று குறிக்கப்படும். இந்த அமைப்பில் நிகழும் *-த்த்உ-* என்ற வடிவத்தின் அடிநிலை வடிவம் *-ன்த்உ* என்பதாகும். தகரமெய்யின் தாக்கத்தால் அதன் முன் நிகழும் னகர மெய் இனமெல்லொலியாகத் திரிகின்றது. இந்தத் திரிபின் விளைவாக - *-ந்த்உ-* என்ற வடிவம் கிடைக்கிறது. இந்த

*ஆடினானுக்கு* (திருவா. திருப்பொற். 11), *அழுதானுக்கு* (சிலம்பு. 9.23) ஆகியவற்றுக்கும் பொருந்தும். *என்றன் / எந்தன், உன்றன்/ உந்தன்* ஆகிய இணைகளின் அடிநிலை வடிவங்கள் *என்+தன், உன்+தன்* என்பவையாகும். நிலைமொழியீற்று னகரமெய்யின் தாக்கத்தால் வருமொழி முதல் தகரமெய் தன் நிலையொலித் தன்மையை இழந்து அலையொலியாகத் திரிகின்றது. தொடர்ந்து இதே மெல்லொலியின் தாக்கத்தால் தகரமெய்யானது இன வல்லொற்றாகத் திரிகின்றது. இதன் விளைவாக *என்றன், உன்றன்* ஆகிய வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன. தகரமெய் இனவல் லொற்றாகத் திரியாத நிலையில் அதன்முன் நிகழும் னகர மெய்யானது தகரத்தின் இனமெல்லொலியாகத் திரிகிறது. இந்தத் திரிபைத் தொடர்ந்து *எந்தன், உந்தன்* ஆகிய வடிவங்கள் தோன்றியமைகின்றன.[13]

*16.10.3.* மேலே குறிப்பிட்ட பல்வேறு திரிபு நிலைகளை கருத்தில் கொண்டு *தேற்குடம்* (தொல். எழுத்து. இளம். 340, 341) (<தேன்+குடம்), *தேங்குடம்/தேக்குடம்* (<*தேம்+குடம்) (தொல்காப்பியத் தமிழ்), *தென்புலங்காவல்* (சிலம்பு 20.76) (<தென்புலம் + காவல்), *வையங்காவல்* (சிலம்பு. 28.129) (< வையம்+ காவல்), *குடபுலங்காவலர்* (பத்துப். 3.47), (< குடபுலம்+ காவலர்), *அறங்காவல்* (< அறம் + காவல்), *கோரம்பாய்/கோரைப்பாய்* (< கோரை-ம்+பாய்), *காளங்கன்னு/காளைக்கன்று* (<காளை-ம்+

---

12-ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

இடைநிலை வடிவத்தில் தகரம் தனது நிலையொலித் தன்மையை இழக்காமையால் அதன்முன் நிகழும் நகரமெய்யானது இனவல்லொற்றாகத் திரிகிறது. இந்தத் திரிபுகளைத் தொடர்ந்து *பறித்து* என்ற வினைவடிவம் தோற்றம் கொள்கிறது. இந்த ஆய்வானது வரலாற்று நிகழ்ச்சியை விளக்குவதாகும். மேலே 11-ஆம் அடிக்குறிப்பிலும், இந்த அடிக் குறிப்பிலும் *-ந்து, -த்து* ஆகியவற்றை ஒரு புதிய கோணத்தில் அணுகியதற்குக் காரணம் இறந்தகால வினைகள் அனைத்தும் ஒரு கால நிலையில் *-இன்* என்ற இறந்தகால விகுதியைக் கொண்டிருந்தன என்பதைப் புலப்படுத்துவதேயாகும். இந்தக் காலநிலை என்பது தொல் திராவிட நிலைக்கும் முந்தைய நிலையாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனெனில் திராவிட ஒப்பியல் மொழியியலார் **-ந்த், *த்த்* ஆகியவற்றைத் தொல்திராவிட இறந்தகால விகுதிகளாகக் கொள்வர் (P.S. Subrahmanyam, 1971:198, 211).

13. பழமைவாதிகள் எந்தன், உந்தன் ஆகிய வடிவங்களைப் பிழையானவை என்று கருதுவர். இவை பிழையானால் முந்து, பிந்து ஆகியவற்றையும் அவ்வாறே கருத நேரிடும். இவற்றை **என்றன், *உன்றன், *முன்று, *இன்று* ஆகியவற்றின் திரிபுகளாகக் கருதவும் முடியும். கருதுக: பன்றி> பந்தி (தெ.), கொன்று > கொந்து (கன்.).

கன்று) முதலான வடிவங்களை ஆராயலாம். மொழியைப் பொறுத்தவரை படிநிலைகள் என்பவை கிளை மொழிகளின் வெளிப்பாடுகளாகும். செவ்வியல் மொழியில் இந்தப் படிநிலைகள் மெல்ல மெல்ல இடம்பெறும்போது இலக்கண விளக்கம் சிக்கலாகிறது. மரபிலக்கணங்கள் இத்தகைய அமைப்புச் சிக்கல்கள் முழுவதையும் விளக்கிவிடும் என்று எதிர்பார்க்க முடியாது. படிநிலைகளின் தாக்கத்தால் மொழியில் நிகழும் அமைப்புச் சிக்கல்களின் காரணம் அறியப்படாத நிலையில் மரபிலக்கண நெறியை மட்டுமே போற்றுவோர் மொழியில் நிகழும் மாற்றங்களையும் அவற்றுக்கான மொழியியல் விளக்கங்களையும் ஏற்க மறுத்து மொழியை நடைப்பிணமாக்க முற்படுகின்றனர்.[14]

### 16.11. மருங்கொலிப் புணர்ச்சியில் வல்லொற்று மிகுதி

டி.கே.சி.யின் எழுத்துரைகளில் மருங்கொலிகளையடுத்து வல்லொற்று மிகும் நிலை மிகுதியாகக் காணப்படுகின்றது. இந்த நிலையைப் பதப்புணர்ச்சியில் மட்டுமின்றி விகுதி புணர்ச்சியிலும் காணலாம். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

**பதப்புணர்ச்சி**

36 (1) வில்த்திறம் (டி.கே.சி. 1953:91)
(2) பால்க்கடல்ப்பள்ளி (டி.கே.சி. 1953:351)
(3) மணல்ப்பரப்பு (டி.கே.சி. 1953:371)
(4) மூங்கில்க்கோல் (டி.கே.சி. 1953:428)
(5) மேல்த்திசை (டி.கே.சி. 1953:455)

37 (1) தேள்க்கொடுக்கு (டி.கே.சி. 1953: 113)
(2) மறுநாள்க்காலை (டி.கே.சி. 1953:140)
(3) உள்க்கட்டு (டி.கே.சி. 1953:281)

இவற்றோடு, *பார்த்தால்த்தான்* (டி.கே.சி. 1953:98), *சேர்ந்தால்ப் போல்* (டி.கே.சி. 1953:xxxii), *செய்யாமல்ப்போனால்* (டி.கே.சி. 1953:393) முதலியவற்றைப் பதப்புணர்ச்சியின் கீழ்க்கொண்டுவர வாய்ப்பில்லை. இவற்றின் அடிநிலை வடிவங்களில் மருங்கொலி

14. தமக்கே உரிய தாழ்வு மனப்பான்மையால் மரபிலக்கண நெறியாளர்கள் மொழியியல் விளக்கங்களை ஏற்பதில்லை. மொழியியலின் அரிச்சுவடியைக் கூட அறியாத இத்தகையோர் மொழியியல் ஆய்வுகளை விமர்சனம் செய்ய முற்படுவது ஒட்டகத்தை யானையாக நினைத்துக் கொண்டு யானையை விளக்க முற்படும் குருடர்களின் செயலுக்கு ஒப்பானதாகும்.

களையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதிக்கான தடயம் ஏதும் இல்லாமையே இதற்குக் காரணம்.

விகுதிப்புணர்ச்சி

38 (1) *மலையில்த்தான் (டி.கே.சி. 1953:36)*
(2) *கடலில்ப்போய் (டி.கே.சி. 1953:63)*
(3) *உலகில்ச்சிலர் (டி.கே.சி. 1953:62)*
(4) *காலில்க்கழல் (டி.கே.சி. 1953:518)*
(5) *கையால்ப்பற்றி (டி.கே.சி. 1953:132)*
(6) *யாரால்த்தான் (டி.கே.சி. 1953:239)*

விகுதிப்புணர்ச்சியில் மருங்கொலியை அடுத்து நிகழும் வல்லொற்று மிகுதிக்கான தடயத்தை அவற்றின் அடிநிலை வடிவங்களில் காண முடியவில்லை. ஆகவே *பார்த்தால்த்தான், சேர்ந்தால்ப்போல், செய்யாமல்ப்போனால்* முதலானவற்றிலும், மேலே (38)-இல் நிகழும் எடுத்துக்காட்டுக்களிலும் மருங்கொலியாகிய லகரத்தை யடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியை இப்போதைக்கு மிகைத் திருத்தமாகவே (Hyper Correction) கருதத்தோன்றுகிறது. மிகைத் திருத்தம் காரணமாக மேலே குறிப்பிட்டவாறு அமையும் சொல் லமைப்புக்களை ஒரு பொதுவான ஆய்வுக்குள் கொண்டுவர முடியாது.

### 16.12. சில முரண்பாடுகள்

16.12.1. செவ்வியல் வழக்கில் *பார்த்தால்தான்* என்ற அமைப்பானது இலக்கணப்படி *பார்த்தாற்றான்* எனப் புணர வேண்டும் என்றும், இதன் அடிப்படையில் *பார்த்தால்த்தான்* என்பது இலக்கணப் பிழையுள்ள வழக்கு என்றும் கருதுவோர் உள்ளனர். (இரா. திருமுருகன் அவர்கள் கி. ராஜநாராயணன் அவர்களுக்கு எழுதிய கடிதம்) இத்தகையோர் டி.கே.சி.யின் *பார்த்தால்த்தான்* என்ற வழக்கை ஏற்றுக்கொள்ளத் தயங்கு வதில்லை. இதற்கு இவர்கள் கூறும் காரணம் *பார்த்தால்தான்* என்று இயல்பாக நிகழக்கூடாது என்ற இலக்கண மரபை டி.கே.சி. போற்றியதாலும் (?), *பார்த்தாற்றான்* என்று திரிப்பதால் சொல் வடிவம் இனங்காண முடியாமற்போய், பொருள் விளங்காமற் போகலாம் என்பதாலும் அவர் *பார்த்தால்த்தான்,* என்ற வழக்கைப் போற்றினார் என்பதாகும். இது அடிப்படையிலேயே பிழையான, புறக்கணிக்கப்படவேண்டிய ஒரு வாதமாகும். *பார்த்தால்த்தான், யாரால்த்தான், மலையில்த்தான்* முதலான டி.கே.சி.யின் வழக்குகள் முன்பே குறிப்பிட்டபடி மிகைத் திருத்தத்தின் விளைவுகளாகும். *பார்த்தால்த்தான்* என்ற

மிகைத்திருத்த வடிவத்தினின்றும், *பார்த்தாற்றான்* என்ற வடிவம் தோன்றியமைகிறது. ஒரு படிநிலையின் இலக்கணத்தை இன்னொரு படிநிலையின் மீது திணிக்க முடியாது; திணிக்கவும் கூடாது. *பார்த்தால்+தான்* என்ற அடிநிலை வடிவத்தில் வருமொழிமுதல் தகர மெய்யானது தனது நிலையொலித் தன்மையை இழந்து ஒரு படிநிலையில் அலையொலியாகத் திரிகிறது. இந்தத் திரிபுக்குக் காரணம் *பார்த்தால்* என்பதில் நிகழும் மருங்கொலியாகும். எல்லாப் படிநிலைகளிலும் அலை யொலிகளை அடுத்து நிகழும் நிலையொலித் தன்மையுடைய வல்லொலிகள் அலையொலித் தன்மையனவாகத் திரிய வேண்டும் என்ற கடப்பாடு இல்லை. அலையொலியாகத் திரியாத நிலையில் மிகைத்திருத்தம் செய்யப்பட்ட **பார்த்தால்த்தான்* என்ற வடிவம் *பார்த்தாற்றான்* என்று திரிகிறது. இந்த இலக்கண விளக்கத்தை, *பார்த்தால்தான்* என்ற இயல்பு வழக்கின் மீது திணிக்க முடியாது. ஏனெனில், இந்த வழக்கில் மருங்கொலியை அடுத்து நிகழும் தகரமெய் தனது நிலையொலித் தன்மையை இழந்து அலை யொலியாகத் திரிந்துவிட்டது. இந்த நிலையில் அது வேறு எந்தத் திரிபுக்கும் தூண்டுதலாக அமையாமல் நின்றுவிடுகிறது. இது ஒரு மாறுபட்ட படிநிலை. பேச்சுத் தமிழில் *போனாதான், போனாத்தான்* என்று இரண்டு கிளைமொழி வழக்குகள் காணப்படுகின்றன. இவற்றுள் முந்தையது *போனால்தான்* என்பதன் திரிபும், பிந்தையது *போனாற்றான்* அல்லது *போனால்த்தான்* என்பதன் திரிபுமாகும். இரண்டும் இருவேறு படிநிலைகளின் பிரதிபலிப்புகளாகும். மொழியின் வளர்ச்சிப் போக்கில் ஒரு படிநிலையில் தோன்றிய வடிவத்தை ஏற்பதும் இன்னொரு படிநிலையில் தோன்றிய வடிவத்தை இலக்கணச் சிதைவு என்று ஒதுக்கித் தள்ளுவதும் மொழி பற்றிய ஒரு தவறான அணுகுமுறையின் பிரதிபலிப்பாகும்.

16.12.2. *பார்த்தால்தான்* என்ற இயல்பு வழக்கை இலக்கணச் சிதைவாகக் கருதுவோர் மருங்கொலிகளையடுத்து தகரமெய் நிகழ வாய்ப்பில்லை என்றும் வாதிடுகின்றனர். இவர்கள் கருத்துப்படி *வால் தொங்கியது, மகள் துயின்றாள்* என்பவை இலக்கணப் பிழையுள்ள வழக்குகளாகும். இவற்றை *வாறொங்கியது, மகடுயின்றாள்* என்று வழங்குவதே ஏற்புடையது என்று இவர்கள் வலியுறுத்துவர் (இரா.திருமுருகனின் கடிதக் குறிப்பு). ஆனால் பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் இவைபோன்ற வழக்குகளின் நிகழ்ச்சியைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

39 (1) அழறிதழ் (< அழல் + திகழ்) (சீவக. 2220)
(2) வள்ளறேர் (< வள்ளல் + தேர்) (சீவக. 2307)
(3) துணையிறோகை (< துணையில் + தோகை) (சீவக. 1668)
(4) அண்ணறான் (< அண்ணல் + தான்) (சீவக. 1566)
(5) தோன்றறன் (< தோன்றல் + தன்) (சீவக. 1569)

40 (1) தோடோயாதார் (< தோள் + தோயாதார்) (திருக். 149)
(2) பூக்கடுய் (< பூக்கள் + தூய்) (சீவக. 2111)
(3) திரடோள் (< திரள் + தோள்) (சீவக. 2197)
(4) பொருள்கடம்மை (< பொருள்கள் + தம்மை) (சீவக.1436)
(5) முலையினாடன் (< முலையினாள் + தன்) (சீவக. 1568)

மொழிவளர்ச்சியின்[15] ஒரு குறிப்பிட்ட படிநிலையில் நிலையொலித் தன்மையதாகிய தகரமெய்யானது அலையொலிகளாகிய மருங்கொலிகளையடுத்து நிகழ்கையில் அலையொலியாகத் திரிய, மருங்கொலிகள் கெட்டு *வாறொங்கியது, மகடுயின்றாள்* முதலான வழக்குகளும் மேலே (39), (40)இல் உள்ளது போன்ற வழக்குகளும், தகரமெய்யானது அலையொலியாகத் திரியாத நிலையில் *வால் தொங்கியது, மகள் துயின்றாள்* முதலான வழக்குகளும் நிகழ்கின்றன. இத்தகைய மாற்றங்களுக்கு மருங்கொலியீற்றுச் சொற்களின் அசையமைப்பும் (Syllabic Structure) காரணமாக இருந்ததாகக் கொள்ள முடியுமா என்பது ஆய்வுக்கு உரியதாகும்.[16] நிலைமொழி-வருமொழி இடையிலான இலக்கண உறவும் இத்தகைய புணர்ச்சிக்குப் பின்புலமாக அமைவதாகக் கருதலாம்.

16.12.3. மொழியில் நிகழும் மாற்றங்களும் திரிபுகளும் முதலில் ஒரு குறிப்பிட்ட கிளைமொழியில்தான் தொடங்கும். இந்த மாற்றங்கள் மற்றும் திரிபுகளின் நிகழ்ச்சிப் பரப்பைக் கணிக்க முடியாது. இவற்றைப் பிற கிளை மொழிகள் ஏற்கலாம்; ஏற்காமலும் போகலாம். தென்மாவட்டப் பேச்சுவழக்கில்

15. மொழிவளர்ச்சி என்று இங்கு நாம் குறிப்பிடுவது கிளைமொழிகளில் நிகழும் மாற்றங்களையேயாகும். செவ்வியல் மொழிக்குத் தாய்மொழி யாளர்கள் இல்லை யாகலின் அதில் மாற்றங்கள் ஏற்பட வாய்ப்பில்லை. பேச்சு மொழியில் நிகழும் மாற்றங்களின் தாக்கங்களே செவ்வியல் மொழியின் வளர்ச்சிக்கு அடியுரமாகின்றன.

16. நிலையொலித் தகரம் அலையொலியாகத் திரிவதற்குச் சொல்லின் அசையமைப்பை மட்டுமே ஓர் இன்றியமையாத வலுவான காரணமாகக் கருதமுடியுமா என்பது ஐயமாக உள்ளது. ஆயினும் மருங்கொலிகளின் தாக்கத்தால் தகரமெய் தன் நிலையொலித் தன்மையை இழந்து அலையொலியாகத் திரியும் வாய்ப்பு முதலில் ஒரு கிளைமொழியில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பதை மறுக்க முடியாது.

காணப்படும் *ஆடுதான், பாடுதான், ஓடுதான், பேசுதான், அடிக்குதான், குடிக்குதான்* முதலான நிகழ்கால வினைகளில் நிகழும் நிகழ்கால விகுதியாகிய தகரமெய்யானது ர(=ற)கர மெய்யாகத் திரிந்தபோது அதனைப் பிற கிளைமொழிகள் ஏற்றுக் கொண்டன.[17] ஆனால் குமரித்தமிழில் *அடிக்க, அடிக்கும்* ஆகியவை *அடிச்ச, அடிச்சும்* என்று திரிந்தபோது அதன் தாக்கம் பிற கிளைமொழிகளில் பொதுவாக உணரப்படவில்லை. இந்தப் பின்னணியில் மேலே *(39), (40)*இல் காணப்படும் தொடர்கள் ஒரு குறிப்பிட்ட படிநிலையின் வெளிப்பாடுகளாகக் கொள்ளத் தக்கனவாகும். இந்தப் படிநிலையை இக்காலச் செவ்வியல் மொழி உட்பட எல்லாக் கிளைமொழிகளுக்கும் பொதுமைப்படுத்த முடியாது; பொதுமைப்படுத்தவும் கூடாது. கிளைமொழிகளின் மாறுபட்ட படிநிலைகளைக் கிளைமொழிகள் அனைத்துக்கும் உரியனவாகப் பொதுமைப்படுத்தும் சிந்தனைப்போக்கை அறிவார்ந்த ஆய்வின்பாற்பட்டதாகக் கருதமுடியாது. இக்காலத் தமிழில் தகரமெய்யானது மருங்கொலிகளை அடுத்து நிகழ்கையில் அலையொலியாகத் திரிந்தாலும் திரியாவிட்டாலும் மருங்கொலிகளின் இனவல்லொற்றுக்களாக அது திரிவதில்லை. அது மட்டுமல்ல; மருங்கொலிகளும் தகரத்தின்முன் இன வல்லொற்றுக்களாகத் திரிவதில்லை. எனவே *வால் தொங்கியது, மகள் துயின்றாள், செய்தால்தான், அவளால்தான், ஊரில்தான், மக்கள்தொகை, கல்தூண்* முதலான வழக்குகள் இக்காலத் தமிழில் முற்றிலும் ஏற்புடையனவாகும். இது இன்னொரு மாறுபட்ட படிநிலையின் வெளிப்பாடாகும்.

*16.12.4.* இக்காலச் செவ்வியல் தமிழில் பதப்புணர்ச்சியிலும் விகுதிப் புணர்ச்சியிலும் மருங்கொலிகள் இனவல்லொற்றுக் களாகத் திரிந்தமையும் நிலையும் காணப்படுகிறது. எ-டு: *பகற்பொழுது, கடற்காற்று, கற்சுவர், நாட்குறிப்பு, பற்கள், நாட்கள்.* இந்த மரபு பழந்தமிழில் காணப்படும் புணரியல் மரபின் எச்சம் அல்லது தொடர்ச்சியாகும். செவ்வியல் மொழியானது கல்வியின்மூலம் பெறப்படுவதாகலின் தொல்காப்பியர் காலந் தொட்டு செவ்வியல் மொழியில் போற்றப்பட்டுவரும் புணரியல்

---

17. பொதுப்பேச்சுத் தமிழில் காணப்படும் *பேசுற, பாடுற* முதலான பெயரெச்சங்களும், *பேசுறான்/பேசறான், பாடுறான்/பாடறான்* முதலான வினைமுற்றுக்களும் தென்மாவட்டப் பேச்சுவழக்கில் நிகழும் *பேசுத, பாடுத, பேசுதான், பாடுதான்* முதலியவற்றின் திரிபுகளாகும். இவற்றை *பேசுகிற, பாடுகிற, பேசுகிறான், பாடுகிறான்* முதலானவற்றின் திரிபுகளாகக் கொள்ளவோ கருதவோ வாய்ப்பில்லை.

மரபுகளை ஒட்டுமொத்தமாக ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அதே சமயத்தில் சில புணரியல் மரபுகள் இக்காலச் செவ்வியல் தமிழில் நெகிழ்ந்தும், தளர்ந்தும் நிகழும் போக்கும் காணப் படுகிறது. இதன் காரணமாகவே *பகற்பொழுது/பகல்பொழுது, கற்சுவர்/கல்சுவர், மக்கட்பெருக்கம்/மக்கள்பெருக்கம்* முதலான உறழ்ச்சி வடிவங்கள் இக்காலச் செவ்வியல் தமிழில் காணப்படு கின்றன. ஆனால் வட்டார வழக்கிலும் இத்தகைய வரலாற்று மரபுகளைப் போற்றவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் ஒவ்வொரு வட்டார வழக்கும் அல்லது கிளைமொழி வழக்கும் ஒவ்வொரு படிநிலையின் குறியீடாகும். இதனைத் தென்மாவட்ட வட்டாரமொழி இலக்கியங்களில் பயின்று வழங்கும் *நெல்ச்சோறு, வேல்க்கம்பு, ஆள்க்கூலி, முள்க்கம்பி* முதலான தொடர்களில் காணலாம். இக்கட்டுரையின் தொடக்கத்தில் (1) முதல் (4) வரையில் நிகழும் வட்டார வழக்கு எடுத்துக் காட்டுக்கள் இதனை நன்கு புலப்படுத்தும்.

### 16.13. நெல்ச்சோறும் நொய்க்கஞ்சியும்

16.13.1. *வேற்றுணை* (< வேல் + துணை) என்பதை டி.கே.சி. தனது முறைப்படி *வேல்த்துணை* என்று எழுதினாலும், *வேறொடர்ந்தது* (< வேல் + தொடர்ந்தது) என்பதை அவர் இயல்பாகவே, அதாவது *வேல் தொடர்ந்தது* என்றே எழுதினார் என்று குறிப்பிடுவோர் டி.கே.சி.யின் *வேல்த்துணை* என்று எழுதும் மரபை ஏற்றுக்கொள்வதாகத் தெரிகிறது. ஆயினும் ஒட்டுமொத்தமாக இவர்கள் மருங்கொலிகளையடுத்து டி.கே.சி.யின் எழுத்துரைகளிலும் வட்டாரமொழி இலக்கியங் களிலும் வல்லெழுத்து மிகுவதை ஏற்க மறுப்பவர்களே என்பதை டி.கே.சி.யின் இத்தகைய மரபை "அன்றே அறிஞர்கள் பலர் கண்டித்தனர்" (இரா.திருமுருகன் கி. ராஜநாராயணனுக்கு எழுதிய கடிதம்) என்ற கூற்றின் மூலம் உறுதிப்படுத்துகின்றனர். இதற்கு அவர்கள் கூறும் காரணம் தமிழில் ய, ர, ழ மெய்களை அடுத்துத் தான் வல்லொற்று மிகும் என்பதாகும். வேறு எந்த மெய்களை யடுத்தும் வல்லொற்று தமிழில் மிகாது என்பது இவர்கள் வாதமாகும். மரபிலக்கண நெறியைக் கருத்தில் கொண்ட இந்த வாதம் தென்மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் காணப்படும் *தோல்ப்பை* (பொன். 1995:549), *வேல்க்கம்பு* (கி.ரா. 1976:89), *ஆள்க்கூட்டம்* (ஆ.மா. 1974:134), *முள்க்கம்பி* (அ.மு. 1991:24) முதலான வழக்குகளைக் கடுமையாக எதிர்க்கிறது. இந்த வாதத்தை நாம் கோட்பாட்டு நிலையில்தான் எதிர்கொண்டு முறியடிக்க வேண்டும்.

16.13.2. தமிழில் யரலவழள ஆகிய ஆறினையும் மரபிலக்கணங்கள் இடையினமெய்களாகக் குறிப்பிடுகின்றன. இவற்றுள் ய, ர, ழ ஆகிய மூன்று மெய்களையடுத்து மட்டுமே வல்லொற்று மிகுவது உண்மை. எ-டு: *நொய்க்கஞ்சி, வேர்ப்பலா, தமிழ்த்தென்றல்; துய்ப்பு, தீர்ப்பு, வாழ்த்து.* இந்த மிகுதிக்குக் காரணம் இந்த மூன்று மெய்களும் ஒலியியல் அடிப்படையில் வல்லொற்றின்முன் இனவல்லொற்றுகளாகத் திரிய வாய்ப்பில்லை.[18] ஆனால் லகர ளகர மருங்கொலிகளுக்கு ஒலியியல் அடிப்படையில் பதப்புணர்ச்சியிலும், விகுதிப்புணர்ச்சியிலும் இனவல்லொற்றுக் களாகத் திரிய வாய்ப்புள்ளது. இதனைக் கருத்தில் கொண்டு மருங்கொலிகளையடுத்து வல்லொற்று மிகாது என்று வாதிட முடியாது. மலயாளம் இதற்கு ஓர் எதிர்மறைச் சான்றாக அமைவதை (9), (10), (11), (12) ஆகியவற்றில் நிகழும் எடுத்துக் காட்டுக்கள் புலப்படுத்தும். மரபிலக்கணங்கள் புற நிறைவைக் கருத்தில் கொண்டு வகுக்கப்பட்டவையாதலின் அவற்றில் மொழியின் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைப் புலப்படுத்த முடியாது. உண்மை என்னவெனில் ய, ர, ழ, ல, ள ஆகிய ஐந்து மெய்களையடுத்தும் வல்லெழுத்து மிகும். இவ்வாறு நிகழும் வல்லொற்று மிகுதியைத் தொடர்ந்து மருங்கொலிகள் இன வல்லொற்றுக்களாகத் திரிவது ஒரு படிநிலை; திரியாமல் அப்படியே நிலைகொள்வது இன்னொரு படிநிலை. இந்த இரண்டாவது படிநிலையை டி.கே.சி.யும் தென்மாவட்ட வட்டார மொழிப் படைப்பாளிகளும் போற்றுகின்றனர். இத்தகைய ஒரு பின்னணியில்தான் குமாரசாமி ராஜா (KR. N. 1980) மருங்கொலிகளை யடுத்து வல்லொற்று மிகும் வடிவங்களைத் தனது ஆய்வில் இடை நிலை வடிவங்களாகக் கொண்டார். இந்த ஆய்வின் சிறப்பினைச் செ.வை. சண்முகம் (1980: 17) இவ்வாறு குறிப்பிடுவார்: "தமிழ்மொழி அமைப்பில் ய, ர, ழ என்ற மூன்று மெய்களே ஈரொற்று உடனிலைகளாக (இரண்டு மெய்கள் சேர்ந்துவரும் மூன்று மெய்களின் மயக்கம்) வருகின்றன. ல, ள என்ற இடையின மெய்களோ, மெல்லின மெய்களோ ஈரொற்று உடனிலையாக வருவதில்லை. அது தமிழ்மொழி அமைப்பில் புறநிலையில் உள்ள இடைவெளி (Structural Gap). இந்த உண்மையை மனத்தில் கொண்டு புணர்ச்சி விதிகளை அமைத்துள்ளார் குமாரசாமி

18. ழகரமெய்யானது இனவல்லொற்றாகத் திரியவல்லது என்ற வீரசோழியத்தின் கூற்று இங்கே கருத்தில் கொள்ளத்தக்கதாகும் (கூடுதல் செய்திக்கு: இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள *இலக்கியத்தில் மொழிவழக்குகள்* என்ற கட்டுரையைக் காண்க).

ராஜா. எனவே முதலில் ய, ர, ழ ஆகிய மூன்று மெய்யோடும், உயிரோடும் வருமொழி வல்லினம் புணரும்போது இரட்டிப்பது போலவே ல, ள, மெல்லினம் ஆகியன வரும்போதும் இரட்டிக்கிறது என்று பொதுமைப்படுத்திவிட்டார்".

16.13.3. குமாரசாமிராஜாவின் ஆய்வானது *பகற்பொழுது, ஆட்கூலி, நிற்கும், கேட்கும், மீட்பு, கற்பு* ஆகிய வடிவங்களை முறையே **பகல்ப்பொழுது, *ஆள்க்கூலி, *நில்க்கும், *கேள்க்கும், *மீள்ப்பு, *கல்ப்பு* ஆகியவற்றினின்றும் வருவிக்க வகை செய்கிறது. திராவிட மொழிகளின் புணரியல் மரபுகள் பற்றிய சிந்தனையில் குமாரசாமிராஜாவின் ஆய்வு ஒரு திருப்புமுனையாகக் கருதத்தக்க தாகும். இதன் நம்பகத் தன்மையை வலியுறுத்தும் வகையில் தென் மாவட்ட வட்டார மொழிவழக்குகளும், மலயாளப் புணரியல் மரபும் அமைந்துள்ளது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இந்தப் பின்னணியில் நொய்க்கஞ்சியைப் போலவே நெல்ச்சோறும் ஏற்புடையதேயாகும். குமாரசாமி ராஜாவின் ஆய்வில் உள்ள ஓர் இடைவெளி என்னவெனில் மருங்கொலிகளையடுத்து மிகும் வல்லெழுத்துக்கள் எதன் திரிபு என்பது கண்டறியப்படவில்லை. அது தனது ஆய்வுக்கு தேவைப்படாததால் குமாரசாமிராஜா அதனைப் பற்றிச் சிந்திக்கவில்லை என்று தோன்றுகிறது. அவரது ஆய்வின் தொடர்ச்சியாக மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதி எதனுடைய திரிபு என்பது பற்றி இங்கே சுருக்கமாகச் சிந்திக்கப்படும்.[19]

16.13.4. *நூற்கு* (திருக். 543), *அவட்கு* (சீவக. 2177) ஆகியவை *நூலுக்கு, அவளுக்கு* ஆகியவற்றின் ஒடுங்கிய வடிவங்களாகும். இந்த ஒடுக்கத்தின் படிநிலைகள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

(41) நூலுக்கு > நூல்க்கு > நூற்க்கு > நூற்கு[20]

(42) அவளுக்கு > அவள்க்கு > அவட்க்கு > அவட்கு

---

19. புணர்ச்சியில் வல்லொற்று மிகுதி என்பது தமிழில் பரவலாகக் காணப்படும் ஒன்றாகும். செவ்வியல் தமிழைப் பொறுத்தவரை மருங்கொலிகளையும் மெல்லொலிகளையும் அடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியானது புணர்ச்சியில் ஓர் இடைப்பட்ட நிலையாகும். உயிர்கள் மற்றும் ய, ர, ழ ஆகியவற்றை அடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியானது புறநிலையிலும் அதாவது வழக்கு நிலையிலும் காணப்படுவதாகும். இங்கே முதன்மை ஆய்வில் முன்மொழியப்படும் ஆய்வானது மருங்கொலி மற்றும் மெல்லொலிகளை அடுத்து மட்டுமல்லாமல் பிற சூழல்களிலும் நிகழும் வல்லொற்று மிகுதிக்கும் பொருந்துவதாகும்.

20. குமாரசாமி ராஜாவின் ஆய்வில் நான்கன் உருபானது கு எனக் கொள்ளப்படாமல் *-க்கு* எனக் கொள்ளப்படுவதாக செ.வை. சண்முகம்

இந்த ஆய்வினின்றும் *நூல்க்கு, *அவள்க்கு ஆகிய இடைநிலை வடிவங்களில் மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்றானது தொலைவிலிருந்து நகர்ந்து வந்த ஒன்று என்பது புலனாகின்றது. பதப்புணர்ச்சியில் மருங்கொலிகளையடுத்து இடைநிலை வடிவத்தில் அல்லது தென்மாவட்ட வட்டார வழக்குகளில் மிகும் வல்லொற்றுக்களுக்கும் இது பொருந்தும்; பொருந்த வேண்டும். ஏனெனில் புணர்ச்சியில் வல்லொற்று மிகுவதை ஒரு பொது நிலையில் அணுக வேண்டுமேயன்றி பதப்புணர்ச்சி, விகுதிப் புணர்ச்சி என்று பிரித்து நோக்க முடியாது. மேலே (41), (42)இல் குறிக்கப்பெற்றுள்ள நூலுக்கு, அவளுக்கு ஆகியவை நூற்கு, அவட்கு ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் அல்ல; அவை இடைநிலை வடிவங்களே. அப்படியானால் இவற்றின் அடிநிலை வடிவங்கள் யாவை? நான்கன் உருபானது சாரியைகளை அடுத்தே நிகழும் என்றும், அவற்றுள் உம் சாரியையும் ஒன்று என்றும் முன்னர் நாம் குறிப்பிட்டிருந்ததைக் கருத்தில்கொண்டு நூலுக்கு/ நூற்கு, அவளுக்கு/அவட்கு ஆகிய இணைகளின் அடிநிலை வடிவங்களை *நூல்-உம்+கு, *அவள்-உம்+கு என்று கொள்ளலாம். இந்த வடிவங்கள் முதலில் *நூலுங்க்உ, *அவளுங்க்உ எனத் திரிந்து இவற்றினின்றும் நூலுக்கு, அவளுக்கு ஆகிய வடிவங்கள்

---

20-ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

(1980:229) குறிப்பிடுவார். முட்கு (<முள்ளுக்கு), வேற்கு (<வேலுக்கு) முதலானவற்றில் நிகழும் குகரத்தை "வெறும் குகரமாகக் கருதக்கூடாது" என்று குறிப்பிடும் சண்முகம், குமாரசாமி ராஜாவின் கருத்தை இப்படி விளக்க முற்படுகிறார். "முள்+கு என்று சேர்த்தால் முள்கு என்று ஆகலாம்; காரணம் தமிழில் 'ள்க்' என்ற மெய்ம்மயக்கம் வரலாம். எனவே, முட்கு என்பதைக்கூட முள்+க்கு என்று கொள்ள வேண்டும் என்று கருதுகிறார் குமாரசுவாமி ராஜா. ஆகவே, -க்கு என்பதையே நான்காம் வேற்றுமை உருபின் அடிநிலைக் கிளவியாகக் கருத வேண்டும் என்பது மொழியியலாளரின் கருத்து" (1980:229). சண்முகத்தின் இந்த விளக்கம் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் முள்கு என்பதில் நிகழும் குகரம் நான்கன் உருபல்ல. தமிழில் நான்கன் உருபின் நிகழ்ச்சியைப் படி நிலைக் கண்ணோட்டத்தில் ஆராய வேண்டும். அதன்முன் நிகழும் ககர வல்லொற்று எதன் திரிபு என்பதைக் கண்டறியாத நிலையில் மேற்கொள்ளப் பட்ட குமாரசாமி ராஜாவின் முடிபை ஏற்றுக் கொள்வதற்கில்லை. *முளுங்க்உ (<முள்-உம்+கு) என்பதினின்றும் தோன்றியதாகும் முள்க்கு என்ற வடிவம். முள்க்கு, முட்க்கு ஆகிய இடைநிலைகளைக் கடந்த நிலையில் தோன்றிய முட்கு என்ற உருபுப் பெயரில் காணப்படும் இலக்கண விகுதியாகிய குகரம் நிலையொலித் தன்மையதாகும். இதனால்தான் இதன்முன் நிகழும் ஙகர ளகர மெய்கள் இன வல்லொற்றுகளாகத் திரிகின்றன. எனவே அடிநிலை வடிவத்தில் நான்கன் உருபை -க்கு என்று கொள்ளாமல் -கு என்று கொள்வதே ஏற்புடையதாகும்.

தோன்றியமைகின்றன. இங்கே நான்கன் உருபாகிய குற்றுகரக் ககர மெய்யானது எங்கும் அலையொலியாகத் திரியவில்லை. அதனால் தான் அதன் முன்னர் நிகழும் மெல்லொலியானது (காண்க: *நாலுங்க்உ, *அவனுங்க்உ) இனவல்லொலியாகத் திரிகின்றது.[21]

16.13.5. மேலே குறிப்பிட்ட ஆய்வானது *நெல்ச்சோறு, முள்க்கம்பி* ஆகியவற்றுக்கும் பொருந்தும். இவற்றின் முந்தைய அடிநிலை வடிவங்கள் *நெலுச்சோறு, *முளுக்கம்பி என்று அமையும்.[22] இவற்றின் அடிநிலை வடிவங்கள் *நெல்-உம்+சோறு, *முள்-உம்+கம்பி என்பனவாகும். இந்த அடிநிலை வடிவங்கள் முதலில் *நெலுஞ்ச்ஒறு, *முளுங்க்அம்பி என்று திரிகிறது. இவற்றில் மெல்லொற்றுகளை அடுத்து நிகழும் வல்லொற்றுகள் நிலைமொழித் தன்மையனவாகும். வருமொழி முதல் வல்லொற்று அலையொலியாகத் திரியாத நிலையில் இவற்றின் முன் நிகழும் மெல்லொலிகள் இன வல்லொலிகளாகத் திரிந்து *நெலுச்சோறு, *முளுக்கம்பி ஆகிய வடிவங்கள் தோற்றம் கொள்கின்றன.[23] இந்த வடிவங்கள் உகரக் கேட்டின் மூலம் ஒடுங்கிப் பின்னர் தென் மாவட்ட வட்டார இலக்கியங்களில் நிகழும் *நெல்ச்சோறு, முள்க்கம்பி* என்ற வடிவங்களாகத் தோற்றம் கொள்கின்றன. செவ்வியல் வழக்கில் *முட்கம்பி* என நிகழும் வடிவம் பின்வருமாறு பெறப்படுகின்றது.

(43) முள்க்கம்பி > முட்க்கம்பி > முட்கம்பி

---

21. நான்கன் உருபு தன்முன் நிகழும் மெல்லொலியின் தாக்கத்தால் அலையொலியாகத் திரிந்தமையும் நிலை கன்னடத்தில் காணப்படுகிறது (S.V. Shanmugam 1971:299) எ-டு: மனெ-கெ (mane-ge) 'வீட்டுக்கு', கெரெ-கெ (kere-ge) 'கரைக்கு', அவனி-கெ (avani-ge) 'அவனுக்கு'. கொடகு, கன்னடம், படகம் (Badaga) ஆகிய மொழிகளில் நான்கன் உருபின் முன் நிகழும் மெல்லொலி வீழ்ந்துபடும் நிலை காணப்படுகிறது. வீழ்ந்துபடாத நிலையில் கன்னடத்தில் அது இன வல்லொற்றாகத் திரிகின்றது.

22. இந்த இடைநிலை வடிவங்கள் புணர்ச்சியில் நெல்லுச்சோறு, முள்ளுக்கம்பி என்று அமைவதாக இங்கே கொள்ளப்படவில்லை அப்படிக் கொண்டால் அவை நெல்ச்சோறு, முள்க்கம்பி என்று ஒடுங்குவதற்கான வாய்ப்பு இல்லாமற் போகும். தனிக்குறில் சொற்களில் ஈற்றுமெய்களாக நிகழும் ய, ல, ள, ண, ம, ன ஆகியவை உயிர்முன் இரட்டிப்பதும், இரட்டிக்காததும் இருவேறு படிநிலைகளாகும். *நெலுச்சோறு, *முளுக்கம்பி என்று இரட்டிக்காத நிலையில் அவை *நெல்ச்சோறு, முள்க்கம்பி* என்று ஒடுங்குவதற்கு ஒரு தடயம் கிடைக்கிறது. இரட்டித்த நிலையில் நிலைமொழியின் வலிமை மிகுவதால் உயிர் ஒடுக்கத்துக்கான வாய்ப்பு தவிர்க்கப்பட்டுவிடுகிறது.

23. தொல்காப்பியரின் *உரிஞுக்கடிது/உரிஞுக்கடுமை* (எழுத்து. இளம். 297) என்பதும் இப்படித் தோன்றியதுதான் (இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள *தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயரியல* என்ற கட்டுரையைக் காண்க).

இந்த ஆய்வில் நிகழும் *முட்க்கம்பி* என்ற வடிவமானது ஒரு படிநிலைக்குரியதாகும். இக்காலச் செவ்வியல் வழக்கில் இந்த வடிவமும் ஏற்புடையதேயாகும்.[24] பொதுப் பேச்சுத் தமிழில் பதப் புணர்ச்சியில் மருங்கொலிகளை அடுத்து வல்லொற்று மிகுவ தில்லை. இக்காலச் செவ்வியல் தமிழில் நிகழும் *முள்கம்பி, பகல்காட்சி, ஆள்கூலி* முதலான வழக்குகளைப் பொதுப் பேச்சுத் தமிழின் (Standard Spoken Tamil) தாக்கமாகக் கருதலாம்.

### 16.14. வல்லொற்று மிகும் மருங்கொலி வினைகள்

*16.14.1.* தமிழ் வினைகள் வலிமிகு வினைகள் (Heavy Base Verbs) அல்லது வல்வினைகள் என்றும் வலிமிகா வினைகள் (Light Base Verbs) அல்லது அல்வினைகள் என்றும் இருபெரும் பிரிவுகளாக அமையும். கால இடைநிலையின் முன் வல்லொற்று மிகும் வினைகள் வலிமிகு வினைகள் என்றும், அவ்வாறு வல்லொற்று மிகாவினைகள் வலிமிகா வினைகள் என்றும் குறிக்கப்படும். *பார், குடி, உரை, சிரி* முதலான வினைகள் வலிமிகு வினைகளாகும். அறி, கொய், ஆள், களை முதலியவை வலிமிகா வினைகளாகும்.[25] *நில்* என்பது ஓர் ஈரொட்டு வினை. *நின்று* என்ற அமைப்பில் வலிமிகாவினையாகவும் *நிற்கான்* (குமரிவழக்கு), *நிற்பான், நிற்றல்* ஆகிய அமைப்புகளில் வலிமிகு வினையாகவும் இந்த வினை இரண்டு பிரிவிலும் ஒட்டுகிறது.

*16.14.2.* *நில், கேள்* ஆகிய மருங்கொலி வினைகள் *நிற்கும், கேட்கும்* என்று செய்யும் வாய்பாட்டினவாக அமைகையில்

---

24. அப்படியானால் உம் சாரியை கொண்ட அடிநிலை வடிவத்தைக் கருத்தில் கொள்ளாமலேயே *முட்கம்பி* என்ற வடிவத்தை *முள்+கம்பி* என்ற அடிநிலை வடிவத்தின் தோன்றலாகக் கொண்டால் என்ன? மரபிலக்கணங்கள் இந்த நெறியைத்தான் போற்றுகின்றன. ஆனால் இதில் உள்ள ஓர் இடர்ப்பாடு *முள்க்கம்பி, முட்கம்பி* இரண்டையும் *முள்+கம்பி* என்ற அடிநிலை வடிவத்தைக் கொண்டு ஒருங்கிணைக்க முடியாது. ஆனால் மீண்டும் ஒரு சிக்கல் எழுகிறது. *உலகிற் பெய்யும் மழை* என்ற தொடரில் நிகழும் *உலகிற்பெய்யும்* என்பதன் அடிநிலைவடிவத்தை *உலகில்+பெய்யும்* என்றே நாம் கொள்கிறோம். வட்டார வழக்கில் காணப்படும் *உலகில்ப் பெய்யும்* என்பதில் நிகழும் வல்லொற்று மிகுதியை நாம் மிகைத் திருத்தமாகக் கொள்கிறோம். எனவே, மருங்கொலிகள் இரண்டு நிலைகளில் இனவல்லொற்றுக்களாகத் திரிந்தமையும் என்று கருத வேண்டியுள்ளது. இது மேலும் ஆய்வுக்கு உரியதா என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

25. நட, பற, இரு, நில் ஆகிய வினைகள் இறந்த காலத்தில் வலிமிகா வினை களாகவும், இறவாக்காலத்தில் வலிமிகு வினைகளாகவும் அமைகின்றன. சா (< *சாய்) என்ற வினை இறந்தகாலத்தில் வலிமிகு வினையாகவும், இறவாக் காலத்தில் - வலிமிகா வினையாகவும் அமைகின்றது. பெறு, சுடு முதலிய வினைகளையும் சாதல் வினையைப் போலக் கருதலாம் என்று தோன்றுகிறது.

அவற்றின் (காலப்) பகுதிகள் *நிற்கு, கேட்கு* என்று அமைகின்றன. இந்தப் பகுதிகள் **நில்க்கு, *கேள்க்கு* ஆகியவற்றினின்றும் தோன்றியமைந்தவையாகும். இவற்றின் அடிநிலை வடிவங்கள் (மீண்டும்) தொன்னிலையில் செய்யும் வாய்பாட்டுப் பகுதியின் அடியாக அமைந்தவையாகும். இந்த வாய்பாட்டுப் பகுதியானது அடிநிலை வடிவத்தில் நிகழவில்லையென்றால் **நில்க்கு, *கேள்க்கு* ஆகியவற்றில் மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதியை விளக்க முடியாமல் போய்விடும். இவற்றில் நிகழும் **நிலும், *கேளும்* ஆகிய செய்யும் வாய்பாட்டு வினைகளானவை[26] *நிற்கு, கேட்கு* ஆகிய வடிவங்களை முறையே **நில்-உம்+கு, *கேள்-உம்+கு* ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து வருவிக்கத் துணை செய்கின்றன. பின்வரும் ஆய்வினைக் கருத்தில் கொள்க.

44 (1) நில்-உம்+கு > நிலுங்க்உ
(2) *நிலுங்க்உ > நிலுக்கு
(3) *நிலுக்கு > நில்க்கு
(4) *நில்க்கு > நிற்க்கு
(5) *நிற்க்கு > நிற்கு (நிற்கு+உம் > நிற்கும்)

45 (1) கேள்-உம்+கு > கேளுங்க்உ
(2) *கேளுங்க்உ > கேளுக்கு
(3) *கேளுக்கு > கேள்க்கு
(4) *கேள்க்கு > கேட்க்கு
(5) *கேட்க்கு > கேட்கு (கேட்கு + உம் > கேட்கும்)

---

26. தென்மாவட்ட வழக்கிலும், ஈழத்தமிழ் வழக்கிலும் செய்யும் வாய்பாட்டு வினைகள் நீர் என்னும் முன்னிலைப் பெயரின் பயனிலையாக அமைந்து ஏவல் வினையாக நிகழும் போக்கு காணப்படுகிறது. எ-டு: *நீர் அங்கே நில்லும், நீர் அதைக் கேளும். கேள்* என்பது வலிமிகு வினையாயினும் அதன் செய்யும் வாய்பாட்டு ஏவற்பயனிலை *கேட்கும்* என்று அமையாமல் கேளும் என்றே அமைகிறது. இதனின்றும் வலிமிகுவினைகள் எல்லாம் தொடக்கத்தில் வலிமிகா வினைகளாகவே நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருதத் தோன்றுகிறது. *செய்யுதி* என்ற வாய்பாட்டு இறவாக்கால முன்னிலை ஒருமை வினைமுற்றுகள் பிந்திய நிலையில் ஏவல் வினைகளாகவும் நிகழத் தொடங்கியதைக் கருதுகையில் செய்யும் வாய்பாட்டு ஏவல்வினைகள் தொடக்கத்தில் இறவாக்கால முன்னிலை வினைமுற்றுக்களாக நிகழ்ந்திருக்க வேண்டும். இது வலிமிகு வினையமைப்புகள் தோன்றியமையாத காலக்கட்டமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

*நிற்கு, கேட்கு* ஆகிய பகுதிகளில் ஈற்றில் நிகழும் உகரம் குற்றிய லுகரம் ஆகும். ஆகவே சந்தியில் அது உயிர்முன் கெடுகிறது.[27]

16.14.3. செவ்வியல் தமிழில் *செய்குவம், செய்குதும், செய்கின்ற* முதலான வினையமைப்புகளில் நெடும் பகுதியாக நிகழும் செய்கு வாய்பாட்டு வினைகள் மொழி வரலாற்றில் ஒரு படிநிலையாகும். **செய்-உம்+கு* என்ற வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைந்த செய்கு வாய்பாட்டு நெடும் பகுதிகள் குமரித் தமிழில் ஒன்றன்பால் நிகழ்கால வினைமுற்றுக்களாக நிகழ்கின்றன. இந்த வாய்பாட்டினவாகிய *நில்க்கு, கேள்க்கு, குடிக்கு* முதலான வலிமிகு நெடும் பகுதிகள் மலயாளத்தில் ஏவல் வினைகளாக நிகழ்கின்றன. *துடைக்கு, குடிக்கு, நடக்கு, திறக்கு* முதலான வலிமிகு நெடும் பகுதிகள் *துடச்உ* (tuDacu), *குடிச்உ* (kuDicu), *நடச்உ* (naDacu), *தெறச்உ* (teRacu) எனத் திரிந்து தெலுங்கில் வினைப்பகுதிகளாக நிகழ்கின்றன. (காண்க: பிற்சேர்க்கை).

## 16.15. கற்றலும் கேட்டலும்

16.15.1 செய்தல் வாய்பாட்டினவாகிய *கற்றல், கேட்டல்* ஆகிய இரண்டு இறவாக்கால வினைமுற்றுப் பெயர்களும் *கல், கேள்* ஆகிய மருங்கொலி வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும். இந்த வினைகள் வலிமிகு வினைகளாகக் கொள்ளத்தக்கவை யாகும். *கற்றல், கேட்டல்* ஆகியவற்றின் இறவாக்காலப் பகுதிகள் *கற்று, கேட்டு* என அமையும். இந்தப் பகுதிகள் **கல்த்து, *கேள்த்து* என்பவற்றினின்றும் தோன்றியமைந்தவையாகும். மருங்கொலிகளை யடுத்து வலிமிகுந்துள்ள இந்த வடிவங்களும் செய்யும் வாய்பாட்டு வினைகளைக் கொண்ட அடிநிலைவடிவங்களைக் கொண்டவை யாகும். இதனைக் கருத்தில் கொண்டு *அல்* விகுதியின் முன் நிகழும் *கற்று, கேட்டு* ஆகிய இறவாக்காலப் பகுதிகள் (Non Past Bases) பின்வருமாறு வருவிக்கப்படும்.

46 (1) கல்-உம்+து > (ம்>ந்/-த்) கலுந்த்உ

(2) *கலுந்த்உ > (ந்>த்/-த்) கலுத்து

---

27. *நிற்கு, கேட்கு* ஆகிய பகுதிகள் தொடர்பான ஆய்வு *பார்க்கும், குடிக்கும், உதைக்கும், சிரிக்கும்* ஆகியவற்றின் வலிமிகு பகுதிகளாகிய *பார்க்கு, குடிக்கு, உதைக்கு, சிரிக்கு* ஆகியவற்றுக்கும் பொருந்தும். இவற்றின் அடிநிலை வடிவங்கள் *வினையடி-உம்+கு என்ற அமைப்பினவாகும். *நடக்கும், பறக்கும்* ஆகிய வினைமுற்றுக்களின் வலிமிகு பகுதிகள் *நடக்கு, பறக்கு* என்பனவாகும். இந்தப் பகுதிகளின் அடிநிலை வடிவங்கள் **நட-ம்+கு, *பற-ம்+கு* என்று அமையும். இவற்றில் நிகழும் மகரமெய் உம் என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கதாகும்.

(3) *கலுத்து > *கல்த்து (உ>0/-த்த்)

(4) *கல்த்து > *கல்ற்று (த்த்>ற்ற்/-ல்)

(5) *கல்ற்று > கற்ற்று (ல்>ற்/-ற்ற்)

(6) *கற்ற்று > கற்று (கற்று+அல் > கற்றல்) (ற்ற்>ற்/-ற்)

47 (1) கேள்-உம்+து > கேளுந்த்உ (ம்>ந்/-த்)

(2) *கேளுந்த்உ > கேளுத்து (ந்>த்/-த்)

(3) *கேளுத்து > *கேள்த்து (உ>0/-த்த்)

(4) *கேள்த்து > கேள்ட்டு (த்த்>ட்ட்/ள்-)

(5) *கேள்ட்டு > கேட்ட்டு (ள்>ட்/-ட்ட்)

(6) *கேட்ட்டு > கேட்டு (ட்ட்>ட்/-ட்) (கேட்டு+அல்>கேட்டல்)

தொல்காப்பியத்தில் செய்யுந்து வாய்பாட்டு வினைகளைப் பற்றிய ஒரு குறிப்பு காணப்படுகிறது. (சொல். சேனா. 292). எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய புறநானூற்றில் செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி அங்குமிங்குமாக அருகிய வழக்கினதாகக் காணப்படுகிறது (கோதண்டராமன், இரா. 1997:35) மேலே (46), (47)இல் முதல் விதியில் குறிக்கப்பெற்றுள்ள *கலுந்த்உ, *கேளுந்த்உ ஆகிய வினைகள் செய்யுந்து வாய்பாட்டினவாகும். செய்தல் வாய்பாட்டு வினைகளில் இறவாக் காலபகுதிகளாய் நிகழும் *செய்து* (< செயுது) வாய்பாட்டு வடிவங்கள் செய்யுந்து வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றியமைந்தவையாகும்.[28] இங்கே ஓர் உண்மையை நினைவில் கொள்ள வேண்டும். புறநானூற்றில் நிகழ்வதும் தொல்காப்பியம் குறிப்பிடுவதுமான செய்யுந்து வினைகளும் *கற்றல்* (<கற்று-அல்), *கேட்டல்* (<கேட்டு+ அல்) முதலானவற்றில் காணப்படும் வலிமிகு இறவாக்கால

28. கன்னட நிகழ்கால வினைமுற்றுக்களின் காலப் பகுதிகளாகிய செய்யுத்து வாய்பாட்டு வடிவங்கள் செய்யுந்த்உ வாய்பாட்டு வடிவங்களின் திரிபுகளாகும். பேச்சுத் தமிழில் காணப்படும் செய்யுது வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ்கால வினைகளும், மலயாள நிகழ்கால வினைமுற்றுக் களாகிய செய்யுந்நு வாய்பாட்டு வினைகளும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் வழித்தோன்றல்களாகும். தெலுங்கில் காணப்படும் பாடுதானு (pa:Duta:nu) 'பாடுகிறேன்', பாடுதுனு (pa:Dutunu) 'பாடுவேன்' ஆகிய இறவாக் கால வினைமுற்றுக்களின் காலபகுதியாகிய பாடுது (pa:Dutu) என்னும் வடிவம் செய்யுந்து வாய்பாட்டு வினையின்பாற்படும். பழந்தமிழில் காணப் படும் செய்யுதும், செய்யுதி, செய்யுதிர் ஆகிய வாய்பாட்டு இறவாக்கால வினைமுற்றுக்களின் காலபகுதிகளாகிய செய்யுது வாய்பாட்டு வடிவங் களும், தென் மாவட்டங்களில் வழங்கும் சொல்லுதேன், சொல்லுதோம் முதலான நிகழ்கால வினைமுற்றுக்களின் காலபகுதியாகிய சொல்லுது என்னும் செய்யுது வாய்பாட்டு வடிவமும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றியவையாகும்.

நெடும் பகுதிகளாகிய செய்து வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்களாக நிகழும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளும் சமகாலத்தினவாகக் கருதத்தக்கவையல்ல. முந்தையவை அதாவது செய்யுந்து வாய்பாட்டின காலத்தால் பிந்தியவை. பிந்தியவை காலத்தால் முந்தியவை. பிந்தியவற்றில் குறிக்கப்படும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் ஈற்றில் நிகழும் குற்றுகரத் தகரமெய் நிலையொலித் தன்மையதாகும். இத்தகைய வினைகள் *செய்யுந்த்உ (<*செயுந்த்உ) வாய்பாட்டினவாகக் குறிக்கப்படும். *கற்றல், கேட்டல்* ஆகியவற்றில் இறவாக்காலப் பகுதிகளாக நிகழும் *கற்று, கேட்டு* ஆகியவையும் கன்னடத்தில் நிகழ்கால வினைமுற்றுக்களில் நிகழும் *செய்யுத்து* (எ-டு: *கேளுத்தானெ*=கேட்கிறான்), (*ஓடுத்தானெ* = ஓடுகிறான்)) வாய்பாட்டுக் காலப்பகுதிகளும் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவை நிலையொலித் தன்மையதாகிய குற்றுகரத் தகரமெய்யை ஈற்றில் கொண்ட *செய்யுந்த்உ* வாய்பாட்டு வினைகளாகும். இந்த வாய்பாட்டு வினைகளில் *செய்கு* வாய்பாட்டு வினைப் பகுதிகளுக்கு அதாவது *செய்குந்து* வாய்பாட்டு வினைகளில் நிகழும் வினைப்பகுதிகளுக்கு இடமில்லை. ஏனெனில் *செய்யுந்த்உ* வாய்பாட்டு வினைகள் வல்வினை-மெல்வினைப் பாகுபாடு திராவிட மொழிகளில் தோன்றுவதற்கு முன்பே வழக்கில் நிகழ்ந்தவையாகும். தொல்காப்பியம் குறிப்பிடுவதும் புறநானூற்றில் நிகழ்வதுமாகிய *செய்யுந்து* வாய்பாட்டு வினைகளின் ஈற்றில் நிகழும் குற்றுகரத் தகரமெய் அலையொலித் தன்மையதாகும். ஏனெனில், தமிழில் தொன்னிலை புணர்ச்சித் திரிபுகள் நீங்கலாக மெல்லொலியை அடுத்து நிகழும் வல்லொலிகள் நிலையொலித் தன்மையை இழந்து அலையொலித் தன்மையனவாகத் திரிந்து வழங்குபவையாகும்.

16.15.2. பழந்தமிழில் காணப்படும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளில் இன்னொரு குறிப்பிடத்தக்க செய்தி யாதெனில், வலிமிகு வினைகளின் நெடும் பகுதிகளும் அதாவது செய்கு வாய்பாட்டு வினைப்பகுதிகளும் மேற்படி வாய்பாட்டு வினைகளில் இடம்பெறுகின்றன. எ-டு: *பறிக்குந்து* (புறம். 352:4), *பெயர்க்குந்து* (புறம். 395:11), *பூக்குந்து* (புறம். 396.2), *கறக்குந்து* (புறம். 352.2), *நிலைக்குந்து* (புறம். 386.15). இவற்றுள் *பறிக்கு, பெயர்க்கு, பூக்கு, கறக்கு, நிலைக்கு* ஆகியவை வலிமிகு வினைகளின் நெடும்பகுதிகளாகும். இந்தப் பகுதிகள் வரலாற்று நிலையில் செய்யும் வாய்பாட்டு வினைகளை அடிநிலை வடிவங்களாகக் கொண்டவையாகும். இத்தகைய நிலையை

முந்தைய நிலையில் வழங்கிய செய்யுந்த்உ வாய்பாட்டு வினைகளில் காணமுடியாது. காரணம் அந்த நிலையில் முன்பே குறிப்பிட்டது போல் வலிமிகு வினைகள், வலிமிகா வினைகள் என்ற பாகுபாடு ஏற்படவில்லை. எல்லா வினைகளும் வலிமிகா வினைகளாக நிகழ்ந்த நிலையில் வழங்கிய செய்யுந்த்உ வாய்பாட்டு வினைகளைத் தமிழ்மொழிக்கு உரியனவாகக் கருதமுடியாது. ஏனெனில், தமிழில் செய்யுந்து வினைகள் வலிமிகு வினைகள், வலிமிகா வினைகள் என்ற பாகுபாட்டினைப் பிரதிபலிப்பவையாகும். *ஆருந்து* (புறம். 395.8), *இரியுந்து* (புறம். 396.6), *தரூஉந்து* (புறம். 24.9), *பாயுந்து* (புறம். 24.3) முதலானவை வலிமிகா வினைகளின் அடியாகத் தோன்றிவையாகும். முந்தைய நிலைக்குரிய செய்யுந்து வினைகளைத் தொன்னிலைச் செய்யுந்த்உ வினைகள் என்றும் பழந்தமிழில் நிகழும் செய்யுந்து வினைகளைப் பின்னிலைச் செய்யுந்து வினைகள் என்றும் குறிப்பிடலாம். கன்னடத்தில் *கேளுத்தானெ* (= கேட்கிறான்) என்ற வினைமுற்றில் நிகழும் *கேளுத்து* என்னும் இறவாக்காலப் பகுதியானது *கேளுந்த்உ* என்ற தொன்னிலைச் செய்யுந்த்உ வாய்பாட்டின் திரிபாகும். இதன் பின்னிலைச் செய்யுந்து வாய்பாட்டு வடிவம் கேட்குந்து என்று அமையும். தமிழில் *கேளுந்து* என்ற வினையமைப்புக்கு வாய்ப்பில்லை. *கேட்குந்து* வினைவடிவமே தமிழுக்கு இசைந்த வடிவமாகும். இதனின்றும் *கேளுந்து* என்பதன் முதுமையும், *கேட்குந்து* என்பதன் இளமையும் நன்கு புலனாகும். இங்கே ஓர் உண்மையை மீண்டும் நினைவுகூர வேண்டும். *அளித்தல், அழைத்தல், நீத்தல்* (< *நீய்த்தல்), *கற்றல், கேட்டல்* ஆகியவற்றின் காலப்பகுதிகளாகிய *அளித்து, அழைத்து, நீத்து, கற்று, கேட்டு* ஆகியவை தொன்னிலைச் செய்யுந்த்உ வாய்பாட்டு வினை களினின்றும் தோன்றியமைந்தவையாகும். எடுத்துக்காட்டாக *அளித்து* என்ற இறவாக்காலப் பகுதியானது **அளியுத்து* என்பதினின்றும் தோன்றியதாகும். **அளியுத்து* என்பது **அளியுந்த்உ* என்ற தொன்னிலைச் செய்யுந்த்உ வாய்பாட்டுப் பொது வினைமுற்றின் திரிபாகும்.

16.15.3. கன்னடத்தில் நிகழ்கால வினைமுற்றுக்களில் இறவாக்காலப் பகுதிகளாக நிகழும் *செய்யுத்து* வாய்பாட்டு வினைகள் தொன்னிலைச் *செய்யுந்த்உ* வினைகளின் திரிபு என்று முன்னதாகப் பேசப்பட்டது. இந்த வினைகளின் எச்சம் பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் தன்மைப்பன்மை, முன்னிலை ஒருமை, முன்னிலை (உயர்வுப்) பன்மை ஆகிய வினைமுற்று வடிவங்களில் காணப்படுகிறது. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

**தன்மைப்பன்மை**

47 (1) உரைத்தும் (சீவக. 1166) 'உரைப்போம்'
(2) பிழைத்தும் (சீவக. 1234) 'பிழைப்போம்'
(3) விரித்தும் (சீவக. 2823) 'விரிப்போம்'
(4) தணித்தும் (சீவக. 1736) 'தணிப்போம்'
(5) இடித்தும் (திருவா. திருப்பொற். 1) 'இடிப்போம்'
(6) இருத்தும் (சீவக. 2511) 'இருப்போம்'
(7) கொடுத்தும் (சீவக. 1339) 'கொடுப்போம்'
(8) காத்தும் (சீவக. 2762) 'காப்போம்'
(9) கேட்டும் (சீவக. 1536) 'கேட்போம்'
(10) அடர்த்தும் (சீவக. 1817) 'அடர்ப்போம்'

**முன்னிலை ஒருமை**

48 (1) கேட்டி (அகம். 68.4, 8) 'கேட்பாய்'
(2) ஒளித்தி (புறம். 8.8) 'ஒளிப்பாய்/ஒளிவாய்'
(3) அளித்தி (கலி. 95.31, பதி. 79.3) 'அளிப்பாய்'
(4) இறத்தி (கலி. 10.8) 'இறப்பாய்/கடப்பாய்'
(5) துறத்தி (சீவக. 2883) 'துறப்பாய்'
(6) உரைத்தி (சீவக. 1585) 'உரைப்பாய்'
(7) பணித்தி (திருவா. திருச்சதகம். 14) 'பணிப்பாய்'
(8) நீத்தி (சீவக. 1511) 'நீப்பாய்'
(9) ஒத்தி (புறம். 8.6, திருக். 1119) 'ஒப்பாய்'

**முன்னிலை (உயர்வுப்) பன்மை**

49 (1) கேட்டிர் (புறம். 388.10) 'கேட்பீர்'
(2) இரத்திர் (நற். 71.3) 'இரப்பீர்'
(3) இறத்திர் (கலி. 25.12) 'இறப்பீர்/கடப்பீர்'
(4) பறத்திர் (நம். திருவி. 54.1) 'பறப்பீர்'
(5) மறைத்திர் (திருக். 1318) 'மறைப்பீர்'

மேலே குறிப்பிட்டுள்ள இறவாக்கால வினைமுற்றுக்களில் *-உம், -இ, -இர்* ஆகிய இயைபு விகுதிகளின் முன் நிகழும் *செய்த்து* வாய்பாட்டு இறவாக்காலப் பகுதிகள் *செய்யுத்து* வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கங்களாகும். விண்டுரை ஆய்வில் (Descriptive Analysis) *செய்த்து* வாய்பாட்டு காலப்பகுதிகள் *வினையடி+த்து* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படும். ஆனால் வரலாற்று ஆய்வில் எடுத்துக்காட்டாக *ஒளித்தி, உரைத்தி, நீத்தி, துறத்தி, கேட்டி* ஆகியவற்றின் இறவாக்காலப் பகுதிகள் பின்வருமாறு ஆராயப்படும்.

(50) *ஒளியுத்து > ஒளிய்த்து > ஒளித்து

(51) *உரையுத்து > உரைய்த்து > உரைத்து

(3) *நீயுத்து > நீய்த்து > நீத்து

(4) *துறயுத்து > துறய்த்து > துறத்து

(5) *கேளுத்து > கேள்த்து > கேள்ட்டு > கேட்ட்டு > கேட்டு

இந்த ஆய்வில் முதல்வடிவங்களாக நிகழும் *செய்யுத்து* வாய்பாட்டுக் காலப்பகுதிகள் தொன்னிலைச் செய்யுந்த்உ வாய்பாட்டு வினை முற்றுக்களின் திரிபுகள் என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.[29]

---

29. செய்யுந்து வாய்பாட்டு வினைகள் ஈற்றயல் மெல்லொற்றை இழந்து தமிழில் வலிமிகா வினைகளின் அடியாகத் தோன்றிய இறவாக்கால வினைமுற்றுக்களின் காலப்பகுதிகளாக நிகழ்கின்றன. பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருதுக.

(1) நீயெவன் செய்தி பிறர்க்கு
யாமெவன் செய்து நினக்கு (கலி. 108.50, 51)

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *செய்தி* (<செய்யுதி), *செய்தும்* (<செய்யுதும்) ஆகிய இறவாக்கால வினைமுற்றுக்களின் காலப்பகுதி செய்து என்பதாகும். இது *செய்யுது* என்ற வடிவத்தின் ஒடுக்கமாகும். தென் மாவட்டக் கிளைமொழிகளில் நிகழும் *சொல்லுதான், பேசுதான்* முதலான நிகழ்கால வினைமுற்றுக்களில் நிகழும் காலப்பகுதிகள் செய்யுது வாய்பாட்டினவாகும். பழந்தமிழில் காலப்பகுதியாக அமையும் இந்தச் செய்யுது வாய்பாட்டு வடிவங்கள் பலவாறாகத் திரிவதுடன் குறில் முதலாகிய *கொள், கொல், வெல், செல்* ஆகிய ஓரசை வினையடிகளை நெடில்முதல் வினைகளாகவும் மாற்றியமைக்கின்றன. *காண்டல்-* (நற். 271.10), *காண்டும்* (புறம். 173.90), *காண்டை* (கலி. 144.1, பரி. 8.85), *காண்டிர்* (அகம். 76.9) ஆகிய இறவாக்கால வினைமுற்றுக்களின் காலப்பகுதியாகிய காண்டு என்பது *காணுது* என்பதனின்றும் ஒடுங்கித் திரிந்த வடிவமாகும். *கோடல்* (குறுந். 62.1), *கோறல்* (சிலம்பு. 20.64), *வேறல்* (புறம். 45.6), *சேறல்* (அகம். 221.14) / *சேறும்* (நற். 24.6) / *சேறி* (குறுந். 392.3) / *சேறிர்* (பத்துப். 10.65) ஆகியவற்றின் இறவாக்காலப் பகுதிகளாகிய *கோடு, கோறு, வேறு, சேறு* ஆகிய வடிவங்கள் முறையே **கொளுது* (=கொள்ளுது), **கொலுது* (=கொல்லுது). **வெலுது* (=வெல்லுது), **செலுது* (=செல்லுது) ஆகியவற்றின் திரிபுகளாகும். ஓர் எடுத்துக்காட்டின்மூலம் இந்த திரிபுகள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

(2) *செலுது > செல்து > செல்று > செறு > சேறு-

மருங்கொலி கெடுவதால் **செறு* என்னும் இடைநிலை வடிவம் மேற்படி ஆய்வில் *சேறு* என்று மாறி அமைகிறது. அசையமைப்பைச் சமன்படுத்திக் கொள்ளும் வகையில் இந்த மாற்றம் அமைகிறது. *அகறி* (நற். 205.7), *அகறிர்* (நற். 37.7) ஆகியவற்றின் காலப்பகுதியாகிய *அகறு-* என்பது *அகலுது* என்பதன் ஒடுக்கமாகும். *அகலுது* என்பது பின்வரும் திரிபுகளுக்கு இலக்காகி *அகறு* என்ற வடிவத்தைத் தோற்றுவிக்கிறது. இங்கே அசையமைப்பைச் சமன்படுத்திக்கொள்ளும் பிரச்சனை எழவில்லை.

(3) *அகலுது > அகல்து > அகல்று > அகறு-

*அகல்* என்னும் வினையடி ஓரசையின் மிக்கதாகலின் மருங்கொலி இழப்பினால் பாதிக்கப்படவில்லை.

*16.15.4.* தமிழின் கிளைமொழியாகக் கருதப்படுவதும் கேரள மாநிலம், இடுக்கி மாவட்டம், செண்பகத் தொழுவக்குடி என்னு மிடத்தில் பேசப்படுவதுமாகிய முதுவமொழியில் *பாக்குத்த* (= பார்க்கிற), *கடிக்குத்த* (=கடிக்கிற) என்று நிகழ்காலப் பெயரெச்சங்களிலும், நிகழ்கால வினைமுற்றுக்களிலும் செய்யுத்து வாய்பாட்டு வடிவங்கள் காலப்பகுதிகளாக நிகழும் நிலை காணப்படுகின்றது (Sakthivel, S. 1978:75 & 76). பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

**வலிமிகு வினை**

55 (1) படிக்குத்தேன் 'படிக்கிறேன்'
(2) கேக்குத்தேன் 'கேட்கிறேன்'
(3) பாக்குத்தேன் 'பார்க்கிறேன்'
(4) குடிக்குத்தேன் 'குடிக்கிறேன்'
(5) விக்குத்தேன் 'விற்கிறேன்'
(6) நடக்குத்தேன் 'நடக்கிறேன்'
(7) நிக்குத்தேன் 'நிற்கிறேன்'
(8) ஓடிக்குத்தேன் 'ஓடிக்கிறேன்'

**வலிமிகா வினை**

56 (1) காணுத்தேன் 'காண்கிறேன்'
(2) பாடுத்தேன் 'பாடுகிறேன்'
(3) எலுதுத்தேன் 'எழுதுகிறேன்'
(4) அடக்குத்தேன் 'அடக்குகிறேன்'
(5) வெட்டுத்தேன் 'வெட்டுகிறேன்'
(6) கேருத்தேன் 'ஏறுகிறேன்'

நிகழ்கால வினைமுற்றுக்களைப் பொறுத்தவரை முதுவ மொழியானது கன்னடத்துடன் ஒத்துப்போனாலும், கன்னட நிகழ்கால வினைமுற்றுக்களில் வலிமிகு வினை, வலிமிகா வினை என்ற பாகுபாடு காணப்படவில்லை.

## 16.16. கலித்தொகை காட்டும் இறவாக்காலவினைகள்

16.16.1. *கேட்டை, நின்றை, காத்தை, கண்டை* ஆகியவை முன்னிலை ஒருமை வினைகளாகவும் அசைக்குங்கிளவிகளாகவும், அதாவது அசைநிலைக் கிளவிகளாகவும் நிகழும் எனத் தொல்காப்பியர் (சொல். சேனா. 426) குறிப்பிடுவார். இவர் குறிப்பிடும் செய்தை வாய்பாட்டு வினைகள் இறவாக்கால வினை களாகும். எட்டுத்தொகை நூல்களில் ஒன்றாகிய கலித்தொகையில்

*இ,* *ஐ* ஆகிய முன்னிலை ஒருமை விகுதிகள் *செய்து/செய்த்து* (<*செயுது / *செயுத்து) வாய்பாட்டு இறவாக்காலப் பகுதிகளில் (Non-Past Bases) மீது நிகழும் நிலையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

57(1) காண்டை (12.14, 92.60, 144.1) 'காண்பாய் (காணாய்)'
(2) வந்தை (63.12) 'வருவாய் (வாராய்)'

(58) கண்டை (64.6, 8; 103.32, 36, 42, 46; 104.42, 105.57, 109.7) 'காண்பாய் (=காணாய்)'

(59) கேட்டை (62.23, 92.23) 'கேட்பாய் (=கேளாய்)'

(60) தின்றி(யோ) (65.13) 'தின்பாய்'

16.16.2. ஐயென்னும் வினையடியாகத் தோன்றிய *ஐப்பாய்* (=ஆவாய்) என்னும் முன்னிலை ஒருமை வினையின் நிகழ்ச்சியும் செய்து வாய்பாட்டு இறவாக்காலப்பகுதியை அடுத்துக் காணப் படுகிறது. கருதுக:

(61) காண்டைப்பாய் (87.15, 89.13) 'காண்பாய், காண்பாய் ஆவாய்'

16.16.3. ஐயின் திரிபாகிய *ஈ* என்னும் வினையடியாகத் தோன்றிய *ஈத்தை* என்னும் முன்னிலை ஒருமைவினையின் நிகழ்ச்சியானது *செய்த்து* வாய்பாட்டு வினையை அடுத்து காணப் படுகிறது கருதுக:

62(1) மதித்தீத்தை (14.17) 'மதிப்பாய்/மதிப்பாய் ஆவாய்'
(2) நின்றீத்தை (94.4) 'நிற்பாய்/நிற்பாய் ஆவாய்'

16.16.4. கலித்தொகையில் *பாடித்தை* (40.10, 43.15, 23; 131.24, 34) 'பாடுவாய்' என்றொரு வினையமைப்பின் நிகழ்ச்சியும் காணப்படுகிறது. *பாடித்தை* என்பதைப் *பாடு+இத்தை* என்ற அமைப்பினதாகவும், இதில் நிகழும் *இத்தை* என்பதை *ஈத்தை* என்பதன் மாற்றுவடிவமாகவும் கருதலாம். *பாடித்தை, மதித்தீத்தை* ஆகியவற்றில் காணப்படும் *இத்தை, ஈத்தை* ஆகியவை துணை நிலை வழக்கில் நிகழ்வனவாகும். *இத்தை* என்பது ஆடு, பாடு, ஓடு முதலான வினைப்பகுதிகளையடுத்தும் *ஈத்தை* என்பது செய்து வாய்பாட்டு இறவாக்காலப் பகுதிகளையடுத்தும் நிகழ்கின்றன.

16.16.5. *செய்தை (காண்டை/கண்டை, வந்தை), செய்த்தை (கேட்டை), செய்தி (தின்றி), செய்தைப்பாய் (காண்டைப்பாய்)* ஆகிய வாய்பாட்டினவாக மேல் எடுத்துக்காட்டுக்களில் நிகழு:ம முன்னிலை ஒருமை வினைகளின் இறவாக்காலப் பகுதிகளாகிய செய்து வாய்பாட்டு வினைகள் **செயுந்து* (எ-டு. *காண்டை*),

**செயுந்த்உ* (எ-டு: *கேட்டை*) ஆகிய வாய்பாட்டு அடிநிலை வடிவங்களினின்றும் தோன்றியமைந்தவையாகும். செய்தீத்தை (*மதித்தீத்தை, நின்றீத்தை*) வாய்பாட்டு வினைகளிலும் *பாடித்தை* வினையிலும் நிகழும் *ஈத்தை, இத்தை* ஆகிய இறவாக்கால முன்னிலை ஒருமைவினைகளில் காணப்படும் *ஈத்து, இத்து* ஆகிய இறவாக்காலப் பகுதிகள் முறையே **ஈயுந்த்உ, *இயுந்த்உ* ஆகிய *செயுந்த்உ* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களினின்றும் தோன்றியவையாகும். கருதுக: 'ஆவாய்' என்னும் பொருண்மையனவாகிய *ஈத்தை, இத்தை* ஆகிய வினைகள் *ஈ, இ* ஆகிய வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். துணைநிலைவழக்கில் நிகழும் இந்த வினைப்பகுதிகள் *ஆய்* என்பதன் குறில் வடிவமாகிய ஐ(=அய்) என்பதன் திரிபுகளாகும்.

### *16.17.* கற்பதும் கேட்பதும்

*கற்றல், கேட்டல்* ஆகியவற்றுக்கு நிகரான இறவாக்காலப் பொது வினைமுற்றுப் பெயர்களாகக் கருதத்தக்கவை *கற்பது, கேட்பது* ஆகியவையாகும். பின்வரும் வாக்கியங்களைக் கருதுக.

63 (1) கற்றலும் கேட்டலும் அறிவின் வாயில்களாகும்

(2) கற்பதும் கேட்பதும் அறிவின் வாயில்களாகும்

இங்கே (63)இல் நிகழும் இரண்டு வாக்கியங்களும் ஒரே பொருண்மையினவாகும். *கற்றல், கேட்டல்* ஆகியவற்றின் இறவாக் காலப்பகுதிகளாகக் *கற்று, கேட்டு* என்பவை கொள்ளத்தக்கனவாகும். இந்தக் காலப்பகுதிகள் **கலுந்த்உ* (< கல்-உம்+து), **கேளுந்த்உ* (< கேள்-உம்+து) என்பவற்றினின்றும் தோன்றியமைந்தவை என்பது பற்றி ஏற்கெனவே பேசப் பட்டுள்ளது. *கற்பது, கேட்பது* ஆகியவற்றின் இறவாக்காலப் பகுதிகள் *கற்பு, கேட்பு* என்பவையாகும். இவற்றின் அடிநிலை ஆய்வும் மேலே குறிப்பிட்ட *கற்று, கேட்டு* ஆகிய வற்றின் அடிநிலை ஆய்வோடு பொருந்துவதாகக் கருதலாம். இதனைக் கருத்தில் கொண்டு *கற்பு, கேட்பு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் **கலும்ப்உ* (< கல்-உம்+பு), **கேளும்ப்உ* (< கேள்-உம்+பு) எனக் குறிக்கப்படும்.[30] இவற்றிலும் செய்யும்

30. கற்பு, கேட்பு ஆகியவற்றின் மீதான ஆய்வானது மதிப்பு, தடுப்பு, எரிப்பு, உழைப்பு, இழப்பு, எதிர்ப்பு முதலான வினைப்பெயர்களுக்கும் பொருந்தும். இவற்றின் ஆய்வானது தலைமைக் கட்டுரையில் (50) முதல் (54) வரை குறிக்கப்பெற்றுள்ள ஆய்வுப்போக்கில் அமையும். மதிப்பும், தடுப்பும், எதிர்ப்பும் முறையே **மதியும்ப்உ, *தடும்ப்உ, *எதிரும்ப்உ* ஆகியவற்றி னின்றும் பெறப்படும். இவற்றில் நிகழும் பகரம் நிலையொலித் தன்மையதாகும்.

வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியைக் காணலாம். *கலும்ப்உ, *கேளும்ப்உ ஆகியவற்றின் ஈற்றில் நிகழும் குற்றுகரப் பகரம் நிலையொலித் தன்மையதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *கற்பு, கேட்பு* ஆகிய இறவாக்காலப் பகுதிகள் *கலும்ப்உ, *கேளும்ப்உ ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து பின்வருமாறு வருவிக்கப்படும்.

(64) *கலும்ப்உ > கலுப்பு > கல்ப்பு > கற்ப்பு > கற்பு-

(65) *கேளும்ப்உ > கேளுப்பு > கேள்ப்பு > கேட்ப்பு > கேட்பு-

இந்த ஆய்வில் மூன்றாம் படிநிலையில் மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்றானது உம் விகுதியின் எச்சமாகும். திரிபின்மூலம் அமைந்ததாகலின் இந்த வல்லொற்றினைப் புணர்ச்சியில் மிகுந்த வல்லொற்றாகக் கருதமுடியாது.

## 16.18. இறவாக்காலப் பகுதிகள் : ஒரு மீள்பார்வை

16.18.1. வலிமிகு வினைகளை அடித்தளமாகக் கொண்ட இறவாக்காலப் பகுதிகள் (Non-Past Bases) பற்றி முன்பே பேசப் பட்டுள்ளது. இவற்றின் அடிநிலை வடிவங்கள் செய்யும் வாய்பாட்டு வடிவங்களைக் கொண்டவையாகும். இந்த வாய்பாட்டு வடிவங்கள் இக்காலத் தமிழில் முன்னிலை (உயர்வுப்) பன்மை ஏவல் வினைகளிலும் நிகழ்கின்றன. ஆனால் செவ்வியல் தமிழிலும் பேச்சுத் தமிழிலும் இகர ஐகார ஈற்று வினையடிகளின் மீது அமைகையில் வடிவொப்புமை காணப்படவில்லை. இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் கருத்தில் கொள்ளத் தக்கனவாகும்.

| செவ்வியல் தமிழ் | பேச்சுத் தமிழ் |
|---|---|
| 66(1) குடியுங்கள் (< குடியும்+கள்) | 67(1) குடிங்க (< குடிம்+க) |
| (2) கிழியுங்கள் (< கிழியும்+கள்) | (2) கிழிங்க (< கிழிம்+க) |
| (3) திணியுங்கள் (< திணியும்+கள்) | (3) திணிங்க (< திணிம்+க) |
| (4) குறையுங்கள் (< குறையும்+கள்) | (4) கொறைங்க(< கொறைம்+க) |
| (5) கலையுங்கள் (< கலையும்+கள்) | (5)கலைங்க (< கலைம்+க) |
| (6) நினையுங்கள் (< நினையும்+கள்) | (6) நெனய்ங்க (< நெனய்ம்+க) |

16.18.2 பேச்சுத் தமிழில் அமைந்த முன்னிலை (உயர்வுப்) பன்மை ஏவல் வினைகளில் செய்யும் வாய்பாட்டு வினைகள் *செய்ம்* வாய்பாட்டினவாக ஒடுங்கி நிகழ்வதைக் காணலாம். இந்த நிகழ்ச்சியைக் கட்டுப்படுத்துபவை இகர ஐகார ஈற்று வினையடி

களாகும். வலிமிகா வினைகளிலும் இதே நிலைதான். எ-டு: *குனியுங்கள்* (குனியும்+கள்) (செவ்வியல் தமிழ்) / *குனிங்க* (குனிம்+க) (பேச்சுத் தமிழ்). சங்க இலக்கியத்திலும் *செய்மே, செய்மோ, செய்மின், செய்மதி* முதலான வாய்பாட்டு வினைகளில் செயும் வாய்பாட்டு வினைகள் *செய்ம்* வாய்பாட்டினவாய் ஒடுங்கி நிகழும் நிலையைக் காணலாம். எ-டு: *தெரிமே* (நற். 233.9), *சென்மே* (நற். 19.9), *தின்மே* (நற். 300.12); *விளைமோ* (நற். 251.11), *சென்மோ* (நற். 398.7), *வம்மோ* (ஐங். 469.5); *கேண்மதி* (நற். 54.4), *சென்மதி* (நற். 276.8), *வம்மதி* (ஐங். 411.4); *கேண்மின்* (பரி. 9.13), *சென்மின்* (நற். 299.2), *வம்மின்* (பதி. 49.1). இவற்றுள் செய்மே வாய்பாட்டு வினைகள் எதிர்கால வினைமுற்றுக்களாக நிகழ்வனவாகும். எ-டு: *அட்டில் ஓலை தொட்டனை தின்மே* (நற். 300.12). இந்த எடுத்துக்காட்டில் *தின்மே* என்பது *திற்பாய்* என்ற வினைக்கு நிகரான ஒன்றாகும்.

16.18.3. செய்யும் வாய்பாட்டு ஏவல் வினைகள் செய்ம் வாய்பாட்டினவாய் ஒடுங்கி நிகழும் நிலையும் பழந்தமிழில் காணப்படுகிறது. எ-டு: *உண்ம்* (புறம். 178.5), *தின்ம்* (புறம். 150.13), *சென்ம்* (அகம். 176.26), *தின்ம்* (நற். 300.12), *வம்* (பத்துப். 2.101), *தம்* (பத்துப். 6.747). இறவாக்கால (Non-Past) வினைமுற்றுக் களிலும் செயும் வாய்பாட்டு வினைகளின் ஒடுக்கமாகிய செய்ம் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியையும் பழந்தமிழில் காணலாம். எ-டு: *உண்மர்* (பதி. 24.18), *தின்மர்* (பதி. 24.18), *காண்மர்* (பத்துப். 6.513), *கொண்மர்* (பத்துப். 6.514), *என்மர்* (குறுந். 395.6). இதனின்றும் செயும் வாய்பாட்டு வினைகள் வலிமிகு வினை, வலிமிகா வினை என்ற பாகுபாடின்றி ஒடுங்கி, செய்ம் வாய்பாட்டினவாய்ப் பழந்தமிழில் நிகழ்வது ஒரு படிநிலையின் வெளிப்பாடாகும் என்பது புலனாகிறது.

16.18.4. வலிமிகு வினைகளின் அடியாக அமையும் இறவாக்காலப் பகுதிகளின் அடிநிலை வடிவங்களில் செயும் வாய்பாட்டு வினைகள் மட்டுமல்ல, அவற்றின் ஒடுக்கமாகிய செய்ம் வாய்பாட்டு வினைகளும் நிகழும் நிலை காணப்படு கின்றது. இந்த நிகழ்ச்சியானது வினையடிகளின் ஈற்றொலியனால் கட்டுப்படுத்தப்படுகின்றது. எடுத்துக்காட்டாக *தில், கேள்* ஆகியவற்றின் அடியாகத் தோன்றிய *திற்கும், கேட்கும்* ஆகியவை *திற்கு, கேட்கு* ஆகிய பகுதிகளைக் கொண்டவையாகும். இவற்றின் அடிநிலை வடிவங்கள் **திலும்+கு, *கேளும்+கு* என்று அமையும்.

இவற்றில் நிகழும் **நிலும்,* **கேளும்* ஆகியவை செயும் வாய் பாட்டினவாகும். *குடிக்கும், கலைக்கும், நடக்கும்* ஆகியவற்றின் பகுதிகள் **குடிக்கு, *கலைக்கு, *நடக்கு* என்பவையாகும். இவற்றின் அடிநிலை வடிவங்கள் **குடிம்+கு,* * கலைம்+கு, *நடம்+கு* என அமையும். இந்த வடிவங்களில் நிகழும் **குடிம், *கலைம், *நடம்* ஆகியவை செயும் வாய்பாட்டின் ஒடுக்கமாகிய செய்ம் வாய்பாட்டுக்குரிய வடிவங்களாகும். இங்கே இகர அகர ஐகார ஈற்று வினைகள் செய்ம் வாய்பாட்டு வினை நிகழ்ச்சிக்குக் காரணமாகின்றன. இந்த வரையறை *செய்கின்று*- வாய்பாட்டு வினைகளில் நிகழும் செய்கு வாய்பாட்டு நெடும் பகுதிகளின் அடிநிலை வடிவங்களின் ஆய்வுக்கும் பொருந்தும்.

*16.18.5.* குமரி மாவட்டப் பேச்சுத் தமிழில் ககரமெய் நிகழ்கால விகுதியாக அமைகிறது. எ-டு: *சொல்லுகான், பேசுகான், அடிக்கான், குடிக்கான்.* ஒன்றன்பால் நிகழ்கால வினைமுற்றுக்கள் இந்தப் பேச்சுத் தமிழில் செய்கு வாய்பாட்டினவாய் அமையும். எ-டு: *சொல்லுகு, பேசுகு, அடிக்கு, குடிக்கு, நிக்கு (< நிற்கு).* உயிரொலி இயைபின் (Vowel Harmony) காரணமாக *அடிக்கு, குடிக்கு, நிக்கு, கொதிக்கு* முதலான வலிமிகு வினையடிகளின் மீது அமைந்த ஒன்றன்பால் நிகழ்வினைகள் குமரி மாவட்டப் பேச்சுத் தமிழில் *அடிக்கி, குடிக்கி, நிக்கி, கொதிக்கி* என்று திரிந்து நிகழும் போக்கும் காணப்படுகிறது. குமரி மாவட்டக் கிளைமொழி வழக்கில் *அடிக்குதான், குடிக்குதான்* என்ற அமைப்பிலான நிகழ்கால வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியும் காணப்படுகிறது. இங்கே *அடிக்கு, குடிக்கு* முதலானவை நிகழ்கால இடைநிலையாகிய தகரமெய்யின் முன் வினைப்பகுதி களாக நிகழ்கின்றன. இந்த வினைப்பகுதிகளும் *சொல்லுகான், பேசுகான், அடிக்கான்* முதலானவற்றில் நிகழும் செய்கு வாய்பாட்டுக் காலப்பகுதிகளும் *அடிக்கு, குடிக்கு* முதலான ஒன்றன்பால் நிகழ்கால வினைமுற்றுக்களும் வரலாற்று நிலையில் தத்தம் அடிநிலைவடிவங்களில் செய்யும்/செய்ம் வாய்பாட்டு வினைகளைக் கொண்டவையாகும். இந்த வினைகளின் நிகழ்ச்சி வலிமிகு வினைகள், வலிமிகா வினைகள் என்ற பாகுபாட்டுக்கு அப்பாற்பட்டதாகும். இந்தப் பாகுபாடு திராவிட மொழிகளின் வரலாற்றில் நிகழ்ந்த ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். இதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது நிலையொலிகளாகிய வல்லொற்றுக்கள் அலையொலிகளை அடுத்து நிகழ்ந்த நிலையில் அலையொலித் தன்மையனவாகத் திரிந்தமையாகும்.

### 16.19. ஒரு மறுபார்வை

*16.19.1.* குமாரசாமி ராஜாவின் ஆய்வில் மருங்கொலிகளும் மெல்லொலிகளும் இனவல்லொற்றுக்களாகத் திரிய வேண்டுமாயின் அவை இரட்டித்த வல்லொற்றுக்களின் முன் நிகழவேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது. இதனைக் கருத்தில் கொண்டு *மகட்கு, மகற்கு* ஆகியவை **மகள்க்கு, *மகன்க்கு* ஆகிய அடிநிலை வடிவங்களோடு தொடர்புபடுத்தப்படுகின்றன. இந்த அடிநிலை வடிவங்கள் முதலில் **மகட்க்கு, *மகற்க்கு* எனத் திரிந்து, பின்னர் ஈற்றயல் ககரம் கெட்டு இறுதியில் *மகட்கு, மகற்கு* எனத் தோன்றியமைகின்றன. *கற்றல், கேட்டல்* ஆகியவற்றின் இறவாக் காலப் பகுதிகளாகிய *கற்று, கேட்டு* ஆகியவற்றுக்கும் இந்த ஆய்வு பொருந்தும். *அல்* முன் நிகழும் *கற்று, கேட்டு* இரண்டும் **கல்த்து, *கேள்த்து* ஆகியவற்றினின்றும் தோன்றியமைந்தவையாகும். கருதுக: **கல்த்து/*கேள்த்து > *கல்ற்று/*கேள்ட்டு > *கற்ற்று/*கேட்ட்டு > *கற்று/கேட்டு.*

*16.19.2.* *மகட்கு, மகற்கு* ஆகியவற்றின் முந்தைய வடிவங்கள் **மகட்க்கு, *மகற்க்கு* என்பவையாகும். இதேபோல் *கற்று, கேட்டு* ஆகியவற்றின் முந்தைய வடிவங்கள் **கற்ற்று, *கேட்ட்டு* என்பவையாகும். *மகளுக்கு, மகனுக்கு* ஆகியவற்றின் ஒடுக்கமே **மகள்க்கு, *மகன்க்கு* ஆகிய வடிவங்கள். **கற்ற்று, *கேட்ட்டு* ஆகியவற்றின் முந்தைய வடிவங்கள் **கல்த்து, *கேள்த்து* என்பவையாகும். இந்த வடிவங்கள் **கலுத்து, *கேளுத்து* ஆகியவற்றின் ஒடுக்கங்களாகும். *மகளுக்கு, மகனுக்கு* ஆகியவை **மகளுங்க்உ* (< *மகள்-உம்+கு), **மகனுங்க்உ* (< *மகன்-உம்+கு) ஆகியவற்றின் திரிபுகளாகும். இதேபோல் **கலுத்து, *கேளுத்து* ஆகியவை **கலுந்த்உ* (< *கல்-உம்+து), **கேளுந்த்உ* (< *கேள்-உம்+து) ஆகியவற்றின் திரிபுகளாகும். **மகளுங்க்உ, *மகனுங்க்உ* ஆகியவற்றில் நிகழும் ஙகர மெல்லொலி இரட்டித்த வல்லொற்றுக்களின் நிகழ்ச்சி இன்றியே ககர வல்லொற்றாகத் திரிகின்றது. இவ்வாறே **கலுந்த்உ, *கேளுந்த்உ* ஆகியவற்றில் இரட்டித்த வல்லொற்றுக்களின் நிகழ்ச்சி இன்றியே நகர மெல்லொலியானது தகர வல்லொலியாகத் திரிகிறது. இதனின்றும் தொல் அமைப்புக்களில் மெல்லொற்று இன வல்லொற்றாகத் திரிவதற்கு இரட்டித்த வல்லொற்றுக்களின் முன் அது நிகழ வேண்டும் என்ற கடப்பாடு இல்லை என்பது தெளிவாகிறது. இந்தப் பின்னணியில் குமாரசாமி ராஜாவின் கருதுகோள் கடுமையானதாகத் தோன்றுகிறது. ஒற்றை வல்லொற்றுக்களின் முன் மருங்கொலிகளும், மெல்லொலிகளும்

சில குறிப்பிட்ட தொல் அமைப்புக்களில் (எ-டு. நிலக்கு < நிலம்+கு) இன வல்லொற்றுக்களாகத் திரியற்பாலன என்று குமாரசாமி ராஜாவின் கருதுகோளின் கடுமையைத் தளர்த்த வாய்ப்புள்ளது.

## 16.20. நற்றிணையும் அஃறிணையும்

16.20.1. புறநிறைவைக் கருத்தில் கொண்டு அமைந்த மரபிலக்கண ஆய்வில் *நற்றிணை, அஃறிணை* ஆகிய தொடர்களின் அடிநிலை வடிவங்கள் முறையே *நல்+திணை, அல்+திணை* என்று குறிக்கப்படுகின்றன. இரண்டிலும் நிலைமொழியானது மருங்கொலி ஈற்றினதாகவும், வருமொழி முதல் தகரவல்லொற்றினதாகவும் அமைகின்றன. ஆனால் புணர்ச்சியில் *நல்+திணை* > *நற்றிணை* என்றும், *அல்+திணை* > *அஃறிணை* என்றும் திரிந்தமைகின்றன. இந்த மாறுபட்ட திரிபுகள் புறநிறைவுக் கொள்கையின் அடிப்படையில் இங்கே ஆராயப்படுகின்றன. *நல்+திணை* என்பது **நஃறிணை* என்றும், *அல்+திணை* என்பது **அற்றிணை* என்றும் ஏன் அமையவில்லை? காரணம், *நற்றிணை* என்பதும், *அஃறிணை* என்பதும் இருவேறு புணர்ச்சிப் படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும். மரபிலக்கண ஆய்வில் உள்ளீடாக இந்த அடிப்படை உண்மை கருத்தில் கொள்ளப்பட்டுள்ளதாகவே தோன்றுகிறது. *நல், அல்* இரண்டு நிலைமொழிகளிலும் நிகழும் மருங்கொலி அலையொலித் தன்மையதாகும். *அல்* என்பதில் நிகழும் மருங்கொலியானது அலையொலித் தன்மையதாக வருமொழி முதலில் நிகழும் தகரமெய்யின் தாக்கத்தால் நிலையொலியாகத் திரிந்து புணர்ச்சியில் ஆய்தமாகக் குறிக்கப்படுவதாக என்று ஒரு கருதுகோள் உண்டு (கோதண்டராமன், இரா. 1971: 335-342). இந்தக் கருதுகோள் ஏற்புடையதன்று. தவிரவும் ஆய்தத்தினைச் சார்பெழுத்துக்களுள் ஒன்றாகக் கொள்ளும் தொல்காப்பியர். அந்த ஒலியின் நிகழ்ச்சிக்கான ஒலியியல் காரணங்களையும் அதன் ஒலியமைப்பையும் விளக்கவில்லை என்ற கோதண்டராமனின் (1971:331) முந்தைய கூற்றும் உண்மைக்கு மாறுபட்டதாகும்.

16.20.2. ஆய்தம் பற்றிப் பலர் பலநிலைகளில் ஆராய்ந்து உள்ளனர். அவர்களின் முடிபுகளையும் துணிபுகளையும் இங்கே குறிப்பிடுவதற்கில்லையாயினும் அவை ஆய்தத்தின் தன்மையை விளக்குவதாக அமையவில்லை என்பது உண்மை. தமிழில் ஆய்தம் அருகிய வழக்காகப் பதப்புணர்ச்சியிலும், தனிமொழிகளிலும் காணப்படுகிறது. பதப்புணர்ச்சியில் மருங்கொலிகள் தகரத்தின்

முன் ஆய்தமாகத் திரிகிறது.[31] (தொல். எழுத்து. இளம். 370; 400). பதப்புணர்ச்சியில் நிலைமொழியானது தனிக்குறில் நிகழும் ஓரசை மொழியாகவே அமையும். *கஃறீது (< கல்+தீது), முஃடீது (< முள்+தீது)* ஆகிய உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டுக்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. *அழுறிகழ் (< அழல்+திகழ்)* (சீவக. 2220), *திரடோள் (< திரள்+தோள்)* (சீவக. 2197) ஆகியவற்றில் நிலை மொழியீற்று மருங்கொலிகள் ஆய்தமாகத் திரியவில்லை. காரணம் இவற்றின் அசையமைப்பு மாறுபட்டதாகும். *முள்+தீது/கல்+தீது, திரள்+தோள்/அழல்+திகழ்* இரண்டிலும் வருமொழி முதல் தகரமெய் அதன்முன் நிகழும் மருங்கொலிகளின் இனவல்லொற்றுக்களாகத் திரிகின்றது. இதனைத் தொடர்ந்து நிலைமொழியின் அசையமைப்பைப் பொறுத்து அவற்றின் ஈற்றில் நிகழும் மருங்கொலிகள் ஆய்தமாகத் திரியவோ அல்லது கெடவோ செய்கின்றன. *முள்+தீது, கல்+தீது* இரண்டும் *முட்டீது, கற்றீது* என்று திரிந்தமைவதற்கும் வாய்ப்புள்ளது. (தொல். எழுத்து. இளம். 400, 370). இந்த மாறுபட்ட புணர்ச்சிக்குக் காரணம் என்ன? நிலைமொழியீற்று மருங்கொலிகள் வருமொழி முதல் வல்லொற்றாகிய தகரத்தை அலையொலித் தன்மையதாகத் திரிக்கையில் நிகழும் புணர்ச்சி மாற்றங்களும் மேற்படி சூழலில் தகரமெய் அலையொலியாகத் திரியாத நிலையில் நிகழும் புணர்ச்சி மாற்றங்களும் மாறுபட்டவையாகும். மருங்கொலியின் தாக்கத்தால் தகரமெய்யானது அலையொலித் தன்மையதாகிய இனவல்லொற்றாகத் திரிகிறது. இவ்வாறு திரிந்தமைந்த இனவல்லொற்று அதன்முன் நிகழும் மருங்கொலியையும் அலையொலித் தன்மையதாகிய இனவல்லொற்றாகத் திரியச் செய்கிறது. இந்த நிலையைப் பின்வருமாறு விளக்கலாம்.

67(1) கல்+தீது (kal+ti:tu) > கல்+di:tu (t->d-/l-)
  (2) கல்+di:tu > கல்+றீது (kal-di:tu)
  (3) கல்+றீது > kaddi:tu (= கஃறீது)

68(1) முள்+தீது (muL+ti:tu) > (muL+di:tu) (t->d-/L-)
  (2) முள்+di:tu > முள்+டீது (muL+Di:tu)
  (3) முள்+டீது > muDDi:tu (= முஃடீது)

---

31. அவ், இவ், உவ் ஆகிய சுட்டுப்பெயர்களில் நிகழும் வகரமெய்யும் அல்வழிப் புணர்ச்சியில் ஆய்தமாகத் திரியும் என்று தொல்காப்பியர் (தொல். எழுத்து. இளம். 380) குறிப்பிடுவார். எ-டு: அவ்+கடிய > அஃகடிய. க, ச, த, ப நான்கு வல்லொற்றுக்களின் முன்னும் சுட்டுப்பெயர் வகரம் ஆய்தமாகத் திரியும் என்று தொல்காப்பியர் கருதுவதாகத் தெரிகிறது. எ-டு: அவ்+சிறிய>அஃசிறிய, அவ்+தீய>அஃதிய, அவ்+பெரிய>அஃபெரிய.

இந்த ஆய்வில் தகரத்தின் திரிபாகிய டகர றகரங்கள் அலையொலித் தன்மையனவாகும். புணர்ச்சியில் அலையொலித் தன்மையன வாகிய மருங்கொலிகள் அலையொலித்தன்மையனவாகிய இன வல்லொற்றுக்களாகத் திரிகையில் அதனைக் குறிக்கத் தமிழில் வரி வடிவம் இன்மையால் ஆய்தம் என்ற குறியீட்டைப் பழந்தமிழ்ச் சான்றோர் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. ஆய்தம் என்பது அலையொலித்தன்மையதாகத் திரிந்த வல்லொற்றுக்களை இனங் காண அமைத்துக் கொள்ளப்பட்ட ஒரு பொதுக் குறியீடாகும். இதனின்றும் ஆய்தத்தை அடுத்து நிகழும் அலையொலியாகத் திரிந்த வல்லொற்றின் ஒலிப்பிடமும் ஒலிப்புத்தன்மையும் ஆய்தத்தின் ஒலிப்பிடமும் ஒலிப்புத் தன்மையும் ஒரு நிகரன என்ற உண்மை புலனாகிறது. தொல்காப்பியரும் இக்கருத்தினையே வலியுறுத்துகிறார். (தொல். எழுத்து, இளம். 101) இதன் அடிப்படையில் *அஃறிணை* என்பது a<u>dd</u>iNai என்றும் *முஃடீது* என்பது muDDi:tu என்றும், *அஃகடிய* என்பது aggaTiya என்றும், *அஃது, பஃது* என்பவை addu, paddu என்றும், எஃகு என்பது eggu என்றும், கஃசு என்பது கஜ்ஜு என்றும் தொடக்கத்தில் ஒலிக்கப்பட்டிருக்க வேண்டும். பிற்காலத்தில் ஆய்தம் எல்லா வல்லொற்றுக்களின் முன்பும் உரசொலிக் ககரமாக (Velar Voiceless Fricative) ஒலிக்கப்பட்டது. இதற்குக் காரணம் எல்லா இடத்திலும் ஒரே மாதிரியாக ஒலிக்கப் படும் வடமொழி விசர்க்கத்தின் தாக்கமாகும்.[32] நற்றிணையானது **நஃறிணை* என அமையாததன் காரணம் வருமொழி முதலாகிய தகரமெய் அலையொலித் தன்மையதாகத் திரியாமையேயாகும்.

### *16.21.* முடிவற்ற முடிவு

*16.21.1.* இந்த ஆய்வுரையில் புணரியல் தொடர்பான பல செய்திகள் பேசப்பட்டுள்ள போதிலும் மொழி வளர்ச்சியின்

---

32. ஆய்தத்தின் நிகழ்ச்சி பேச்சுத் தமிழில் காணப்படவில்லை. பழந்தமிழில் மட்டுமே அருகிய வழக்காக இதன் நிகழ்ச்சி காணப்படுகின்றது. வடமொழி நெடுங்கணக்கில் விசர்க்கம் உயிர் நெடுங்கணக்கின் ஈற்றில் வைக்கப்பட்டுள்ளது. இந்த மரபு தமிழ் நெடுங்கணக்கிலும் பின்பற்றப் பட்டு ஆய்தம் உயிர் நெடுங்கணக்கின் ஈற்றில் வைக்கப்பட்டுள்ளது. இதனைக் கருத்தில் கொண்டே விசர்க்கத்தின் ஒலிப்புத்தன்மை பிந்திய நிலையில் ஆய்தத்தின்மீது திணிக்கப்பட்டதாகத் துணியப்படுகிறது. மேலும் ஆய்தம் என்பது முந்து தமிழ் (Pre-Tamil) ஒலிப்பு நிலை என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். ஏனெனில் தமிழில் அலையொலித் தன்மையதான இரண்டு வல்லொற்றுக்கள் மயங்கும் நிலைக்கு வாய்ப்பு இல்லை. எடுத்துக்காட்டாக eggu (=எஃகு), paddu (=பஃது), addu (=அஃது) முதலான வடிவங்கள் தமிழ் எழுத்தியலுக்கு மாறானவையாகும். இதனால்தான் ஆய்தம் ஒரு பொது ஒலியனாகத் (Archi Phoneme) தமிழில் இடம்பெற வேண்டியதாயிற்று.

படிநிலைகள் திராவிட மொழிகளை ஒட்டு மொத்தமாகக் கொண்டு அவற்றின் மீட்டுருவாக்க நிலைகள் வரையறுக்கப்பட வில்லை. தொல்திராவிடம் தொடங்கி இக்காலத்தமிழ் வரை பல மீட்டுருவாக்க நிலைகளை (Reconstructional Stages). இனங் கண்டாக வேண்டும். தமிழ் வினைகளின் வரலாற்றைத் தமிழைக் கொண்டு மட்டுமே ஆராய்ந்துவிட முடியாது. இது தமிழ்ப் புணர்ச்சிக்கும் பொருந்தும். தமிழ்மொழியைப் பொறுத்தவரையில் கோட்பாட்டு நிலையிலான அடிப்படை ஆய்வுகள் இன்னும் சரியாகத் தொடங்கப்படவில்லை என்றே தோன்றுகிறது. ஆனால் இதற்கான முயற்சிகள் அவ்வப்போது கால்டுவெல் தொடங்கி பர்ரோ-எமனோ (Burrow-Emeneau) வரை மேலைநாட்டு ஆய்வாளர்களாலும் தெ.பொ. மீனாட்சிசுந்தரம், பத்ரிராஜு கிருஷ்ணமூர்த்தி (Bh. Krishnamurthy), ந. குமாரசாமி ராஜா, செ.வை. சண்முகம் முதலான இந்திய ஆய்வாளர்களாலும் மேற்கொள்ளப் பட்டுள்ளன என்பதையும் மறுக்க முடியாது.

*16.21.2* திராவிட மொழிகளின் ஒப்பீட்டு ஆய்வுக்கு அடிப்படையாக அமைவது கிளைமொழிகள் பற்றிய முனைப்பான ஆய்வாகும். தமிழைப் பொறுத்தவரை இந்த வகையான ஆய்வு இன்னும் பிஞ்சுப் பருவத்திலேயே இருக்கிறது. வட்டாரமொழி இலக்கியங்கள் கிளைமொழி ஆய்வுக்கு இன்னும் உட்படுத்தப்படவில்லை. தென் மாவட்ட வட்டாரமொழி இலக்கியங்கள் போற்றும் மருங்கொலி களை அடுத்து நிகழும் வல்லொற்று மிகுந்த வழக்குகள், நிகழ்கால வினையமைப்புகள் முதலானவை திராவிடப் புணரியல் வளர்ச்சி, திராவிட நிகழ்கால வினைகளின் வளர்ச்சி ஆகியவற்றைக் கோட்பாட்டு நிலையில் புரிந்துகொள்ளப் பெருந்துணை புரிவன வாகும். திராவிடப் புணரியலைப் பொறுத்தவரை குமாரசாமி ராஜாவின் ஆய்வானது திராவிட ஒப்பீட்டு மொழியியல் ஆய்வில் ஒரு திருப்பு முனையாகும். மரபிலக்கண நெறியாளர்களைத் தமிழ் மொழியின் அமைப்பியல்புகள் தொடர்பான நுண்ணாய்வுக்குப் பெரிதாக ஒன்றும் தம் கோட்பாட்டுப் பங்களிப்பைத் தந்தவர் களாகக் கருத முடியவில்லை. மொழி ஆய்வுக்கு மொழியியல் அணுகுமுறை என்று ஒன்று உண்டு என்பதையே ஏற்க மறுக்கும் இவர்களை அகநிறைவைக் கருத்தில் கொண்டு மொழியை அணுகுபவர்களாகக் கொள்ளமுடியாது.

*16.21.3.* இந்த ஆய்வில் தமிழகத்தின் தென்மாவட்ட வட்டார இலக்கியங்களில் பதப்புணர்ச்சியில் மருங்கொலிகளையடுத்து நிகழும் வல்லொற்று மிகுதி ஏற்புடையதாகக் கொள்ளப்பட்டிருக் கிறது. மலையாளத்திலும் இத்தகைய நிலை காணப்படுவது

மேற்படி வல்லொற்று மிகுதி வழக்கின் அமைதியை அரண் செய்வதாக உள்ளது. ஆனால் வட்டார இலக்கியங்களில் காணப் படும் *சொன்னால்த்தான், ஊரில்த்தான், அதனால்த்தான்* முதலான வழக்குகள் மிகைத்திருத்தத்தின் விளைவு என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். வலிமிகு வினைகள், வலிமிகா வினைகள் ஆகியவற்றின் தோற்றம் திராவிட மொழிகளின் வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க படிநிலையாகும். இந்தத் தோற்றத்துக்கான தடயங்கள் இந்த ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளன. தமிழில் காணப்படும் இரட்டை வல்லொற்று மயக்கங்களின் தோற்றத்தை ஆராய இந்தத் தடயங்கள் கை கொடுக்கும். இடையொற்று மற்றும் மெல்லொற்றை ஈற்றில் கொண்ட சொற்கள் பேச்சுத் தமிழில் உகர ஈற்றினவாக நிகழ்கின்றன. இந்த உகரம் சந்தியில் கெடுகிறது. நான்கன் உருபுப் புணர்ச்சியிலும், பேச்சுத்தமிழில் கள் விகுதி ஏற்கும் பன்மைப்பெயர்களிலும் நிகழும் உம் சாரியையின் எச்சமாக இந்த உகர ஈற்றினைக் கருதலாம். *சொல்லு, கேளு, தின்னு* முதலான வினைகளின் ஈற்றில் நிகழும் உகரம், செய்யும் வாய்பாட்டு வினைகளில் காணப்படும் உம் விகுதியின் எச்சமாகக் கருத வாய்ப்பு உள்ளது. இங்கே கூறப் பெற்றுள்ள அனைத்துக் கருத்துக்களும் முனைப்பாக மேலும் சிந்திக்கத்தக்கனவாகும்.

## பிற்சேர்க்கை

பழந்தமிழில் காணப்படும் *அடைச்சு, தொலைச்சு, மிலைச்சு, பழிச்சு* ஆகிய வினைப் பகுதிகள் முறையே *அடைக்கு, தொலைக்கு, மிலைக்கு, பழிக்கு* ஆகிய *செய்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகளின் திரிபு வடிவங்களாகக் கருதத்தக்கனவாகும். *பாய்ச்சல், காய்ச்சல், மேய்ச்சல், நீச்சல், கூச்சல், துணிச்சல், இரைச்சல்* முதலானவற்றில் நிகழும் *பாய்ச்சு, காய்ச்சு, மேய்ச்சு, நீச்சு, கூச்சு, துணிச்சு, இரைச்சு* முதலானவையும் *பாய்க்கு, காய்க்கு, *மேய்க்கு *நீய்க்கு* (>நீக்கு), **கூய்க்கு, *துணிய்க்கு* (>துணிக்கு), **இரைக்கு* (=இரய்க்கு) முதலான *செய்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகளின் திரிபுகளாகும். இவ்வாறே தெலுங்கில் நிகழும் *துடச்உ, குடிச்உ, நடச்உ, தெறச்உ* முதலான வினைப்பகுதிகளும் முறையே **துடய்க்கு, *குடிய்க்கு, *நடய்க்கு, *திறய்க்கு* முதலான *செய்கு* வாய்பாட்டு அடிநிலை வடிவங்களைக் கொண்டவையாகும். **துடய்க்கு* என்ற அடிநிலைவடிவம் எடுத்துக்காட்டாக எவ்வாறு *துடச்உ* என்று தெலுங்கில் திரிந்து அமைகிறது என்பதைப் பின்வரும் ஆய்வு புலப்படுத்தும்.

(1) *துடய்க்கு > துடக்க்யு (> துடச்ச்யு > துடச்சு > துடச்உ)

(2) துடக்க்யு > துடக்யு

(3) துடக்யு > துடச்யு (tuDacyu)

(4) துடச்யு > துடச்உ (tuDacu)

*துடய்* என்பதில் உள்ள யகரம் *துடய்க்கு* என்ற நெடும் பகுதியில் இடம் பெயர்ந்து *துடக்க்யு* என்ற வடிவம் தோற்றம் கொள்கிறது. ககரமும் யகரமும் மயங்கும்போது சகரமெய்யாக இந்த மெய்ம்மயக்கம் திரிந்தமைகிறது. *துடய்க்கு > துடக்க்யு > துடச்ச்யு > துடச்சு > துடச்உ* என்பது ஒரு மாற்று ஆய்வாகும். தெலுங்கில் நிகழும் உகரம் ஊர்ந்த பல சகர ஈற்று வினைகள் *செய்கு* வாய்ப்பாட்டு வலிமிகு நெடும் பகுதிகளின் திரிபுகளாகும். குமரி மாவட்ட விளவங்கோடு பகுதியில் வழங்கும் தமிழிலும் இத்தகைய மாற்றத்தைக் காணலாம். குமரி மாவட்ட வட்டார மொழி இலக்கியங்களில் இவ்வாறு திரிந்தமைந்த இறவாக்கால வினையமைப்புகளின் நிகழ்ச்சி பதிவு செய்யப்பட்டுள்ளது. நாஞ்சில் நாடன் (1977), ஐசக் அருமைராஜன் (1975), ஹெப்சிபா ஜேசுதாசன் (1964), தோப்பில் முகமது மீரான் (1992, 1993) செல்சேவிஸ் (1996) முதலியோரின் இலக்கியப் படைப்புகள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். எ-டு :

(1) நிச்சுவு (ஐசக். 1975:143) (< நிக்குவு) 'நிற்கிறது'

(2) வெடிச்சுவு (ஐசக். 1975:54) (< வெடிக்குவு) 'வெடிக்கிறது'

(3) அடிச்சமாட்டேன் (தோப்பில். 1993:298) 'அடிக்கமாட்டேன்'

(4) அடிச்சுவாயா? (தோப்பில். 1993:26) (< அடிக்குவாயா) 'அடிப்பாயா?

(5) நீ சாயா குடிச்ச போவல்லியா? (தோப்பில். 1993:32) 'நீ தேநீர் குடிக்கப் போகவில்லையா?

(6) இரிச்சு (தோப்பில். 1993:144) (< இரிக்கு) 'இருக்கிறது'

(7) நிச்சுது (தோப்பில். 1993:26) (< நிக்குது) 'நிற்கிறது'

(8) மீனுவிச்சப் போவண்டாம் (தோப்பில். 1993:21) 'மீன் விற்கப் போக வேண்டாம்'

(9) அவனெ விளிச்சாதிங்கெ (தோப்பில். 1993:106) 'அவனை விளிக்காதீர்கள்'

(10) கெடச்சும் (தோப்பில். 1991:95, பொன் 1995:219, 1979:116) 'கிடைக்கும்'

(11) படிச்சித (தோப்பில். 1991:32) (< படிக்கித) 'படிக்கிற'

(12) கஞ்சி குடிச்ச வா (பொன். 1995:5) 'கஞ்சி குடிக்க வா'

(13) பறிச்சியம் (பொன். 1995:108) (< பறிக்கியம்) 'பறிக்கிறோம்'

(14) பகச்சுதி (பொன். 1995:229) (< பகைக்குதி 'பகைக்கிறாய்'

(15) அடகுவச்ச எதுவுமில்லியா? (பொன். 1995:972) 'அடகு வைக்க எதுவுமில்லையா?'

(16) கெடச்சாது (பொன். 1979:116) 'கெடய்க்காது'
(17) பறிச்சணும் (பொன். 1979:85) 'பறிக்க வேண்டும்'
(18) கொள்ளையடிச்சியான் (பொன். 1979:13) (< கொள்ளை யடிக்கியான்) 'கொள்ளையடிக்கிறான்'
(19) பறிச்சியானுவ (பொன். 1979:7) (< பறிக்கியானுவ) 'பறிக்கிறார்கள்,' (ஆண்)
(20) மறிச்சப்போறோம் (பொன். 1979:148) 'மறிக்கப்போறோம்'
(21) படிச்சாம (செல். 1996:6) 'படிக்காமல்'
(22) குளிச்செ போன பொண்ணெ (செல். 1996:54) 'குளிக்கப் போன பெண்ணை'
(23) அடிச்ச வாரானுங்க (செல். 1996:53) 'அடிக்க வருகிறார்கள்' (ஆண்)
(24) நனச்ச வரணும் (செல். 1996:51) 'நனைக்க வரவேண்டும்'
(25) பௌச்ச வளியில்லெ (செல். 1996:19) 'பிழைக்க வழியில்லை'.
(26) ஒடச்சாதெ (செல். 1996:20) 'உடைக்காமல்'
(27) அடிச்சாதெ (செல். 1996:20) 'அடிக்காமல்'
(28) வச்சணும் (ஹெப். 1964:62, 97) 'வைக்க வேண்டும்'

ககரம் தெலுங்கு வினைப்பகுதிகளில் சகரமாகத் திரிவது தொடர்பாகக் கால்டுவெல் மேற்கொண்ட முடிவு இங்கே கருதத் தக்கதாகும். *வைச்சு* (DED 4565) என்னும் தெலுங்கு வினைப்பகுதியின் தமிழ் வடிவம் *வைக்கு* என்பதாகும். இது *வை* என்னும் தமிழ் வினையின் மாற்றுருபாகும். *வைக்குவம்* (= வைப்போம்) என்ற வினைமுற்றிலும், *வைக்க* (வைக்கு+அ) என்ற செயவென் வாய்பாட்டு வினையமைப்பிலும் *வைக்கு* என்பதன் நிகழ்ச்சியைக் காணலாம். தெலுங்கில் நிகழும் *வைச்சு* என்னும் வினைப் பகுதியை *வைக்கு* என்பதன் திரிபாகக் கால்டுவெல் கருதுவார். "The **ch** of the Telugu **veichi** corresponds, not to the **tt** of the Tamil **veittu**, but to the **kk** which constitutes the formative of so many verbs and nouns in Tamil. KK makes its appearance in the infinitive of this very verb, viz., **vei-kk-a**, 'to place', the Telugu of which is **vei-ch-a**. **kk** is vulgarly pronounced ch in the southern part of the Tamil Country, and the same pronunciation universally obtains in Telugu" (Caidwell, R. 1961:506). கால்டுவெல்லின் இந்தக் கருதுகோள் நமக்கு முழுக்கமுழுக்க உடன்பாடே. முந்திய பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள குமரிமாவட்டக் கிளைமொழி வழக்குகள் கால்டுவெல்லின் கருது கோளுக்குச் சான்றாக அமைகின்றன. தெலுங்கில் நிகழும் *துடச்உ*, 'துடை', *பிடுச்உ* 'பிழி', *நடச்உ* 'நட' முதலான வினைப் பகுதிகளின் மீதமைந்த பத்ரிராஜு கிருஷ்ணமூர்த்தியின் (Bh.Krishnamurti 1972: 162-166) ஆய்வு இந்தப் பின்னணியில் நமக்கு முற்றிலும் உடன்பாடில்லை.

❀ ❀ ❀

# 17. நெடில்-குறில் மயக்கம்

## *17.1. இலக்கண விளக்கங்கள்*

*17.1.1* இலக்கண விளக்கம் என்பது இலக்கண ஆசிரியன் மேற்கொள்ளும் விண்டுரைக் கோட்பாட்டின் (Descriptive Theory) அடிப்படையில் அமைவதாகும். இந்தக் கோட்பாட்டை வகுத்துக் கொள்கையில் இலக்கணிகள் மாறுபடலாம். மாறுபட்ட விண்டுரைக் கோட்பாடுகளுக்கு ஏற்ப இலக்கண விளக்கமும் மாறுபடும். இரண்டு வகையான விண்டுரைக் கோட்பாடுகளை இங்கே குறிப்பிடலாம். ஒன்று, புறநிறைவையும் (External Adequacy) இன்னொன்று, அக நிறைவையும் (Internal Adequacy) அடிப்படையாகக் கொண்டதாகும். புறநிறைவின் அடிப்படையில் அமையும் இலக்கணம் மேம்போக்கான இயல்பினதாகும். அக நிறைவைக் கருத்தில் கொண்ட இலக்கணம் மொழியின் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைப் புலப்படுத்துவதுடன் ஒருங்கிணைந்த ஆய்வுக்கும் வகை செய்கிறது.

*17.1.2* ஓர் எடுத்துக்காட்டின் மூலம் மேலே குறிப்பிட்ட இரண்டு வகை இலக்கண விளக்க உத்திகளை விளக்கலாம். *தெரு+இல்* என்பதன் புணர்ச்சி வடிவம் *தெருவில்* என்று அமையும். இந்த வடிவத்தில் வகர மெய் உடம்படுமெய்யாகத் தோன்றியது என்று விண்டுரைப்பது ஒருவகை. இது புற நிறைவைக் கருத்தில் கொண்ட இலக்கண விளக்கமாகும். இதில் வகர மெய்யின் தோற்றத்துக்கு நிலைக்களனாக நிலைமொழியின் ஈற்றுயிர் கருத்தில் கொள்ளப்படும். நிலைமொழியின் அடிநிலை வடிவத்தை வேறாகக் கொண்டு புணர்ச்சி வடிவத்தை விளக்குதல் இரண்டாவது உத்தியாகும். இது அகநிறைவை அடிப்படையாகக் கொண்டதாகும். இதன்படி, தெருவில் என்பது *தெருவு+இல்* என்ற அமைப்பினின்றும் பெறப்படும். *கதவு+இல்* என்பது *கதவில்* என்று ஆவதைப்போல் *தெருவு+இல்* என்பது *தெருவில்* என்றாகிறது. நிலைமொழி ஈற்று உகரம் கெட்டு, *தெருவில்* என்ற வடிவம் தோன்றியதாக இரண்டாவது இலக்கண விளக்கம் அமைகிறது.

17.1.3 மேலே குறிப்பிட்ட இரண்டுவகை இலக்கண விளக்கங்களும் மாறுபட்ட விண்டுரைக் கோட்பாடுகளின் பின்னணியில் அமைந்தவையாகும். இவற்றுள் எது சிறந்தது அல்லது ஏற்புடையது என்பதை நாம் முடிவு செய்தாக வேண்டும். மொழியின் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளை ஒருங்கிணைந்த ஆய்வின் (Integrated Analysis) மூலம் எந்த இலக்கண விளக்கம் புலப்படுத்துகிறதோ அதுவே சிறந்ததாகக் கருதப்படும். *தெருவில்* என்ற சொல்லமைப்பில் வகர மெய்யை உடம்படுமெய்யாகக் கொள்வதன் மூலம் நிலைமொழியாகிய *தெரு* என்பதற்கும் வகர உடம்படு மெய்க்கும் உள்ள சொல்லியல் தொடர்பு (Morphological Relation) புலனாகவில்லை. **தெருவு* என்பதை அடிநிலை வடிவமாகக் கொள்ளும்போது வகரமெய்யானது நிலைமொழியின் ஒருங் கிணைந்த எழுத்துறுப்பு என்பதும், அது புணர்ச்சியில் நிலை பெறுவதும், ஈற்றசையின் அழுத்தம் கெடுவதால் அதாவது படுத் தொலிக்கப்படுவதால் (De-stressing) கெடுவதும் நிகழ்வதாகக் கருதப்படும் (Kothandaraman, R. 1992). இந்த ஆய்வில் *தெருவு, தெரு* இரண்டையும் ஒலியனியல் கட்டுப்படுத்தும் மாற்றுருபுகள் (Phonologically Defined Allomorphs) என்று கொள்ளப்படும். பழந்தமிழ்ச் சான்றும் **தெருவு* என்ற அடிநிலை வடிவம் மொழியில் இயல்பாக நிகழும் வடிவம் என்பதை உறுதிப்படுத்து கிறது. கருதுக: *தெருவு தொறும்* (நற். 118.10), *ஏர் தரு கடுநீர் தெருவுதொறொழுக* (அகம். 264.8). இவற்றைக் கருத்தில்கொண்டு *தெருவில்* என்பதில் உள்ள வகரமெய்யை உடம்படுமெய்யாகக் கொள்ளும் விண்டுரை உத்தியைவிட அதனைச் சொல்லின் ஒருங்கிணைந்த உறுப்பாகக் கொள்ளும் விண்டுரை உத்தியை ஏற்புடையதாகக் கொள்ளலாம்.[1]

## 17.2 பழூஉப்பல்–ஒரு பொதுமை நோக்கு

17.2.1 சில உகர இறுதிக் குறிலிணைச் சொற்கள் பதப்புணர்ச்சியில் நிகழுமாற்றினைக் கருத்தில்கொண்டு

---

1. *தெருக்கள், தெருக்கதவு* ஆகிய புணர்ச்சிவடிவங்களின் நிலை மொழி யானது அடிநிலை வடிவத்தில் எவ்வாறு குறிக்கப்படும்? இது ஒரு கோட்பாட்டுச் சிக்கல் நிறைந்த கேள்வியாகும். ஆயினும் இப்போதைக்கு மேற்படி புணர்ச்சி வடிவங்களின் அடிநிலைவடிவங்களை முறையே **தெருவ்+கள், *தெருவ்+கதவு* என்று கொண்டு *வ் > க்/–க்* என்ற எழுத்தியல் விதி (Phonological Rule) இந்த அடிநிலை வடிவங்களில் செயல்படுவதாகக் கருதலாம். வருமொழி முதல் வல்லொற்று இந்த ஆய்வில் நிலையொலித் தன்மையதாக (Voiceless Character) நிகழ்கிறது. இதுவே வகரமெய்யை வல்லொற்றாகத் திரியச் செய்கிறது. *தெருவ்* என்பதில் நிகழும் வகரம் மகரத்தின் திரிபாகக் கொள்ளத்தக்கதாகும்.

தொல்காப்பியர் மேற்படி குறிலிணைச் சொற்களையே அடிநிலை வடிவத்தில் குறிக்கிறார். பழந்தமிழில் *பழு* என்ற சொல் பேய் என்ற பொருண்மையதாகும். இதனுடன் பல் என்ற வருமொழி புணரும்போது *தெரு+கதவு* என்பது *தெருக்கதவு* என்பது போல் **பழுப்பல்* என்று அமைய வேண்டும். இதேபோல் *பரு+திரி* என்பது **பருத்திரி* என்றும் *குழு+குறி* என்பது **குழுக்குறி* என்றும் அமைய வேண்டும். ஆனால் பழந்தமிழில் இத்தகைய புணர்ச்சி வடிவங்கள் ஏற்புடையவை அல்ல. *பழு+பல், பரு+திரி, குரு+சுடர், குழு+திரை* ஆகியவை முறையே பழந்தமிழில் *பழூஉப்பல்* (குறுந். 180.1), *பரூஉத்திரி* (குறுந். 330.3), *குரூஉச்சுடர்* (பத்துப். 9.112), *குழூஉதிரை* (நற். 238.2) என்று வெளிப்பாடு பெறுகின்றன. இதே போல் *எழு* (=கணைய மரம்) என்பது *எழூஉ* (பதி. 31.20) என்று திரிகிறது. இத்தகைய குறிலிணை உகர ஈற்று வடிவங்களின் திரிபைக் கருத்தில் கொண்டு ழகர உகர ஈற்றைக் கொண்ட குறிலிணைச் சொல்லானது புணர்ச்சியில் திரிந்தமையும் போக்கினைப் பின்வரும் நூற்பாவின் மூலம் தொல்காப்பியர் பொதுமைப்படுத்தி விளக்குவார்.

(1) ழகர உகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயின் ஆன (எழுத்து. இளம். 262)

17.2.2 *பழு, குழு* என்பவை ழகர உகரத்தை ஈறாகக் கொண்ட குறிலிணைச் சொற்களாகும். புணர்ச்சியில் இவற்றில் நிகழும் ஈற்று உகரமானது *ஊ* என நெடிலாகும். இந்த நெடிலை அடுத்து ஒரு புதிய உகரம் இடம்பெறும். பின்னர் வருமொழி வல்லொற்று மிகும். இதுதான் தொல்காப்பியரின் ஆய்வு. இந்த ஆய்வில் உகர ஈற்றுக் குறிலிணைச் சொற்கள் அடிநிலை வடிவங்களாகக் கொள்ளப்படுகின்றன. தொல்காப்பியரின் இந்த ஆய்வுமுறை புற நிறைவை அடிப்படையாகக் கொண்டதாகும். *தெருவில்* என்ற புணர்ச்சி வடிவத்தில் வகர மெய்யை உடம்படு மெய்யாகச் செருகுவது போன்ற ஆய்வுமுறையே *பழு* என்பதி லிருந்து *பழூஉ* என்பதை வருவிப்பதற்கும் மரபிலக்கணிகளால் மேற்கொள்ளப்படுகிறது. முன்பே குறிப்பிட்டதுபோல் இலக்கண விளக்கத்தில் இது ஒருவகையான விண்டுரை ஆய்வாகும். *தெரு* என்பதன் அடிநிலை வடிவமாகத் *தெருவு* என்பதை அமைத்து, *தெருவில்* என்ற புணர்ச்சி வடிவத்தை விளக்கும் ஓர் மாற்று விண்டுரை ஆய்வையும் நாம் மேலே குறிப்பிட்டோம். தொல்காப்பியரின் ஆய்வு மரபைத் தவிர்த்து *பழூஉப்பல், பரூஉத்திரி* ஆகியவற்றில் நிகழும் *பழூஉ, பரூஉ* என்பவற்றை வருவிக்க மேலே குறிப்பிட்டது போன்ற ஒரு மாற்று ஆய்வுக்கு அவற்றை உட்படுத்தலாம்.

17.2.3 மாற்று ஆய்வின்படி *பழு, பரு* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் **பழுவு, *பருவு* என்று குறிக்கப்படும். இந்த வடிவங்கள் கற்பித வடிவங்களாகக் கூட இருக்கலாம். இத்தகைய அடிநிலை வடிவங்கள் மொழியில் நிகழும் மாற்றங்களைச் செயற்கையாக இல்லாமல் அதன் போக்கிலேயே சென்று இயற்கையாக விளக்கத் துணைபுரிகின்றன. *பழூஉ* என்ற புறநிலை வடிவத்தைக் கருத்தில் கொண்டு *பழு* என்பதனைச் செயற்கைத் தனமான ஓர் ஆய்வுக்கு உட்படுத்துகிறார் தொல்காப்பியர். இந்தச் செயற்கைத் தனத்தைத் தவிர்த்து இயற்கையான ஆய்வை முதன்மைப்படுத்தும் வகையில் **பழுவு, *பருவு* முதலான குறிலிணை அல்லாத வடிவங்கள் இங்கே கருத்தில் கொள்ளப்படு கின்றன. பல உகர ஈற்றுக் குறிலிணைச் சொற்கள் தமிழில் வகர ஈற்றினைக் கொண்ட முதன்மை வடிவங்களின் திரிபாகும்.[2] இதனைப் பின்வரும் எடுத்துக் காட்டுகள் தெளிவுபடுத்தும்.

2(1) எழுவ் - (க.ரா. பா.கா. 847) > எழு 'கணையமரம்'
(2) நடுவ் - (பதி. 89.8) > நடு
(3) தொழுவ் - > தொழு
(4) பொதுவ் - > பொது
(5) வழுவ் - > வழு
(6) புழுவ் - புழு
(7) மடுவ் - > மடு
(8) கருவ் - > கரு
(9) உருவ் - > உரு (உருவ் - திருக். 667)
(10) எருவ் - > (திருக். 1037) > எரு
(11) கணுவ் - > கணு
(12) அணுவ் - > அணு
(13) வடுவ் - > வடு

இவற்றைக் கருத்தில் கொண்டு *பழு* என்பதன் அடிநிலை வடிவம் **பழுவு* என்று குறிக்கப் பெற்று அதனின்றும் *பழூஉ* என்ற வடிவம் பின்வருமாறு பெறப்படும்.

3(1) பழுவு > பழு0உ (வகர மெய்க்கேடு)
(2) பழு0உ > பழூஉ (முந்துகரம் நெடிலாகிறது)

---

2. வகர ஈற்றுச் சொற்கள் தனித்தும், மெய்ம்முதலாகிய மொழிகளின் முன்பும் நிகழ்கையில் ஈற்றில் உகரச் சாரியை பெற்று நிகழும். எ-டு : *கதவ், கதவு, கதவு திறந்தது.* உயிர்முன் சாரியை இன்றி நிகழும். *கதவ் + இல் > கதவில், கதவ் + அருகில் > கதவருகில்.*

17.2.4 தொல்காப்பியரின் ஆய்வின்படி *பழு* என்பதன் ஈற்று உகரமானது நெடிலாகி அதனை அடுத்து ஒரு புதிய உகரம் நிகழ, *பழூஉ* என்ற வடிவம் தோன்றியமைவதாக முன்னர்க் குறிப்பிடப் பட்டது. தொல்காப்பியரின் ஆய்வில் குறிக்கப்பெறும் ஒலியனியல் விதிகள் ஒலியனியல் உந்துதல் (Phonological Motivation) ஏதுமின்றி வகுக்கப்பட்டவையாகும். இந்த ஆய்வு முறையானது ஒரு வகையான இலக்கண விளக்கமே தவிர அது மொழியில் காணப்படும் உள்ளார்ந்த ஒழுங்கமைதியைப் புலப்படுத்துவதாக இல்லை. இதனைக் கருத்தில் கொண்டே பழூஉ என்பதன் அடிநிலை வடிவத்தைப் *பழு* என்று கொள்ளாமல் **பழுவு* என்று நாம் கொள்கிறோம். இதன்படி **பழுவு* என்பது (3)-ல் குறிப்பிட்டு உள்ளபடி தொல்காப்பியர் வகுத்த விதிகளினின்றும் மாறுபட்ட இரண்டு ஒலியனியல் விதிகளுக்கு உட்படுகின்றது. முதல் விதியின்படி **பழுவு* என்பதில் நிகழும் வகரமெய் கெடுகிறது. இந்த நிகழ்ச்சியால் ஏற்படும் வெற்றிடம் 3(1)-இல் *0* என்ற குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளது. தமிழில் வகரம் மட்டுமின்றி க, ச, ப ஆகியவற்றின் உரசொலிகளும் கூட (Fricatives) உயிர்களுக்கு இடையில் நிகழும் போது கெடுகின்றன.[3] ஆகவே உயிர்களுக்கிடையில் நிகழும் மெய்யொலிகளின் கேட்டினைப் பொதுமைப்படுத்தி உரசொலிக்கேடு (Loss of Fricative) என்று குறிப்பிடலாம். மேல் ஆய்வில் வகரமெய் கெட்டபின் அதன் இழப்பை ஈடு செய்யவும், இழப்பினால் ஏற்பட்ட வெற்றிடத்தைத் தவிர்க்கவும் வெறுமையின் *(0)* முன் நிகழும் உகரம் நெடிலாகிறது. *பழுவு* என்பதன் ஈற்று உகரத்தைச் சாரியை உகரமாகக் கொண்டு அதனை நிரை-நேர் அமைப்பினதாகிய ஈரசைச் சொல்லாகக் கருதலாம். இந்தச் சொல் *பழூஉ* என்று திரிந்த பின்பும் நிரை-நேர் அமைப்பினதாகவே நிகழ்கிறது.

## 17.3 இடைப்பிறவரல்

இடைப்பிறவரலாக இங்கே ஒரு செய்தியைக் குறிப்பிட்டாக வேண்டும். அளபெடையாக அமைந்த வடிவங்கள் சங்க இலக்கியங்களிலும், சங்கமருவிய இலக்கியங்களிலும் காணப்படு கின்றன. இத்தகைய வடிவங்கள் செய்யுளிசை அளபெடையாகக் கருதத்தக்கவையாகும். செய்யுளிசை அளபெடை என்பது

3. ககரம், பகரம் ஆகியவற்றின் உரசொலிகள் உயிர்களுக்கிடையில் நிகழ்கையில் நேரடியாகக் கெடுகின்றனவா அல்லது வகர உரசொலியாகத் திரிந்து பின்னர்க் கெடுகின்றனவா என்பது ஆய்வுக்கு உரியது.

செய்யுளானது யாப்பு அமைதி கெடாமல் இசைக்கப்படுவதற்காக அளபெடுத்தல் என்று பொருள்படும். செய்யுளிசை அளபெடை யாக அமைந்த வடிவங்களை மேலே நாம் குறிப்பிட்ட ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. காரணம் யாப்பமைதிக்காக நெடிலையடுத்து இனக்குறிலைச் செயற்கையாக நிறுத்தி, கூடுதலாக ஓர் அசையைப் படைத்துக் கொள்ளும் உத்தியின் மூலம் அமைவன வாகும் இந்த வடிவங்கள். எடுத்துக்காட்டாக, *தூய்மை, வாய்மை* இரண்டும் தேமா வாய்பாட்டில் அமைந்த ஈரசைச் சொற்களாகும். ஆனால் இவை பின்வரும் எடுத்துக்காட்டில் *தூஉய்மை, வாஅய்மை* எனக் குறிக்கப்பட்டு மூவசையைக் கொண்ட அளபெடைச் சொற்களாக யாப்பின் பொருட்டு மாற்றப்படுகின்றன.

(4) தூஉய்மை என்பது அவாவின்மை மற்றுஅது
வாஅய்மை வேண்ட வரும் (திருக்குறள். 364)

இந்த எடுத்துக்காட்டில் *தூய்மை, வாய்மை* இரண்டும் மாச்சீர்ச் சொற்களாக நிகழ்ந்தால் காய் முன் நேர் என்ற வெண்பா இலக்கணம் சிதைவுறும். நெடிலையடுத்து இனக்குறிலை நிறுத்தி தூ-உய்-மை, வா-அய்-மை என்று காய்ச்சீராகக் கொள்கையில் காய் முன் நேர் என்ற வெண்பா இலக்கணம் சிதைவின்றி அமைகிறது. *தூஉய்மை, வாஅய்மை* இரண்டும் யாப்பமைதி கருதி படைத்துக்கொள்ளப்பட்ட செய்யுளிசை அளபெடை வடிவங்களாகும். இத்தகையவை செயற்கை வடிவங்களாகையால் மேலே (3)-இல் உள்ளது போன்ற ஒலியனியல் விதிகளின் விளைவாக இவற்றைக் கருத முடியாது; கருதவும் கூடாது.

## 17.4 பழந்தமிழில் உரசொலிக்கேடு

17.4.1 *பழூஉ* என்ற பழந்தமிழ் வடிவம் **பழுவு* என்ற அடிநிலை வடிவத்தில் நிகழும் வகர உரசொலிக் கேட்டினால் திரிந்தமைந்த வடிவம் என்பது நமது ஆய்வின் முடிபாகும். அடிநிலை வடிவங்களில் நிகழும் உயிரிடையாகிய உரசொலி கெடுதலும், அதன்முன் நிகழும் உயிர்க்குறிலானது உயிர் நெடிலாதலும் ஆகிய மாற்றங்கள் பெயர், வினை இரண்டையும் தழுவியவையாகும். எடுத்துக்காட்டாக *அதூஉம்* (புறம். 50.10), *உடுப்பதூஉம்* (திருக்குறள்166) *உண்பதூஉம்* (திருக்குறள் 166) ஆகியவை முறையே **அதுவும், *உடுப்பதுவும், *உண்பதுவும்* என்ற அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைந்தவையாகும். இதே போல் *தழூஉகம்* (நற். 50.3) என்ற தன்மைப்பன்மை இறவாக்கால (Non-Past) வினையும், செய்யூஉ வாய்பாட்டினவாகிய *காணூஉ* (பதி.

30.20), *சிதையூஉ* (அகம். 212.13) ஆகிய வினையமைப்புகளும் முறையே **தழுவுகம்* என்ற அடிநிலை வடிவத்திலிருந்தும் **காணுபு, *சிதையுபு* ஆகிய செய்பு (< *செயுபு) வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்தும் பெறப்படும்.[4] இத்தகைய ஆய்வில் அடிநிலை வடிவங்கள் பொதுவாக மொழியில் நிகழ்வனவாகவே இருக்கும். அடிநிலை வடிவங்களை மொழியில் கண்டறிய முடியாமற் போனால் அவை ஒன்று வீழ்ந்துபட்டிருக்கும்; அல்லது அகச்சந்தியைக் கொண்டு அக மீட்டுருவாக்கத்தின் (Internal Reconstruction) மூலமாகவோ, பேச்சுவழக்கில் இருந்தோ, கேண்மை (Cognate) மொழியிலிருந்தோ அவற்றைச் சான்றுறுதி செய்து கொள்ளலாம். எந்த நிலையிலும் தடயங்கள் இல்லாத நிலையில் கற்பித வடிவங்களை அடிநிலை வடிவங்களாக அமைத்துக்கொண்டும் ஆய்வை நிகழ்த்தலாம்.

17.4.2 மேலே (3)இல் குறிக்கப்பட்டுள்ள விதிகள் செயல்படுவதற்கான வாய்ப்புள்ள அடிநிலை வடிவங்களும் அவற்றினடியாகத் தோன்றி முந்தைத் தமிழிலக்கியங்களில் பதிவாகியுள்ள சில வடிவங்களும் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

### 17.5 பெயரில் உரசொலிக்கேடு

| வ. எண் | கேடுறும் உரசொலி | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| 1.0 | வ்>0/உ-உ | *குருவு | குரு0உ | குரூஉ (பத்துப். 9.112, அகம். 226.4, புறம். 228.2) |
| 1.1 | | *பருவு | பரு0உ | பரூஉ (புறம். 228.2, அகம். 107.20, நற். 41.1, குறுந். 330.3, பதி. 47.7, நற். 98.1) |

4. பழந்தமிழில் *செய்யூஉ, செய்பு* என்று இருவகையான வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகின்றது. இவை இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும். இந்த வாய்பாட்டு வினைகள் இருவேறு கிளைமொழிகளிலிருந்து செவ்வியல் வழக்கில் இடம்பெற்றிருக்கலாம். இவற்றுள் *செய்யூஉ* வாய்பாட்டு வினைகள் *செய்யுபு* (> செய்பு) வாய்பாட்டு வினைகளின் திரிபாகலின் அவற்றின் அடிநிலை வடிவங்களைப் பழந்தமிழில் நிகழும் *செய்பு* வாய்பாட்டு வினைகளை விடக் காலத்தால் முந்தியனவாகக் கருதலாம். இதனைக் கருத்தில் கொண்டு எடுத்துக் காட்டாக *திளைபு* (அகம். 298.19) என்ற *செய்பு* வாய்பாட்டு வினையை *திளையுபு* (கலி. 57.22, 76.3) என்ற *செய்யுபு* வாய்பாட்டு வினையின் ஒடுங்கிய வடிவமாகக் கொள்வது தவிர்க்க முடியாததாகின்றது.

| வ. எண் | கேடுறும் உரசொலி | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| 1.2 | | *குழுவு | குழு0உ | குழூஉ (நற். 238.2, பத்துப்.7.24, நன்.267) |
| 1.3 | | *துருவு | துரு0உ | துரூஉ (அகம். 94.4, 35.9) |
| 1.4 | | *பழுவு | பழு0உ | பழூஉ (குறுந். 180.1) |
| 1.5 | | *எழுவு | எழு0உ | எழூஉ (புறம். 97.8) |
| 1.6 | | *தொழுவு | தொழு0உ | தொழூஉ (கலி.100.9, 106.5) |

17.6 வினையில் உரசொலிக்கேடு

| வ. எண் | கேடுறும் உரசொலி | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| 1.0 | வ்>0/உ-உ | | | |
| 1.1 | | *தழுவுகம் | தழு0உகம் | தழூஉகம் (நற். 50.3) |
| 1.2 | | *ஒருவு | ஒரு0உ | ஒரூஉ (கலி. 87.1., தொல். பொருள். இளம் 360, 367) |
| 1.3 | | *ஒருவுப | ஒரு0உப | ஒரூஉப (பதி. 34.1) |
| 1.4 | | *ஒருவுக | ஒரு0உக | ஒரூஉக (கலி. 87.2) |
| 1.5 | | *வெருவுதும் | வெரு0உதும் | வெரூஉதும் (கலி. 87.2) |
| 1.6 | | *வெருவும் | வெரு0உம் | வெரூஉம் (நற். 189.9, பத்துப்.2.171, மணி. 12.95) |
| 1.7 | | *வெருவுதல் | வெரு0உதல் | வெரூஉதல் (தொல். பொருள். இளம் 256.6) |
| 1.8 | | *ஒருவும் | ஒரு0உம் | ஒரூஉம் (அகம். 327.4) |
| 1.9 | | *வழுவும் | வழு0உம் | வழூஉம் (மணி. 22.72) |
| 1.10 | | *கதுவும் | கது0உம் | கதூஉம் (குறுந்.91.2) |
| 1.11 | | *பொருவும் | பொரு0உம் | பொரூஉம் (பரி. 12.9) |
| 1.12 | | *மருவும் | மரு0உம் | மரூஉம் (அகம்.280.7, 298.8) |
| 1.13 | | *கழுவும் | கழு0உம் | கழூஉம் (மணி. 12.36, சீவக. 3133) |
| 1.14 | | *தழுவும் | தழு0உம் | தழூஉம் (ஐங். 239.2, நற். 193.4) |
| 1.15 | | *எழுவுதல் | எழு0உதல் | எழூஉதல் (தொல். எழுத்து. இளம். 6) |

| வ. எண் | கேடுறும் உரசொலி | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| 2.0 | க்>0/உ-உ | | | |
| 2.1 | | *வருகு-<br>வோய் | வரு0உ<br>வோய் | -வரூஉ<br>வோய் (அகம். 398.25) |
| 2.2 | | *வருகும் | வரு0உம் | வரூஉம் (புறம். 122.7) |
| 2.3 | | *எழுகும் | எழு0உம் | எழூஉம் (கலி. 45.7, 106.27) |
| 2.4 | | *தருகுந்து | தரு0உந்து | தரூஉந்து (புறம். 24.9) |
| 2.5 | | *தருகுமார் | தரு0உமார் | தரூஉமார் (கலி. 101.34) |
| 2.6 | | *தருகும் | தரு0உம் | தரூஉம் (ஐங். 392.4) |
| 2.7 | | *நககும் | நகு0உம் | நகூஉம் (கலி. 145.9, 147.9) |
| 2.8 | | *புகுகும் | புகு0உம் | புகூஉம் (அகம். 276.4, கலி. 70.6, புறம் 266.5) |
| 2.9 | | *மிகுகும் | மிகு0உம் | மிகூஉம் (நற். 46.9, பரி. 16.4) |
| 3.0 | ப் > 0/உ-உ<br>(க் > 0/உ-உ என்ற விதி இங்கே செயல்படுகிறதா என்பது ஆய்வுக்குரியது) | | | |
| 3.1 | | *அடுபு | அடு0உ | அடூஉ (அகம். 322.3, பதி. 13.1) |
| 3.2 | | *நிகழுபு | நிகழு0உ | நிகழூஉ (தொல் சொல். சேனா. 17.3) |
| 3.3 | | *நகுபு | நகு0உ | நகூஉ (அகம். 248.16) |
| 3.4 | | *புகுபு | புகு0உ | புகூஉ (மணி. 18.77) |
| 3.5 | | *பொருபு | பொரு0உ | பொரூஉ (அகம். 113.10) |
| 3.6 | | *தொடுபு | தொடு0உ | தொடூஉ (அகம் 357.8) |
| 3.7 | | *தொடருபு | தொடரு0உ | தொடரூஉ (பரி. 11.111) |
| 3.8 | | *தேடுபு | தேடு0உ | தேடூஉ (நற். 242.10) |
| 3.9 | | *தழுபு | தழு0உ | தழூஉ (புறம். 359.4) |
| 3.10 | | *எழுபு | எழு0உ | எழூஉ (பரி. 7.78) |
| 3.11 | | *கழுபு | கழு0உ | கழூஉ (குறுந். 279.5, புறம். 19.18) |
| 3.12 | | *காணுபு | காணு0உ | காணூஉ (அகம் 279.2, ஐங். 357.2, பத்துப். 8.230, பதி. 30.20, புறம். 278.8) |
| 3.13 | | *உண்ணுபு | உண்ணு0உ | உண்ணூஉ (பரி. 11.28) |
| 3.14 | | *சிதறுபு | சிதறு0உ | சிதறூஉ (பரி. 11.28) |

| வ. எண் | கேடுறும் உரசொலி | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| 3.15 | | *பரியுபு | பரியு0உ | பரியூஉ (பரி. 7.72) |
| 3.16 | | *பிழியுபு | பிழியு0உ | பிழியூஉ (அகம். 8.16) |
| 3.17 | | *மொழியுபு | மொழியு0உ | மொழியூஉ (பதி. 81.12) |
| 3.18 | | *அடையுபு | அடையு0உ | அடையூஉ (பதி. 81.4) |
| 3.19 | | *சிதையுபு | சிதையு0உ | சிதையூஉ (அகம்.292.13) |
| 3.20 | | *துடையுபு | துடையு0உ | துடையூஉ (பதி. 44.1) |
| 3.21 | | *நினையுபு | நினையு0உ | நினையூஉ (பதி. 71.16) |
| 3.22 | | *வளையுபு | வளையு0உ | வளையூஉ (பத்துப். 4.145) |
| 3.23 | | *பிணையுபு | பிணையு0உ | பிணையூஉ (பத்துப். 6.614) |
| 3.24 | | *புடையுபு | புடையு0உ | புடையூஉ (பத்துப். 7.8, பதி. 30.36,பத்துப். 10.204) |

### 17.7. முந்துயிர் நெடிலாயின்

17.7.1 உயிரிடை நிகழும் உரசொலிகள் கெடுகையில் முந்துயிராகிய உயிர்க்குறிலானது உயிர்நெடிலாகும் என்பதை (3) இல் உள்ள எழுத்தியல் ( = ஒலியனியல்) விதிகள் உணர்த்துவதைக் கண்டோம். இந்த முந்துயிர் (Pre-Fricative Vowel) அடிநிலை வடிவத்தில் இயல்பாகவே நெடிலாக இருந்தால் உயிரிடை உரசொலியின் (Intervocalic Fricatives) கேடு எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தும்? இத்தகைய சூழலில் எத்தகைய பாதிப்புக்கும் இடமில்லை. எடுத்துக்காட்டாக, *கூஉம்* (நற். 143.5, பதி. 90.35) என்ற செய்யும் வாய்பாட்டு வினையைக் கருதுக. இதன் அடிநிலை வடிவம் **கூவும்* என்பதாகும். இதில் கேடுறும் உரசொலியின் முந்துயிர் ஊகாரமும் பிந்துயிர் உகரமும் ஆகும். இவை இரண்டும் இன உயிர்கள் ஆகும். இவற்றிடை நிகழும் உரசொலியாகிய வகரமெய் கெடுகையில் கூ0உம் என்ற வடிவம் கிடைக்கிறது. வகரக்கேட்டினைத் தொடர்ந்து எந்த எழுத்தியல் பாதிப்புமின்றி *கூஉம்* என்ற ஈரசை வடிவம் தோன்றியமைகிறது. இதனைப் பின்வரும் எழுத்தியல் விதிகள் மூலம் உணர்த்தலாம்.

(7) $நெ_i$-உர-$கு_i$ > $நெ_i$-0-$கு_i$ > $நெ_i$-$கு_i$

இந்த விதியில் நெ என்பது உயிர் நெடிலையும், உர என்பது உரசொலியையும், கு என்பது உயிர்க்குறிலையும் குறிக்கும். $நெ_i$,

கு$_1$ என்பவை இன உயிர்களைக் குறிக்கும். கீழ்க்குறிகள் (Subscripts) மாறுபட்டிருந்தால் நெடிலுயிரும் குறிலுயிரும் இன உயிர்கள் அல்ல என்பதைக் குறிக்கும். கீழ்க்குறிகளைப் பயன்படுத்துவதன் மூலம் ஆய்வில் நிகழும் இரண்டு உயிர்கள் இன உயிர்களா இல்லையா என்பதை அறியலாம்.

17.7.2 *தாஅம்* (அகம். 241.10) என்ற சொல் *தாகம்* என்பதன் ஒடுக்கமாகும். இந்த ஒடுக்கம் பற்றிய ஆய்வினை ஏற்கெனவே செ.வை. சண்முகம் (1980:102, 103) நிகழ்த்தியுள்ளார். *கூஉம், தாஅம்* இரண்டிலும் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில் இவற்றின் அடி நிலை வடிவங்களாகிய **கூவும், *தாகம்* ஆகியவற்றில் உரசொலிகளின் முன்னும் பின்னும் நிகழும் உயிர்கள் இன உயிர்களாகும். ஆகவே மேலே (7)-இல் உள்ள விதிகள் *தாகம்* என்ற அடிநிலை வடிவத்திலிருந்து *தாஅம்* என்பதை வருவிக்கவும் பயன்படும். சண்முகத்தின் ஆய்வில் *தாஅம்* என்பது அளபெடை வடிவமாகக் கருதப்படுகிறது. இது உண்மைக்கு மாறானது. அளபெடை என்பது செய்யுளின் யாப்பமைதி கருதியதாகும். தாஅம் என்பது இயல்பாகத் திரிந்தமைந்த வடிவமாகும். இத்தகைய வடிவங்களில் நிகழும் நெடில்-குறில் மயக்கத்தை அளபெடையாகக் கருத முடியாது; கருதவும் கூடாது. எனவே, அடிநிலை வடிவத்தில் ''நிகழும் உயிர்-மெய்-உயிர் என்ற எழுத்துத் தொடர்....மாற்றம் அடைந்து புறநிலையில் அளபெடையாக அமைகிறது" என்ற சண்முகத்தின் (1980:103) கூற்றை முனைப்பாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை.

17.7.3 சண்முகத்தின் (1980:101-103) ஆய்வில் *இராஅ, இரவு* ஆகியவை **இர+உ* என்ற அடிநிலை வடிவத்தினின்றும், *தேஎம்* (நற். 371.3) என்பது *தேசம்* (மணி. 27.23) / *தேயம்* (அகம். 383.4) என்பதனின்றும் வருவிக்கப்படுகின்றன. இவற்றுள் *இராஅ, இரவு* ஆகியவை **இர+உ* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் தோன்றியமையும் என்ற முடிவு நமக்கு உடன்பாடில்லை. இது பற்றிப் பின்னர் பேசப்படும். *தேஎம்* என்ற வடிவம் சண்முகத்தின் ஆய்வில் பின்வருமாறு வருவிக்கப்படுகிறது.

8 (1) தேசம் > தேயம்
 (2) தேயம் > தேஅம்
 (3) தேஅம் > தேஎம்

இந்த ஆய்வில் யகரமெய் கெட்டபின் அகரக்குறில் அதன்முன் நிகழும் ஏகார நெடிலின் இனக்குறிலாக, அதாவது எகரமாகத்

திரிகிறது. இந்தத் திரிபுக்கு எழுத்தியல் உந்துதல் எதுவும் இல்லையாகையால் இதனை ஏற்பதற்கில்லை. மாறாக, *தேஎம்* என்பதைப் பின்வருமாறு வருவிக்கலாம்.

*9 (1)* தேசம் > தேயம்
(2) தேயம் > தேயெம்
(3) தேயெம் > தே0எம்
(4) தே0எம் > தேஎம்

இந்த ஆய்வில் உயிரொலி இயைபின் (Vowel Harmony) காரணமாக, *தேயம்* என்பது **தேயெம்* என்று திரிகிறது. பின்னர் யகரமெய் கெட்டு, *தேஎம்* என்ற வடிவம் தோன்றியமைகிறது. இந்த ஆய்வானது மேலே (7)இல் உள்ள விளக்க விதிகளோடு பொருந்துவதாக உள்ளது. உரசொலிகள் மட்டுமல்ல, யகரமெய்யும் உயிரிடை நிகழ்கையில் கெடும் என்று தெரிகிறது. ஆனால் இது தமிழில் அருகிற நிகழ்ச்சியாகவே தோன்றுகிறது.

### 17.8 நெடிற்கீழ்க்குறிலின் மாட்சியும் வீழ்ச்சியும்

17.8.1 மரவம் (ஐங். 357.1, 400.1) என்பது பழந்தமிழில் வெண்கடம்பினைக் குறிக்கும் ஓர் மரப்பெயராகும். **பழுவு* என்பது *பழூஉ* எனத் திரிவதைப் போன்றே *மரவம்* என்பதும் உரசொலிக்கேட்டினைத் தொடர்ந்து *மராஅம்* (அகம். 21.12, ஐங். 348.2, பத்துப். 8.85) என்று திரியும். இதனைக் கருத்தில் கொண்டு கீழே (10) இல் உள்ளது போல் பொதுவிதிகளை வகுத்துக் கொள்ளமுடியும்.

10 (1) கு$_1$-உர-கு$_1$ > கு$_1$-0-கு$_1$
(2) கு$_1$-0-கு$_1$ > நெ$_1$-0-கு$_1$
(3) நெ$_1$-0-கு$_1$ > நெ$_1$-கு$_1$

இந்த விதிகள் (5), (6) இல் உள்ள எடுத்துக்காட்டுக்களுக்கும் பொருந்தும்.

17.8.2 தொல்காப்பியர் ஆகார ஈற்று மரப்பெயர் களாகக் குறிப்பிடும் *பிடா, தளா* இரண்டும் பதப்புணர்ச்சியில் (External Sandhi) *பிடாஅம், தளாஅம்* (தொல். எழுத்து. இளம். 230) என அமையும். *பலா* என்னும் மரப்பெயர் பழந்தமிழில் *பலாஅம்* (பதிற். 61.1) என்று புணர்மொழியில் அமைகிறது. *பிடாஅம், தளாஅம், பலாஅம்* ஆகியவற்றில் நிகழும் *அம்* என்பது சாரியை யாகக் கருதத்தக்கதாயினும் அதனை அடிநிலை வடிவத்திலேயே அமைத்து *மராஅம்* என்பதை **மரவம்* என்பதிலிருந்து

வருவித்ததைப் போலவே இந்த வடிவங்களையும் முறையே _*பிடவம்_, _*தளவம்_, _*பலவம்_ ஆகியவற்றின் திரிபாகக் கொள்வதைப் பற்றி எண்ணிப் பார்க்கலாம்.[5] இங்கே இன்னொரு சிக்கலையும் விடுவித்தாக வேண்டும். _பிடவம், தளவம், பலவம்_ ஆகியவற்றின் திரிபாகப் _பிடாஅம், தளாஅம், பலாஅம்_ ஆகியவற்றைக் கருதலா மெனில் _பிடா, தளா, பலா_ ஆகிய ஆகார ஈற்றுப் பெயர்களின் நிகழ்ச்சியை எப்படி விளக்குவது? இந்த ஒன்று சொற்களும் _பிடவு, தளவு, பலவு_ என்பவற்றின் திரிபுகளாகும். அப்படியானால் தொல்காப்பியர் தமிழில் காணப்படும் _பிடா, தளா_ ஆகியவையும் அவற்றின் புணர்மொழிகளாகிய _பிடாஅம், தளாஅம்_ ஆகியவையும் இருவேறு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றித் தமிழில் இடம்பெற்றிருக்க வேண்டும். முன்பே குறிப்பிட்டது போல் _பிடாஅம், தளாஅம்_ என்பவை _பிடவம், தளவம்_ என்ற அடிநிலை வடிவங்களிலிருந்தும் _பிடா, தளா_ என்பவை _பிடவு, தளவு_ என்ற அடிநிலை வடிவங்களிலிருந்தும் தோன்றி அமைந்திருக்க வேண்டும்.[6] இது _பலாஅம்_ (< *பலவம்), _பலா_ (< *பலவு) என்பவற்றுக்கும் பொருந்தும்.

---

5. _சங்க இலக்கியத்தில் பிடவம் (ஐங். 435.3, நற், 242.2, கலி. 102.2, பத்துப் 8.87, குறுந் 382.3), தளவம் (ஐங்.440.3, கலி. 102.2, பத்துப். 8.80)_ ஆகியவற்றின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகிறது. இதே போல் _பிடவு_ (அகம்.139.11, ஐங். 412.2, கலி. 103.2, குறுந். 251.3, நற். 246.8), _தளவு_ (அகம். 64.4, கலி. 103.2) ஆகியவற்றின் நிகழ்ச்சியும் பழந்தமிழில் பரவலாகக் காணப்படுகிறது. இதனின்றும் _பிடவம், தளவம்_ ஆகியவற்றில் நிகழும் அம் என்பது பகுதிப் பொருள் விகுதி எனத் தெளிவாகிறது. பிடவும் தளவும் மரப்பெயர்களாதலின் இவை பதப்புணர்ச்சியில் அம்சாரியை பெற்று நிகழ்ந்து, பின்னர் அந்தச் சாரியையே பகுதிப்பொருள் விகுதியாக அமைந்ததாகல் வேண்டும்.

6. _பிடாஅங்கோடு, தளாஅங்கோடு_ என்பவை _பிடாஅக்கோடு, தளாஅக்கோடு_ எனவும் வழங்கும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார். (எழுத்து- இளம். 230, 231). இந்த உறழ் நிலை வழக்கானது _பிடாஅம், தளாஅம்_ இரண்டும் _*பிடவம், *தளவம்_ ஆகிய அடிநிலை வடிவங் களிலிருந்து தோன்றியிருக்கலாம் என்பதை உறுதிப்படுத்துகின்றது. _குளங்கரை/குளக்கரை_ (தொல். எழுத்து. இளம். 311, 313) என்பதைப் போல் _*பிடவங்கோடு/*தளவங்கோடு, *பிடவக்கோடு, *தளவக்கோடு_ என்ற உறழ்ச்சி வழக்கை அடிநிலை மட்டத்திலேயே எண்ணிப் பார்க்கலாம். இதேபோல் _பலாஅக்கனி_ (தொல். எழுத்து. இளம். 227) என்பதும் இடைக்காலத் தமிழில்நிகழும் _பலாங்கனி_ (11-ஆம் திருமுறை. 422) _(<பலாஅங்கனி)_ என்பதும் இன்றைய தமிழில் நிகழும் _பலாக்கனி (<*பலாஅக்கனி)_ என்பதும் _*பலவங்கனி, *பலவக்கனி_ என்பவற்றின் திரிபுகளாகத் துணியப்படும்.

17.8.3 *பிடா, தளா, பலா* ஆகியவை முறையே **பிடவு, *தளவு, *பலவு,* ஆகிய அடிநிலை வடிவங்களில் இருந்து தோன்றியவை என்பது மேலே குறிக்கப்பட்டது. மேலே (10) இல் உள்ள விதிகளைக் கொண்டு *பிடா, தளா, பலா* ஆகியவற்றை அவற்றின் அடிநிலை வடிவங்களிலிருந்து வருவிக்க முடியாது. இவற்றை வருவிக்கச் சற்று மாறுபட்ட விதிகளைக் கருத்தில் கொள்ள வேண்டும். *பிடா* என்பதை எடுத்துக்காட்டாக, *பிடவு* என்பதிலிருந்து இரண்டு வகையாக வருவிக்கலாம். ஒன்று, *பிடவு* என்பதில் ஈற்றில் நிகழும் உகரச் சாரியையைத் தவிர்த்து **பிடவ்* என்பதை அடிநிலை வடிவமாகக் கொண்டு வருவித்தலாகும். இந்த ஆய்வு பின்வருமாறு அமையும்.

11 (1) பிடவ் > பிட0
(2) பிட0 > பிடா0/பிடா

இரண்டாவது ஆய்வு *பிடவு* என்பதனை அடிநிலை வடிவமாகக் கொண்டு பின்வருமாறு அமையும்.

12 (1) பிடவு > பிட0உ
(2) பிட0உ > பிடா0உ
(3) பிடா0உ > பிடா0
(4) பிடா0 > பிடா

இரண்டாவது ஆய்வின்படி நெடிலை அடுத்து நிகழும் குறிலானது நெடிலின் இன உயிராக இல்லையென்றால் அது வீழ்ந்துபடும். இந்த வகையில் நாம் செ.வை. சண்முகத்தின் (1980: 101.103) ஆய்வினின்றும் மாறுபடுகிறோம். மேலே (11), (12) இல் காணப்படும் ஆய்வுக்ளைப் பின்வருமாறு பொதுமைப்படுத்தலாம்.

13 (1) கு-உர > கு-0 (*பிடவ் > பிட0)
(2) கு-0 > நெ-0 (=நெ) (பிட0 > பிடா0/பிடா)

14 (1) $கு_1$-உர-$கு_2$ > $கு_1$-0-$கு_2$ (பிடவு > பிட0உ)
(2) $கு_1$-0-$கு_2$ > $நெ_2$-0-$கு_2$ (=$நெ_1$-$கு_2$) (பிட0உ > பிடா0உ) (பிடாஉ)
(3) $நெ_1$-$கு_2$ > $நெ_1$-0(=$நெ_1$) (பிடாஉ > பிடா0 (=பிடா))

இங்கே (14)இல் உரசொலியின் முன்னும் பின்னும் நிகழும் உயிர்கள் இன உயிர்கள் அல்ல. ஆகவே முந்துயிர் நெடிலாகத் திரிந்த நிலையில் அதனை அடுத்து நிகழும் குறிலுயிர் கெடுகிறது. ஆயினும் நெடிற் கீழ் நிகழும் இனக் குறிலும் இதேபோல் கெடும் நிலை தமிழில் இல்லாமல் இல்லை. தொல்காப்பியர் தமிழில் காணப்படும் *பலாஅக்கனி* (தொல். எழுத்து. இளம்.227)

பிற்காலத் தமிழில் நெடிற்கீழ்க்குறிலை இழந்து *பலாக்கனி* என்று ஆயிற்று. இவ்வாறே **பலாஅங்கனி* என்பது இடைக்காலத் தமிழில் *பலாங்கனி* (11-ஆம் திருமுறை. 422) என்று ஆயிற்று. *பலாஅம்* (பதிற். 61.1) என்ற பழந்தமிழ் வழக்கைக் கருத்தில் கொண்டு **பலாஅங்கனி* என்ற வடிவம் இங்கே மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளது.

17.8.4 இயல்பு நெடிலை அடுத்து நிகழும் உரசொலி கெடுகையில் அதன்கீழ் நின்ற குறிலுயிர் கெடும் நிலையும் தமிழில் காணப்படுகிறது. இந்தக் குறிலுயிர் இயல்பு நெடிலின் இன உயிர் அல்ல. *சாம்* (கலி. 60.27) 'சாகும்', *போம்* (கலி. 25.11) 'போகும்', *நோம்* (குறுந். 4.1,4) 'நோகும்', *வேம்* (குறுந். 102.1., நற்.184.6), 'வேகும்' ஆகியவை இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும். எடுத்துக்காட்டாக இவற்றுள் *சாம்* என்பது பின்வருமாறு வருவிக்கப்படும்.

15 (1) *சாகும் > சா0உம்*
   (2) *சா0உம் > சாஉம்*
   (3) *சாஉம் > சாம்*

இந்த ஆய்வின்படி *தாவும்* என்பது *தாம்* எனத்திரியுமேயன்றித் *தாஅம்* (அகம் 115.12, ஐங். 208.3, குறுந். 324.3, நற். 24.4) எனத் திரியாது. *தாஅம்* செய்யுளிசை அளபெடை வடிவமாகக் கொள்ளத்தக்கதாகும். அதாவது *தாம்* (< *தாவும்) என்னும் ஓரசைச் சொல் *தாஅம்* என்ற ஈரசைச் சொல்லாக யாப்பமைதி நோக்கிச் செயற்கையாகப் படைத்துக் கொள்ளப்பட்டது. இதே போல் *அவாஅம்* (கலி. 7.2), 'அவாவும்', *பராஅம்* (அகம். 99.8) 'பரவும்', *நடாஅம்* (பெருங். 2.2.87) 'நடத்தும்' ஆகியனவும் *அவாம்* (< *அவாவும்), *பராம்* (< *பராவும்), *நடாம்* (< *நடாவும்) ஆகியவற்றின் செய்யுளிசை அளபெடை வடிவங்களாகக் கருதத் தக்கனவாகும். *தாவும், அவாவும், பராவும், நடாவும்* ஆகியவை பின்வரும் விதிகளுக்கு உள்ளாகி *தாம், அவாம், பராம், நடாம்* எனத் திரிந்தமையும்.

16 (1) நெ$_1$-உர-கு$_2$ > நெ$_1$-0-கு$_2$- (தாவும் > தா0உம்)
   (2) நெ$_1$-0-கு$_2$ > நெ$_1$-கு$_2$ (தா0உம் > தாஉம்)
   (3) நெ$_1$-கு$_2$ > நெ$_1$ 0 (=நெ$_1$) (தாஉம் > தா0ம் (=தாம்))

*தாஅம்* (=தாம்<தாவும்) என்பதைப் போலவே *தாஅய்* என்ற வினையெச்சமும் *தாய்* என்பதன் அளபெடை வடிவமாகும். *தாய்* என்பதன் அடிநிலைவடிவம் *தாவி* என்பதாகும். இந்த வடிவத்தில்

ஈற்றில் நிகழும் இகரம், *இய்* என்பதன் எச்சமாகும். பாடிய (< பாடு+இய்+அ) என்பதில் இதன் நிகழ்ச்சியைக் காணலாம். முன்னுயிர்களாகிய (Front Vowels) இகர ஈகாரங்களும் எகர ஏகாரங்களும் தொடக்கத்தில் யகரமெய்யின் சாயலைப் பெற்றவையாகும். இதனைத் தொடுப்பொலி (On Glide) என்று குறிப்பது மரபு. *தாவி* என்பதில் இகரமானது உரசொலிக்கேட்டினைத் தொடர்ந்து யகரமாகத் திரியும்.[7] இதனைக் கீழ்வரும் ஆய்வில் காணலாம்.

*17 (1) தாவி > தா0இ*

*(2) தா0இ > தாஇ*

*(3) தாஇ > தாய் (இகரம் (ஈற்றில்) யகரத்தின் சார்ந்தொலியாகும்)*

நெடிலையடுத்து நிகழும் இகரமே இவ்வாறு யகரமாகத் திரிகிறது. *தாவி* என்பதன் திரிபாகிய *தாய்* என்ற ஓரசைச் சொல் யாப்பமைதி கருதி செய்யுளில் *தாஅய்* (நற். 8.7) என அளபெடுத்து ஈரசைச் சொல்லாக அமைகிறது. இத்தகைய அளபெடை வடிவங்களும், அவற்றின் தாய் வடிவங்களும், தாய் வடிவங்களின் அடிநிலை வடிவங்களும் கீழே குறிக்கப்படுகின்றன.

*(18) வ் > 0/நெ$_1$ –இ (=நெ$_1$–ய்)*

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் | அளபெடை வடிவம் |
|---|---|---|---|---|
| 1 | *ஏவி | ஏ-0-இ | ஏ-ய் | ஏஎய் (பெருங். 1.36.37) |
| 2 | *கூவி | கூ-0-இ | கூ-ய் (சீவக. 854) | கூஉய் (பத்துப். 2.102) |
| 3 | *தாவி | தா-0-இ | தா-ய் | தாஅய் (நற். 8.7) |
| 4 | *உராவி | உரா-0-இ | உரா-ய் (கலி. 150.15) | உராஅய் (பெருங். 2.15.19) |
| 5 | *உலாவி | உலா-0-இ | உலா-ய் (பத்துப்.3.150) | உலாஅய் (பெருங். 1.41.78) |
| 6 | *கடாவி | கடா-0-இ | கடா-ய் | கடாஅய் (பெருங். 1.54.113) |
| 7 | *கலாவி | கலா-0-இ | கலா-ய் | கலாஅய் (சீவக. 2898) |

7. வினைகளைப் பொறுத்தவரை இவ்வாறு திரியும் யகரமெய் இ/இய் என்பதன் மாற்றுருபாகக் கருதப்படும். நெடிலையடுத்தே இந்த மாற்றுருபு நிகழ்வதால் இதனை ஒலியனால் கட்டுண்ட மாற்றுருபு (Phonologically Conditioned Allomorph) எனக் கொள்ளப்படும்.

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவம் | புறநிலை வடிவம் | அளபெடை வடிவம் |
|---|---|---|---|---|
| 8 | *குலாவி | குலா-0-இ | குலா-ய் | குலாஅய் (பெருங். 1.41.77) |
| 9 | *சுமாவி | சுமா-0-இ | சுமா-ய் | சுமாஅய் (சீவக. 2694) |
| 10 | *நடாவி | நடா-0-இ | நடா-ய் (சீவக.2863) | நடாஅய் (பெருங். 1.56.46) |
| 11 | *பராவி | பரா-0-இ | பரா-ய் | பராஅய் (கலி. 101.14) |
| 12 | *விராவி | விரா-0-இ | விரா-ய் (சீவக.3025) | விராஅய் (அகம்99.8, புறம். 24.15) |
| 13 | *வினாவி | வினா-0-இ | வினா-ய் (பத்துப்.8.4) | வினாஅய் (அகம். 82.12) |
| 14 | *தூவி | தூ-0-இ | தூ-ய் (அகம்287.9) | தூஉய் (நற். 358.6) |

இகரவீற்று வினையெச்சங்கள் உரசொலி இழப்பைத் தொடர்ந்து யகர மெய்யீற்றனவாகத் திரியும் நிலை பழந்தமிழிலும் காப்பியத் தமிழிலும் பரவலாகக் காணப்படுவதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் உணர்த்தும்.

19 (1) அவாய் (சீவக. 2821) (< *அவாவி)
(2) கவாய் (சீவக. 2444) (< *கவாவி)
(3) தூய் (அகம். 287.9) (< *தூவி, குறுந். 103.2)
(4) வளாய் (சீவக. 26.34, பரி.11.105) (< *வளாவி)

இத்தகைய யகர ஈற்று வினையெச்சங்களை அடுத்து அகர விகுதி சேர்ந்து *அளாய* (சீவக. 1440), *மூய* (பதிற். 42.20, பெருங். 2.5.104), *மேய* (பெருங். 3.18.16), *தூய* (பரி. 10.124), *போய* (கலி. 143.39) முதலான பெயரெச்ச வடிவங்கள் தோன்றியமைகின்றன. இவற்றை *அளாவிய, மூசிய, மேவிய, தூவிய, போகிய* முதலானவற்றுடன் ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்த முடியுமா என்பது சிந்தனைக்குரியதாகும். ஆனால் *ஏயினன்* (பெருங். 5.6.47), *தாயின* (ஐங். 483.1), *நடாயினான்* (சீவக. 2573), *மேயினர்* (சீவக. 935, பெருங். 2.14.53), *பாயினன்* (பெருங். 4.2.97), *பாயிற்று* (பெருங்.4.2, படலத் தலைப்பு), *வளாயினர்* (சீவக.2519) ஆகியவற்றை முறையே *ஏவினான், தாவின, நடாவினான், மேவினர், பாவினன், பாவிற்று, வளாவினார்* ஆகிய அடிநிலை வடிவங்களின் திரிபுகளாகக் கருத வாய்ப்புள்ளது.

## 17.9 உயிரொலி இயைபும் நெடில் குறில் மயக்கமும்

17.9.1 நெடிற்கீழ்க் குறிலின் கேடு என்பது தமிழில் ஒரு தொடர்ச்சியான நிகழ்ச்சியாகும். இன்றைய பேச்சுத்தமிழ் வரை இந்த நிகழ்ச்சி தொடர்கிறது. இதைப்பற்றித் தொடர்ந்து பேசுவதற்கு முன் உரசொலி வீழ்ச்சியின் காரணமாகப் பழந்தமிழில் தோன்றியமைந்த நெடில்-குறில் மயக்கம் பற்றி மேலும் சிந்திக்க வேண்டியுள்ளது. *பழூஉ, கூஉம்* ஆகியவை **பழுவு, *கூவும்* ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியவை என்பது பற்றி முன்னர்ப்பேசப்பட்டது. இது தொடர்பாக மேலே (10)இல் பொதுமைப்படுத்தப்பட்ட விளக்க விதிகள் தொடர் ஆய்வுக்காக வேண்டி மீண்டும் கீழே (20)இல் நினைவுகூரப்படுகின்றன.

20 (1) $கு_1$-உர-$கு_1$ > $கு_1$-0-$கு_1$
   (2) $கு_1$-0-$கு_1$ > $நெ_1$-0-$கு_1$
   (3) $நெ_1$-0-$கு_1$ > $நெ_1$-$கு_1$

உரசொலியின் முன்னும் பின்னும் குறில்கள் ஒன்றாக இருந்தால் உரசொலியின் வீழ்ச்சியைத் தொடர்ந்து முந்துயிர் நெடிலாகும் என்பதை மேலே (20)இல் உள்ள விளக்க விதிகள் உணர்த்து கின்றன. இந்த வகையில் பழந்தமிழில் நிகழும் *கிழாஅர்* (பத்துப். 6.93), *மகாஅர்* (அகம். 122.11), *மகாஅன்* (பரி.8.57), *முனாஅது* (அகம். 33.13) மற்றும் புறம் ஆறாம் பாடலில் நிகழும் *வடாஅது, தெனாஅது, குணாஅது, குடாஅது* ஆகிய சொல்லமைப்புகளைப் பின்வருமாறு வருவிக்கலாம்.

21 (1) *கிழவர் > கிழ0அர் > கிழா0அர் > கிழாஅர்
   (2) *மகவர் > மக0அர் > மகா0அர் > மகாஅர்
   (3) *மகவன் > மக0அன் > மகா0அன் > மகாஅன்
   (4) *முனவது > முன0அது > முனா0அது > முனாஅது
   (5) *வடவது > வட0அது > வடா0அது > வடாஅது
   (6) *தெனவது > தென0அது > தெனா0அது > தெனாஅது
   (7) *குணவது > குண0அது > குணா0அது > குணாஅது
   (8) *குடவது > குட0அது > குடா0அது > குடாஅது

இது ஒரு படிநிலை. உரசொலியின் முன்னம பின்னும் நிகழும் குறில்கள் வேறுவேறாக இருந்து, உரசொலி வீழ்ச்சியுற்றால் அடிநிலை வடிவம் எத்தகைய மாறுதல்களுக்கு உள்ளாகும்? பழந்தமிழில் *குரீஇ* (குறுந். 72.5), *பரீஇ* (குறுந். 72.4); *மரீஇ* (பதிற். 50.23), *உரீஇ* (அகம். 331.4) *தழீஇ* (நற். 47.4) முதலானவற்றின்

அடிநிலை வடிவங்கள் சிந்திக்கற்பாலனவாகும். இதுபற்றி உ.வே. சாமிநாதய்யர் குறுந்தொகை 72-ஆம் பாடலின் விளக்கவுரையில் இவ்வாறு குறிப்பிடுவார்: "பருத்திக்குரிய பெயராகிய பருவியென்பது பரீஇயென்றும், குருவியென்பது குரீஇயென்றும் வந்தன. இங்ஙனமே மருவி-மரீஇ, உருவி-உரீஇ என வினைச்சொற்களும் வருதல் காண்க". சாமிநாதய்யரின் இந்தக் குறிப்புரையானது *குருவி, மருவி* ஆகியவற்றை முறையே *குரீஇ, மரீஇ* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களாகக் கொள்ள வகைசெய்கிறது. *குரீஇ* என்பது எடுத்துக் காட்டாக அடிநிலை வடிவமாகிய *குருவி* என்பதனின்றும் பின்வருமாறு திரிந்தமைகிறது.

22 (1) *குருவி > குரிவி (உயிரொலி இயைபு)
(2) குரிவி > குரி0இ (= குரிஇ)
(3) குரி0இ > குரிஇ[8] (இந்த விதியைத் தவிர்க்கலாம்)
(4) குரி0இ > குரீஇ

இங்கே *குருவி* என்பதில் உள்ள ஈற்றயல் உகரம் ஈற்றில் நிகழும் இகரத்தின் தாக்கத்தால் தானும் இகரமாகத் திரிகிறது. இத்தகைய திரிபானது உயிரொலி இயைபு (Vowel Harmony) அல்லது சேய்மைத் திரிபு (Distant Assimilation) என்று கருதப்படும். இனி, (22) இல் நிகழும் எழுத்தியல் மாற்றங்களைப் பின்வருமாறு பொதுமைப் படுத்தலாம்.

23 (1) கு$_1$-உர-கு$_2$ > கு$_2$-உர-கு$_2$.
(2) கு$_2$-உர-கு$_2$ > கு$_2$-0-கு$_2$ (= கு$_2$-கு$_2$)
(3) கு$_2$-0-கு$_2$ > கு$_2$-கு$_2$ (இந்த விதியைத் தவிர்க்கலாம்)
(4) கு$_2$-கு$_2$ > நெ$_2$-கு$_2$

17.9.2 மாறுபட்ட இரண்டு குறில்கள் மயங்கும்போது முந்துயிரும் பிந்துயிரும் இனக்குறில்களாக அமைந்த பின்னரே முந்துயிராகிய குறிலானது இனநெடிலாகத் திரியும். இதனையே (23)இல் உள்ள விதிகள் விளக்குகின்றன. இந்த விதிகள் *சிறாஅர்* (புறம். 32.8), *சிறாஅன்* (புறம். 276.3), *பராஅரை* (நற். 278.1) ஆகியவற்றுக்கும் பொருந்துமா? இவற்றின் அடிநிலை வடிவங்களை முறையே **சிறுவர், *சிறுவன், *பருவரை* என்று கொண்டால் பொருந்தும். இப்போதைக்கு இவற்றைத் தவிர வேறு அடிநிலை வடிவங்களைச் *சிறாஅர், சிறாஅன், பராஅரை* ஆகியவற்றுக்குக் கருதமுடியவில்லை. இந்த நிலையில் எடுத்துக்காட்டாக,

8. உரசொலியின் வீழ்ச்சியால் உண்டான வெற்றிடமாகிய விட்டிசையை குரி0இ > குரிஇ என்ற விதி தவிர்க்கிறது.

*சிறாஅன்* என்பதைப் பின்வருமாறுதான் விளக்க வேண்டி இருக்கும்.

24 (1) *சிறுவன் > சிறவன்

(2) *சிறவன் > சிற0அன் (=சிற-அன்)

(3) *சிற0அன் > சிறஅன் (இந்த விதியைத் தவிர்க்கலாம்)

(4) *சிறஅன் > சிறாஅன்

## 17.9 வினைப்பகுதி மீட்டுருவாக்கம்

*மரீஇ* (குறுந். 266.4), *தழீஇ* (அகம். 6.8) ஆகிய வினையெச்சங்களின் அடிநிலைவடிவங்களை *மருவி, தழுவி* என்று கொள்வதற்கான அடித்தளம் மேலே அமைக்கப்பட்டதைத் தொடர்ந்து இவற்றின் வினைப்பகுதிகள் *மருவு, தழுவு* என்று குறிக்கப்படும். நெடிலும் குறிலும் மயங்கும் இவை போன்ற வினையெச்சங்களின் வினைப்பகுதிகள் பல வழக்கற்றுப் போய் விட்டன. இந்த ஆய்வில் இவ்வாறு வழக்கற்றுப் போனதும், வழக்கில் உள்ளதுமான வினைப்பகுதிகள், நெடில்-குறில் மயங்கும் வினையெச்சங்களின் துணை கொண்டு பின்வருமாறு இனங் காணப்படுகின்றன.

(25)

| வ. எண் | நூல் வழக்கு | அடிநிலை வடிவம் | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 1. | இடீஇ (பதி. 10.1) | *இடுவி | *இடுவு 'இடுதல்' |
| 2. | இரீஇ (அகம். 98.9) | *இருவி | *இருவு |
| 3. | உடீஇ (குறுந். 167.2) | *உடுவி | *உடுவு |
| 4. | உரீஇ (அகம். 331.4) | *உருவி | *உருவு 'உருவுதல்' |
| 5. | உறீஇ (பதி. 44.13) | *உறுவி | *உறுவு |
| 6. | எழீஇ (நற். 121.9) | *எழுவி | *எழுவு |
| 7. | ஒரீஇ (திருக். 1009) | *ஒருவி | *ஒருவு |
| 8. | கதீஇ (பெருங்.3.7.108) | *கதுவி | *கதுவு (DED. 1014. மல. கத்து) |
| 9. | கழீஇ (குறுந். 13.1) | *கழுவி | *கழுவு 'கழுவுதல்' |
| 10. | குழீஇ (குறுந். 139.3) | *குழுவி | *குழுவு 'குழுமுதல்' |
| 11. | கெழீஇ (அகம். 153.2) | *கெழுவி | *கெழுவு |
| 12. | கொடீஇ (பெருங்.2.9.3) | *கொடுவி | *கொடுவு |
| 13. | கொளீஇ(அகம்.6.17) | *கொளுவி | *கொளுவு 'கொள்ளுதல்' |

| வ. எண் | நூல் வழக்கு | அடிநிலை வடிவம் | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 14. | கொளீஇ (நற். 388.4) | *கொளுவி | *கொளுவு 'கொளுத்துதல்' |
| 15. | செரீஇ (பத்துப். 8.119) | *செருவி/ *செருகி | *செருவு/*செருகு 'செருகுதல்' |
| 16. | தரீஇ (அகம். 77.10) | *தருவி | *தருவு |
| 17. | துரீஇ (திருக். 929) | *துருவி | *துருவு 'துருத்துதல்' |
| 18. | நிறீஇ (அகம். 384.7) | *நிறுவி | *நிறுவு 'நிறுத்துதல்' |
| 19. | (வழி) படீஇ (கலி. 8.23) | *படுவி | *படுவு |
| 20. | புகீஇ (தொல்.பொருள். இளம். 77.30) | *புகுவி | *புகுவு |
| 21. | பெறீஇ (நற். 339.8) | *பெறுவி | *பெறுவு 'பெறுதல்' |
| 22. | பொரீஇ (கலி. 8.31) | *பொருவி | *பொருவு 'ஒப்பிடுதல்' |
| 23. | பொறீஇ (கலி. 93.11) | *பொறுவி | *பொறுவு 'பொறுத்தல்' |
| 24. | முழீஇ (பெருங் 2.16.85) | *முழுவி/ முழுகி | *முழுவு/*முழுகு 'முழுகுதல்' |
| 25. | வரீஇ (பெருங் 2.6.51) | *வருவி | *வருவு 'வரைதல்' |
| 26. | வழீஇ (கலி. 106.27) | *வழுவி | *வழுவு 'வழுவுதல்' |

மேலே (25) இல் உள்ள தொகுப்பில் நூல் வழக்கினவாகக் குறிக்கப் பெற்றுள்ள வினையெச்சங்களின் அடிநிலை வடிவங்களில் உரசொலியின் முன்னும் பின்னும் நிகழும் குறில்கள் மாறுபட்டவையாகும். இந்தச் சூழலில் மாறுபடாத குறில்களைக் கொண்ட அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியமைந்த நெடில்-குறில் மயங்கும் வினையெச்சங்களும் பழந்தமிழில் காணப்படுகின்றன. வினைப்பகுதிகளுடன் இத்தகைய வினை யெச்சவடிவங்கள் கீழே தொகுத்தளிக்கப்படுகின்றன.

(26)

| வ. எண் | நூல் வழக்கு | அடிநிலை வடிவம் | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 1. | அரீஇ (பத்துப். 6.376) | *அரிவி | *அரிவு 'அறுத்தல்' |
| 2. | அறீஇ (அகம். 392.4) | *அறிவி | *அறிவு 'அறிவித்தல்' |
| 3. | அழீஇ (திருக். 182) | *அழிவி | *அழிவு 'அழித்தல்' |
| 4. | எறீஇ (பெருங். 3.14.215) | *எறிவி | *எறிவு |
| 5. | கடீஇ (நற். 313.5) | *கடிவி | *கடிவு 'கடிதல்' |
| 6. | கழீஇ (நற். 12.5) | *கழிவி | *கழிவு 'கழித்தல்/கழற்றுதல்' |
| 7. | கறீஇ (அகம். 337.4) | *கறிவி | *கறிவு |
| 8. | குளீஇ (பெருங் 2.6.45) | *குளிவி (?) | *குளிவு |

| வ. எண் | நூல் வழக்கு | அடிநிலை வடிவம் | வினைப்பகுதி |
|---|---|---|---|
| 9. | கொழீஇ (நற். 15.1) | *கொழிவி | *கொழிவு 'கொழித்தல்' |
| 10. | செரீஇ (நற். 196.8) | *செரிவி | *செரிவு 'செரித்தல்' |
| 11. | செறீஇ (நற். 136.9) | *செறிவி | *செறிவு 'செறித்தல்' |
| 12. | திரீஇ (பரி. 6.37) | *திரிவி | *திரிவு 'திரிதல்' |
| 13. | தெரீஇ (பெருங்.2.20.74) | *தெரிவி | *தெரிவு |
| 14. | தெளீஇ(பெருங்.1.56.160) | *தெளிவி | *தெளிவு |
| 15. | தெறீஇ (அகம்.393.7) | *தெறிவி | *தெறிவு |
| 16. | பரீஇ (அகம்.156.5) | *பரிவி | *பரிவு 'பரித்தல்/அறுத்தல் |
| 17. | புரீஇ (பரி. 15.63) | *புரிவி | *புரிவு 'புரிதல்' |
| 18. | (பூ)முடீஇ(பெருங்.2.3.73) | *முடிவி | *முடிவு 'முடித்தல்' |
| 19. | விரீஇ (அகம். 130.37) | *விரிவி | *விரிவு 'விரிதல்' |

மேலே (25), (26)இலுள்ள தொகுப்புகளில் இனங்காணப்பட்டுள்ள வினைப்பகுதிகளுள் *உருவு, ஒருவு, எழுவு, கழுவு, செருவு/செருகு, கொளுவு, திறுவு, வழுவு* ஆகியவை தவிர பிற வடிவங்கள் தமக்குரிய இயல்பான வினைத் திரிபுகளுடன் தமிழில் காணப்பட வில்லை. *கொளுவுவேன்* (கலி.144.20) 'கொளுத்துவேன்' என்ற வினை *கொளுவு* என்ற வினைப்பகுதியையும், *எழுவிய* (நாலா. திருமங்கையாழ்வார். 8.7.6) என்ற வினையமைப்பு *எழுவு* என்ற வினைப்பகுதியையும் தமிழில் உறுதி செய்கின்றன. இதேபோல் *அறீஇயினென்* (கலி. 140.30), *கடீஇயாற்கு* (நற். 313.5), *கொளீஇயள்* (குறுந். 263.5), *கொழீஇய* (நற். 15.1, 49.1, 106.2, 159.2, 203.1) ஆகிய வினையமைப்புகள் *அறிவு, கடிவு, கொளுவு* (=கொள்ளுதல்), *கொழிவு* ஆகிய வினைப்பகுதிகளை உறுதி செய்தாலும் இவை தொன்மையான தமிழுக்கு முந்தைய நிலையில் நிகழ்ந்தவையாகவே தோன்றுகின்றன. மேற்படி தொகுப்புக்களில் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள பிற எல்லா வினைப்பகுதிகளும் தமிழில் வினைத்திரிபுகளுடன் காணப்படவில்லை. எனவே ஒரு படிநிலைக் குரிய மேலே இனங்காணப்பட்டுள்ள பல வினைப் பகுதிகள் முந்து தமிழில் (Pre Tamil) நிகழ்ந்திருக்க வேண்டும். தமிழில் இந்த வினைப்பகுதிகளுள் சில பெயர்ச் சொற்களாகக் காணப்படுகின்றன. கருதுக: *அறிவு, அழிவு, தெளிவு, முடிவு, விரிவு.* முந்து தமிழில் வினைப்பகுதிகளாக நிகழ்ந்த இவை தமிழில் பெயர்களாக நிகழ்வதைக் கருதுகையில் வினைப்பகுதிகள் பெயரின் ஒரு வகை என்பதும் அவற்றின் அடியாகத் தோன்றிய எல்லா வகை வினை யமைப்புக்களும் வினைப்பெயர்கள் அல்லது வினையாலணையும் பெயர்களாகக் கொள்ளத்தக்கவை என்பதும் புலனாகின்றன.

## 17.10 மூலபாட மீட்டுருவாக்கம்

பழந்தமிழில் ஐகார ஈற்று வினைப்பகுதிகள் மூன்று வகையான இறந்தகால வினைப்பகுதிகளுடன் (Past Bases) காணப்படுகின்றன. குறிப்பு வசதிக்காக வேண்டி இவற்றை *மறைந்து/மறைத்து, மறைஇ, மறைஇன்* வாய்பாட்டினவாகக் கொள்ளலாம். இந்தப் பகுதிகளிலிருந்து தோன்றும் வினைமுற்றுக்கள் எடுத்துக்காட்டாக *மறைந்தான்/மறைத்தான், மறைஇயான், மறைஇனான்* என்று அமையும். கருதுக: *புனைந்தாய்* (கலி. 115.17), *முனைஇயாள்* (கலி. 145.11), *கவைஇனன்* (ஐங். 409.1), *தைஇனர்* (கலி. 102.6), *மதைஇனள்* (கலி. 109.5). *மறைஇன்* வாய்பாட்டு இறந்த கால வினைப்பகுதிகள் *மறையின்* வாய்பாட்டினவாய் அமைந்து பிந்தியவற்றின் அடியாகத் தோன்றியமைந்த பல வினைமுற்றுக்கள் பழந்தமிழில் காணப் படுகின்றன. கருதுக: *கவைஇனள்* (குறுந். 359.6)/ *கவையினள்* (ஐங். 409.2) *கவைஇனன்* (ஐங். 409.1)/ *கவையினன்* (ஐங். 404.2). இதனின்றும் மறையின் வாய்பாட்டு இறந்தகாலப் பகுதிகளின் அடியாகத் தோன்றிய பழந்தமிழ் வினைமுற்றுக்களின் மூல பாடத்தை **மறைஇன்* வாய்பாட்டு மீது அமைந்தவையாக மீட்டுருவாக்கம் செய்யலாம். இவ்வாறு மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட வினைகள் நூல் வடிவங்களுடன் (Textual Forms) தொகுக்கப்பட்டு கீழே தரப்பட்டுள்ளன. இந்தத் தொகுப்பில் கடைசி இரண்டு இகர வினைமுற்றுக்கள் ஈற்று வினையடியாகத் தோன்றியவையாகும். இவற்றின் மீட்டுருவாக்கம் ஆய்வுக்குரியதாகும்.

(27)

| வ.எண் | நூல் வடிவம் | மீட்டுருவாக்க வடிவம் |
|---|---|---|
| 1. | அசையினன் (அகம். 102.13) | *அசைஇனன் |
| 2. | கவையினள் (ஐங். 404.2) | *கவைஇனள் |
| 3. | கவையினன் (அகம். 26.23) | *கவைஇனன் |
| 4. | தடையின (கலி. 45.15) | *தடைஇன |
| 5. | துடையினள் (நற். 120.8) | *துடைஇனள் |
| 6. | நிலையிற்று (குறுந். 143.3) | *நிலைஇற்று |
| 7. | நிலையின்று (கலி. 145.3) | *நிலைஇன்று |
| 8. | நினையினை (நற். 253. 4) | *நினைஇனை |
| 9. | நினையினர் (பத்துப். 10.266) | *நினைஇனர் |
| 10. | மறையினை (அகம். 50.9) | *மறைஇனை |
| 11. | மறையினள் (நற். 113.8) | *மறைஇனள் |
| 12. | மறையினென் (அகம். 56.13) | *மறைஇனென் |
| 13. | பசையினள் (திருக். 1098) | *பசைஇனள் |
| 14. | படியினை (புறம். 15.10) | *படிஇனை |
| 15. | குடியினள் (நற். 271.7) | *குடிஇனள் |

மேலே (27) இல் குறிக்கப்பெற்றுள்ள நூல்வடிவங்கள் ஏடு பெயர்த்து எழுதியோரால் பிறழ உணர்ந்து எழுதப்படாமல் பாடலாசிரியர்களே பயன்படுத்தியிருந்தால் அவற்றின் மீட்டுருவாக்கங்களை மூலபாட மீட்டுருவாக்கங்களாகக் கொள்ள முடியாது. மாறாக, இந்த மீட்டுருவாக்க வடிவங்கள் முந்து தமிழில் நிகழ்ந்தனவாகக் கருதப்படும். இவற்றைத் தொல் திராவிட (Proto Dravidian) வழக்கின் தொடர்ச்சியாகக் கருத முடியுமா என்பது தனி ஆய்வுக்குரியது.[9]

### 17.11 பிறழ்வினைப்பகுதிகளும் மூலபாடமும்

*தழுவி, தழுவினான், தழுவியான்* ஆகிய வாய்பாட்டு வினைவடிவங்கள் பழந்தமிழில் முறையே *தழீஇ, தழீஇனான், தழீஇயான்* என்ற வாய்பாட்டினவாகத் திரிந்து வழங்கும். இந்த வடிவங்கள் உருபனியல் நோக்கில் *தழீ-இ, தழீ-இன்-ஆன், தழீ-இய்-ஆன்* என்று ஆராயப்படும். இவற்றுள் *தழீ-இன்* என்ற வாய்பாட்டு இறந்தகாலப் பகுதிகள் *தழீஇயின்* என்ற வாய்பாட்டிலும் நிகழும் போக்கினைப் பழந்தமிழ் மற்றும் பின் பழந்தமிழ் இலக்கியங்களில் காணமுடிகிறது. இந்த வடிவமாற்றம் ஏடுபெயர்த்து எழுதுவோரால் நிகழ்ந்ததா அல்லது மூல ஆசிரியர்களால் நிகழ்த்தப்பட்டதா என்பது சிந்தனைக்குரியதாகும். யார் இந்த வடிவமாற்றத்துக்குக் காரணமாக இருந்தாலும், அவர்கள் ஒரு தவறான மரபைத் தோற்றுவித்தவர்களாகவே கருதப்படுவர். ஏனெனில் *தழீஇயின்* வாய்பாட்டு இறந்தகாலப்

---

9. ஐகார ஈற்று வினையடிகளை அடுத்து *இ, இன்* இறந்தகால விகுதிகள் (எ-டு: *கலைஇ* (அகம். 266.5), *தைஇனர்* (கலி. 102.6)) மெய்யொலி இடையீடின்றி நேரடியாகப் புணர்வதைக் கருதுகையில் இந்த வினையடிகளின் தொன்மை வடிவம் வேறாக இருக்க வாய்ப்புள்ளதா என்று ஐயுறத் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, *கலைஇ* என்பதன் அடிநிலை வடிவத்தை **கலைகி* (< *கலைகு+இ) என்று கொள்ள வாய்ப்பிருக்குமானால் *கலை* என்பதன் தொல்வடிவம் **கலைகு* என்று கருதப்படும். *களைகுவை* (கலி. 11.24) என்ற வினையமைப்பில் *களைகு* வினையடியாக அமைவதைக் கருதுக. *கலைஇ* என்பதன் அடிநிலை வடிவம் **கலைகி* எனக் கொள்ளத்தக்கதாயின் பிந்தியது முந்தியதாகத் திரியுமாற்றினை **கலைகி > கலைஇ* எனக் குறிப்பிடலாம். *கலை* (= கலய்) என்பதில் ஐகாரம் மரபிலக்கண மரபுப்படி நெடில் ஆகையால் கலைகி என்பதில் உள்ள ககர உரசொலியின் வீழ்ச்சி மேற்படி நெடிலை எந்த வகையிலும் பாதிக்கவில்லை. கருதுக: *வினாவி > வினாய்* (சீவ. 2556). ஆனால் மொழியியல் அடிப்படையில் ஐகாரம் அய் என்பதன் வரிவடிவமாகலின் அதனை நெடிலாகக் கொள்ள முடியாது. இதனைக் கருத்தில் கொண்டு **கலய்கி > கலய்0இ (= கலய்இ/கலைஇ)* என்றும் *கலைஇ* என்பதன் அமைப்பை ஆராய வாய்ப்புள்ளது.

பகுதிகளின் அடியாகத் தோன்றியமையும் வினையமைப்புகளின் வினைப்பகுதிகள் *தழீஇ என்று அறியப்பட வேண்டிய ஒரு நிலை ஏற்படுவது தவிர்க்க முடியாமல் போய்விடுகிறது. எடுத்துக்காட்டாக *தழீஇயினான்* என்ற வினைமுற்று வடிவம் **தழீஇ-இன்-ஆன்* என்ற அமைப்பினதாகக் கருதப்படும். இந்த அமைப்பில் நிகழும் *தழீஇ* என்பது வரிவடிவில் அப்படி இருந்தாலும் எழுத்தியல் நோக்கில் இது *தழீ* என்ற ஒலிப்பினை உடைய வடிவமாகவே கருதப்படும். அப்படிக் கருதத் தவறினால் *தழீஇனான்* என்பதை இரண்டு யாப்பசைகளைக் கொண்டதாகவும், அதாவது *தழீ-இனான்* என்ற அமைப்பினதாகவும், *தழீஇயினான்* என்பதைத் *தழீ-இயின்-ஆன்* என்று மூன்று யாப்பசைகளைக் கொண்ட அமைப்பினதாகவும் கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டு விடும். உருபனியல் அடிப்படையில் **தழீஇனான்* என்பதே சரியான பாடம். இந்த வகையில் பழந்தமிழ் நூல்வடிவங்களும், மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட சரியான மூலபாட வடிவங்களும் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

28.

| வ.எண் | நூல் வடிவம் | மீட்டுருவாக்க வடிவம் |
|---|---|---|
| 1. | அறீஇயினென் (கலி. 140.30) | *அறீஇனென் |
| 2. | இரீஇயினர் (சீவக. 2433) | *இரீஇனர் |
| 3. | இரீஇயினார் (சீவக. 2463) | *இரீஇனார் |
| 4. | இரீஇயினள் (சீவக. 2445) | *இரீஇனள் |
| 5. | உறீஇயினர் (பெருங்.1.56.51) | *உறீஇனர் |
| 6. | உறீஇயினள் (நற். 8.5) | *உறீஇனள் |
| 7. | உறீஇயினான் (கலி. 42.24) | *உறீஇனான் |
| 8. | ஓரீஇயின (பதி. 21.34) | *ஓரீஇன |
| 9. | ஓரீஇயினென் (பெருங். 1.36.152) | *ஓரீஇனென் |
| 10. | கழீஇயினான் (சீவக. 2356) | *கழீஇனான் |
| 11. | கழீஇயின்று (பரி. 20.5) | *கழீஇன்று |
| 12. | குழீஇயின (பத்துப். 10.137) | *குழீஇன |
| 13. | குழீஇயினர் (பரி. திரட்டு. 2.70) | *குழீஇனர் |
| 14. | குழீஇயினார் (சீவக. 2328) | *குழீஇனார் |
| 15. | கெழீஇயினர் (அகம். 93.2) | *கெழீஇனர் |
| 16. | கெழீஇயினார் (சீவக. 2756) | *கெழீஇனார் |
| 17. | கெழீஇயினாள் (சீவக. 1386) | *கெழீஇனாள் |
| 18. | கொளீஇயினிர் (பெருங்.1.56.104) | *கொளீஇனிர் |
| 19. | செலீஇயினான் (பழமொழி 105) | *செலீஇனான் |
| 20. | தழீஇயின (தொல்.சொல்.சேனா17) | *தழீஇன |
| 21. | தழீஇயினர் (கலி.94.24) | *தழீஇனர் |

| வ.எண் | நூல் வடிவம் | மீட்டுருவாக்க வடிவம் |
|---|---|---|
| 22. | தழீஇயினார் (சீவக. 2341) | *தழீஇனார் |
| 23. | தழீஇயினன் (குறுந். 359.5) | *தழீஇனன் |
| 24. | தழீஇயினான் (சீவக.228) | *தழீஇனான் |
| 25. | தழீஇயினும் (நற். 330.7) | *தழீஇனும் |
| 26. | தழீஇயினேன் (அகம்.49.7) | *தழீஇனேன் |
| 27. | தைஇயினார் (பரி. 20.27,28,29) | *தைஇனார் |
| 28. | நினைஇயின (கலி. 15.23) | *நினைஇன |
| 29. | பரீஇயனள் (அகம். 306.13) | *பரீஇனள் |
| 30. | வழீஇயினும் (தொல்சொல்சேனா15) | *வழீஇனும் |

மேலே (28) இல் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ள மூல பாடங்கள் சரியானவை என்பதை உறுதி செய்யும் வகையில் பழந்தமிழில் நிகழும் *தைஇனர்* (கலி.102.6), *மதைஇனள்* (கலி.109.5), *ஓரீஇனன்* (குறுந். 203.5), *உறீஇனான்* (சீவக. 2247) என்ற வினை வடிவங்களைக் கருத்தில் கொள்க. நெடிலும் குறிலும் மயங்கிய இத்தகைய வடிவங்களின் வரலாற்று உண்மையை அறியாமல் இடையே ஓர் யகரமெய்யைச் செருகியது தமிழ்ப்புலமைக்கு நேர்ந்த ஓர் விபத்தாகவே கருதப்படும்.

### 17.12 ஈஇய(ர்) வினைகள்

பழந்தமிழிலும் காப்பியத்தமிழிலும் *ஈஇயர்* மற்றும் *ஈஇய* ஈற்று முற்றுவினைகள் வியங்கோட் பயனிலையாகவும், செயவென் வாய்பாட்டு வினைகளோடு உறழும் எதிர்வெச்சமாகவும் (Infinitive) நிகழ்கின்றன. பின்வரும் பட்டியலில் இந்த வினைகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

### 17.13 ஈஇயர் ஈற்று வியங்கோட் பயனிலை

| வ.எண் | நூல்வடிவங்கள் |
|---|---|
| (1) | உணீஇயர் (பதி. 49.3) |
| (2) | செலீஇயர் (குறுந். 292.6, ஐங்.215.2, நற்.286.4, புறம். 24.25) |
| (3) | நிலீஇயர் (புறம்.166.34, 375.16) |
| (4) | படீஇயர் (நற். 58.4) |
| (5) | பெறீஇயர் (குறுந். 75.4, 83.2) |
| (6) | வெலீஇயர் (புறம். 202.17) |

## 17.14 ஈஇயர்/ஈஇய ஈற்று எதிர்வெச்சங்கள்

| வ.எண் | ஈஇயர் ஈற்று வினைகள் | ஈஇய ஈற்று வினைகள் |
|---|---|---|
| 1. | இறீஇயர் (குறுந். 255.6) | அறீஇய (கலி. 84.27) |
| 2. | உடீஇயர் (அகம். 59.5) | உணீஇய (அகம். 321.7, ஐங். 268.2, கலி. 105.21, நற். 384.4, பத்துப். 10.54, பதி. 21.9, சிலம்பு. 27.219, பெருங். 3.27. 143, மணி. 18.60) |
| 3. | உணீஇயர் (அகம்.59.7, குறுந். 27.4, 56.3;பதி.36.7, புறம்.174.19) | இடீஇய (பெருங். 1.36.161) |
| 4. | கொடீஇயர் (குறுந். 51.5) | ஓரீஇய (பதி. 64.19) |
| 5. | செலீஇயர் (அகம். 55.14, குறுந். 117.3, நற். 390.6) | குழீஇய (குறுந். 139.3) |
| 6. | திரீஇயர் (பெருங். 1.36.173) | கொடீஇய (பெருங். 1.32.31, 1.56.122) |
| 7. | தொடீஇயர் (கலி. 94.35) | கொளீஇய (ஐங். 216.3, குறுந். 251.6, நற்.42.2, பெருங். 1.50.49, 3.4.42) |
| 8. | படீஇயர் (குறுந். 10.2, நற்.82.9) | செகீஇய (நற். 29.4) |
| 9. | பணீஇயர் (நற். 10.6) | செரீஇய (குறுந். 92.4) |
| 10. | புகீஇயர் (பெருங்.3.13.35) | செலீஇய (அகம். 152.3, நற். 159.7, 254.5) |
| 11. | பெறீஇயர் (அகம். 222.12, நற்.111.2, 320.4, குறுந். 367.4) | தரீஇய (அகம். 199.11, குறுந். 269.5, பதி.52.3) |
| 12. | மிகீஇயர் (பதி. 28.11) | தழீஇய (குறுந். 45.2) |
| 13. | | தெரீஇய (அகம். 22.14) |
| 14. | | தொடீஇய (அகம். 394.11) |
| 15. | | பெறீஇய (அகம். 242.15) |
| 16. | | வகீஇய (பெருங்.1.34.228) |
| 17. | | வெலீஇய (பத்துப்.5.57) |

## 17.15 ஈய(ர்) வினைகளின் அடிநிலை வடிவங்கள்

17.15.1 *ஈஇய(ர்)* வினைகள் **செய்கிய(ர்)* வாய்பாட்டு அடிநிலை வினைகளின் திரிபுகளாகும். இந்த அடிநிலை வினைகள் செய்கு வாய்பாட்டு வினையடிகளின் மீது தோன்றியமைந்தவை யாகும். சில *ஈஇய(ர்)* வினைகளின் வினையடிகளைத் தெளிவாக இனங்காண முடியவில்லை. இத்தகைய வினைகளில் சில செய்கு வாய்பாட்டு வினையடிகள் மீதும், சில செய்வு வாய்பாட்டு வினையடிகள் மீதும் தோன்றியவையாகக் கருத வாய்ப்புள்ளது.

17.15.2 செய்கு வாய்பாட்டு வினையடியாகத் தோன்றியமைந்த ஈய(ர்) ஈற்று வினைகளின் அடிநிலை வடிவங்களும் அவற்றின் திரிபாகிய இடைநிலை வடிவங்களும் இறுதியாக வழக்குநிலை வடிவங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இந்த ஆய்விலும் உரசொலிக் கேட்டினைத் தொடர்ந்து முந்துயிரானது பிந்துயிரின் இன நெடிலாகத் திரிகிறது.

31

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவங்கள் | | வழக்குநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| | | உ>இ/–இ | க்>0/இ–இ | |
| 1 | *உணுகியர் | உணிகியர் | உணி0இயர் | உணீஇயர் |
| 2 | *செலுகியர் | செலிகியர் | செலி0இயர் | செலீஇயர் |
| 3 | *படுகியர் | படிகியர் | படி0இயர் | படீஇயர் |
| 4 | *பெறுகியர் | பெறிகியர் | பெறி0இயர் | பெறீஇயர் |
| 5 | *வெலுகியர் | வெலிகியர் | வெலி0இயர் | வெலீஇயர் |
| 6 | *திரிகியர் | .................... | திரி0இயர் | திரீஇயர் |
| 7 | *தொடுகியர் | தொடிகியர் | தொடி0இயர் | தொடீ இயர் |
| 8 | *பணிகியர் | .................... | பணி0இயர் | பணீஇயர் |
| 9 | *புகுகியர் (?) | புகிகியர் | புகி0இயர் | புகீஇயர் |
| 10 | *மிகுகியர்(?) | மிகிகியர் | மிகி0இயர் | மிகீஇயர் |
| 11 | *அறிகிய | .................... | அறி0இய | அறீஇய |
| 12 | *கொளுகிய | கொளிகிய | கொளி0இய | கொளீ இய |
| 13 | *செகுகிய (?) | செகிகிய | செகி0இய | செகீஇய |
| 14 | *செருகிய | செரிகிய | செரி0இய | செரீஇய . |
| 15 | *தருகிய | தரிகிய | தரி0இய | தரீஇய |
| 16 | *தெரிகிய | .................... | தெரி0இய | தெரீஇய |
| 17 | *தொடுகிய | தொடிகிய | தொடி0இய | தொடீஇய |
| 18 | *வகுகிய (?) | வகிகிய | வகி0இய | வகீஇய |

17.15.3. *ஓரீஇய* (பதி. 64.19), *குழீஇய* (குறுந். 139.3), *செகீஇய* (நற். 29.4), *வகீஇய* (பெருங். 1.34.228) ஆகியவை முறையே **ஒருவு*, **குழுவு*, **செகுவு*, **வகுவு* ஆகிய வினையடிகளின் மீது தோன்றியன வாகக் கருதமுடியுமா என்பது ஆய்வுக்குரியது. இப்போதைக்கு இவற்றின் அடிநிலை வடிவங்களை **ஒருவிய*, **குழுவிய*, **செகுவிய*, **வகுவிய* எனக் கருதலாம். ஆயினும் இவை மறு பரிசீலனைக்கு உரியவை. *இறீஇயர்* (குறுந். 255.6) *உடீஇயர்* (அகம். 59.5), *கொடீஇயர்* (குறுந். 51.5) ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களும் ஆய்வுக்குரியவை. இவற்றின் வினையடிகள் **இறுகு* **உடுகு*, **கொடுகு* என்றோ **இறுவு*, **உடுவு*, **கொடுவு* என்றோ இருக்க வேண்டும்.

17.15.4. *ஈஇய(ர்)* ஈற்றுவினைகளின் அடிநிலை வடிவங்கள் *இய(ர்)* ஈற்றினவாகக் கருதத்தக்கவையாகும். *இய(ர்)* ஈற்றுவினைகள் *செய(ர்)* வாய்பாட்டு வினைகளினின்றும் தோன்றியவையாகும். பழந்தமிழில் *அர்* ஈற்று வினைகளின் நிகழ்ச்சியும் காணப்படு கிறது. எ-டு : *அழியர்* (அகம். 212.21), *தெளியர்* (அகம். 303.16), *தேயர்* (நற். 197.4), *பொலியர்* (புறம். 387.14), *முடியர்* (புறம். 171.7), *எறியர்* (பதி. 52.22). இவற்றுள் முதல் அய்ந்தும் வியங்கோட் பயனிலையாகவும், *எறியர்* என்பது *எறிய* என்பதனுடன் உறழ்ந்து எதிர்வெச்சமாகவும் செயல்படுகின்றன. *செய(ர்)* வாய்பாட்டு வினைகளினின்றும் *இய(ர்)* ஈற்று வினைகள் தோன்றிய நிகழ்ச்சி இந்த ஆய்வில் விரிவாக மேற்கொள்ளப்படவில்லை. *செய்யிய* வாய்பாட்டு வினைகள் முதலில் வல்வினை சார்ந்த செயவென் வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியனவாகும் (கோதண்டராமன் 2002அ: 146 & 147). இதேபோல் *செய்யியர்* வாய்பாட்டு வினைகளும் **செயர்* வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவையாகக் கொள்ளத்தக்கனவாகும். இதே போல் *செய்யியர்* வாய்பாட்டு வினைகளும் *செயர்* வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும்.

### 17.16 சீர் குலைந்த சீர்

தமிழ் யாப்பியலில் சீர் என்பது அசைகளின் மயக்கமாகும். தொல்காப்பியரின் யாப்பியல் அசை (prosodic syllable) பற்றிய கோட்பாடு நிரை, நேர், நிரைபு, நேர்பு என நால்வகை அசைகளைக் கருத்தில் கொண்டதாகும். குற்றுகர ஈற்றுச் சொற்களும் (எ-டு : காம்பு, கம்பு, காடு, கரும்பு, அழகு), உகரச் சாரியையை ஈற்றில் கொண்ட சொற்களும்[10] (எ-டு : கதவு, உறவு, அளவு) நேர்பசை, நிரைபசைச் சொற்களாகத் தொல்காப்பியரால் இனங்காணப்பட்டன. பிற்காலத்தில் நேர்பும் நிரைபும் வழக்கிழந்து நேர்பசையானது நேர்- நேர் எனவும் நிரைபசையானது நிரை-நேர் எனவும் அலகிடும் நிலை ஏற்பட்டது.[11]

---

10. *கதவு, உறவு* முதலான சொற்களின் ஈற்றில் நிகழும் உகரமானது புணர்ச்சியில் உயிர்முன் கெடுவதால் இந்த ஆய்வில் இது சாரியையாகக் கருதப்படுகிறது. *கூவு, சாவு, தூவு, தாவு* முதலானவற்றில் நிகழும் ஈற்று உகரத்துக்கும் இது பொருந்தும். *எண்ணு, தள்ளு, பின்னு* முதலான வற்றின் ஈற்றில் நிகழும் உகரமும் புணர்ச்சியில் கெடுவதால் இதுவும் சாரியையாகவே கொள்ளத்தக்கதாகும்.

11. நேர்பும் நிரைபும் முறையே நேர்-நேர், நிரை-நேர் எனப் பிற்காலத்தில் அலகிடப்பட்டதற்குக் காரணம் குற்றுகரம் என்பது இலக்கண அளவில் ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் நடைமுறையில் அது *கதவு, உறவு* என்பதில் உள்ள உகர ஈற்றைப் போல் சாரியையாகக் கருதப்பட்டதேயாகும். இக்காலத் தமிழில் குற்றுகரத்தைச் சாரியையாகக் கொள்வதே பொருந்தும். காரணம் *கதவு, எண்ணு* முதலானவற்றில் உள்ள ஈற்றுகரமும் *காடு, பாட்டு, எஃகு* முதலானவற்றில் உள்ள ஈற்று உகரமும் புணர்ச்சியில் உயிர் முன் கெடுகின்றன.

தொல்காப்பியரின் அசைக் கோட்பாட்டின்படி காம்பு, கரும்பு இரண்டும் முறையே நேர்பசையும் நிரைபசையைம் ஆகும். இத்தகைய சொற்கள் பிற்காலத்தில் நேர்-நேர் எனவும் நிரை-நேர் எனவும் அலகிடப்பட்டன. சங்கப் பாடல்கள் தோன்றிய காலத்தில் நேர்பசையும் நிரைபசையும் யாப்பில் பெரிதும் போற்றப்பட்டன. ஆயினும் இந்த மரபு சங்கப்பாடல்களிலேயே மீறப்பட்டும் உள்ளது. பின்வரும் எடுத்துக்காட்டுகளைக் கருதுக.

*(32) அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது (அகம். 90.9)*

*(33) யாயொடு நனிமிக மடவை முனாஅது (நற். 162.8)*

*(34) வீழ்குடி யுழவன் வித்துண் டாஅங்கு (புறம். 230.13)*

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *குணாஅது, முனாஅது, டாஅங்கு* ஆகிய ஈற்றுச் சீர்கள் மாச்சீர்களாகும். இவற்றுள் *குணாஅது, முனாஅது,* இரண்டும் முறையே **குணவது, *முனவது* என்பவற்றின் திரிபுகளாகும். எனவே இவற்றில் நிகழும் உயிர்நெடிலை யாப்பமைதி நோக்கி அளபெடுத்த ஒன்றாகக் கருத முடியாது. ஆனால் *உண்டாங்கு* என்ற வினைத்தொடரானது (34) இல் பிளவுபட்டு *உண்* என்பது முந்தைய சீரின் உறுப்பாகவும் *டாங்கு* என்பது ஈற்றுச் சீராகவும் நிகழும் நிலை ஏற்படுகிறது. *டாங்கு* என்பது தொல்காப்பியரின் அசைக்கோட்பாட்டின்படி நேர்பசையாகும். அகவலுக்குரிய சீரமைப்பு குலைவதால் *டாங்கு* என்பது *டாஅங்கு* என்று அமைக்கப்பட்டு மாச்சீராக அலகிடப் படுகிறது. இங்கே *டாஅங்கு* என்பது செய்யுளிசை அளபெடையாகக் கருதப்படும். இந்தப் பின்னணியில் பின்வரும் எடுத்துக்காட்டுக் களையும் கருத்தில் கொள்க.

*(35) கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது (அகம். 4.14)*

*(36) எழுவினி வாழியென் னெஞ்சே முனாது (குறுந். 11.4)*

*(37) உழுத நோன்பகடு அழிதின் றாங்கு (புறம். 125.7)*

தொல்காப்பியர் போற்றிய அசைக் கோட்பாட்டின்படி இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *குணாது, முனாது, றாங்கு* ஆகிய ஈற்றுச் சீர்களுள் முதல் இரண்டும் நிரைபசையாகவும் இறுதி வடிவம், அதாவது *றாங்கு* என்பது நேர்பசையாகவும் கருதப்படும். இதன்படி மேற்படி எடுத்துக்காட்டுக்களில் ஈற்றுச் சீர் ஓரசைச் சீராய் அமைந்து யாப்பமைதி கெடும் நிலை ஏற்படுகிறது. தொல்காப்பிய மரபினின்றும் மாறுபட்டு இவற்றை மாச்சீர் களாகக் கொண்டால் யாப்பமைதி போற்றப்படுகிறது. அப்படி யானால் தொல்காப்பியரின் அசைக் கோட்பாடு சங்கப்பாடல்கள்

தோன்றிய காலத்திலேயே மீறப் பட்டுவிட்டதா? ஆம் என்றால் (35) முதல் (37) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *குணாது, முனாது, றாங்கு* ஆகியவை மாச்சீர்களாகக் கொள்ளப் பட்டு யாப்பமைதி போற்றப்படுவதாகக் கருதப்படவேண்டும். மீறப்படவில்லை யென்றால் இந்த வடிவங்களின் மூலபாடத்தை முறையே **குணாஅது, *முனாஅது, *றாஅங்கு* என்று மீட்டுரு வாக்கம் செய்ய வேண்டும். இரண்டாவது நிலை ஏற்றுக் கொள்ளப்பட்டால் ஏடுபெயர்த்து எழுதுவோரால் (அல்லது பாடலாசிரியர்களால்) பிறழ உணரப்பட்டதன் விளைவாக இந்த மூல பாடங்கள் *குணாது, முனாது, றாங்கு* என அமைந்தனவாதல் வேண்டும். தொல்காப்பியம் உட்பட பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் யாப்பியல், மொழியியல் அடிப்படையில் கவனமாக ஆராயப்பட்டுச் செம்பதிப்புகளைக் காலம் தாழ்த்தாமல் கொண்டு வருவது தமிழுக்குச் செய்யும் பெருந்தொண்டாக அமையும். அரசும் இலக்கணப்புலவர்களும் இதனைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

## 17.17 மீண்டும் ஓர் இடைப்பிறவரல்

17.17.1 மேலே குறிப்பிட்ட இறந்த கால வினைகள் தொடர்பான மீட்டுருவாக்கம் ஒரு புதிய நோக்கில் இறந்த கால வினைகளை ஆராய வகை செய்கின்றன. தமிழில் இரண்டு வகையான இறந்தகால இடைநிலைகள் காணப்படுகின்றன. ஒன்று, உயிர் வகையினவாகிய *இ* (<இய்), *இன்* ஆகும். பிறிதொன்று மெய்வகையினதாகிய தகரமெய்யாகும். வினைப் பகுதிக்கு ஏற்ப தகரமெய் தனித்தோ (எ-டு: செய்து, பெய்து, கொய்து, நெய்து, எய்து, வைது, அழுது, உழுது, தொழுது, பொருது ஆகியன), நகர மெய்யைத் தொடர்ந்தோ (எ-டு) அறிந்து, எழுந்து, விரைந்து முதலியன) தகரமெய்யைத் தொடர்ந்தோ (எ-டு: குடித்து, மறுத்து, கிளைத்து, கற்று (<*கல்த்து), கேட்டு (<*கேள்த்து) முதலியன) நிகழும். மெய் விகுதியாகிய தகரமும் உயிர்விகுதியாகிய *இ* (<இய்), *இன்* ஆகியவையும் ஒன்றின் திரிபாக இன்னொன்றைக் கொள்ள முடியாத நிலையில் ஒன்றுக்கொன்று மாறுபட்டு நிற்கின்றன. இதனால் இரண்டில் ஒன்று, அடிப்படையில் கால இடை நிலையாக இருக்க வரலாற்று நிலையில் வாய்ப்பில்லை என்பதும், வினையமைப்பில் நிகழ்ந்த மாற்றத்தால் அது இடம் பெயர்ந்து வந்து காலஇடைநிலையாகக் கருதப்படும் நிலை ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றன. பழந்தமிழில் காணப்படும் *முனைஇயான்* (கலி. 145.11), *கவைஇனன்* (ஐங். 409.1), *தைஇனர்* (கலி. 102.6) *உயிரினை*

(நற். 253.2) (=உயிர்த்தனை), *உயிரினள்* (நற். 115.3) (=உயிர்த்தனள்), *குடியினள்* (<*குடிஇனள்) (நற்.271.7) (= குடித்தனள்), *நினையினர்* (<*நினைஇனர்) (பத்துப்.10.266) (= நினைத்தனர்/நினைந்தனர்), *நினையினை* (<*நினைஇனை) (அகம். 379.5, நற்.253.4) (=நினைத்தனை), *மறையினள்* (<*மறைஇனள்) (அகம். 299.18, நற். 113.8) (=மறைத்தனள்), *தெறியினள்* (<*தெறிஇனள்) (அகம். 373.15) (=தெறித்தனள்), *மறையினென்* (<*மறைஇனென்) (அகம். 56.13) (=மறைத்தனென்), *மறையினை* (<*மறைஇனை) (அகம். 50.9) (=மறைந்தனை), *தடையின* (<*தடைஇன) (அகம். 199.17) (=வளைந்தன), *துடையினள்* (<*துடைஇனள் (நற். 120.8) (=துடைத்தனள்) மற்றும் **கலைஇ*(=கலைந்து/கலைத்து) வாய்பாட்டு வினையமைப்புகள் முதலான இறந்தகால வினைகளைக் கருதுகையில் தகரமெய்யை உண்மையான இறந்தகால விகுதியாகக் கொள்ள முடியவில்லை. *செய்தான்* என்பது பேச்சு வழக்கில் *செஞ்சான்/செய்ஞ்சான்* என்று நிகழ்வதைக் கருத்தில் கொண்டு அதனை **செய்ந்தான்* என மீட்டுருவாக்கம் செய்யலாம்.[12] எனவே **செய்ந்து, அறிந்து களைந்து, வாழ்ந்து* முதலான இறந்த கால வினைப்பகுதிகளில் நிகழும் நகர மெய்யும் *குடித்து, மறுத்து, கிளைத்து, கற்று* (<*கல்த்து), *கேட்டு* (<*கேள்த்து) முதலானவற்றில் கால இடைநிலையாகக் கருதப்படும் தகரத்தின் முன் நிகழும் தகரமெய்ப்பேறும் *இன்* என்ற இறந்தகால விகுதியின் எச்சங்களாகக் கருதத்தக்கனவாகின்றன.

17.17.2 செய்து வாய்பாட்டு இறந்தகால வினைப்பகுதிகளில் நிகழும் நகரமெய்யும் தகரப்பேறும் *இன்* என்பதன் எச்சங்களாயின் இவற்றில் கால இடைநிலையாகக் கருதப்படும் தகரமெய் தொடக்க நிலையில் பொதுவினை முற்று விகுதியாக (Impersonal Finite Marker) நிகழ்ந்திருக்க வேண்டும். இந்த வகையில் கன்னடத்தில் நிகழும் *கேளித்* (ke:Lid-) (Emeneau, M.B 1994:100) என்ற இறந்தகால வினைப்பகுதி கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இந்த வினைப்பகுதி *கேள்த்* (ke:Ld-) எனவும் கன்னடத்தில் ஒடுங்கும். *கேளித்-* என்பது **கேளிந்த்* என மீட்டுருவாக்கம் செய்யத்தக்க தாகும். *கேளித்-* என்பதன் தமிழ் வடிவம் *கேட்டு* (<கேள்த்து)

12. *கொய்து, பெய்து, நெய்து, வைது, பொருது, எய்து, உழுது, தொழுது, அழுது* ஆகிய இறந்தகால வினைப்பகுதிகளும் **செய்ந்தான்* (>செய்ஞ்சான்/*செஞ்சான், செய்தான்*) என்பதைப் போலவே **கொய்ந்து, *பெய்ந்து, *நெய்ந்து, *வைந்து* (= *வய்ந்து), **பொருந்து, *எய்ந்து, *உழுந்து, *தொழுந்து, *அழுந்து* என மீட்டுருவாக்கம் செய்யத்தக்கனவாகும்.

என்பதாகும். கன்னடத்தில் நிகழும் கேளித் என்பதும், தமிழில் நிகழும் கேட்டு என்பதும் ஒரே அடிநிலை வடிவத்தினின்றும் தோன்றியனவாகக் கருதத்தக்கவையாகும். இந்த அடிநிலை வடிவமானது *கேளிந்த்உ (ke:Lintu) (<*கேள்-இந்+து) என்று குறிக்கப்படும். இந்த வடிவத்தில் குற்றுகரம் ஊர்ந்த ஈற்றுத் தகர மெய்யானது நிலையொலித் தன்மையது (Voiceless Character) ஆகும். கன்னடத்தில் இது அலையொலித் தன்மையதாகத் திரிந்து கேளித் (Ke:Lid) - என்றும் கேள்த் - (ke:Ld) என்றும் அமைந்தது; தமிழில் நிலையொலித் தன்மையை இழக்காமல் கேட்டு (<கேள்த்து <கேளித்து < *கேளிந்த்உ) என்று அமைந்தது. இதனைக் கருத்தில் கொண்டு தொன்மை நிலையில் அறிந்து, குடித்து ஆகிய இறந்த கால வினைப்பகுதிகளின் அடிநிலை வடிவங்களை முறையே *அறி-ந்+து, *குடி -ந்+த்உ என்று அமைக்கலாம். இவற்றில் நிகழும் நகர மெய்யானது இன் என்ற இறந்தகால இடைநிலையின் மாற்றுருபாகிய னகரத்தின் திரிபாகும். முந்து (<முன்+து), பிந்து (<பின்+து), எந்தன் (<என்+தன்), உந்தன் (<உன்+தன்) ஆகியவற்றில் னகரம் நகரமாகத் திரிந்ததுபோல், *அறி-ந்+து, *குடி -ந்+த்உ என்பவற்றில் நிகழும் நகரமும் னகரத்தின் திரிபாய் அமைந்து, பிந்தியதில் இவ்வாறு திரிந்தமைந்த நகர மெய்யானது தகரமாகத் திரிந்து குடித்து என்ற வடிவம் தோன்றி அமைந்தது.[13] செயின் வாய்பாட்டு வினைகள் தொடக்கத்தில் இறந்தகால வினைப்பகுதி களாக நிகழ்ந்தன என்று கருதலாம். இந்தக் கருதுகோளின்படி கேள், அறி, குடி ஆகியவற்றின் தொன்மையான இறந்தகாலப் பகுதிகள் *கேளின், *அறின், *குடின் என்று நிகழ்ந்து இருக்க வேண்டும். இவை *கேளிம், *அறிம், *குடிம் ஆகியவற்றின் திரிபுகளாகக் கொள்ளத்தக்கனவா என்பது ஆய்வுக்குரியது.

17.17.3 தமிழில் தகரமெய் இறந்தகால இடைநிலையாக அமைந்த இறந்தகால வினைப்பகுதிகளின் வரலாறு மேலே

---

13. அறிந்து என்பதில் நகரமெய்யானது தகரமெய்யாகத் திரியாமைக்குக் காரணம் ஈற்றில் நிகழும் குற்றுகரத் தகரம் அலையொலியாக (Voiced Phone) நெகிழ்ந்ததாகும். குடித்து என்பதில் னகரமெய்யின் திரிபாகிய நகரமெய்யானது தகரமெய்யாகத் திரிந்தமைக்குக் காரணம் ஈற்றில் நிகழும் குற்றுகரத் தகரம் நிலையொலியாகவே இறுதிவரை நிலைபெற்றதனா லாகும். இந்த நிலையானது பிற திராவிட மொழிகளில் போற்றப்பட வேண்டும் என்ற நியதியில்லை. எடுத்துக்காட்டாக அறிந்து, குடித்து, உழுது, அழுது, பிடித்து ஆகிய வடிவங்கள் நேர்மாறாகக் கன்னடத்தில் முறையே aRidu/aRitu (<*aRittu), குடுடு (<*குடிது) (kuDudu<kuDidu), உத்து (.<*உழுத்து), அத்து (<*அழுத்து), (அழுத்து 'அழுது'), பிடிது (>hiDidu>hiDudu) (D.N.S. Bhat 1971:64) என நிகழ்கின்றன.

குறிப்பிட்டதுபோல் முற்றிலும் மாறுபட்ட ஒரு கோணத்தில் நின்று ஆராயத்தக்கதாகும். இது விரிவான தனி ஆய்வுக்கு உரிய தாகையால் இக்கட்டுரையில் இதுபற்றிக் கூடுதலாகச் சிந்திக்க வாய்ப்பில்லை. மாறுபட்ட சிந்தனைகளின் அடிப்படையில் அமைந்த இது தொடர்பான ஆய்வுகளை இந்த ஆய்வாளரின் ஆங்கிலக் கட்டுரை ஒன்றிலும் (R. Kothandaraman, 2001: 7-14)), தமிழ்க்கட்டுரை ஒன்றிலும் (இரா. கோதண்டராமன் 2002இ:15-44) காணலாம்.

## 17.18. இலக்கணிகள் பார்வையில் நெடில்–குறில் மயக்கம்

17.18.1. நெடில்-குறில் மயக்கமானது பழந்தமிழில் இரண்டு நிலைகளில் காணப்படுகின்றது. ஒன்று, மொழியில் இயல்பாக நிகழ்ந்த ஒலியனியல் மாற்றங்களால் தோன்றியமைந்தாகும். *தழீஇ (<தழுவி), காணூஉ (<காணுபு), தரூஉம் (<தருகும்), உண்பதூஉம் (உண்பதுவும்)* முதலானவற்றில் நிகழும் நெடில்-குறில் மயக்கம் இந்த வகையைச் சேர்ந்தது. இந்த வடிவங்களில் நிகழும் மேற்படி மயக்கம் யாப்பமைதி கருதியதன்று. யாப்பமைதி கருதிய நெடில்-குறில் மயக்கம் இரண்டாவது நிலையினதாகும். இது பற்றி ஏற்கனவே பேசப்பட்டுள்ளது. (காண்க : பகுதி-17.3). யாப்பமைதி கருதிய இத்தகைய மயக்கம் செய்யுளிசை அளபெடையாகக் கருதப்படும். இந்த மயக்கம் தமிழ் ஒலியனியல் மரபுக்கு இசைந்த தல்ல. வடமொழியில் மூன்று மாத்திரை அளவினதாகிய ஒலிகள் புலுதம் (Pluta) எனப்படும். புலுதமும் தமிழில் காணப் படும் செய்யுளிசை அளபெடையும் அசையமைப்பு நிலையில் ஒன்றெனக் கருதுவதற்கில்லை. ஆயினும் இவை இரண்டும் ஒன்றே என்ற உணர்வு தமிழ்ப் புலனெறி வழக்கில் அழுத்தமாகப் பிற்காலத்தில் பதிந்துவிட்டதை *அளவும் புலுதமும் அளபெடைப் பெயரே* (மு.வீ., எழுத்து. 33) என்ற நூற்பாவின் மூலம் உணரலாம். யாப்பமைதி கருதி அசையை மிகுவித்தற்கு ஓர் உத்தியாகப் பழந் தமிழில் காணப்படும் செய்யுளிசை அளபெடையானது புலுதத்தின் எதிர்மறைத் தாக்கமாகும். பிற்காலத் தமிழ் இலக்கியங்களில் செய்யுளிசை அளபெடையின் நிகழ்ச்சியும் செல்வாக்கும் படிப்படியாகக் குறைந்து பிறகு இல்லாமற்போய்விட்டதே இது தமிழ் மரபுக்கு அயலானது என்பதைப் புலப்படுத்தும்.

17.18.2 தொல்காப்பியரின் *நீட்டம் வேண்டின் அவ்வளபு டைய, கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்* (எழுத்து. இளம்.6) என்ற நூற்பாவும் *குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும், நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே* (எழுத்து. இளம்.41)

என்ற நூற்பாவும் செய்யுளிசை அளபெடையைப் பற்றி மட்டுமே பேசுவனவாகும். *எழூஉதல், தழீஇ, காணூஉ, வரூஉம்* முதலானவற்றில் காணப்படும் நெடில்-குறில் மயக்கத்துக்கும், தொல்காப்பியரின் மேற்படி நூற்பாக்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. மொழியில் இயல்பாக நிகழும் மாற்றங்களால் தோன்றியமையும் நெடில்-குறில் மயக்கத்தைக் கொண்ட வடிவங்கள் செய்யுளிசை அளபெடை வடிவங்களைப்போல் யாப்பமைதிக்கு இசைவாகவும் இருக்கலாம். இல்லாமலும் போகலாம். இசைந்து போதல் தற்செயல் நிகழ்ச்சி. பின்வரும் எடுத்துக்காட்டுகளைக் கருத்தில் கொள்க.

(38) பரீஇ வித்திய வேனற்
குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே (குறுந். 72.4,5)

(39) தேடூஉ நின்ற இரலை ஏறே (நற். 242.10)

இந்த எடுத்துக்காட்டுகள் இரண்டிலும் நிகழும் *பரீஇ* (=பருத்தி), *குரீஇ* (=குருவி), *தேடூஉ* (=தேடியவாறு) ஆகியவற்றில் உள்ள நெடில்-குறில் மயக்கம் செய்யுளிசை அளபெடையைக் குறித்ததாகக் கருத முடியாது.[14] ஆயினும் யாப்பியல் நிலையில் *பரீஇ, குரீஇ,* இரண்டும் *பரீ-இ, குரீ-இ* என்று செய்யுளிசை அளபெடை வடிவம் போல் அலகிடப்படும். ஆனால் *தேடூஉ* என்ற வடிவம் தே-டூஉ என்று தேமா வாய்பாட்டில் அமைந்த ஈரசைச் சீராகவே அலகிடப்படும். இதில் நிகழும் இறுதி உகரம் அலகு பெறாது. *தேடூஉ* என்பதைத் *தேடூ* என்று குறித்தாலும் யாப்பமைதி கெடாது. எனவே *தேடூஉ* என்பதில் உள்ள ஈற்று உகரம் அலகுபெறாமற் போய்விடுகிறது. இவ்வாறு நெடிலை யடுத்துக் குறிலாக நிகழும் அலகுபெறாத உயிரைக் கருத்தில் கொண்டு *அளபெடை அசைநிலை யாகலும் உரித்தே* (பொருள்.இளம்.325) என்று விதி வகுப்பார் தொல்காப்பியர். *தேடூஉ* என்பதில் ஈற்றில் நிகழும் உகரக் குறில் யாப்பியல் அடிப்படையில் அசைநிலையாகக் கொள்ளப்படும். ஆனால் மொழியியல் அடிப்படையில் இது மூவசைச் சொல்லாகும்.

## 17.19 அளபெடைக் குழப்பம்

17.19.1 பழந்தமிழில் நிகழும் *செய்யூஉ* வாய்பாட்டு வினைகள் செய்யுபு வினைகளின் திரிபாகும். ஒன்பது வகையான வினையெச்சங்களைத் தொகுக்கும் தொல்காப்பியர் (சொல்.சேனா. 228)

---

14. *பரீஇ, குரீஇ, தேடூஉ* ஆகியவை முறையே *'பருவி, 'குருவி, 'தேடுபு* என்பவற்றின் திரிபுகளாகும். இதுபற்றித் தலைமைக் கட்டுரையில் முன்னதாகப் பேசப்பட்டுள்ளது. (காண்க: (6)இலும், (22)இலும் உள்ள ஆய்வுகள்).

*செய்யூஉ* வாய்பாட்டு எச்சவினைகளைச் *செய்யூ* வாய்பாட்டின வாகக் குறிப்பிடுவார். பழந்தமிழில் *செய்யூஉ* வாய்பாட்டு வினை யெச்சங்களின் நிகழ்ச்சியைப் பற்றிய தனது ஆய்வில் ஐம்பத்தெட்டு இடங்கள் அளபெடையினைக் கொண்டும் ஐந்து இடங்கள் அளபெடை இன்றியும் காணப்படுகின்றன என்று குறிப்பிடுவார் அகத்தியலிங்கம் (1986:208). நெடில்-குறில் மயங்கும் சொல் வடிவங்கள் காலப்போக்கில் குறிலை இழந்து நெடிலுடன் அமைந்துவிட வாய்ப்புள்ளது. ஆயினும் சங்க இலக்கியங்களில் ஐந்து இடங்களில் *செய்யூஉ* வாய்பாட்டு வடிவங்களுக்குப் பதில் *செய்யூ* வாய்பாட்டு வடிவங்கள் நிகழ்வதற்குப் புலவர்களின் அல்லது ஏடு பெயர்த்து எழுதியோரின் கவனக்குறைவும் ஒரு காரணமாக இருக்கலாம்.

17.19.2 *செய்யுபு* வாய்பாட்டு வினைகள் முதலில் செய்யூஉ வாய்பாட்டினவாகத் திரியுமேயன்றிச் *செய்யூ* வாய்பாட்டினவாகத் திரிய வாய்ப்பில்லை. காரணம் *செய்யுபு* வாய்பாட்டு வினைகளைப் போலவே *செய்யூஉ* வாய்பாட்டினவும் மூவசையினவாக (செய்-யூ-உ) அமைகின்றன. செய்யூஉ வாய்பாட்டு வினைகளின் ஈற்றில் உள்ள உகரம் *செய்யுபு* வாய்பாட்டு வினைகளின் ஈற்றில் உள்ள உகரமாகும். அது அளபெடுத்த உகரமன்று. எனவே "செய்யூ வாய்பாட்டு விகுதி அளபெடை எடுத்தும், அளபெடை எடுக்காதும் வரும்" என்ற அகத்தியலிங்கத்தின் (1986:209) கூற்று உண்மைக்கு மாறுபட்டதாகும். *செய்யூஉ* வாய்பாட்டு வினைகள் அளபெடை வடிவங்களே அல்ல. உரையாசிரியர்கள் கூட இந்த வகையில் உண்மையைப் பிறழ உணர்ந்தவர்களாகவே காணப்படு வதை "இளம்பூரணரும் சேனாவரையரும் அளபெடையில்லாத செய்யூ வாய்பாட்டுச் சொற்களையும் பிற உரையாசிரியர்களில் நச்சினார்க்கினியர் இருவகைச் சொற்களையும் தெய்வச் சிலையார், கல்லாடனார் ஆகிய இருவரும் அளபெடைச் சொற்களையும் எடுத்துக்காட்டுகளாகத் தருவர்'' என்ற அகத்தியலிங்கத்தின் (1986:208) குறிப்பு உறுதிப்படுத்துகிறது. இதனின்றும் *செய்யூஉ* வாய்பாட்டு வினைகளின் வடிவத்தைச் *செய்யூ* வாய்பாட்டினவாகப் பிறழ உணரும் போக்கு ஒரு நீண்ட வரலாறாக அமைவதை அறியலாம்.

### 17.20 இன்னிசை அளபெடையும் இயல்பு வழக்கும்

17.20.1 செய்யுளிசை அளபெடை வடிவங்களில் நிகழும் நெடில்-குறில் மயக்கமும் இயல்பான ஒலியனியல் மாற்றங்களைத் தொடர்ந்து சொல்லமைப்புக்களில் நிகழும் நெடில்-குறில் மயக்கமும் ஒன்றல்ல என்ற உண்மை அறியப்படாமல் போனது

மரபிலக்கணிகளிடை தவறான இலக்கணச் சிந்தனைகளுக்கு வகை செய்துவிட்டது. இதன் விளைவாக *பலாஅப்பழம்* என்பதில் நெடிற்கீழ் நிகழும் அகரக் குறில் எழுத்துப்பேறளபெடை (இ.கொ. ஒழிபு.4, மு.வீ. எழுத்து.32) என்றும் *கெடுப்பதூஉம், வரூஉம், பழூஉ* என்பவற்றில் நிகழும் நெடிற்கீழ்க் குறிலானது இன்னிசை/குற்றெழுத்து அளபெடை (இ.கொ.ஒழிபு.4, மு.வீ. எழுத்து.32, நன்.எழுத்து.91 உரை) என்றும் மனம் போனபோக்கில் அளபெடைச் சிந்தனை அமைந்தது. புறநிலையில் நிகழும் நெடில்-குறில் மயக்கத்தைக் கருத்தில்கொண்டு இலக்கணக்கொத்தும், முத்துவீரியமும் அளபெடையைப் பலவாறாக வகைப்படுத்திய முயற்சியானது யாப்பியலை மட்டுமே கருத்தில் கொண்டதாகும்.[15] இந்த இலக்கண நூல்கள் குறிப்பிடும் அளபெடை வகைகள் தன்னிச்சையானவை; எந்த வகையான மொழியியல்/யாப்பியல் உந்துதலும் இல்லாதவை; தொல்காப்பிய மரபுக்கு முற்றிலும் மாறானவை. ஆகவே இவை மேற்கொண்ட அளபெடை ஆய்வினை நாம் முனைப்பாக எடுத்துக்கொள்ளவில்லை. மரபிலக்கணிகளால் அளபெடை வகைகளுள் ஒன்றாகக் கருதப்படும் இன்னிசை அளபெடையை மறுக்கும் தெட்சிணாமூர்த்தியின் (1976:667-672) ஆய்வு இங்கே கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

17.20.2 சங்க இலக்கியங்களில் *செய்யூஉம்* வாய்பாட்டு வினைகளும், திருக்குறளில் *செய்வதூஉம், செய்ததூஉம்* வாய்பாட்டு வினைகளும் பெருவழக்கினவாகும். எ-டு : *தரூஉம்* (குறுந். 90.5), *நகூஉம்* (கலி. 145.9), *புகூஉம்* (புறம். 266.5), *உண்பதூஉம்* (1079), *உடுப்பதூஉம்* (1079), *வென்றதூஉம்* (931), *கண்டதூஉம்* (1215). இவற்றுள் *தரூஉம், நகூஉம்* முதலான *செய்யூஉம்* வாய்பாட்டு வினைகளை "எந்த உரையாசிரியரும் அளபெடைக்கு எடுத்துக் காட்டவில்லை" எனக் குறிப்பிடும் தெட்சிணாமூர்த்தி (1976:668) மேலும் தொடர்கிறார்: "இவை பெரும்பான்மையான வழக்கினவாக இருந்தும் அவர்கள் காட்டாமையால் இவை அளபெடையல்ல வெனக் கருதியதாகத் தெரிகிறது. அவ்வாறெனின் *எடுப்பதூஉம்* போன்ற மூவசை வடிவங்கட்கும் இது பொருந்தும்". பிற்கால இலக்கணிகள் *செய்வதூஉம், செய்ததூஉம்* வாய்பாட்டு வடிவங்களை இன்னிசையளபெடை/குற்றெழுத்தளபெடை எனக் கருதினாலும் தெட்சிணாமூர்த்தி இதனை மறுத்துவிடுகிறார்.

15. முத்துவீரியமும், இலக்கணக்கொத்தும் அளபெடையை இயற்கை அளபெடை, செயற்கை அளபெடை, இன்னிசை அளபெடை/குற்றெழுத்து அளபெடை, எழுத்துப்பேறளபெடை, நெட்டெழுத்தளபெடை, சொல்லிசை அளபெடை எனப்பலவாக வகைப்படுத்தும் (நோக்குக: முவீ.எழுத்து 32, இகொஒழிபு. 4)

இயல்பு நெடிலை அடுத்து யாப்பமைதி கருதி அதன் இனக்குறில் அளபெடுக்கும் செய்யுளிசை அளபெடையைத் தவிர ஏனைய உயிரளபெடைகளை மறுக்கும் நமக்குத் தெட்சிணாமூர்த்தியின் மேற்படி ஆய்வு உடன்பாடேயாகும்.

17.20.3 ஆயினும் *தரூஉம், உண்பதூஉம்* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களை இனங்காண்பதில் தெட்சிணாமூர்த்தியின் அணுகுமுறை மாறுபடுகிறது. *ழகர வகரம் நீடிடன் உடைத்தே, உகரம் வருதல் ஆவயின் ஆன* (எழுத்து.இளம்.262) என்ற தொல்காப்பிய நூற்பாவை ஆதாரமாகக் கொண்டு மேற்படி வடிவங்களின் அடிநிலை வடிவங்களை முறையே **தரும், *உண்பதும்* எனக் கொள்கிறார் தெட்சிணாமூர்த்தி. *பழு* என்பதிலிருந்து *பழூஉ* என்பதை வருவிக்கும் தொல்காப்பியரின் ஆய்வானது புற நிறைவைக் கருத்தில் கொண்டதாகும். அக நிறைவைக் கருத்தில் கொண்ட நமது ஆய்வில் *பழூஉ* என்பதன் அடிநிலை வடிவம் **பழுவு* எனக் கொள்ளப்படும் என்பது குறித்து முன்பே பேசப்பட்டுள்ளது. **தரும், *உண்பதும்* ஆகியவற்றிலிருந்து *தரூஉம், உண்பதூஉம்* ஆகியவற்றை வருவிக்க முயல்வது தமிழ் எழுத்தியலுக்கு மாறுபட்டதாகும். எனவே, நெடில்-குறில் மயங்கும் இந்த வடிவங்களின் அடிநிலை வடிவங்களாக முறையே **தருகும், *உண்பதுவும்* என்பவை இனங்காணப்படுகின்றன. இவற்றில் உயிரிடை நிகழும் உரசொலிகளின் கேட்டினைத் தொடர்ந்து அவற்றின் முன் நிகழும் உகரக் குறில் இனநெடிலாகத் திரிகிறது. இவை எழுத்தியல் விளக்கத்துக்கு இசைந்த இயல்பான மாற்றங்களாகும். எனவே தெட்சிணாமூர்த்தியின் *தரூஉம், உண்பதூஉம்* ஆகியவற்றின் அடிநிலை வடிவங்கள் பற்றிய ஆய்வு நமக்கு உடன்பாடன்று.

17.20.4 வழக்கில் உள்ள ஒரு வடிவம் காலத்தால் முந்தியும் அதன் அடிநிலை வடிவம் காலத்தால் பிந்தியும் தோன்றிய இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கலாம். இலக்கியத்தில் இடம் பெறுவதைக் கொண்டு ஓர் வடிவம் காலத்தால் முந்தியது என்றோ பிந்தியது என்றோ கருதமுடியாது. *செய்வதுவும், செய்ததுவும்* வாய்பாட்டு வடிவங்கள் பக்தி இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன.[16] இவற்றின் நிகழ்ச்சி பழந்தமிழில் காணப்பட்டால்

---

16. இடைக்காலத் தமிழில் குறிப்பாக பக்தி இலக்கியங்களில் செய்வதுவும், செய்ததுவும் வாய்பாட்டு வடிவங்களின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

1. பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம் (திருவா.திருச்சாழல்.1)

பொன்மலர் நாற்றமுடையது போலாகும். இவற்றின் திரிபாகிய *செய்வதூஉம், செய்ததூஉம்* வாய்பாட்டு வடிவங்கள் திருக்குறளில் இடம்பெற்றுள்ளன. *செய்வதுவும், செய்ததுவும்* ஆகிய இரண்டு வாய்பாட்டு வடிவங்களும் கிளைமொழி வழக்குகளாகத் தோன்றுகின்றன. எனவே, இவை இலக்கியத்தில் இடம்பெறுவது கிளைமொழியின் செல்வாக்கைப் பொறுத்திருக்கிறது. கிளைமொழி வழக்குகள் காலத்தால் பிந்திய இல்க்கியங்களில் இடம்பெறுவதாலேயே அவற்றின் வரலாறு அவை இடம் பெற்ற இலக்கியங்களின் காலத்திலிருந்து தொடங்குவதாகக் கருத முடியாது. பேச்சு வழக்கில் கிளைமொழி வடிவங்களுக்கு ஓர் நெடிய வரலாறு இருப்பதற்கான வாய்ப்பை நாம் புறக்கணித்துவிட முடியாது. அதேபோல் பேச்சு வழக்கில் நிகழும் சொல்லமைப்புக் களின் வடிவத்தையும் தோற்றத்தையும் இலக்கிய வரலாற்றோடு மட்டுமே இணைத்து ஆராயவும் முடியாது.

## 17.21 மொழிவாணர் பார்வையில் நெடில்-குறில் மயக்கம்

*17.21.1* நெடில்-குறில் மயக்கத்தைப் பற்றி மரபிலக்கணிகளைத் தொடர்ந்து தெ.பொ. மீனாட்சிசுந்தரன் (Meenakshisundran, T.P. 1965:65&66)), செ.வை சண்முகம் *(1980:98-104)* ஆகிய மொழியியல் அறிஞர்களும் ஆராய்ந்துள்ளனர். இவர்களுடைய ஆய்வு செய்யுளிசை அளபெடை வடிவங்களில் - அதாவது இயல்பு நெடில் அளபெடுத்த வடிவங்களில் நிகழும் நெடில்-குறில் மயக்கம் பற்றியதல்ல என்பது குறிப்பிடத்தக்கது.

*17.21.2* நெடில்-குறில் மயங்கும் வடிவங்களில் நெடில் ஓர் அசையாகவும் குறில் ஓர் அசையாகவும் கருதத்தக்கவை என்று குறிப்பிடும் மீனாட்சிசுந்தரன் இந்த இரண்டும் அடிநிலை வடிவத்தில் இரண்டு ஒத்த குறில்கள் குறில்-குறில் (எ-டு: தழு-உ) என்று அமையும் எனவும், இப்படி மயங்கும் குறில்கள் புறநிலை யில் குறில்-உடம்படுமெய்-குறில் (எ-டு : தழுவு) என்றோ,

---

16ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

2. காய்ந்ததுவும் அன்றுகாமனை நெற்றிக் கண்ணினால்
பாய்ந்ததுவும் கழற்காலனைப் பண்ணினான் மறை
ஆய்ந்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
ஏய்ந்ததுவும் இமவான்மகள் ஒருபாகமே.
(சம்.தே. 2-ஆம் திருமுறை 212, அகத்தியான் பள்ளி-4)

இந்த எடுத்துக்காட்டுக்கள் செய்வதூஉம், செய்ததூஉம் வாய்பாட்டு வினைகளின் அடிநிலை வடிவங்கள் செய்வதுவும், செய்ததுவும் வாய்பாட்டு வடிவின என்பதை உறுதி செய்கின்றன.

உடம்படு மெய்யின் நிகழ்ச்சியின்றி முதல் உயிர்க்குறில் நெடிலாகி நெடில்- குறில் (எ-டு : *தழூஉ*) என்றோ அமையும் என்றும் துணிகிறார். (u+u for instance either remained as u(v)u~uvu when there was a glide, or became u: when there was no glide - p.65). இரண்டு உயிர்க் குறில்களுக்கிடையில் நிகழும் மெய்யானது கெடுகையில் உயிர்க்குறில் இரண்டும் நெடில்-குறில் என மயங்காமல் நெடிலாகத் திரியும் என்று ஓர் கருதுகோளையும் மீனாட்சிசுந்தரன் முன்மொழிகிறார். *பகல்* என்பது இந்தக் கருதுகோளின்படி *பால்* எனத் திரிவதாக அவர் குறிப்பிடுகிறார்.[17] *பகல்* என்பதைப் *பால்* என்பதற்கு அடிநிலைவடிவமாகக் கருதும் மீனாட்சிசுந்தரன் *தழூஉ* என்பதற்குத் *தழுவு* என்பதை அடிநிலை வடிவமாகக் கொள்ளத்தயங்குவது வியப்பாக உள்ளது.

17.21.3 பழந்தமிழில் *தழீஇ, காணூஉ* முதலான வடிவங் களிலும் நெடில்-குறில் மயக்கத்தின் நிகழ்ச்சி காணப்படுகிறது. மீனாட்சிசுந்தரன் இத்தகைய சொல்லமைப்புகளின் அடிநிலை வடிவங்களைப் பற்றி ஏதும் குறிப்பிடவில்லை. மொழியில் பல்வேறு வடிவங்களிலும் சொல்லமைப்புக்களிலும் நிகழும் நெடில்-குறில் மயக்கம் ஒரு பொதுமையான ஆய்வுக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும். இந்த அடிப்படையில் *பகல், மகன், மகள்* ஆகியவை முதலில் *பாஅல், மாஅன், மாஅள்* எனத்திரிந்து பின்னர் நெடிற் கீழ்க் குறிலை இழந்து *பால், மான் (அதிய-மான், சேர-மான்), மாள் (வேண்-மாள்/*சிலம்பு. 25.5, 28.51) என்று அமைந்தன எனக் கொள்வது ஒரு பொதுமையான ஆய்வின்பாற்பட்டதாகும்.[18] இதே போல் *தழுவு* என்பது வகர மெய்யை இழந்து **தழுஉ* என அமைந்து பின்னர் முதல் உகரக் குறில் இன நெடிலாகத் திரிந்து *தழூஉ* என்றாயிற்று எனக் கொள்வதும் ஆய்வின் ஒருமைப்பாட்டுத் தன்மையை முதன்மைப் படுத்துவதாகும். மீனாட்சி சுந்தரன் கருதுவதுபோல் *தழு+உ*

---

17. இரண்டு குறில்கள் புணர்ந்து நெடிலாகத் திரிவது தமிழ் எழுத்தியல் மரபுக்கு உகந்ததல்ல. இது வடமொழி மரபுக்கு ஏற்புடையது (பதப் புணர்ச்சியில் இந்த மாற்றமானது தீர்க்க சந்தி (எ-டு: பத+அம்புயம் > பதாம்புயம்)., குணசந்தி (எ-டு: நர+இந்திரன் > நரேந்திரன்) ஆகிய சந்தி வகைகளின் கீழ் ஆராயப்படும் (நன். 239. காண்டிகை உரை).

18. *பகல், மகன், மகள்* ஆகியவை *பாஅல், மாஅன், மாஅள்* என்ற இடைநிலை வடிவங்களின்றி நேரடியாகவே *பால், மான் மாள்* எனத் திரிந்தன என்பது வரலாற்று உண்மையாயின் மொழிவளர்ச்சியில் இதை ஒரு மாறுபட்ட படிநிலையாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

என்பது *தழூஉ* எனவாயிற்று என்றால் *தழீஇ* என்பதை இதே முறையில் விளக்கமுடியாமற் போய்விடும்.

17.21.4 *தழுவு, தழூஉ* இரண்டுக்கும் *தழு+உ* என்பதை அடிநிலை வடிவமாகக் கொண்டதற்கு மீனாட்சிசுந்தரன் தகுந்த காரணம் எதையும் குறிப்பிடவில்லை. குகைக் கல்வெட்டுக்களில் *செய்தான்* என்ற வினைமுற்று வடிவம் *செய்தாஅன்* என நிகழ்வதாகக் குறிப்பிடும் மீனாட்சிசுந்தரன் (MS.T.P. *1965:66*) இதன் அடிநிலை வடிவமாகச் **செய்த+அன்* என்பதை சுட்டுவார். இந்த ஆய்வில் *செய்தாஅன்* என்பதையோ *செய்தான்* என்பதையோ வருவிக்கப் போதிய எழுத்தியல் தடயமோ உந்துதலோ ஏதுமில்லை. *தழூஉ* என்பதைத் *தழு+உ* என்பதனின்றும் வருவிப்பதைப் போலவே *செய்தாஅன்* என்பதையும் *செய்த+அன்* என்பதனின்றும் வருவிக்க முற்படுகிறார் மீனாட்சிசுந்தரன். *தழூஉ* என்பதைத் *தழுவு* என்பதனின்றும் வருவிப்பதற்குப் போதிய எழுத்தியல் உந்துதல் உள்ளது. இந்த அடிப்படையில் *செய்தாஅன், செய்தான்* என்பவை மட்டுமல்ல *செய்தோன்* என்பதும் **செய்தவன்* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் வருவிக்கத்தக்கனவாகின்றன.[19] ஒரு பொதுமை யான ஆய்வுக்கு மீனாட்சிசுந்தரன் அணுகுமுறை உட்படாமை யால் அதனை நம்மால் வழிமொழிய முடியவில்லை.

*17.21.5.* இடைப்பிறவரலாக மீனாட்சிசுந்தரனின் இன்னொரு ஆய்வின் வலுவின்மையையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். பத்துப்பாட்டில் மூன்றாவது பாட்டாகிய சிறுபாணாற்றுப்படை யில் *ஆவியர் (3.86), ஓவியர் (3.122)* என்று இரண்டு குலமரபுகள் சுட்டப்படுகின்றன. இவற்றில் நிகழும் *ஆவி, ஓவி* என்ற இரண்டு பகுதிகளும் **ஆ-இ, *ஓ-இ* என்ற அடிநிலை வடிவங்களிலிருந்து வகர உடம்படுமெய் பெற்றுத் தோன்றியமைந்தன என்று மீனாட்சிசுந்தரன் (1965:66) குறிப்பிடுகிறார். உடம்படுமெய் நிகழாத நிலையில் **ஆ-இ, *ஓ-இ* ஆகியவற்றில் உள்ள இகரம் யகரமெய்யாய் அமைந்து *ஆய், ஓய்* என்ற வடிவங்கள் தோற்றம் கொள்வதாக மேலும் இவர் கருதுகிறார். இது உண்மையாயின் *போய், நடாய்* ஆகிய வினையெச்ச வடிவங்களை முறையே **போகி, *நடாவி* ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து பெறமுடியாமற் போய்விடும். ஒரு பொதுமையான ஆய்வைக்

---

19. *செய்தான்* என்பது **செய்தாஅன்* என்ற இடைநிலை வடிவத்தின் திரிபாகக் கொள்ளத்தக்கதாகும். நெடிற்கீழ்க் குறில் கெடுவது இன்னொரு படிநிலையின் வெளிப்பாடாகும்.

கருத்தில் கொண்டு *ஆய், ஓய்* இரண்டையும் *ஆவி, ஓவி* என்ற அடிநிலை வடிவங்களின் திரிபாகக் கொள்வதே பொருந்தும். இதன்படி, வகரமெய்க் கேட்டினைத் தொடர்ந்து நிகழும் *ஆ0இ, ஓ0இ* ஆகியவற்றில் உள்ள இகரம் யகரமாகத் திரிந்து *ஆய், ஓய்* ஆகியவை தோற்றம் கொண்டனவாகக் கருதப்படும். *ஆ0இ, ஓ0இ* ஆகியவற்றில் முந்துயிர் நெடிலாக இருப்பதால் எழுத்தியல் மாற்றம் ஏதும் அந்த இடத்தில் நிகழ வாய்ப்பில்லை. செய்யுளில் யாப்பமைதி கருதி *ஆய்* என்பது *ஆஅய்* (புறம். 127.6) என அமைவது மொழியியல் ஆய்வின் வரம்புக்கு அப்பாற்பட்டதாகும்.

*17.21.6* சண்முகத்தின் நெடில்-குறில் மயக்கம் பற்றிய ஆய்வும் (கிட்டத்தட்ட) மீனாட்சிசுந்தரனின் ஆய்வினை அடியொற்றிச் செல்வதாகவே காணப்படுகிறது. *துரூஉ* (அகம். 35.9) என்பதை அளபெடை வடிவமாகப் பிறழ உணரும் சண்முகம் "அளபெடை வடிவம் புறநிலையில் வருவதே தவிர புதைநிலையில் அதாவது புணர்ச்சிக்குரிய அடிப்படை வடிவத்தில் இரண்டு உயிராகவோ அல்லது உயிர்-மெய்-உயிர் என்ற எழுத்துத் தொடராகவோ இருக்கிறது" (1980:103) என்று குறிப்பிடுவார். இதனைக் கருத்தில் கொண்டு *துரூஉ* என்பதன் அடிநிலை வடிவமாக *துரு+உ* என்பதைக் கொள்வார் சண்முகம். *துரு+உ* என்பதிலிருந்து *துருவு* என்பதையும் *துரூஉ* என்பதையும் வருவிக்கும் சண்முகம், அடிநிலை வடிவத்தில் ஈற்றுக் குறிலாகிய உகரத்தை ஒலித்துணை உகரமாகக் கருதுவது (பக்.100) வியப்பாக உள்ளது. ஒலித்துணை உகரம் மெய்யொலியை அடுத்து நிகழுமே தவிர உயிரொலியை அடுத்து நிகழ்வதில்லை. இரண்டு குறில்கள் மயங்கும் நிலையைப் பற்றிப் பேசுகையில் "வரலாற்று நிலையில் ஒரு காலத்தில் இரண்டு உயிர்களும் உயிர்மயக்கமாக இருந்து, பின்னர் நெடிலாகவோ அளபெடையாகவோ மாறி பிறகே உடம்படுமெய் வந்திருக்க வேண்டும்" (பக்.101) என்று கூறுகிறார் சண்முகம். இது வெறும் யூகத்தின் அடிப்படையில் அமைந்த கூற்றாகும். இரண்டு குறில்கள் இயல்பாக மயங்குவதற்குச் சான்று ஏதும் இல்லை. *தழு+உ, துரு+உ* ஆகியவை மீனாட்சி சுந்தரனும், சண்முகமும் படைத்துக்கொண்ட செயற்கையான அடிநிலை வடிவங்களாகும். உடம்படுமெய் என்பது பெரும்பாலான வடிவங்களில் ஈற்றில் சொல்லின் ஒருங்கிணைந்த உறுப்பாக இருந்து ஒலிப்பழுத்தம் (Stress) குன்றிய நிலையில் கெட்டு மீண்டும் சந்தியில் இடம்பெறுவதாகக் கருதத்தக்கதாகும் (Kothandaraman, R. 1992:154) இரண்டு குறில்களின் மயக்கம் தமிழில் மெய்யொலியின் குறிப்பாக, உரசொலியின் கேட்டினால்

நிகழ்வதாகும். இத்தகைய குறில்-குறில் மயக்கமானது முதலில் நெடில்-குறிலாகத் திரிகிறது. (எ-டு: *துருவு > துரு0உ > துரூஉ*). பின்னர் நெடிற்கீழ்க் குறில் கெட்டு நெடில் மட்டுமே நிகழ்கிறது. (எ-டு: *செய்தவன்> செய்த0அன்> செய்தாஅன்> செய்தான்*). நெடில்-குறில் மயக்கமும், நெடிற்கீழ்க்குறிலின் வீழ்ச்சியும் இரண்டு படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும். எனவே, *துரூஉ* என்பதைத் *துரு+உ* என்ற ஒரு செயற்கையான அடிநிலை வடிவத்தினின்றும் வருவிக்கும் சண்முகத்தின் ஆய்வினை ஏற்புடையதாகக் கருத முடியவில்லை.

17.21.7 சண்முகத்தின் *இராஅ, இரவு* ஆகியவற்றை *இர+உ* என்பதனின்றும் வருவிக்கும் ஆய்வும் அமைவுடையதாகத் தோன்றவில்லை. *இரவரம்பாக* (குறுந். 387.3) என்ற தொடரில் நிகழும் *இர* என்ற வடிவத்தை ஆதாரமாகக் கொண்டு *இர+உ* என்ற அடிநிலைவடிவத்தை அமைத்து அதனின்றும் *இராஅ, இரா, இரவு* ஆகிய வடிவங்களை வருவிக்க முற்படுகிறார் சண்முகம். நிலை மொழியின் ஈற்றிலும் வருமொழி முதலிலும் உள்ள அசைகளில் ஒத்த மெய்கள் நிகழுமானால் நிலைமொழியின் ஈற்றசை மெய்கெட்டு நிலை மொழியின் வடிவம் சிதையும். இத்தகைய சிதைவு அசைக்கேடு (Haplology) என்று அறியப்படும். *இரவரின்* (நற். 292.8), *இரவந்தன்று* (அகம். 160.15), *இரவரன் மாலையன்* (பத்துப். 8.239), *இரவரம்பாக* (குறுந். 387.3), *இரங்குரல்* (புறம். 397.5), *அலங்காந்தள்* (கலி. 40.12) ஆகியவற்றில் நிகழும் *இர, இரம், அலம்* என்பவை முறையே *இரவு, இரங்கு, அலங்கு* என்பவற்றின் சிதைவாகும். இந்தச் சிதைவு புணர்ச்சி நிலையில் அசைக்கேட்டினால் நிகழ்ந்ததாகும். இவ்வாறு சிதைந்த வடிவங்களை அடிநிலை வடிவத்தில் அமைப்பது ஏற்புடையதன்று. ஆகவே, சண்முகத்தின் *இர+உ* என்ற அடிநிலைவடிவம் பிழையான ஒன்றாகும். இந்த வடிவத்தை *இர+அ* என ஓர் செயற்கை விதியின் மூலம் திரித்து அதனின்றும் *இராஅ, இரா* ஆகிய வடிவங்களை வருவிக்கும் சண்முகம், *இர+உ* என்பதில் உடம்படுமெய் பெய்து *இரவு* என்ற வடிவத்தைத் தோற்றுவிக்கிறார். *இராஅ* என்பதை அளபெடை வடிவமாகக் கொண்டு, உது உயிரோடு புணர்கையில் நெடிற்கீழ்க் குறில்கெட்டு *இரா* என்னும் வடிவம் தோன்றுவதாகக் கருதுகிறார் சண்முகம். எ-டு: *"இராஅ உடைத்தே > இரா உடைத்தே* (குறுந். 145.5). "இங்கு இராஅ என்ற அளபெடை வடிவம், 'அஉ' என்றே புணர்ச்சியின் அடிப்படை வடிவத்தில் உள்ளது; அளபெடையாக இல்லை என்பதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும்" (1980:102) என்று தன் ஆய்வை முடிக்கிறார் சண்முகம்.

*17.21.8.* மேலே குறிப்பிட்ட சண்முகத்தின் ஆய்வினை ஏற்றுக் கொண்டால் *நிலா/நிலவு, பலா/பலவு, விழா/விழவு, கனா/கனவு, உணா/உணவு, புறா/புறவு* முதலானவற்றை வருவிக்க முறையே **நில-உ, *பல-உ, *விழ-உ, *கன-உ, *உண-உ, *புற-உ* என்ற அடிநிலை வடிவங்களை அமைக்க வேண்டும். ஆனால் இத்தகைய அடிநிலை வடிவங்களில் நிகழும் *நில, பல, விழ, கன, உண, புற* ஆகிய வடிவங்களின் நிகழ்ச்சி தமிழிலாகட்டும் பிற திராவிட மொழிகளிலாகட்டும் எங்கும் காணப்படவில்லை. அப்படியானால் *இராஅ, இரா* ஆகியவற்றின் தோற்றத்தை எப்படி விளக்குவது? *பிடா, தளா* ஆகிய மரப்பெயர்களின் அடிநிலை வடிவங்கள் *பிடவு, தளவு* என ஏற்கனவே துணியப்பட்டது (பார்க்க. பகுதி-5). இதனைக் கருத்தில்கொண்டு *இரவு* என்ற அடிநிலை வடிவத்தினின்றும் *இரா* என்ற வடிவம் வருவிக்கப்படும். கருதுக: *இரவு> இர0உ, இராஉ > இரா.* மாற்று ஆய்வு: *இரவ் > இர0 > இரா.* இந்த ஆய்வில் *இரவு* என்பதில் உள்ள ஈற்று உகரம் சாரியையாகக் கொள்ளப்பட்டு தவிர்க்கப்படுகிறது. *இராஅ* என்பது யாப்பமைதி கருதி நெடில் அளபெடுத்த வடிவமாகும். இதில் நிகழும் நெடிற்கீழ்க்குறிலை மொழியியல் ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. இதனை நாம் கருத்தில் கொள்ளாவிட்டால் *நிலா, பலா, விழா, கனா, உணா, புறா* முதலானவற்றின் முந்தைய வடிவங்களாக ***நிலாஅ, பலாஅ, விழாஅ, கனாஅ, உணாஅ, புறாஅ*** ஆகியவற்றைச் சண்முகத்தின் ஆய்வுப்படி கொள்ள வேண்டி நேரிடும். இத்தகைய வடிவங்கள் செய்யுளிசை கருதிய அளபெடை வடிவங்களாகக் கருதத்தக்கனவேயன்றி இயல்பான எழுத்தியல் திரிபின் மூலம் தோன்றியனவாகக் கொள்ளத்தக்கனவல்ல.

### 17.22 நெடிற்கீழ்க்குறில் என்னவாயிற்று?

*17.22.1* இருகுறிலிடை நிகழும் உரசொலி கெடுவதால் அதன் முந்துயிர் (Pre-Fricative Vowel) பழந்தமிழில் உயிர் நெடிலாய்த் திரிவது பற்றியும் அது தொடர்பான பல்வேறு சிந்தனைகள் பற்றியும் இதுகாறும் விரிவாகப் பேசப்பட்டன. நெடிலாக்கம் என்பது உரசொலிக் கேட்டினால் மட்டுமே நிகழ்வதாகக் கருத முடியாது. அதே போல் நெடிலாக்கத்துக்குக் காரணமான மெய்யொலிக் கேடு குறிலிடை நிகழ வேண்டும் என்ற நியதியும் இல்லை. பழந்தமிழில் தனிக்குறிலையடுத்தும் றகர டகரங்கள் முன்பும் நிகழும் மருங்கொலிகளாகிய லகர ளகரங்கள் கெடுகையில் அவற்றின் முந்துயிர் (Pre-Lateral Vowel) நெடிலாகும் நிலை காணப்படுகிறது. *வெல், செல், கொல், கொள்* ஆகியவற்றின் அடியாகத் தோன்றியனவும் தகரமெய்யை இறவாக்கால (Non-

past) இடைநிலையாகக் கொண்டவையுமாகிய வினையமைப்பு களில் வினையடிக்குறில் நெடிலாகும் போக்கு பழந்தமிழில் மட்டுமே காணப்படும் நிகழ்ச்சியாகும். இத்தகைய வினை யமைப்புகளின் அடிநிலை வடிவங்களும், இடைநிலை வடிவங்களும் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

40

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவங்கள் | | நூல் வழக்கு |
|---|---|---|---|---|
| | | த்>[ற்,ட்]/[ல்,ள்]− | [ல்,ள்]>0/கு−[ற்,ட்] | |
| 1 | வெல்தல் (<வெலுதல்) | வெல்றல் | வெ0றல் | வேறல் (புறம். 45.6) |
| 2 | செல்தல் (<செலுதல்) | செல்றல் | செ0றல் | சேறல் (அகம். 221.14) |
| 3 | செல்தும் (<செலுதும்) | செல்றும் | செ0றும் | சேறும் (அகம். 143.9) |
| 4 | செல்தி (<செலுதி) | செல்றி | செ0றி | சேறி (குறுந். 268.1) |
| 5 | செல்திர் (<செலுதிர்) | செல்றிர் | செ0றிர் | சேறிர் (அகம். 81.15) |
| 6 | கொல்தல் (<கொலுதல்) | கொல்றல் | கொ0றல் | கோறல் (சிலம்பு 20.64) |
| 7 | கொள்தல் (<கொளுதல்) | கொள்டல் | கொ0டல் | கோடல் (குறுந் 62.1) |

17.22.2 அடிநிலை வடிவங்களில் குறிலையடுத்து நிகழும் -ல்ற்-, -ள்ட்- ஆகிய மெய்ம்மயக்கங்களைத் தமிழ் எழுத்தியல் தவிர்ப்பதால் இவற்றில் நிகழும் மருங்கொலிகள் கெடுகின்றன. இதனைத் தொடர்ந்து *வெறல், *செறல், *செறும், *செறி, *செறிர், *கொறல், *கொடல் ஆகிய இடைநிலைவடிவங்கள் தோன்றியமைகின்றன. அடிநிலை வடிவங்களின் அசையமைப்பின் கால அளவினின்றும் இடைநிலை வடிவங்களின் கால நீட்சி குறுகிவிடுவதால், இதனை ஈடுசெய்யும் வகையில் வினையடிகளில் நிகழும் தனிக்குறில் நெடிலாகத் திரிகிறது. இதன் விளைவாக *வேறல், சேறல், சேறும், சேறி, சேறிர், கோறல், கோடல்* ஆகிய வடிவங்கள் தோன்றியமைகின்றன.[20]

20. *வேறல், கோறல், சேறல், கோடல்* ஆகிய வடிவங்கள் பழந்தமிழில் காணப்பட்டாலும் இவை தொடர்பான புணர்ச்சி மாற்றங்கள் தமிழுக்கு இயல்பானவையாகத் தோன்றவில்லை. குறிப்பாக, குறில் நெடிலாகத் திரியும் புணர்ச்சியைக் கருதுகையில் இதனை முந்து தமிழுக்கு உரிய புணர்ச்சி விதியாகவே (Pre-Tamil Sandhi) கொள்ளத் தோன்றுகிறது.

*17.22.3* மேலே *(40)*இல் குறிக்கப்பெற்றுள்ள நூல் வழக்கினவாகிய வடிவங்கள் பற்றிய குமாரசாமி ராஜாவின் *(1973:525-529)* ஆய்வு சற்று மாறுபடுகிறது. இவருடைய ஆய்வில் மருங்கொலிகள் ஆய்தமாகத் திரிந்து பின்னர் அவ்வாறு திரிந்த ஆய்தம் கெடுகிறது. இதனைத் தொடர்ந்து குறில் நெடிலாகிறது. *வேறல்* என்பது எடுத்துக்காட்டாக இந்த ஆய்வில் பின்வருமாறு அமையும்.

*(41)* *வெல்தல் > வெஃறல் > வெ0றல் > வேறல்

*17.22.4* குமாரசாமி ராஜாவின் இந்த ஆய்வு ஆய்தத்தின் ஒலிப்புத் தன்மையை நான்கு வல்லொற்றுக்களின் (க,ச,த,ப) முன்பும் நிலையொலித் தன்மையதாகிய ககர உரசொலி (Voiceless Velar Fricative) எனக் கொண்டதன் விளைவாகும்.[21] இது வரலாற்று உண்மைக்கும், தொல்காப்பிய மரபுக்கும் மாறுபட்டதால் குமாரசாமி ராஜாவின் ஆய்வை நாம் ஏற்றுக் கொள்ளவில்லை.

*17.22.5.* பழந்தமிழில் நிகழும் *அகறல்* (அகம். *213.11*), *பயிறல்* (தொல். பொருள். இளம். *99*), *முயறல்* (குறுந். *244.2*), *போறீர்* (கலி. *9.11*) ஆகிய வினையமைப்புக்கள் *அகல், பயில், முயல், போல்* ஆகிய வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும். இவற்றின் முந்து வடிவங்கள் **அகல்றல்* (< அகல்தல் < அகலுதல்), **பயில்றல்* (< பயில்தல் < பயிலுதல்), **முயல்றல்* (< முயல்தல் < முயலுதல்), **போல்றீர்* (< போல்தீர் < போலுதீர்) ஆகியவையாகும். இவற்றின் வினையடிகளில் காணப்படும் மருங்கொலி கெட்டாலும் முந்துயிராகிய தனிக்குறில் இனநெடிலாகத் திரியவில்லை. காரணம், இந்த வினையடிகள் தனிக்குறில் வினையடிகளாக அமையாமல், இருகுறில் மற்றும் நெடில் வினையடிகளாக நிகழ்கின்றன.

*17.22.6* குறிலிடை உரசொலியும் (Intervocalic Fricative), தனிக் குறில் தகரமெய் இவற்றிடை நிகழும் மருங்கொலியும் கெடுகையில் இவற்றின் முந்துயிராகிய குறிலானது நெடிலாகத் திரியும் நிகழ்ச்சியானது பழந்தமிழின் பல்வேறு படிநிலைகளைப் புலப்படுத்துவதாயுள்ளது. இதில் குறிப்பிடத்தக்க அம்சம்

---

21. ஆய்தம் வல்லொற்றுகளின் முன் ககர உரசொலியாக ஒலிக்கப்படுவது பிற்கால நிகழ்ச்சியாகும். சார்பெழுத்துக்களுள் ஒன்றாகிய ஆய்தம் தொல்காப்பியர் (எழுத்து. இளம். 101) கூற்றுப்படி தன்னை அடுத்து நிகழும் வல்லொற்றின் ஒலிப்புத்தன்மையைப் பகிர்ந்து கொள்ளும். மேலும் மருங்கொலிகள் தகரத்தின் முன் ஆய்தமாக அதாவது அலைவல்லொலி (Voiced Plosives)யாகத் திரிதல் தொல்காப்பியத் தமிழில் பதப்புணர்ச்சியில் மட்டுமே அமைந்த நிகழ்ச்சியாகும்.

என்னவெனில் குறிலிடை உரசொலி கெடுகையில் அதன் பிந்துயிராகிய குறில் கெடுவதில்லை. இந்த நிலை இக்காலப் பேச்சுத் தமிழில் காணப்படவில்லை. எடுத்துக் காட்டாக, *புகுந்து* என்ற செவ்வியல் வழக்கு, *புவுந்து* என்றும் *பூந்து* என்றும் பேச்சுத் தமிழில் நிகழ்கின்றது. இவற்றுள் *பூந்து* என்பது *புவுந்து* என்பதனின்றும் தோன்றியதாகும். *புகுந்து* என்பதில் நிகழும் வகரத்தின் வீழ்ச்சியால் **பு0உந்து* என்ற வடிவம் தோன்றி, பின்னர் இது **பூஉந்து* என்று திரிந்து, இறுதியில் உகரம் கெட்டு *பூந்து* என்ற வடிவம் தோன்றியமைகிறது. பழந்தமிழில் காணப்படுவது போல் **பூஉந்து* என்ற வடிவத்தின் நிகழ்ச்சி இக்காலத் தமிழில் காணப்படவில்லை. இது ஒரு மாறுபட்ட படிநிலையின் வெளிப் பாடாக அதாவது நெடிற்கீழ் உகரம் கெட்டு *பூந்து* என்று அமைந்தததாகத் தோன்றுகிறது.

*17.22.7* நெடிற்கீழ்க்குறில் பழந்தமிழிலேயே எழுத்தியல் சிறப்பை இழக்கத் தொடங்கிவிட்டதை *(28)* -இல் குறிக்கப் பெற்றுள்ள எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும். எடுத்துக் காட்டாக, *தழீஇனன்* என்ற எழுத்தியல் வடிவம் *தழீஇயினன்* (குறுந். *359.5*) என்று ஒலிக்கப்பட்டதன் விளைவாகும். இதே போல் **பூஉந்து* என்ற வடிவமும் நெடிற்கீழ்க் குறிலின் சிறப்பை இழந்து *பூந்து* என்ற எழுத்தியல் வடிவத்தைப் பெற்றிருக்கலாமோ என்று கருதத்தோன்றுகிறது. இதனைக் கருத்தில் கொண்டு *உடுத்தீட்டு* (*ஆ.மா. 1974:192*) (= உடுத்திக் கொண்டு), *சொல்லீட்டு* (சூர். *1989: 167*) (= சொல்லிக் கொண்டு) *கட்டீட்டு* (சூர். *1989:20*) (= கட்டிக் கொண்டு) ஆகிய செய்தீட்டு வாய்பாட்டு வினைகளைப் பின்வருமாறு ஆராயலாம் என்று தோன்றுகிறது.[22]

*(42)* *உடுத்திகிட்டு > உடுத்தி0இட்டு > உடுத்தீஇட்டு > உடுத்தீட்டு

*(43)* *சொல்லிகிட்டு > சொல்லி0இட்டு > சொல்லீஇட்டு > சொல்லீட்டு

*(44)* *கட்டிகிட்டு > கட்டி0இட்டு > கட்டீஇட்டு > கட்டீட்டு

இருகுறில் புணர்ந்து நெடிலாகத் திரிதல் தமிழ் எழுத்தியல் மரபுக்கு இசைந்ததல்ல என்று இந்த ஆய்வில் முன்னதாகக்

22. உடுத்தீட்டு, சொல்லீட்டு, கட்டீட்டு ஆகியவை பேச்சுத் தமிழ் வழக்குகளாகும். கோவைத் தமிழிலும், குமரித் தமிழிலும் இவற்றின் நிகழ்ச்சி காணப்படு கின்றது. இவற்றின் அடிநிலை வடிவங்கள் *உடுத்திகிட்டு, *சொல்லிகிட்டு, *கட்டிகிட்டு என்று குறிக்கப்பட்டாலும் செவ்வியல் வழக்கில் இவை உடுத்திக்கொண்டு, சொல்லிக்கொண்டு, கட்டிக்கொண்டு என்றே வழங்கு கின்றன. கொண்டு என்பதன் முன் நிகழும் வல்லொற்று மிகுதி மேற்படி பேச்சு வழக்குச் சொற்களின் அடிநிலை வடிவங்களில் காணப்படவில்லை.

குறிப்பிடப்பட்டது. (பார்க்க: அடிக்குறிப்பு-17). இந்தக் குறிப்பு தெ.பொ. மீனாட்சிசுந்தரன், செ.வை. சண்முகம் ஆகியோரின் ஆய்வோடு தொடர்பு உள்ளதாகும். ஆனால் இக்காலப் பேச்சுத் தமிழில், குறிப்பாகக் (கன்னியா) குமரி மாவட்டத் தமிழில் (=குமரித் தமிழில்) குறிலானது நெடிலாகத் திரிந்த பல வழக்குகள் நெடிற் கீழ்க் குறில் நிகழும் இடைநிலை வடிவங்களைக் கொண்டவையா என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. இந்த ஆய்வில் நெடிற்கீழ்க்குறில் நிகழும் வடிவங்கள் இடைநிலை வடிவங்களாகக் கொள்ளப்பட்டு, பின்னர் நெடிற்கீழ்க்குறில் பேச்சுத் தமிழில் கெடுவதாகக் கொள்ளப்படுகிறது.[23] குமரித் தமிழ் வழக்குகளை இனி இதன் அடிப்படையில் ஆராய முற்படலாம்.

### 17.23. குமரித்தமிழ்

17.23.1. குமரித்தமிழில் *வரூ* (நீல. 1968:28), *வேலூ* (நீல. 1968:390), *தாறூ* (நீல. 1968:183), *தெரியூ* (நீல. 1968:323) முதலான ஒன்றன் பால் நிகழ் வினைகளும் *வரூது* (நீல. 1968:403), *பாக்கூது* (நீல. 1968:292), *கேக்கூது* (தோ. 1995:116), *பேசூது* (தோ. 1995:249) முதலான நிகழ்வெதிர்வு (Non-Past) வினைப்பெயர்களும் *கட்டூக்கு* (தோ. 1995:94), *குடுக்கூக்கு* (தோ. 1995:405), *பேசூக்கு* (தோ.1995: 367), *தின்னோக்கு* (செல். 1996:10), *எறங்கோக்கு* (செல் 1996:4) முதலான நான்காம் உருபேற்ற நிகழ்வெதிர்வு வினைப்பெயர்களும், *செய்தோண்டு* (செல். 1996:16), *அறிஞ்சோண்டு* (செல் 1996:38), *அடிச்சோண்டு* (செல். 1996:20), *எடுத்தோண்டு* (செல். 1996:48) முதலான செய்துகொண்டு வாய்பாட்டு வினைத் தொடர்களுக்கு நிகரான வடிவங்களும் படைப்பிலக்கியங்களில் பதிவாகியுள்ளன. இவற்றைப் பற்றி விரிவாக ஆராய்வதற்கு முன் குமரித்தமிழில் வழங்கும் ஒன்றன்பால் நிகழ் (கால) வினைகளைப் பற்றிச் சுருக்கமாக அறிந்து கொள்வது அவசியமாகும்.

17.23.2 குமரித்தமிழில் இரண்டு வகையான வாய்பாட்டில் அமைந்த ஒன்றன்பால் நிகழ்வினைகள் காணப்படுகின்றன. ஒன்று, செய்கு வாய்பாட்டினவாகும். பிறிதொன்று, செய்யுது வாய்பாட்டினவாகும்.[24]

---

23. இருகுறில் புணர்ந்து பேச்சுத் தமிழில் நெடிலாகும் என்ற கருதுகோள் நமக்கு உடன்பாடில்லையாயினும் இந்தக் கருதுகோளின் வன்மையைத் தளர்த்த முடியுமா என்பது ஆய்வுக் குரியதாகும். பேச்சுத் தமிழில் $கு_1$+$கு_1$ > $நெ_1$ என்பது நிறுவப்படுமாயின் அதனை ஒரு படிநிலையாகக் கொள்வதைத் தவிர வேறுவழியில்லை.

24. *செய்யுது* வாய்பாட்டு ஒன்றன் பால் நிகழ்வினைகள் பொதுப் பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) அமைந்து தமிழகம் முழுவதும் வழக்கில் உள்ளது. ஈழத்தமிழிலும் இதன் நிகழ்ச்சி காணப்படுகிறது. மிகக் குறைந்த

வலிமிகு வினையாயின் *அடிக்கு, குடிக்கு* முதலான வினைகள் செய்கு வாய்பாட்டுப் பிரிவில் இடம் பெறும். *வருது, பேசுது*, என்பது போல் வலிமிகு வினையடியாகத் தோன்றிய *அடித்து, குடித்து* என்பது போன்ற இறவாக்காலச் *செய்யுது* வாய்பாட்டு வினைகள் வழக்கில் காணப்படவில்லை.[25] மாறாக, *செய்கு* வாய்பாட்டு வினைப் பகுதிகளின் அடியாகத் தோன்றிய *அடிக்குது, குடிக்குது* ஒன்றன் பால் நிகழ்வினைகளையே இந்த வரிசையில் காணமுடிகிறது.[26] செய்கு வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ்வினைகள் நாஞ்சில் நாடனின் படைப்புகளில் மிகுதியாகக் காணப்படு கின்றன. ஐசக் அருமைராஜனின் *கீறல்கள்* என்ற புதினத்தின் மொழி புன்னைக்காடு பகுதியில் வழங்கும் பேச்சுத் தமிழாகும். இந்தத் தமிழில் செய்கு வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ் வினைகளின் ஈற்றில் நிகழும் நிகழ்கால முற்று விகுதியாகிய கு என்பது வலிமிகா வினைகளில் வகர உகரமாகத் திரிகிறது. ஒப்புமை யாக்கத்தின் விளைவால் இந்த வகர உகரம் பெரும்பாலான செய்கு வாய்பாட்டு வலிமிகு வினைகளிலும் ஈற்றில் இடம் பெறுகிறது.[27] நாஞ்சில் நாடனிலும், ஐசக் அருமை ராஜனிலும் நிகழும் செய்கு வாய்பாட்டு ஒன்றன்பால் நிகழ் வினைகள் ஓரளவுக்குக் கீழே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

---

24ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

எண்ணிக்கையில் *செய்யுது* வாய்பாட்டு வினைகள் *செய்து* வாய்பாட்டின வாகவும் ஒடுங்குதல் உண்டு. பழந்தமிழிலும் இந்த நிலை காணப்படுவதை பின்வரும் எடுத்துக்காட்டு உணர்த்தும்.

> நீயெவன் செய்தி பிறர்க்கு
> யாமெவன் செய்து (ம்) நினக்கு (கலி. 108.50,51)

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் செய்து, செய்தும் ஆகிய நிகழ்வெதிர்வு வினைகள் ஒன்றன்பால்வினைகள் அல்லவாயினும் இவை, முறையே *செய்யுதி* (< *செயுதி), *செய்யுதும்* (< *செயுதும்) ஆகியவற்றின் ஒடுக்கங் களாகக் கருதத்தக்கனவாகும்.

25 செவ்வியல் வழக்கில் காணப்படும் *அடித்தல், குடித்தல்* முதலான வினைப் பெயர்கள் *செய்யுது* வாய்பாட்டு இறவாக்கால (Non-Past) பகுதிகளின் அடியாகத் தோன்றியவையாகும். *செய்யுது* (< *செயுது) வாய்பாட்டு வினைகளே *செய்து* வாய்பாட்டினவாக ஒடுங்கியும் செவ்வியல் தமிழில் *செய்தல்* வாய்பாட்டு வினைகளின் காலப் பகுதிகளாக அமைகின்றன.

26. *செய்கு* வாய்பாட்டு வினைப்பகுதிகளின் அடியாகத் தோன்றிய *அடிக்குது, குடிக்குது* முதலான ஒன்றன்பால் நிகழ்வினைகளைச் *செய்குது* வாய் பாட்டினவாகக் குறிப்பிடலாம்.

27. *செய்கு* வாய்பாட்டு வலிமிகு வினைகள் ஈற்றில் ஏற்கும் வகர உகரத்தைக் கருத்தில் கொண்டு *அடிக்குவு, குடிக்குவு* என்பன போன்ற வினைகளைச் *செய்குவு* வாய்பாட்டினவாகக் குறிப்பிடலாம்.

45 நாஞ்சில் நாடன்

| வ. எண் | வலிமிகா வினைகள் | வ. எண். | வலிமிகு வினைகள் |
|---|---|---|---|
| 1.1 | அழுகு (1977:351) | 2.1 | இருக்கு (1990:55) |
| 1.2 | ஊத்துகு (1979:106) | 2.2 | கறுக்கு (1977:29) |
| 1.3 | காந்துகு (1979:14) | 2.3 | கேக்கு (1977:303) |
| 1.4 | சொல்லுகு (1977:288) | 2.4 | துடிக்கு (1977:154) |
| 1.5 | சேருகு (1990:52) | 2.5 | நடக்கு (1977:64) |
| 1.6 | தட்டுகு (1990:57) | 2.6 | நிக்கு (1977:157) |
| 1.7 | தோணுகு (1977:39) | 2.7 | பறக்கு (1979:74) |
| 1.8 | நீளுகு (1979:23) | 2.8 | மறைக்கு (1979:116) |
| 1.9 | போகு (1977:138) | 2.9 | வலிக்கு (1979:14) |
| 1.10 | மூடுகு (1977:78) | 2.10 | கெடக்கு (1979:34) |
| 1.11 | வருகு (1977:6) | | |
| 1.12 | வீசுகு (1977:82) | | |
| 1.13 | வெட்டுகு (1990:55) | | |

46 ஐசக் அருமைராஜன் (1975)
(*செய்(யு)கு > செய்(யு)வு)

| வ. எண் | வலிமிகா வினைகள் | வ. எண். | வலிமிகு வினைகள் |
|---|---|---|---|
| 1.1 | ஆடுவு (பக். 76) | 2.1 | அடிக்குவு (பக். 146) |
| 1.2 | எரிவு (பக். 53) | 2.2 | இருக்குவு (பக். 75) |
| 1.3 | ஏறுவு (பக். 165) | 2.3 | கடுக்குவு (பக். 139) |
| 1.4 | செய்யுவு (பக். 165) | 2.4 | கெடக்குவு (பக்.54) |
| 1.5 | தெரிவு (பக். 65) | 2.5 | கேக்குவு (பக். 52) |
| 1.6 | தேடுவு (பக். 100) | 2.6 | நடக்கு (பக். 88)/ நடக்குவு (பக்.21) |
| 1.7 | தோணுவு (பக்.12,63) | | |
| 1.8 | போவு (பக். 90) | 2.7 | நிக்கு (பக். 123)/ நிச்சுவு[28] (பக். 143) |
| 1.9 | மங்குவு (பக். 167) | | |
| 1.10 | முடியுவு (பக். 14) | 2.8 | முளிக்குவு (பக்.146) |

28. *நிச்சுவு* என்பது *நிக்குவு* என்பதன் திரிபாகும். குமரி மாவட்டத்தின் சில பகுதிகளில் வழங்கும் இகர, ஐகாரவீற்று வினைகளின் அடியாகத் தோன்றிய வலிமிகுவினைகளின் நிகழ்கால/ இறவாக்கால (Non-past) வினைகளில் காணப்படும் இரட்டித்த ககரம் சகரமாகத் திரியும் நிலை காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இந்த நிலையைக் காணலாம்.

| வ. எண் | வலிமிகா வினைகள் | வ. எண். | வலிமிகு வினைகள் |
|---|---|---|---|
| 1.11 | வருவு (பக். 74) | 2.9 | வலிக்கு (பக். 168) |
| 1.12 | வாங்குவு (பக். 167) | 2.10 | வெடிக்குவு (தங். 1997.10b)<br>வெடிச்சுவு (ஜசக். பக். 54) |
| 1.13 | தட்டுவு (பக். 75) | | |
| 1.14 | கத்துவு (பக். 159) | | |
| 1.15 | செய்வு (பக். 79) | | |

## 17.24 செய்யூ வினைகள்

17.24.1 முன்னதாக, குமரித்தமிழில் வழங்கும் ஊகார ஈற்று ஒன்றன்பால் நிகழ்வினைகள் பற்றி குறிப்பிடப்பட்டது. நீல. பத்மநாபனின் (1968) *தலைமுறைகள்* என்ற புதினத்தில் நிகழும் *வரூ* (பக். 28) *வேவூ* (பக். 390), *நாறூ* (பக். 183), *தெரியூ* (பக். 323) ஆகிய இந்த வினைகளின் அடிநிலைவடிவங்களும், இடைநிலை வடிவங்களும் கீழே குறிக்கப் பெற்றுள்ளன.

---

28 ஆம் அடிக்குறிப்புத் தொடர்ச்சி

| வ. எண். | இயல்பு வடிவம் | அடிநிலை வடிவம் | புறநிலை வடிவம் | பொருள் |
|---|---|---|---|---|
| 1. | குடிக்கான் | குடிக்கியான் | குடிச்சியான் (குமா. 1992:100) | குடிக்கிறான் |
| 2. | நெனய்க்கேன் | நெனக்க்யேன் | நெனச்சியேன் (குமா. 1992:38) | நினைக்கிறேன் |
| 3. | நெனய்க்கிதி | நெனக்க்யிதி | நெனச்சிதி (செல். 1996:23) | நினைக்கிறாய் |
| 4. | மறய்க்கும் | மறக்க்யும்- | மறச்சும்- (செல். 1996:46) | மறைக்கும் |
| 5. | அடிக்காதே | அடிக்க்யாதெ | அடிச்சாதே (செல். 1996:20) | அடிக்காமல் |
| 6. | ஒடய்க்காதெ | ஒடக்க்யாதெ | ஒடச்சாதெ (செல். 1996:20) | உடைக்காமல் |
| 7. | குடிக்கது | குடிக்க்யது | குடிச்சியது (கென் 1997அ:30) | குடிப்பது |
| 8. | கவனிக்க | கவனிக்க்ய | கவனிச்ச (கென். 1997அ:23) | கவனிக்க |
| 9. | படிக்க | படிக்க்ய | படிச்ச (செல்.1996:17, கென். 1997ஆ:42) | படிக்க |
| 10. | பறிக்க | பறிக்க்ய | பறிச்ச (அன். 1997:17) | பறிக்க |
| 11. | குளிக்க | குளிக்க்ய | குளிச்ச (கென். 1997அ:24) | குளிக்க |
| 12. | நனய்க்க | நனக்க்ய | நனச்ச (செல். 1996:51) | நனைக்க |

## 47. நீல. பத்மநாபன் (1968)

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவங்கள் | | | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|---|
| | | வ்>0/கு$_1$−கு$_1$ | கு$_1$>நெ$_1$/−கு$_1$ | கு$_1$>0/நெ$_1$− | |
| 1. | நாறுவு (< *நாறுகு) | நாறு0உ | நாறூ0உ/ நாறூஉ | நாறூ0 | நாறா |
| 2. | வருவு (< *வருகு) | வரு0உ | வரூ0உ/ வரூஉ | வரூ0 | வரூ |
| 3. | வேவுவு (< *வேகுகு) | வேவு0உ | வேவூ0உ/ வேவூஉ | வேவூ0 | வேவூ |
| 4. | தெரியுவு (< *தெரியுகு) | தெரியு0உ | தெரியூ0உ/ தெரியூஉ | தெரியூ0 | தெரியூ[29] |

---

28 ஆம் அடிக்குறிப்புத் தொடர்ச்சி

| வ. எண். | இயல்பு வடிவம் | அடிநிலை வடிவம் | புறநிலை வடிவம் | பொருள் |
|---|---|---|---|---|
| 13. | பிடிக்க | பிடிக்க்ய | பிடிச்ச (குமா. 1992:61) | பிடிக்க |
| 14. | குடிக்க | குடிக்க்ய | குடிச்சிய (குமா. 1992:93) | குடிக்கிற |
| 15. | தய்க்குத | தக்க்யுத | தச்சுத (செல். 1996:18) | தைக்கிற |
| 16. | முடிக்க | முடிக்க்ய | முடிச்ச (செல். 1996:20) | முடிக்க |
| 17. | எறிக்கோக்கு | எறிக்க்யோக்கு | எறிச்சோக்கு (செல். 1996:27) | எறிப்பதற்கு |

மேல் எடுத்துக்காட்டுக்களில் அடிநிலை வடிவங்களில் ககர மெய்களை அடுத்து நிகழும் யகரமெய் குமரித்தமிழின் நிகழ்கால வினைகளில் நிகழ்வதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம் (இந்த யகர மெய்யை வினைப்பகுதியின் ஈற்றுமெய்யாகக் கருதலாம். எ-டு. *குடிய் >குடி).

| வ. எண். | இயல்புவடிவம் | புறநிலைவடிவம் | பொருள் |
|---|---|---|---|
| 1. | மொடய்க்கேன் | மொடக்கியேன் (குமா. 1992:101) | முடக்குகிறேன் |
| 2. | இருக்கேன் | இருக்கியேன் (கென்.1997 அ:25) | இருக்கிறேன் |
| 3. | நிக்கேன் | நிக்கியேன் (கென். 1997 அ:24) | நிற்கிறேன் |
| 4. | அடிக்கா | அடிக்கியா (கென்.1997 ஆ:48) | அடிக்கிறாய் |
| 5. | குடுக்கா | குடுக்கியா (கென். 1997 அ:25) | கொடுக்கிறார்கள் |
| 6. | கொடுக்குது | கொடுக்கியது (கென்.1997 ஆ:48) | கொடுக்கிறது |

29. *தெரியூ* (நீல. 1968.323) என்ற ஒன்றன்பால் நிகழ்வினையின் அடிநிலை வடிவமாகிய **தெரியுவு* என்பது சிந்தனைக்குரியது. **தெரியுவு* என்பது *தெரியு+வு* என்ற அமைப்பினதாகும். இதில் நிகழும் *தெரியு* என்பது

17.24.2 பழந்தமிழில் நிகழ்ந்த எழுத்தியல் மாற்றங்களின் விளைவாகத் தோன்றியமைந்த *தரூஉம்* (நற். 5.8), *காணூஉ* (அகம். 279.2), தேடூஉ (நற். 242.10) முதலான வடிவங்களைக் கருத்தில் கொண்டு **நாறூஉ, *வரூஉ, *வேலூஉ, *தெரியூஉ* ஆகியவை இடை நிலை வடிவங்களாக மேல் ஆய்வில் குறிக்கப்பட்டுள்ளன.

## 17.25 செய்யூது வினைப்பெயர்கள்

17.25.1 குமரித்தமிழில் காணப்படும் நிகழ்கால வினைப்பெயர் களுள் *செய்யூது* வாய்பாட்டினவும் அடங்கும். *செய்யூது* வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியானது கன்னடக் கிளைமொழிகளுள் ஒன்றாகிய ஹலக்கி கிளைமொழியிலும் காணப்படுகிறது. (A. S. Acharya 1967:50) எ-டு. *குணூது* 'ஆடுவது/ஆடுதல்', *தின்னூது* 'தின்பது/ தின்னுவது/தின்னுதல்'. குமரித் தமிழில் நிகழும் *செய்யூது* வாய்பாட்டு வினைகளின் மீதான ஆய்வானது ஹலக்கி வடிவங்களுக்கும் பொருந்தும்.[30] செய்வது என்ற செவ்வியல் வழக்கோடு பொருந்தும்[30]

---

29ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

புன்னைக்காட்டு வழக்கில் *தெரிவு* (ஐசக். 1975.65) என்றும் நாஞ்சில் நாடனில் *தெரியி* (1977:165) என்றும் காணப்படுகிறது. ஒன்றன்பால் நிகழ்விகுதியாகிய கு என்பது நாஞ்சில் நாடன் படைப்புகளில் குறிப்பிட்ட எழுத்தியல் சூழல்களில் யகரமாகத் திரிந்து அதன் இன உயிராக இகரத்தில் முடிகிறது. கருதுக: *எரியி* (நா.நா. 1979:178), *செய்யி* (நா.நா. 1979:183), *காயி* (நா.நா. 1977:265), *தெரியி* (நா.நா. 1977:165), *பாயி* (நா.நா. 1977:350). இந்த வினைகள் முறையே **எரிகு* (<*எரியுகு) **செய்கு* (<*செயுகு), **காய்கு* (<*காயுகு), **தெரிகு* (<*தெரியுகு), **பாய்கு* (*பாயுகு) ஆகியவற்றின் திரிபுகளாகும். நீல. பத்மநாபனிலும் இத்தகைய திரிபு அருகிய வழக்கில் காணப்படுகிறது. எ-டு: *திரியு* (நீல. 1968:240) (<*திரிகு), *வடியு* (நீல. 1968:176) (<*வடிகு). குமரி வினைகளில் நிகழ்கால விகுதியாகிய ககரமெய் யகரமாகத் திரிவது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். கருதுக *அழுயான்* (பொன். 1995:567) (<*அழுகான்), *சொல்லுயேன்* (பொன். 1995:755) (<*சொல்லுகேன்), *திரியான்* (குமா.1992:7) (<*திரிகான்), *கழுவியேன்* (கென். 1977 ஆ:43) (<*கழுவுகேன்), *சொல்லுயன்* (தங். 1997:10b) (<*சொல்லுகன்) 'சொல்கிறேன்', *தோண்டுயது* (தங். 1997:8) (<*தோண்டுகது), *கெட்டுய* (தங். 1997:8) (<*கெட்டுக) 'கட்டுகிற'.

30. ஹலக்கி கன்னடத்தில் *செய்யூது* வாய்பாட்டு வினைகள் பெண்பால் அல்லது ஒன்றன்பால் எதிர்கால முற்றுவினைகளாகவும் நிகழும், (A.S. Acharya 1967:85,88) எ-டு. *குடூது* 'குடிப்பாள்/குடிக்கும்', *பரூது* (baru:du) 'வருவாள்/வரும்' *மாடூது* 'செய்வாள்/செய்யும்'. இந்த வினைமுற்றுக் களின் அடிநிலை வடிவங்கள் முறையே **குடுவுது, *பருவுது, *மாடுவுது* என்று அமையும். தன்மைப் பன்மை, முன்னிலைப் பன்மை, பலர்பால் எதிர்கால வினைமுற்றுக்கள் இந்தக் கிளைமொழியில் *செய்யூரு* வாய்பாட்டினாக அமையும். (மேற்படி:1967:88) எ-டு. *பரூரு* (baru:ru) 'வருவோம்/வருவீர்கள்/வருவார்கள்', *நோடூரு* 'பார்ப்போம்/பார்ப்பீர்கள்/ பார்ப்பார்கள்', *குடூரு* 'குடிப்போம்/ குடிப்பீர்கள்/குடிப்பார்கள்'. இந்த வினைகளின் அடிநிலை வடிவங்கள் முறையே **பருவுரு* (baruvuru) **நோடுவுரு, *குடுவுரு* என்று அமையும். இதே போல் *கொடூரு* (மேற்படி 1967:51) (=கொடுப்பவர்) என்ற வினையாலணையும் பெயரும் **கொடுவுரு*

*செய்யூது* வாய்பாட்டு வினைப்பெயர்கள் நீல. பத்மநாபன் (1968), தோப்பில் முகம்மது மீரான் (1995) ஆகியோரின் இலக்கியப் படைப்புக்களில் பயின்று வழங்குகின்றன. இந்த வாய்பாட்டு வினைப்பெயர்கள் **செய்யுகு* அல்லது **செய்யுவு* (*<செய்யுகு) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும்.[31] இதனைக் கருத்தில் கொண்டு எடுத்துக்காட்டாக, *பேசூது* (தோ. 1995:249) என்ற நிகழ்வினைப் பெயரைப் பின்வருமாறு ஆராயலாம்.

48. (*பேசுகுது) >பேசுவுது>பேசு0உது>(பேசூஉது>) பேசூது[32]

17.25.2 இந்த ஆய்வில் உரசொலிக் ககரம் வகரமாய்த் திரிதல், வகரம் கெடுதல், முந்துயிராகிய உகரம் ஊகாரமாதல், பிந்துயிராகிய உகரம் கெடுதல் ஆகிய எழுத்தியல் மாற்றங்கள் காணப்படுகின்றன. **பேசூஉது* என்ற ஈற்றயல் வடிவம் பழந்தமிழில் நிகழும் *உண்பதூஉம்* (திருக். 1079) என்பதில் நெடிலும் குறிலும் இணைந்து இயல்வதைக் கருத்தில் கொண்டதாகும். படிநிலை மாறும்போது *பேசூஉது* என்பதில் நிகழும் நெடிற்கீழ் உகரம் வீழ்ந்து

---

30ஆம் அடிக்குறிப்பின் தொடர்ச்சி

என்ற அடிநிலை வடிவத்தின் திரிபாகும். இறவாக்காலப் பெயரெச்சமாகிய *மாடூ* (மேற்படி 1967:103) 'செய்யும்/செய்கின்ற என்பது **மாடுவு* என்ற அடிநிலை வடிவத்தின் திரிபாகும். நான்கன் உருபேற்ற *குடூகெ* (KuDu:-ke) 'குடிப்பதற்கு', *இரூகெ* 'இருப்பதற்கு' *மாடூகெ* செய்வதற்கு' (மேற்படி 1967:64) ஆகிய வடிவங்கள் **செய்யுவு+கெ* என்ற வாய்பாட்டு அடிநிலை வடிவங்களிலிருந்து தோன்றியவையாகும். இதனின்றும் கன்னடத்தை ஒதுக்கிவிட்டுத் தமிழையோ, தமிழை ஒதுக்கிவிட்டுக் கன்னடத்தின் மொழியமைப்பையோ ஆராய முடியாது என்ற உண்மை புலனாகிறது.

31. குமரித் தமிழில் *செய்யுவு* (<*செய்யுகு) வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் நிகழ்வினைகளாகும். *செய்யூது* வினைப்பெயர்கள் பொதுத் தன்மையனவாகும். அதாவது இரு திணை ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாக அமைவனவாகும். இத்தகைய வினைப்பெயர்கள் *செய்யுவு* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகளின் அடியாகத் தோன்றமுடியும். இதற்கு இரண்டு வகையில் விடையளிக்க முடியும். ஒன்று, *செய்யுவு* வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தொடக்கத்தில் பொதுவினைமுற்றுக்களாக (Impersonal Finite Verbs) இருந்திருக்க வேண்டும். இன்னொன்று, *செய்யுவு* வாய்பாட்டு வினைமுற்றுக்களின் அடிநிலைவடிவங்கள் **செய்யுகு* வாய்பாட்டினவாகும். இவற்றில் ஈற்றில் நிகழும் குகரம் முற்றுப் பொருண்மை, காலப்பொருண்மை இரண்டையும் ஒருங்கே உணர்த்தும். குற்றுகரம் ஊர்ந்த இந்தக் ககரமெய் பிற நிகழ்கால வினையமைப்புக்களில் நிகழ்கையில் காலப்பொருண்மையை மட்டும் உணர்த்துவதாகும். *செய்யூது* (< செய்யுவுது < செய்யுகுது) என்பது இத்தகைய வினையமைப்புகளுள் ஒன்றாகும்.

32. மாற்று ஆய்வுக்கு வகை செய்யும் வகையில் ஈற்றயல் வடிவமாகிய *பேசூஉது* என்பது அடைப்புக் குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளது.

பட்டதாகல் வேண்டும். குமரித் தமிழில் வழங்கும் *செய்யூது* வாய்பாட்டு நிகழ்கால வினைப்பெயர்கள் அடிநிலை மற்றும் இடைநிலை வடிவங்களுடன் கீழே தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்தத் தொகுப்பில் சுருக்கம் கருதி முதல் நிலை வடிவங்கள் குறிக்கப்படவில்லை. மூன்றாவது பத்தியில் வெறுமைக்குறியீடு (0) தவிர்க்கப்பட்டுள்ளது.

## 49. செய்யூது வினைப் பெயர்கள்

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவங்கள் | | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| | | வ்>0/கு₁–கு₁ | கு₁>நெ₁/–கு₁ | உ>0/ஊ– |
| 1 | *ஆடுவுது | ஆடு0உது | ஆடூஉது | ஆடூது (நீல. 1968:147) |
| 2 | *ஆளுவுது | ஆளு0உது | ஆளூஉது | ஆளூது (தோ. 1995:247) |
| 3 | *உண்ணுவுது | உண்ணு0உது | உண்ணூஉது | உண்ணூது(தோ.1995: 138) |
| 4 | *பேசுவுது | பேசு0உது | பேசூஉது | பேசூது (தோ.1995:249) |
| 5 | *குளிக்குவுது | குளிக்கு0உது | குளிக்கூஉது | குளிக்கூது (தோ1995:317) |
| 6 | *கேக்குவுது | கேக்கு0உது | கேக்கூஉது | கேக்கூது (தோ. 1995:116) |
| 7 | *கொடுக்குவுது | கொடுக்கு0உது | கொடுக்கூஉது | கொடுக்கூது (நீல1968: 307) |
| 8 | *சொல்லுவுது | சொல்லு0உது | சொல்லூஉது | சொல்லூது (நீல. 1968: 140) |
| 9 | *தின்னுவுது | தின்னு0உது | தின்னூஉது | தின்னூது (தோ. 1995:106) |
| 10 | *பாக்குவுது | பாக்கு0உது | பாக்கூஉது | பாக்கூது (நீல. 1968:292) |
| 11 | *படிக்குவுது | படிக்கு0உது | படிக்கூஉது | படிக்கூது (நீல. 1968:329) |
| 12 | *முடிக்குவுது | முடிக்கு0உது | முடிக்கூஉது | முடிக்கூது (நீல. 1968:128) |
| 13 | *வருவுது | வரு0உது | வரூஉது | வரூது (நீல. 1968:403) |
| 14 | *விக்குவுது | விக்கு0உது | விக்கூஉது | விக்கூது (தோ.1995:175) |

21.3 மலயாள மொழியின் வரலாற்றை ஆராய்ந்த எல்.வி. ராமசாமி அய்யர் (Ramaswamy Aiyar, L.V. 1936: 75) அந்த மொழியில் நிகழும் *ஓடூது, இறங்ஙூது, கொடுப்பூது* ஆகிய வினைப் பெயர்களை முறையே *ஓடுவது, இறங்குவது, கொடுப்பது* ஆகியவற்றின் திரிபுகளாகக் கருதலாம் என்று குறிப்பிடுவார். குமரித் தமிழில் நிகழும் *ஆடூது, வரூது, படிக்கூது* ஆகியவற்றின் வரலாற்றை நோக்கும்போது அய்யரின் கருதுகோள் ஏற்புடையதாகத் தோன்றவில்லை.

## 17.26 செய்யுவுக்கு வினைப்பெயர்கள்

தோப்பில் முகம்மது மீரானில் (1995) நான்கன் உருபேற்ற ஒருவகை நிகழ்கால வினைப்பெயர்கள் காணப்படுகின்றன. அவை *செய்யூக்கு* வாய்பாட்டினவாகக் கொள்ளத்தக்கனவாகும். கருதுக: *உண்ணூக்கு* (தோ. 1995:149) (=உண்பதற்கு). *செய்யூக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்கள் *செய்யுவு* (<*செய்யுகு) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவையாகும். தோப்பில் முகம்மது மீரானில் நிகழும் *செய்யூக்கு* வாய்பாட்டு வினைகள், அவற்றின் அடிநிலை வடிவங்கள் மற்றும் இடைநிலைவடிவங்களுடன் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. சுருக்கம் கருதி **செய்கூக்கு* வாய்பாட்டு வினைப் பெயர்களின் *செய்யுகு* வாய்பாட்டு வடிவங்கள் இந்தத் தொகுப்பில் குறிக்கப்படவில்லை.

50. செய்யூக்கு வினைப்பெயர்கள் (தோ. 1995)

| வ. எண் | அடிநிலை வடிவம் | இடைநிலை வடிவங்கள் | | புறநிலை வடிவம் |
|---|---|---|---|---|
| | | வ்>0கு₁-கு₁ | கு₁>நெ₁/-கு₁ | உ>0/ஊ- |
| 1 | *இருட்டுவுக்கு | இருட்டு0உக்கு | இருட்டூஉக்கு | இருட்டூக்கு (ப. 388) |
| 2 | *உண்ணுவுக்கு | உண்ணு0உக்கு | உண்ணூஉக்கு | உண்ணூக்கு (ப. 149) |
| 3 | *கட்டுவுக்கு | கட்டு0உக்கு | கட்டூஉக்கு | கட்டூக்கு (ப. 94) |
| 4 | *குடுக்குவுக்கு | குடுக்கு0உக்கு | குடுக்கூஉக்கு | குடுக்கூக்கு (ப. 405) |
| 5 | *குதிக்குவுக்கு | குதிக்கு0உக்கு | குதிக்கூஉக்கு | குதிக்கூக்கு (ப. 305) |
| 6 | *கெடக்குவுக்கு | கெடக்கு0உக்கு | கெடக்கூஉக்கு | கெடக்கூக்கு (ப. 313) |
| 7 | *கேக்குவுக்கு | கேக்கு0உக்கு | கேக்கூஉக்கு | கேக்கூக்கு (ப. 169) |
| 8 | *செய்யுவுக்கு | செய்யு0உக்கு | செய்யூஉக்கு | செய்யூக்கு (ப. 352) |
| 9 | *செல்லுவுக்கு[33] | செல்லு0உக்கு | செல்லூஉக்கு | செல்லூக்கு (ப. 157, 180) |
| 10 | *தட்டுவுக்கு | தட்டு0உக்கு | தட்டூஉக்கு | தட்டூக்கு (ப. 366) |
| 11 | *தின்னுவுக்கு | தின்னு0உக்கு | தின்னூஉக்கு | தின்னூக்கு (ப. 206) |
| 12 | *நடக்குவுக்கு | நடக்கு0உக்கு | நடக்கூஉக்கு | நடக்கூக்கு (ப. 305) |
| 13 | *பாக்குவுக்கு | பாக்கு0உக்கு | பாக்கூஉக்கு | பாக்கூக்கு (ப. 122) |
| 14 | *பேசுவுக்கு | பேசு0உக்கு | பேசூஉக்கு | பேசூக்கு (ப. 367) |
| 15 | *வாண்டுவுக்கு[3] | வாண்டு0உக்கு | வாண்டூஉக்கு | வாண்டூக்கு (ப. 157) |
| 16 | *வியக்குவுக்கு | வியக்கு0உக்கு | வியக்கூஉக்கு | வியக்கூக்கு (ப. 371) |

## 17.27. செய்யோக்கு வினைப்பெயர்கள்

17.27.1. *செய்யூக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களைப் போலவே குமரி மாவட்டம் பரக்குந்நு (குழித்துறை அஞ்சல்) பகுதியில்

33. சொல் என்ற வினையானது செல் எனவும் குமரித்தமிழில் வழங்குகிறது. இதே போல் *வாங்கு* என்ற வினையும் *வாண்டு* என இந்தத் தமிழில் நிகழ்கிறது. ஆனால் இந்த வழக்குகள் குமரி மாவட்டத்தில் சில பகுதிகளில் மட்டுமே காணப்படுகிறது.

வழங்கும் தமிழில் *செய்யோக்கு* என்ற வாய்பாட்டில் அமைந்த நிகழ்வினைப் பெயர்களின் நிகழ்ச்சி காணப்படுகிறது. செல்சேவிஸின் *கொம்பியெ* என்று கவிதைத் தொகுப்பில் காணப்படும் இத்தகைய வினைப்பெயர்கள் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

51 (1) அறியோக்கு *(செல். 1996:47)* 'அறிவதற்கு'
(2) அடக்கோக்கு *(செல். 1996:27)* 'அடக்குவதற்கு'
(3) எரிச்சோக்கு *(செல். 1996:27)* (<*எரிய்க்கோக்கு) 'எரிப்பதற்கு'
(4) ஒதவோக்கு *(செல். 1996:33)* 'உதவுவதற்கு'
(5) எறங்கோக்கு *(செல். 1996:4)* 'இறங்குவதற்கு'
(6) செய்யோக்கு *(செல். 1996:6)* 'செய்வதற்கு'
(7) தின்னோக்கு *(செல். 1996:10)* 'தின்பதற்கு'
(8) பாக்கோக்கு *(செல்.1996:27)* 'பார்ப்பதற்கு'
(9) முறிச்சோக்கு *(செல்.1996:34)* (<முறிய்க்கோக்கு) 'முறிப்பதற்கு'
(10) வரோக்கு *(செல்.1996:41)* 'வருவதற்கு'
(11) உளோக்கு *(செல்.1996:2)* 'உழுவதற்கு'

17.27.2 *செய்யூக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களைப் போலவே *செய்யோக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களும் *செய்யுவு* (<*செய்யுகு) வாய்பாட்டு வினைகளின் அடியாகத் தோன்றியவை யாகும். ஆனால் நான்கன் உருபேற்ற *செய்யோக்கு* வாய்பாட்டு வினைபெயர்களின் அடிநிலை வடிவங்கள் *செய்யூக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களின் அடிநிலை வடிவங்களிலிருந்து மாறு பட்டிருக்கும் போல் தோன்றுகிறது. இல்லையென்றால் இவற்றில் நிகழும் ஓகார நெடிலை விளக்கமுடியாது. *செய்கைக்கு* அல்லது *செய்குக்கு* வாய்பாட்டு வடிவங்களை அடிநிலை வடிவங்களாகக் கொண்டாலும் இந்தச் சிக்கல் நீடிக்கத்தான் செய்கிறது. அப்படியானால் *செய்யோக்கு* வாய்பாட்டு வினைப் பெயர்களின் அடிநிலை வடிவங்களின் வடிவமைப்பு எப்படி இருக்கும்?

17.27.3 *செய்யோக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களைப் பொறுத்தவரை இன்னொன்றையும் கருத்தில் கொள்ள வேண்டும். இதில் ஓகார நெடிலானது கேடுறும் உரசொலியின் முந்துயிரின் நீட்சியா பிந்துயிரின் நீட்சியா என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். ஓகாரத்தை உகரக் குறிலின் நீட்சியாகக் கொள்ள முடியாது. ஒகரக் குறில் ஓகாரமாகும். ஆனால் உகரக் குறில் ஒகரக் குறிலாகத் திரிய இந்த வினைப்பெயர்களில் வாய்ப்பில்லை. வகரத்தை அடுத்து அகரம் உரசொலியின் தாக்கத்தால் ஒகரக் குறிலாகத் திரிய வாய்ப்பு உண்டு. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு *செய்யோக்கு* வாய்பாட்டு வினைப்பெயர்களின் அடிநிலை வடிவங்களை,

இப்போதைக்குச் **செயுவக்கு* வாய்பாட்டினவாகக் கொள்ளலாம். இவை அம் சாரியைக் கொண்ட *எனக்கு* (< என்-அம்+கு), *உனக்கு* (< உன்-அம்+கு) என்பவற்றைப் போன்றவையாகும்.[34] **செயவக்கு* வாய்பாட்டு வடிவங்களில் காணப்படும் வகர உரசொலியின் தாக்கத்தால் அதனையடுத்து நிகழும் அகரக் குறில் ஒகரக் குறிலாகத் திரிந்து, பின்னர் வகர உரசொலியின் வீழ்ச்சியால் அது ஓகார நெடிலாகத் திரிந்து இறுதியில் *செய்யோக்கு* (<* செயோக்கு) வாய்பாட்டு வடிவங்களை தோற்றம் கொள்கின்றன. இந்த ஆய்வில் ஓகார நெடிலின் முன் உகரக் குறில் நிகழ்ந்தால் அந்தக் குறில் கெடும். (இந்தக் கேடு ஒகரம் ஓகாரமாக மாறுவதற்கு முன்பே நிகழ வாய்ப்புள்ளதா என்பது ஆய்வுக்குரியது). இந்த அடிப்படையில் *அறியோக்கு* (செல்.1996:47) என்ற நான்கன் உருபேற்ற வினைப்பெயரின் ஆய்வு எடுத்துக்காட்டாகப் பின்வருமாறு அமையும்.

*52 (1) *அறியுவக்கு > அறியுவொக்கு*
*(2) அறியுவொக்கு > அறியு0ஒக்கு*
*(3) அறியு0ஒக்கு > அறியு0ஓக்கு*
*(4) அறியு0ஓக்கு > அறிய்0ஓக்கு*
*(5) அறிய்0ஓக்கு > அறியோக்கு*

*17.27.4* இந்த ஆய்வில் வகர உரசொலியை அடுத்த அகரம் ஒகரமாகத் திரிந்த பிறகே மேற்படி உரசொலி கெடுகிறது. இந்தத் திரிபுக்கு முன்பே வகரம் கெட்டுவிட்டால் *அ > ஒ* திரிபுக்கு வாய்ப்பே இல்லாமற் போய்விடும். வகரம் பல்லிதழ் ஒலியாகலின் (Labio-Dental Phone) அதனால் மட்டுமே அகரத்தை ஒகரமாகத் திரிக்க முடியும். வகரமும் ஒகரமும் இதழ் தொடர்புடைய ஒலிகள் (Labially Related Phones) ஆகும். இதனால்தான் வகரத்தை அடுத்து நிகழும் அகரம் ஒகரமாகத் திரிகிறது.[35]

---

34. *செயுவக்கு* என்ற வடிவம் *செயுவு-அம்-கு என்ற அமைப்பினதாக இருக்கலாம். இந்த அமைப்பில் நிகழும் *செயுவு* (=செய்யுவு) என்பதன் ஒடுக்கமாகும். *செய்யுவு* என்பதன் அடிநிலைவடிவம் **செ(ய்)யுகு* என்பதாகும்.

35. வகரத்தை அடுத்து நிகழும் அகரம் ஒகரமாகத் திரிதல் தன்னிச்சையான எழுத்தியல் விதியாகக் கொள்ளத் தக்கதன்று. கிளைமொழிகளில் நிகழும் எழுத்தியல் மாற்றம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு படிநிலையாகும். ஒரு கிளைமொழியின் படிநிலை இன்னொரு கிளை மொழியிலும் வெளிப்பட வேண்டும் என்ற நியதியில்லை. இதேபோல் ஒரு கிளைமொழியிலே கூட ஒரு குறிப்பிட்ட படிநிலையின் விளைவுகள் தொடர்ந்து எக்காலத்தும் செயல்படவேண்டும் என்ற நியதியும் இல்லை.

17.27.5 மேலே (52)இல் குறிக்கப்பெற்றுள்ள ஆய்வு, *செய்யுக்கு* (< *செயுக்கு) வாய்பாட்டு வடிவங்களின் அடிநிலை வடிவமாகிய *செய்யுவுக்கு* என்ற வாய்பாட்டு வடிவத்தில் நிகழும் வகரத்தின் பின் உள்ள உகரக்குறில் ஒகரமாகத் திரியாது என்ற கருதுகோளின் அடிப்படையில் அமைந்ததாகும். வகரத்தை அடுத்து உகரம் ஒகரமாகத் திரிய வாய்ப்பு உண்டெனில் (52)-இல் உள்ள ஆய்வுக்கு மாற்றாகப் பின் வரும் ஆய்வு கருத்தில் கொள்ளப்படும்.

53 (1) அறியுவுக்கு > அறியுவொக்கு
(2) அறியுவொக்கு > அறியு0ஒக்கு
(3) அறியு0ஒக்கு > அறியு0ஓக்கு
(4) அறியு0ஓக்கு > அறிய்0ஓக்கு
(5) அறிய்0ஓக்கு > அறியோக்கு

17.27.6 *செய்யோக்கு* வாய்பாட்டு வடிவங்களின் அடிநிலை வடிவங்களைப் பொறுத்தவரையில் நம்மால் இப்போதைக்குத் தீர்ந்த முடிவாக எதையும் சொல்ல முடியவில்லை. ஆயினும் (53)இல் குறிக்கப்பெற்றுள்ள ஆய்வு நமக்கு உடன்பாடில்லை. ஏனெனில் *செய்யுவுக்கு* வாய்பாட்டு வடிவங்கள் வகரக்கேட்டினால் *செய்யூக்கு* வாய்பாட்டினவாக அமையுமே தவிர *செய்யோக்கு* வாய்பாட்டின வாகத் தோற்றம் கொள்ள வாய்ப்பில்லை.

17.27.7 செய்துகொண்டு வாய்பாட்டுத் தொடர்களுக்கு இணையாக இரண்டு வகைத் தொடர்கள் குமரித் தமிழில் காணப் படுகின்றன. இவற்றைச் *செய்தொண்டு, செய்தோண்டு* வாய்பாட்டுத் தொடர்களாகக் குறிப்பிடலாம். இவற்றுள் *செய்தொண்டு* வாய்பாட்டுத் தொடர்கள் பொன்னீலனின் *கொள்ளைக்காரர்கள்* என்ற புதினத்திலும், *செய்தோண்டு* வாய்பாட்டுத் தொடர்கள் செல்சேவிஸின் *கொம்பியே* கவிதைத் தொகுப்பிலும் நிகழ்கின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

54. செய்தொண்டு வாய்பாட்டுத் தொடர்கள்

1(1) அலஞ்சியொண்டு (பொன். 1979:11) 'அலைந்துகொண்டு'
(2) ஆட்டியொண்டு (பொன். 1979:169) 'ஆட்டிக்கொண்டு'
(3) ஒறங்கியொண்டு (பொன். 1979:68) 'உறங்கிக்கொண்டு'
(4) கட்டியொண்டு (பொன். 1979:92) 'கட்டிக்கொண்டு'
(5) கடத்தியொண்டு (பொன். 1979:85) 'கடத்திக்கொண்டு'
(6) தூக்கியொண்டு (பொன். 1979:125) 'தூக்கிக்கொண்டு'

(7) நசுக்கியொண்டு (பொன். 1979:170) 'நசுக்கிக்கொண்டு'
(8) நிறுத்தியொண்டு (பொன். 1979:164) 'நிறுத்திக்கொண்டு'
(9) புடிச்சியொண்டு (பொன். 1979:58) 'பிடித்துக்கொண்டு'
(10) வாண்டியொண்டு (பொன். 1979:158) 'வாங்கிக்கொண்டு'

2(1) அடிச்சொண்டு (பொன். 1979:4) 'அடித்துக்கொண்டு'
(2) கடிச்சொண்டு (பொன். 1979:169) 'கடித்துக்கொண்டு'
(3) பறிச்சொண்டு (பொன். 1979:77) 'பறித்துக்கொண்டு'
(4) பிடிச்சொண்டு (பொன். 1979:146) 'பிடித்துக்கொண்டு'
(5) வச்சொண்டு (பொன். 1979:146) 'வைத்துக்கொண்டு'
(6) விளிச்சொண்டு (பொன். 1979:139) 'விளித்துக்கொண்டு'

### 55. செய்தோண்டு வாய்பாட்டுத் தொடர்கள்

1(1) அறிஞ்சோண்டு (செல். 1996:38) 'அறிந்துகொண்டு'
(2) எறிஞ்சோண்டு (செல். 1996:6) 'எறிந்துகொண்டு'
(3) கெடந்தோண்டு (செல். 1996:16) 'கிடந்துகொண்டு'
(4) செய்தோண்டு (செல். 1996:16) 'செய்துகொண்டு'

2(1) அடிச்சோண்டு (செல். 1996:20) 'அடித்துக்கொண்டு'
(2) எடுத்தோண்டு (செல். 1996:49) 'எடுத்துக்கொண்டு'
(3) குடிச்சோண்டு (செல். 1996:45) 'குடித்துக்கொண்டு'
(4) பாடியோண்டு (செல். 1996:41) 'பாடிக்கொண்டு'
(5) பாத்தோண்டு (செல். 1996:51) 'பார்த்துக்கொண்டு'

17.27.8. மேலே (54), (55) இல் குறிக்கப்பெற்றுள்ள எடுத்துக் காட்டுக்கள் அனைத்தும் *செய்துகொண்டு* வாய்பாட்டுத் தொடர்களை அடிநிலைவடிவங்களாகக் கொண்டவையாகும். இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம் யாதெனில் 54(2), 55(2) ஆகியவற்றில் நிகழும் தொடர்களின் அடிநிலை வடிவங்களில் செய்து வாய்பாட்டு வினைவடிவங்களையடுத்து ககரமெய் மிகுவதற்கு வாய்ப்பில்லை. எடுத்துக்காட்டாக, *அடித்துக் கொண்டு* செவ்வியல் வடிவம்; ஆனால் *அடிச்சொண்டு* (பொன். 1979:4), *அடிச்சோண்டு* (செல்.1996:20) ஆகியவற்றின் அடிநிலை வடிவம் **அடித்துக்கொண்டு* என்று இல்லாமல் **அடித்துகொண்டு* என்றே அமையும். காரணம், *அடித்துகொண்டு என்பதில் ககரம் உரசொலியாகும். **அடித்துக்கொண்டு* என்பதில் உள்ள ககர மிகுதி

வல்லொற்றாகும். குறிலிடை உரசொலி கெடுவதற்கு வாய்ப்புள்ளது. ஆனால் *அடித்துக்கொண்டு என்பதில் மிகுந்துள்ள ககர வல்லொற்று கெட வாய்ப்பில்லை. இந்த உண்மைகளைக் கருத்தில் கொண்டு *அடிச்சொண்டு, அடிச்சோண்டு* இரண்டும் பின்வருமாறு ஆராயப்படும்.[36]

56(1) *அடிச்சுகொண்டு > அடிச்சு0ஒண்டு
(2) அடிச்சு0ஒண்டு > அடிச்ச்0ஒண்டு
(3) அடிச்ச்0ஒண்டு > அடிச்சொண்டு

57(1) *அடிச்சுகொண்டு > அடிச்சு0ஒண்டு
(2) அடிச்சு0ஒண்டு > அடிச்சு0ஒண்டு
(3) அடிச்சு0ஒண்டு > அடிச்சோண்டு

17.27.9 குமரித்தமிழ் பல்வேறு கிளைமொழி வழக்குகளைக் கொண்ட ஓர் அற்புதச் சுரங்கமாகும். மொழியியல் ஆய்வாளர் களுக்கு ஆயுந்தொறும் தொறும் இன்பம் பயப்பதாகும் குமரித் தமிழின் கிளை மொழிகள். இவற்றை ஒதுக்கிவிட்டு, தமிழின் வரலாற்றையாகட்டும், பிறதிராவிட மொழிகளின் வரலாற்றை யாகட்டும் முழுமையாக அறிந்து கொள்ள முடியாது.

---

36. பார்ப்பன வழக்கில் நிகழும் *அடிச்சிண்டு* என்ற செய்திண்டு வாய்பாட்டுத் தொடர் பின்வருமாறு ஆராயப்படும்.

1 (1) அடிச்சுகிண்டு > அடிச்சு0இண்டு/அடிச்சுஇண்டு
(2) அடிச்சுஇண்டு > அடிச்சிண்டு

இங்கே அடிநிலைவடிவங்களில் *கொண்டு* என்பதற்குப் பதில் *கிண்டு* என்பது குறிக்கப்பட்டுள்ளது. *பாடிண்டு, ஆடிண்டு* முதலான பார்ப்பன வழக்குகளின் அடிநிலைவடிவங்களில் உயிரொலி இயைபின் காரணமாக *கொண்டு* என்பது *கிண்டு* எனத் திரிகிறது. எ-டு: *பாடிகொண்டு > பாடிகிண்டு.* இதனைக் கருத்தில் கொண்டே *அடிச்சுகிண்டு* என்பது மேலே அடிநிலை வடிவமாகக் கொள்ளப்பட்டது. அடிநிலைவடிவமும் முதல் நிலை வடிவமும் ஒன்றாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. *பாடிகொண்டு* என்பது முதல் நிலைவடிவம்; *பாடிகிண்டு* என்பது அடி நிலைவடிவம். இன்னொரு உண்மையையும் இங்கே கருத்தில் கொள்ளத் தோன்றுகிறது. *பாடிண்டு* என்பதை உண்மையிலேயே *பாடிகொண்டு என்ற அடிநிலை வடிவத்திலிருந்து தோனறியதாகக் கொள்ள முடியுமா? ஏன் அது *பாடின்று (>பாடிண்டு)* என்பதன் திரிபாக இருக்கக் கூடாது. குமரி மாவட்ட வழக்கில் எடுத்துக்காட்டாக *பாடிற்று வந்தான்* என்பது ஐசக் அருமைராஜனின் (1975) *கீறல்கள்* என்ற புதினத்தில் *பாடிக்கொண்டு வந்தான்* என்பதற்கு இணையாக வழங்குவது கருதற்பாலது. பாடிண்டு வாய்பாட்டு வினைகளின் தாக்கத்தால் செய்திண்டு வாய்பாட்டு வினைகள் பார்ப்பன வழக்கில் தோன்றியிருக்கலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

## 17.28 மீண்டும் நெடில்–குறில் மயக்கம்

17.28.1 தமிழில் நெடில்-குறில் மயக்கம் என்பது இரண்டு நிலைகளில் அறியப்படும். ஒன்று, மொழியியல் நிலை; பிறிதொன்று யாப்பியல் நிலை. இவற்றுள் யாப்பியல் நிலையில்அமையும் நெடில்-குறில் மயக்கம் செயற்கையானது. ஆனால் மொழியியல் நிலையில் அமையும் நெடில்-குறில் மயக்கம் மொழியின் படிநிலைகளை உணர்த்துவதாகும். இந்த வகையில் அமையும் நெடில்-குறில் மயக்கம் மெய்யொலிக் கேட்டினைத் தொடர்ந்தும் அமையலாம்; இயல்பு நெடிலைத் தொடர்ந்தும் அமையலாம். *தொழாஅர்* (திருக். 2), *உழாஅர்* (திருக். 14), *தொழாஅள்* (திருக். 55), *கழாஅ* (திருக். 840) ஆகிய எதிர்மறை வினைகளில் நிகழும் நெடில்-குறில் மயக்கம் இயல்பானது; யாப்பமைதி கருதி அமைந்ததல்ல. இந்த வினைகள், *வினையடி+ஆ-அர்/அள்/அ* என்ற அமைப்பினவாகும். இந்த அமைப்பில் *ஆ* என்பது எதிர்மறைக் கிளவி; *அர், அள்* என்பவை பால்விகுதிகள்; அகரக்கிளவி பெய ரெச்சவிகுதி. இத்தகைய எதிர்மறை வினைகள் காலப் போக்கில் நெடில்வழி நின்ற குறிலை இழந்து *தொழார், உழார், தொழாள், கழா* என அமைந்தன. *கழா* போன்ற பெயரெச்ச வடிவங்களைப் பிற்கால இலக்கணப் புலவர்கள் ஈறுகெட்ட எதிர்மறைப் பெய ரெச்சங்கள் எனக் குறிப்பிட்டனர். அது இன்றளவும் தொடர்கிறது.

17.28.2. இங்கே ஓர் உண்மையைக் கருத்தில் கொள்ள வேண்டும். *செய்யா* வாய்பாட்டு எதிர்மறைப் பெயரெச்சங்கள் **செய்யாஅம்* என்ற வாய்பாட்டு அடிநிலை அமைப்புக்களைக் கொண்டவையாகும். இந்த அடிநிலை அமைப்புக்கள் *செய்யும்* வாய்பாட்டு உடன்பாட்டுப் பெயரெச்சங்களுக்கு எதிரானவையாகும். **செய்யாம்* வாய்பாட்டு வினைகளில் நிகழும் மகர மெய்யானது *செய்யும்* வாய்பாட்டு வினைகளில் நிகழ்வதாகும். இதனைக் கருத்தில் கொண்டு *அணையாவிளக்கு, ஓடாக்குதிரை* ஆகிய தொடர்கள் பின்வருமாறு வருவிக்கப்படும். **அணையாம்விளக்கு> அணையாவிளக்கு; ஓடாம்+குதிரை > *ஓடாங்-க்உதிரை > ஓடாக்குதிரை*. வருமொழி முதலானது வல்லொற்றுக்களாக நிகழாத நிலையில் **செய்யாம்* வாய்பாட்டு வடிவங்களில் உள்ள ஈற்று மகரம் கெடுகிறது. வல்லொற்றாயின் ஈற்று மகரம் இனமெல் லொற்றாகத் திரிந்து பின்னர் இனவல்லொற்றாகத் திரிகிறது. இதனை, ம் > [ங், ஞ், ந்] / - [க், ச், த்], [ங், ஞ், ந்] > [க், ச், த்] / -[க், ச், த்] என்ற விதிகள் மூலம் விளக்கலாம்.

17.28.3. தமிழில் *செய்யும்* வாய்பாட்டு வினைமுற்றுக்களுக்கு எதிரான எதிர்மறை வினைமுற்றுக்கள் காணப்படவில்லை. மலயாளத்தில் நிகழும் *செய்யாயும்* (< செய்-ஆய்+உம்) வாய்பாட்டு வினைகள் செய்யும் வாய்பாட்டு வினைகளுக்கு எதிரானவை யாகும் (Robert Caldwell 1961: 468) எ-டு: *வராயும்* (Ramaswamy Aiyar, 1936:96). *போழ்* என்பதன்முன் எதிர்கால எதிர்மறைப் பெயரெச்ச வினையாகவும் *செய்யாயும்* எதிர்மறை வினைகளின் நிகழ்ச்சி பழைய மலயாளத்தில் காணப்படுகிறது. எ-டு: *காணாயும் போழ்* (Ibid.). *பாடும் பெண்* (= பாடாத பெண்) என்பதற்கு எதிராகப் *பாடாயும் பெண்* (= பாடாத பெண்) என்ற பெயரெச்சத் தொடருக்கும் மலயாளத்தில் வாய்ப்புள்ளதாகவே தோன்றுகிறது. மலயாளத்தில் நிகழும் *செய்யாயுந்து* (x *செய்யுந்து), *செய்யாய்வூ* (x *செய்வூ), *செய்யாய்வின்* (x *செய்வின்), *செய்யாய்வான்* (x *செய்வான்), *செய்யாய்க* (x *செய்க) ஆகிய வாய்பாட்டு எதிர்மறை வினைகள் *செய்யாயும்* வாய்பாட்டு வினைகளின் மீது தோன்றியமைந்தனவாகக் கருதலாம். தமிழில் *செய்யா* வாய்பாட்டு எதிர்மறை வினைகளைச் **செய்யாம்* (< *செய்யாயும்) வாய்பாட்டு வினைகளின் எச்சமாகத் துணியலாம்.

❀ ❀ ❀

# 18. கழிநெடில் வினைகள்

## *18.1. வினை வகைகள்*

*18.1.1* வினைமுற்றுக்கள் பொது (Impersonal), சிறப்பு (Personal) என இருவகைப்படும். மலயாளத்தில் நிகழும் செய்து (இறப்பு), செய்யுந்நு (நிகழ்வு), செய்யும் (எதிர்வு) ஆகிய வாய்பாட்டின பொது வினைமுற்றுக்களாகும். சிறப்பு வினை முற்றுக்கள் இயைபு விகுதிகளைக் கொண்டவை. இவை தமிழ், கன்னடம், தெலுங்கு முதலான திராவிட மொழிகளில் நிகழ்வனவாகும். தமிழில் சிறப்பு வினைகளைக் குறில் வினைகள், நெடில் வினைகள், கழிநெடில் வினைகள் என மூவகையாகப் பிரிக்கலாம். குறில் இயைபு விகுதிகளைக் கொண்டவை குறில் வினைகளாகும். எ-டு. *கரப்பென்* (கலி. 29.15), *மறைப்பென்* (கலி. 34.9), *வாழ்வை* (சிலம்பு 7.17), *காண்பென்* (கலி. 39.43), *கேட்பன்* (சிலம்பு 19.12) *'கேட்பேன்', கொடுப்பர்.* நெடில் இயைபு விகுதிகளைக் கொண்டவை நெடில் வினைகளாகும். எ-டு. *செய்தான், செய்வான், பாடினான், பாடுவான்.* குறில் இயைபு விகுதிகளின் முன் *-அன்-, -அவ்-* சாரியைகளைக் கொண்டு நிகழ்பவை கழிநெடில் வினைகளாகும். எ-டு. *செய்தவன், செய்பவன், பாடினவன், பாடியவன், பாடுபவன், செய்தனன், செய்வனன்* (பழந்தமிழில்), *செய்வன, பாடுவனர்* (பழந்தமிழில்), *பாடுவன.* குறிப்பு வினைமுற்றுக்களும் இந்த மூன்று பிரிவுகளில் அடங்கும். எ-டு. *நல்லன், தீயன்* (குறில்வினை); *நல்லார், உள்ளார்* (நெடில் வினை); *நல்லவர், உள்ளவர், நல்லன* (கழிநெடில் வினை). நெடில் வினைகள் அவ்சாரியையைக் கொண்ட கழிநெடில் வினைகளின் திரிபு என்ற கருதுகோள் இந்த ஆய்வுரையில் வலியுறுத்தப்படுகிறது.

*18.1.2* இறப்பு வினைகளைக் கருத்தில் கொண்டு தமிழ் வினைகளை மீண்டும் மெய்ந்நிலை வினைகள் அல்லது மெய் வினைகள் என்றும், .உயிர்நிலை வினைகள் அல்லது உயிர் வினைகள் என்றும் வகைப்படுத்தலாம். மெய் வினைகளில் தகரமெய் இறந்தகாலம் குறிக்கும். எ-டு. *செய்தான், அறிந்தான், படித்தான், நட்டான்.* உயிர் வினைகளில் *இ(ய்), இன்* ஆகியவை இறந்தகாலம் உணர்த்தும். எ-டு. *பாடிய, பாடியவன், பாடியான்* (பழந்தமிழில்), *பாடியோன், பாடின, பாடினவன், பாடினான்.* உயிர் வினைகளில் நிகழும் இறந்தகால விகுதிகளாகிய *இய், இன்* வடிவங்களைக் கருத்தில் கொண்டு அவற்றை இகர வினைகள் என்றும் இன்- வினைகள் என்றும் வகைப்படுத்தலாம். இந்த

வகைப்பாடு வினையடிகளைக் கருத்தில் கொண்டதல்ல. ஓர் உயிர் வினையானது இகர வினையாகவும் இன்-வினையாகவும் இரட்டை வடிவங்களில் அமையலாம். எ-டு. இகரவினை: *பாடிய, பாடியவன், பாடியோன்;* இன்-வினை: *பாடின, பாடினவன், பாடினான்.* இகர வகைக்கு இசைந்த உயிர் வினைகளின் இறப்பு வினைமுற்றுக்கள் *பாடியான், பாடியாள், பாடியார், பாடியது* என அமையும். இந்தப் பிரிவுக்கு இசைந்த தன்மை, முன்னிலை, இறப்பு வினைகளையும் கருத்தில் கொள்க. இன்-வகைக்கு இசைந்த உயிர் வினைகளின் இறப்பு வினைமுற்றுக்கள் *பாடினான், பாடினாள், பாடினார், பாடிற்று* என அமையும். இந்தப் பிரிவுக்கு இசைந்த தன்மை, முன்னிலை, இறப்பு வினைகளையும் கருத்தில் கொள்க.

*18.1.3* இக்காலச் செவ்வியல் தமிழில் இகரவகைக்குரிய வினைமுற்றுக்கள் வழக்கற்றுப் போய்விட்டன. ஆயினும் இவற்றின் எச்சங்களாக *பாடிய, பாடியவன், பாடியோன், பாடியவள், பாடியோள், பாடியவர், பாடியோர், பாடியது, பாடியவை* ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சி அழுத்தமாகக் காணப்படு கின்றது. பேச்சுத்தமிழில் இன்-வகைக்குரிய வினைமுற்றுக்கள் பயின்று வழங்குகின்றன. ஆயினும் பலவின்பால் வினைகள் (எ-டு: ஆடின, ஓடின) பேச்சு வழக்கில் மறைந்து போயின. பாடிற்று வடிவில் அமைந்த இன்-வினை பழந்தமிழில் *பாடின்று* என்ற வடிவிலும் நிகழ்கின்றது. இக்காலப்பேச்சு வழக்கில் ஒன்றன்பால், பலவின்பால் இரண்டினையும் *பாடிச்சு/பாடிச்சி* என்ற வடிவிலான வினை யமைப்பே உணர்த்துகிறது. பார்ப்பன வழக்கில் அது பாடித்து என்ற வடிவில் நிகழ்கிறது. *பாடிச்சு, பாடித்து* ஆகிய பேச்சு வழக்கு வினைவடிவங்கள் *பாடிற்று* என்பதன் திரிபா என்பது ஆய்வுக்குரியது![1]

---

1. பழங்கன்னடத்தில் *மாடித்து* (மாடு-இத்+து) வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் இறந்தகாலவினைமுற்றுக்களாகவும், *மாடிது* (மாடு-இது) வாய்பாட்டு வினைகள் இயைபு விகுதிகளின் முன் (Personal Markers) இறந்தகாலப் பகுதிகளாகவும் (எ-டு. மாடிதன் 'செய்தான்') நிகழ்கின்றன (Ramachandra Rao, B. 1972:122,123). ஹவ்யக கன்னடத்தில் *மாடித்து* வாய்பாட்டு வினைகள் ஒன்றன்பால் மற்றும் உளப் பாட்டுத் தன்மைப்பன்மை இறந்தகால வினைகளாகவும், இயைபு விகுதிகளின்முன் *மாடிது* வாய்பாட்டு வினைகள் இறந்தகாலப் பகுதிகளாகவும் (எ-டு. *மாடிதெ* 'செய்தாய்') நிகழ்கின்றன. (D.N.S. Bhat 1971:29). *மாடித்து* வாய்பாட்டு ஒன்றன்பால் வினைகள் *மாடித்உ/மாட்த்உ* என ஒடுங்கி திப்தூர் கன்னடத்திலும் (A.S. Acharya 1971:40,54), *மாடுத்உ* (<*மாடித்உ) வினைகள் ஒன்றன்பால்-பெண்பால் இறந்தகாலத் தனவாக ஹலக்கி கன்னடத்திலும் (A.S. Acharya 1967:104) நிகழ்கின்றன. இவற்றைக் கருத்தில் கொண்டு நோக்குகையில் பார்ப்பனத் தமிழில் நிகழும் *பாடித்து, ஓடித்து* முதலான இறந்தகால ஒன்றன்பால் வினைகளைக் கன்னடத்தில் நிகழும் *மாடித்து* வினைகளோடு வைத்து ஆராயத் தோன்றுகிறது. ஆயினும் *பாடினான், பாடினார்* ஆகிய வினைகளின் இறந்தகாலப் பகுதிகளைக் கருதுகையில் *பாடித்து, ஓடித்து* முதலான பார்ப்பன வினைகளைப் *பாடிற்று* வாய்பாட்டு வினைகளின் திரிபாகவே கொள்ளத் தோன்றுகின்றது. இது ஆய்வுக்குரியது.

இக்காலச் செவ்வியல் வழக்கில் உயிர் வினைகளின் பெயரெச்சங்கள் இகர வகைக்கு இசைந்தனவாகக் காணப் பட்டாலும் (எ-டு: ஆடிய, பேசிய) இவற்றுக்கு இசைவான வினைமுற்றுக்கள் (எ-டு: பாடியான், பாடியாள், பாடியார்) வழக்கற்றுப் போனதால் அந்த இடத்தில் இன்- வகைக்குரிய வினைமுற்றுக்கள் (எ-டு: பாடினான், பாடினாள், பாடினார்) நிகழ்கின்றன. ஆக, இன்- வகை வினைமுற்றுக்கள் இக்காலத்தில் செவ்வியல் வழக்கு, பேச்சு வழக்கு இரண்டிலும் வழங்குகின்றன. *பாடிய, பாடின* வாய்பாட்டுப் பெயரெச்சங்களைப் பொறுத்த வரையில் நிகழ்ச்சிக் கட்டுப்பாடு காணப்படுகின்றது. *பாடிய* என்பது செவ்வியல் வழக்கிலும், *பாடின* என்பது பேச்சு வழக்கிலும் நிகழ்கின்றன. இந்தக் கட்டுப்பாடு நெகிழ்ந்து *பாடின* வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செவ்வியல் வழக்கில் இடம் பெறும் நிலையும் அங்குமிங்குமாகக் காணப்படுகின்றது. இந்த நெகிழ்ச்சியானது பெயரெச்சம், வினையாலணையும் பெயர் முதலான வினை வகைகளில் நிகழ்ந்துள்ளதை நச்சினார்க்கினியரின் கலித்தொகை உரையில் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருதுக.

(1) கள்ளை உண்ணல் ஆகாது என்று நீக்கின தேவர்க்கும் (கலி.99. நச். உரை)

(2) நின் மலர்ந்த மார்பிற் பூசின பாடழிந்த சந்தனம் (கலி. 73 நச். உரை)

(3) நீ வருந்தினவர்களை வருத்தியேவிடுவை (கலி. 118. நச். உரை)

(4) அவன் அதற்கு அஞ்சினமை கண்டு (கலி. 84. நச். உரை)

18.1.4 பழந்தமிழில் இகர மற்றும் இன்- வகைக்குரிய வினை முற்றுக்கள் காணப்பட்டாலும், இன்- வகைக்குரியவையே பயனிலையாகச் செயல்படுகின்றன. பழைய மலயாளத்தில் *மடங்ஙியான்* (=மடங்கியான்), *சொல்லியான்* (=சொன்னான்), *அடங்ஙியான்* (=அடங்கியான்) ஆகிய வினைமுற்றுக்களின் நிகழ்ச்சியைக் குறிப்பிடும் எல்.வி. ராமசாமி அய்யர் (Ramaswamy Aiyar, L.V., *1936:65*) தமிழில் இத்தகைய வினைகள் வினையாலணையும் பெயர்களாகக் கருதப்படுகின்றன என்று கூறுகிறார். வினைமுற்றும், வினை யாலணையும் பெயரும் வேறானவை என்றும் வினைமுற்றானது பயனிலையாகத்தான் நிகழும் என்றும் இவர் கருதுகிறார் போலும். இது பற்றி இக்கட்டுரையில் பின்னர் ஆராயப்படும். இன்- வகைக்குரிய வினைமுற்றுக்கள் குறில் *(அன், அள், அர்)* மற்றும் நெடில் *(ஆன், ஆள், ஆர்)* இயைபு விகுதிகளைக் கொண்டவையாகப் *பாடு*

வாய்பாட்டு வினைத்திரிபுகளில் மட்டும் பழந்தமிழில் காணப்படுகின்றன.[2] பின்வரும் எடுத்துக் காட்டுக்களைக் கருதுக.

### குறில் விகுதி முற்றுக்கள்

*5 (1) பாடினம் (கலி. 106.48)*
*(2) பாடினை (பதி. 67.23)*
*(3) பாடினிர் (புறம். 109.17)*
*(4) பாடினன் (புறம். 99.12)*
*(5) பாடினள் (குறு. 89.7)*
*(6) வினவினர் (அகம். 133.13)*

### நெடில் விகுதி முற்றுக்கள்

*6 (1) அடங்கினேன் (கலி. 97.37)*
*(2) பாடினேன் (புறம். 349.9)*
*(3) பாடினேம் (புறம். 144.3)*
*(4) வருத்தினான் (கலி. 102.27)*
*(5) தேடினாள் (பரி. 20.66)*
*(6) வருந்தினாள் (கலி. 131.27)*

## *18.2* முற்றுவினைகளின் பன்முகச் செயற்பாடுகள்

*18.2.1* பழந்தமிழில் சிறப்பு வினைகள் பயனிலையாக மட்டுமின்றி முற்றெச்சங்களாகவும், எழுவாயாகவும், வேற்றுமை யுருபு ஏற்பனவாகவும் பன்முகச் செயற்பாடுகளை மேற்கொள் கின்றன. பொதுவாக, குறில் இயைபு விகுதிகளைக் கொண்ட

---

2. ஆனால் மெய்வினைகளில் குறில் இயைபு விகுதிகளின் நிகழ்ச்சி குறைந்தே காணப்படுகிறது. செவ்வியல் தமிழில் இறந்தகால மெய் வினைகளில் குறில் இயைபு விகுதிகளின் நிகழ்ச்சி காணப்படவில்லை. பேச்சுத் தமிழில் தன்மை, முன்னிலை வினைகளில் குறில் விகுதிகள் காணப்படுகின்றன. எ-டு: *செய்தென்/செய்தன்* (செய்தனா?) *செய்தோம்/செய்தம்* (செய்தமா?) *செய்தெ/செய்தி* (செய்தியா?), *செய்வென்/செய்வன்* (செய்வெனா?/ செய்வனா?), *செய்வம்/செய்வொம்* (செய்வமா?), *செய்வெ/செய்வி* (செய்வியா?). தமிழில் செய்தென், செய்தெம், செய்வென், செய்வம் ஆகிய வாய்பாட்டு வினைகள் கருதத்தக்கனவாகும். செவ்வியல் தமிழில் *திறப்பென்* (கலி. 29.11), *கேட்பன்* (சிலம்பு. 19.12) 'கேட்பேன்'. செய்வை (பழந்தமிழில்), செய்வர் ஆகிய வாய்பாட்டு மெய்வினைகள் குறில் இயைபு விகுதிகளைக் கொண்டுள்ளன. பழந்தமிழில் செய்மர் வாய்பாட்டு இறவாக் கால வினைமுற்றுக்களில் *அர்* என்பது குறில் விகுதியாகும். எ-டு. *உண்மர்* (பதி. 24.18), *காண்மர்* (பத்துப். 6.513), *என்மர்* (குறுந். 395.6) *கொண்மர்* (பத்துப். 6.514), *தின்மர்* (பதி. 24.18).

கழிநெடில் வினைகள் (எ-டு. செய்தனன், செய்தனள் முதலியன) முற்றெச்சங்களாக நிகழும் போக்கு சங்கத்தமிழில் காணப்படு கின்றது. நெடில் இயைபு விகுதிகளைக் கொண்ட வினைமுற்றுக்கள் பயனிலையாகவும், வேற்றுமையுருபேற்று பிற இலக்கணச் செயற் பாடுகளை மேற்கொண்டும் நிகழுமாற்றினைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. நெடில் வினைமுற்றுக்கள் வேற்றுமை யுருபேற்கும் நிலையினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்தும்.

7 (1) சிதைத்தானை (கலி. 142. 44)
(2) சென்றாரை (கலி. 105. 33)
(3) சேர்ந்தார்க்கு (கலி. 10. 2)
(4) துறந்தாரை (கலி. 118. 9)
(5) துறந்தானை (கலி. 43. 25)
(6) தோற்றாளை (கலி. 135. 6)
(7) நின்றேனை (கலி. 39. 20)
(8) பாய்ந்தானை (கலி. 104. 35)
(9) முனிந்தாளை (கலி. 99. 13)
(10) வந்தாற்கு (கலி. 51. 6)

*துணிந்தனிர்க்கு* (கலி. 87) என்ற வேற்றுமையுருபேற்ற கழி நெடில் வினைமுற்றும் பழந்தமிழில் காணப்படுகின்றது. இதன் மூலம் அன்சாரியை நிகழும் கழிநெடில் வினைமுற்றுக்களும் (பழந் தமிழில்) வேற்றுமையுருபேற்கும் வாய்ப்புள்ளவை என்று கருதலாம். குறில் வினைமுற்றுக்களில் எந்த வகையின வேற்றுமை யுருபேற்கும் எவை ஏற்காது என்பது ஆய்வுக்குரியது.

18.2.2 வினைமுற்றுக்கள் அடிப்படையில் வினைப்பெயர் களாகும். வினைமுற்று என்பதும் பயனிலை என்பதும் ஒன்றல்ல. பயனிலை என்பது இலக்கணச் செயற்பாடு. வினை முற்று என்பது நிகழ்ச்சி முடிவினை உணர்த்தும் ஒரு வினையின் வடிவம். அது தன்னிலை விளக்கமாகும். வினைமுற்றின் நிகழ்ச்சி வாக்கியத்தில் பயனிலையாகத்தான் அமைய வேண்டும் என்றில்லை. எடுத்துக் காட்டு (7)-இல் உள்ள வினைமுற்றுக்கள் இதனைத் தெளிவு படுத்தும். பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் வினைமுற்றின் இன்னொரு வகை இலக்கணச் செயற்பாட்டை உணர்த்துவன வாகும்.

(8) துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கானம் (கலி.145.18)
(9) நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (குறள் 476)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *நெகிழ்த்தான், ஏறினார்* ஆகிய வினைமுற்றுக்கள் எழுவாயாகச் செயல்படுவதைக் காண்க. வினைமுற்றுக்கள் வாக்கியத்தில் பயனிலை உட்பட எந்த இலக்கணச் செயற்பாட்டை மேற்கொண்டாலும் அவை அடிப்படையில் வினைப்பெயர்கள்தான். எடுத்துக்காட்டுக்கள் (7), (8)-இல் காணப்படும் வினைமுற்றுக்கள் பயனிலையாக நிகழ்ந்தாலும் சொல்லமைப்பில் மாறுபடுவதில்லை.

### 18.3 வினையெனப்படுவது

18.3.1 வினைமுற்றுக்களை உருபனியல் அடிப்படையில் வினைப்பெயர்களாகக் கொள்வதற்கு அவற்றின் அமைப்பில் எந்த விகுதியும் இல்லை. காலவிகுதி,[3] இயைபு விகுதி இரண்டிலும் வினைமுற்றை வினைப்பெயராகக் கொள்வதற்கான எந்த இலக்கணப்பண்பும் இல்லை. கால விகுதி காலத்தை உணர்த்து கிறது. முற்றுவிகுதியாகிய இயைபு விகுதி எழுவாயாக நிகழும் பெயரின் திணை, பால், எண் இடம் ஆகிய பண்புகளைக் குறிக்கிறது. ஆகவே இந்த இரண்டும் வினைமுற்றை வினைப் பெயராகக் கொள்வதற்கான தடயங்களைக் கொண்டவையல்ல. வினைமுற்றில் இந்த இரண்டு விகுதிகளும் போக எஞ்சியிருப்பது வினைப்பகுதிதான். இந்த வினைப்பகுதி பெயராக இருப்பதால்தான் இதனடியாகத் தோன்றும் வினைத்திரிபு வடிவம்

---

3. மலயாளத்தில் காலப்பகுதியே (Tense Base) வினைமுற்றாகும். எ-டு. செய்து (இறப்பு), செய்யுந்நு (நிகழ்வு), செய்யும் (எதிர்வு). ஆனால் இந்த வினைகள் பொது வினைமுற்றுக்கள் (Impersonal Finite Verbs) ஆகலின் கால விகுதிகள் (Tense Markers) காலப் பொருண்மையுடன் முற்றுப் பொருண்மையையும் சேர்த்தே உணர்த்துகின்றன. தமிழில் இயைபு விகுதிகளைப் பெயர்களாகக் கொள்வதற்கான வாய்ப்பை நாம் முற்றிலு மாகப் புறக்கணித்துவிடவில்லை. இத்தகைய நிலையில் அவற்றின்முன் நிகழும் காலப் பகுதிகளைப் பெயரெச்சமாகக் கொள்ளவேண்டியதாகிறது. ஆயினும் அவ்வாறு கொள்ள முடியாது என்றே தோன்றுகிறது. ஏனெனில் இயைபு விகுதிகள் உள் வினைகளாகக் (Copula Verbs) கொள்ளத்தக்கவை என்பது நமது கருதுகோள் (Kothandaraman, R. 1979. 1980. 1990a). இந்தக் கருதுகோளின்படி இயைபு விகுதிகளின் முன் நிகழும் காலப் பகுதிகளை பொது வினைமுற்றுக்களாகக் கொள்ளமுடியும். இதுபற்றிய விரிவான ஆய்வுக்கு இங்கே இடமில்லை. மேலும் செய்தனன், செய்தவன் வாய்பாட்டுக் கழிநெடில் வினைகளில் இயைபு விகுதிகள் காலப்பகுதியை அடுத்து நிகழாமல் செய்தன், செய்தவ் வாய்பாட்டுப் பொதுவினைகளை அடுத்தே நிகழ்கின்றன. இயைபு விகுதிகளைப் பெயராகக் கொள்ளும் நிலையில் இந்தப் பொதுவினைகளையும் பெயரெச்சங்களாகக் கொள்ள நேரிடும். எனவே இது விரிவான ஆய்வுக்கு உரியதாகும்.

(Conjugated Form) பெயராக அறியப்படுகிறது.[4] (Kothandaraman, R. 1978. 1982) அப்படியானால் பெயர்- வினை என்ற எதிர்நிலைப்பாகுபாடு என்னவாகும்? வினையடிகள் பெயரின் ஓர் உட்பிரிவாக அமையுமாகலின் பெயர்-வினை என்ற எதிர்நிலைப் பாகுபாட்டுக்கு இடமில்லை. அரும்பு, மலர், காய், கனி என்று பல சொற்கள் பெயராகவும் வினையாகவும் உள்ளனவே; இவற்றை இலக்கணம் எவ்வாறு விளக்கும்? எடுத்துக்காட்டாக அரும்பு என்பது வினைப் பண்பைக் குறிப்பிடுகையில் அது காலவிகுதி ஏற்கும்; வினையடை தழுவும். வினைப்பண்பு குறிக்கப் படாத நிலையில் அது பன்மை விகுதி ஏற்கும்; பெயரடையால் தழுவப்படும். இதனைப் பின்வருமாறு விளக்கலாம்.

(10) அரும்பு [பெயர், +வினை]

(11) அரும்பு [பெயர், -வினை]

மேலே (10)-இல் உள்ள அரும்பு வினைப்பெயராகவும், (11)-இல் உள்ளது இயற்பெயராகவும் கருதப்படும். இவற்றுள் [+வினை] என்பது தொடரனியற் பண்பெனவும் (Syntactic Feature) [+பெயர்] என்பது சொல்லின் வகை (Lexical Category) எனவும் அறியப்படும். இந்தப் புதிய அணுகுமுறையைத் தொடர்ந்து பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவை எவ்வாறு கருதப்படும்? வினையடியே வினைப்பெயராக இனங்காணப்படுகையில் அதனடியாகத் தோன்றும் எந்த வகையான வினையமைப்பும் வினைப்பெயராகத் தான் கருதப்படும். வினையெச்சம் வினைக்கும், பெய்யரெச்சம் பெயருக்கும் அடையாக வருவதால் அவை தமிழ் போன்ற மொழிகளில் வேற்றுமையுருபேற்க வாய்ப்பில்லை. வேற்றுமை யுருபேற்றல், பன்மை விகுதி கொள்ளுதல் இவையெல்லாம்

---

4. சிறப்பு வினைகளில் (Personal Verbs) நிகழும் இயைபு விகுதிகள் பெயராகக் கருதப்படுமாயின் இந்தக்கருதுகோளின் நிலை என்னவாகும்? மலயாளத்தில் உள்ளது போன்ற பொதுவினைமுற்றுக்கள் வேற்றுமை யுருபு ஏற்பதில்லை என்பதையும் இங்கே கருத்தில் கொள்ள வேண்டி யுள்ளது. செய்தனன், பாடினர், செய்வர், செய்மர் (பழந்தமிழ்) முதலான வாய்பாட்டுச் சிறப்பு வினைகளும் தமிழில் வேற்றுமையுருபு ஏற்பதில்லை. ஆனால் மலயாளம், தமிழ் இரண்டிலும் செய்தது வாய்பாட்டுப் பொதுவினை முற்றுக்களும் செய்தவன் வாய்பாட்டுக் கழிநெடில் வினைகளும் வேற்றுமையுருபு ஏற்கும். இவையெல்லாம் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) அமைந்த தொடரனியல் கட்டுப்பாடுகள் (Syntactic Constraints) என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். எனவே மலயாளத்தில் நிகழும் பொது வினை முற்றுக்கள் வேற்றுமையுருபு ஏற்காது என்பது வினைப்பகுதிகளை வினைப் பெயர்களாகக் கொள்வதற்கு ஒரு தடையாக இருக்க வாய்ப்பில்லை.

பெயருக்குக் கூறப்படும் இலக்கணந்தான். ஆனால் பெயரானது பெயருக்கு அடையாக நிகழும்போது (எ-டு: மீன்கூடை, கடல்நீர்) அங்கே இந்த இலக்கணமெல்லாம் தமிழ்போன்ற மொழிகளில் செல்லுபடியாவதில்லை. எனவே எச்சவினைகள் அனைத்தும் வினைப் பெயர்களே.

*18.3.2* வினைமுற்றுக்கள் வினைப்பெயர்களாகக் கருதப்படும் நிலையில் செய்தவன், செய்தவள், செய்தவர் என அமையும் வினை யாலணையும் பெயர்களின் நிலை என்ன? வினையாலணையும் பெயர்கள் என மரபிலக்கணிகளால் சுட்டப்படும் வினைப் பெயர்கள் வினைமுற்றின் ஒரு வகையாகவே கருதப்படும்.[5] அப்படியானால் செய்தவன் என்பதும் செய்தான் என்பதும் உருபனியல் நிலையில் எப்படி ஆராயப்படும்? செய்தனன் என்பதும்

---

5. இலங்கைப் பேச்சுத்தமிழில் செய்தவன், செய்தவள், செய்தவர், செய்தவங்க (=செய்தவர்கள்) ஆகிய வாய்பாட்டுக் கழிநெடில் வினைகள் செய்தான், செய்தாள், செய்தார், செய்தாங்க (=செய்தார்கள்) ஆகிய வாய்பாட்டு வினைகளுக்கு நிகராக அமைந்து பயனிலையாக நிகழும் நிலை இயல்பாகக் காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் யோகநாதனின் (1993) *தேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே* என்ற புதினத்தில் நிகழ்பவையாகும்.

1 (1) இந்தப்பொடியன் உங்களுக்கு என்ன குற்றம் செய்தவன் (=செய்தான்) (பக். 296)
(2) ஒரு காரணமும் இல்லாமல் எதுக்காக விநாயகம் தூக்கில் செத்தவன் (=செத்தான்) (பக். 509)

2 (1) அக்காள்! அடுப்பு மூட்டக் கொஞ்சம் தணல் வேணும். அம்மா வாங்கிக் கொண்டு வரச் சொன்னவ (=சொன்னாள்) (பக். 116)
(2) ஒடியல் புட்டும் வாழைப்பழமும் லட்சுமி அக்காள் கொண்டு வந்து குடுத்தவ (=கொடுத்தவள்) (பக். 459)
(3) இவள் அதுக்குள்ளை எங்கை போனவள் (=போனாள்) (பக். 270)

3 (1) தாடிச்சாமியார் என்ன சொல்லிவிட்டுப்போனவர் (=போனார்) (பக்.412)
(2) தலைமைக்காறன் இஞ்சை என்னை அனுப்பினவர் (=அனுப்பினார்) (பக்.472)
(3) அவங்கள் உம்மைத்தேடி வாறதா கனகர் எனக்குச் சொன்னவர் (=சொன்னார்) (பக்.399)

4 (1) கவுண்மெந்துக்காறன்கள் ஆராவது இங்கினை வந்துட்டுப் போனவங்களோ? (=போனார்களோ?) (பக்.141)
(2) என்ன கேட்டவங்கள் (=கேட்டார்கள்) (பக்.141)
(3) அதுக்கு என்ன சொன்னவங்கள் (=சொன்னார்கள்) (பக்.141)

இந்த எடுத்துக்காட்டுக்களில் பயனிலையாக நிகழும் முற்று வினைகள் அனைத்தும் மரபிலக்கணிகளால் வினையாலணையும் பெயர் எனச் சுட்டப் பெறும் வினைகளாகும். இவை செய்தான், செய்தாள், செய்தார், செய்தார்கள் ஆகிய வாய்பாட்டு நெடில் வினைகள் நிகழும் இடத்தில் நின்று பயனிலையாகச் செயல்படுவதால் இவற்றையும் வினைமுற்றின் ஒரு வகையாகவே கொள்ள வேண்டும்.

செய்தான் என்பதும் எப்படி ஆராயப்படுகின்றனவோ அப்படியே செய்தவன் என்பதும் ஆராயப்படும். செய்தான் என்பது செய்-த்+ஆன் எனவும் செய்தவன் என்பது செய்-த்-அவ்+அன் எனவும் பகுப்பாய்வு செய்யப்படும். செய்தனன், செய்தவன் இரண்டிலும் -அன்- என்பதும் -அவ்- என்பதும் சாரியையாகக் கொள்ளப்படும்.[6] செய்தவன், செய்தான் இரண்டையும் ஓர் ஒருங்கிணைந்த ஆய்வுக்கு (Integrated Analysis) உட்படுத்த முடியுமா? அதாவது ஒன்றிலிருந்து ஒன்றை வருவிப்பதன் மூலம் இரண்டுக்கும் உள்ள தொடர்பைப் புலப்படுத்த முடியுமா? முடியும். இவற்றுடன் செய்தோன் என்ற வினைப்பெயரையும் சேர்த்துக்கொள்ளலாம். அப்படியானால் செய்தவன், செய்தான், செய்தோன் இந்த மூன்றில் எது அடி நிலைவடிவமாக அமையும்? இதுபற்றிப் பின்னர் விரிவாகப் பேசப்படும். இப்போது மீண்டும் யகர வினை வகைகளைப் பார்க்கலாம்.

### 18.4 பழந்தமிழில் இகர வினைகள்

18.4.1 இகர வினைமுற்றுக்களை ஆவியல் வினைகள் என்றும் ஓவியல் வினைகள் என்றும் வடிவ அடிப்படையில் இருவகையாகப் பிரிக்கலாம். பாடியாய், பாடியான் முதலானவை ஆவியல் வினைகளாகும். பாடியோய், பாடியோன் முதலானவை ஓவியல் வினைகளாகும். பழந்தமிழிலும் குறள்போற்றிய தமிழிலும் ஆவியல் வினைகள் பயனிலையாகச் செயல்படவில்லை. ஓவியல் வினைகள் பழந்தமிழில் பயனிலையாகவும் செயல்படுகின்றன. வினை முற்றுக்கள் வினைப்பெயர்கள் ஆதலின் வாக்கியத்தில் ஒரு பெயரானது மேற்கொள்ளும் இலக்கணச் செயற்பாடுகளை வினை முற்றுக்களும் மேற்கொள்ளும். ஆவியல் வினைகள் பழந்தமிழில் கலித்தொகையிலும் குறளில் நிகழும் பின்பழந்தமிழிலும்

---

6. வண்ணனை ஆய்வில் வேறுவழியின்றி -அன்-, -அவ்- ஆகியவை சாரியை களாகக் குறிக்கப்படுகின்றன. ஆயினும் குறிப்பு வினை முற்றுக்களில் நிகழும் இந்தச் சாரியைகள் இருப்புப் பொருண்மையை உணர்த்தும் உள்வினைகள் (Copula Verbs) எனக் கருதத்தக்கவையாகும். எ-டு. வில்லோன் காலன கழலே (குறுந். 7.1), தொடியோள் மெல்லடி மேலவை சிலம்பே (குறு. 7.1,2) ஆகிய எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *காலன, மேலவை* ஆகியவை முறையே காலில் உள்ளன, மேலே உள்ளவை என்ற பொருண்மை விளக்கத்துக்கு உரியவையாகலின் முந்தியவற்றில் நிகழும் -அன், -அவ் ஆகியவை உள்வினைகளாகக் கொள்ளப்படும். ஆனால் உள்ளன, உள்ளவை ஆகிய வற்றில் நிகழும் -அன், -அவ்- என்பவை வெற்றுறுப்புக்களாகும். ஏனெனில் இவை உள் என்னும் உள்வினைக் குறிப்பு வினையின் அடியாக நிகழ்வன வாகும். இது பற்றிய விரிவான ஆய்வுக்கு இங்கு இடமில்லை.

மிகுதியாகக் காணப்படுகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

கலித்தொகை

12 (1) ஆற்றியார் (30.1)
(2) இயலியாள் (147.4)
(3) இயற்றியாள் (56.8)
(4) உதவியார்க்கு (149.6)
(5) ஊடியார் (72.16)
(6) கருதியாய்க்கு (136.15)
(7) கலங்கியாள் (100.17)
(8) கவவியார்க்கு (83.17)
(9) கூடியார் (72.15)
(10) சொல்லியாள் (109.8)
(11) தேறியாள் (100.9)
(12) நச்சியார்க்கு (86.21)
(13) நசைஇயாள் (100.13)
(14) நண்ணியார் (79.17)
(15) நந்தியாள் (136.6)
(16) நல்கியாள் (138.13)
(17) நீட்டியான் (101.18)
(18) பண்ணியாய் (69.17)
(19) போகியார் (145.14)
(20) முனைஇயாள் (145.14)
(21) வருந்தியாள் (121.22, 133.18)
(22) வேண்டியார் (85.23)

திருக்குறள்

13 (1) அடங்கியான் (124)
(2) இயற்றியார்க்கு (760)
(3) இயற்றியான் (1062)
(4) இவறியார் (935)
(5) இவறியான் (437)
(6) இழுக்கியான் (535)
(7) எண்ணியார் (494, 666)
(8) ஒன்றியார் (886)
(9) தங்கியான் (117)
(10) துன்னியார் (188, 494)
(11) நசைஇயார் (1199)
(12) நீக்கியார் (330)
(13) பேணியார் (1257)

மேலே (12), (13)-இல் குறிக்கப்பெற்றுள்ளவை வினைமுற்றுக் களாயினும் அவை பயனிலையாகச் செயல்படவில்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் நிகழும் இகர வினைகள் இந்த வகையில் மாறுபடுகின்றன.

(14) தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் தோன்றி யேனே (புறம்.397.10, 11)

(15) அருஞ்சுரத்து அல்கி யேமே இரும்புலி
களிறட்டுக் குழூஉம் ஓசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியும் கேட்டே (அகம். 261.12-15)

இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *தோன்றியேன்* (=தோன்றினேன்), *அல்கியேம்* (=அல்கினேம் 'தங்கினோம்') ஆகிய தன்மை வினைகள் பயனிலையாகச் செயல்படுகின்றன. இகர வினைகளுள் ஒரு பிரிவினவாகிய ஓவியல் வினைகள் பயனிலையாகச் செயல்படும் நிலையினைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணமுடிகிறது.

(16) அகமலி உவகையள் ஆகி முகனிகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மதங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீர் ஓதி மாஅ யோளே (அகம். 86. 28-31)

(17) விசும்பின், மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
ஊர்தியொடு நல்கி யோனே சீர்கொள
இழுமென விழிதரும் அருவி
வான்றோய் உயர்சிமைத் தோன்றிக் கோவே
(புறம். 399. 30-34)

(18) அறுகாற் பறவை அளவில மொய்த்தலின்
கண்கோ ளாக நோக்கிப் பண்டும்
இனையை யோவென வினவினள் யாயே
அதனெதிர் சொல்லாள் ஆகி அல்லாந்து
என்முக (ம்) நோக்கி யோளே (நற். 55. 5-9)

இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *இறைஞ்சியோள்* (=இறைஞ்சினாள்), *நல்கியோன்* (=நல்கினான்), *நோக்கியோள்* (=நோக்கினாள்) ஆகிய வினைமுற்றுவகை பயனிலையாகச் செயல்படும் போக்கு பிற்காலத் தமிழில் அருகி அற்றுப்போயிற்று. ஆயினும் இக்காலத் தமிழில் உயிர் வினையடியாகத் தோன்றிய பாடினோம், பாடுவோம், மற்றும் செய்வினையடியாகத் தோன்றிய செய்தோம், செய்வோம் ஆகிய வாய்பாட்டு வினைகள் ஓவியல் வினைகள் என்பது குறிப்பிடத்தக்கது.

18.4.2 பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் பயனிலையாகச் செயல்படும் ஓவியல் வினைகள் மாறுபட்ட வாக்கியச்சூழலில் நிகழ்கின்றன.

(19) நீயார் மகனையெம் பற்றியோயே (ஐங். 79.4)

(20)..... நீ மற்று, யாரை யோவெம் அணங்கியோயே
(அகம். 32.7, 8)

(21) யாரவள் (மகிழ்ந தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும்) வெளவி யோளே (ஐங். 66. 2-4)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பற்றியோய்* (=பற்றினாய்), *அணங்கியோய்* (=அணங்கினாய்), *வெளவியோள்* (=வெளவினாள்) ஆகியவற்றின் எழுவாயாக *நீ, அவள்* ஆகியவை நிகழ்ந்தாலும்; எழுவாயும் பயனிலையும் வெளிப்படையாகக் காணப்படும் இந்த வாக்கிய அமைப்புகள் பெயர்த்தொடராய் அமைந்து *யார் மகனை, யாரை, யார்* ஆகிய பயனிலை உறுப்புக்களின் எழுவாயாகச் செயல்படுகின்றன. இதனைப் பின்வரும் திரிபு வாக்கிய அமைப்புக்களில் தெளிவாக அறியலாம்.

(22) [நீ எம் பற்றியோய்] யார் மகனை?
'எம்மைப் பற்றிய நீ யார் மகன் ஆவாய்?'

(23) [நீ எம் அணங்கியோய்] யாரை?
'எம்மை அணங்கிய (வருத்திய) நீ யார் ஆவாய்?'

(24) [அவள் வெளவியோள்] யார்?
'வெளவிய அவள் யார்?'

வாக்கியங்கள் பெயர்த் தொடராய் அமைந்த இது போன்ற தொடரன்கள் தமிழில் சங்க இலக்கியம் தொடங்கி இக்கால இலக்கியம் வரை தொடர்ச்சியாகக் காணப்படுகின்றன.

18.4.3 பழந்தமிழில் தனிவாக்கியங்களில் பயனிலையாகச் செயல்படாத பல ஓவியல் வினைகள் (22) முதல் (24) வரையுள்ளது போன்ற (வாக்கிய அமைப்புக்களில் நிகழும்) வாக்கியப் பெயர்த் தொடர்களில் அமைந்து பயனிலையாகச் செயல்படுகின்றன. இதுபோன்ற வாக்கிய அமைப்புக்களை இந்தக் கட்டுரையில் ஆராய வாய்ப்பில்லை. ஆயினும் ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இங்கே ஒரு செய்தியை நாம் குறிப்பிட்டாக வேண்டும். [நீ எம் பற்றியோய்] என்று (22)-இல் நிகழும் வாக்கியப் பெயர்த்தொடரின் (Sentential Noun Phrase) திரிபாக அமைவது [எம்(மைப்) பற்றிய நீ] என்ற பெயர்த்தொடராகும். இந்த இரண்டு பெயர்த்தொடர்களும் தொடர்புடையவையாகும். ஒன்றிலிருந்து ஒன்று வருவிக்கத்தக்கது. இவற்றுள் [நீ எம் பற்றியோய்] என்பதில் முதலில் நிகழும் 'நீ' என்னும் பெயர் [எம்(மைப்) பற்றிய நீ] என்பதில் இறுதியில் நிகழ்கிறது. எழுவாயாகச் செயல்படும் பெயர் நிகழும் இடத்தைப் பொறுத்து வினையின் வடிவம் மாறுபடுகிறது. அதாவது *பற்றியோய், பற்றிய* இரண்டும் 'நீ' என்னும் பெயரின் நிகழ்ச்சி அடிப்படையில் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) அமைகின்றன (Kothandaraman, R. 1990b: 45-88). இதனின்றும் *பற்றிய* என்பது வினைமுற்றின் ஒருவகை என்பதும் *பற்றியோய்* என்பதைப்

போலவே அதுவும் வினைப்பெயராகக் கருதத்தக்கது என்பதும் பெறப்படுகின்றன. இது போன்ற பெயர்த்தொடர்களில் எழுவாயாக இனங்காணப்படும் தலைமைப் பெயரானது வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் அமையும். இந்த எழுவாய்ப் பெயரானது உரைக் கோவையில் (Discourse) சில வாக்கியங்களுக்கு முன்பாகவே கூட நிகழலாம்; அல்லது முதல் வாக்கியத்திலும் நிகழலாம்; அல்லது உரைக் கோவைச் சூழலைக் கொண்டு அதனைக் கண்டறியவும் முடியும். ஆக, மரபிலக்கணிகளால் வினையாலணையும் பெயர் எனக் குறிக்கப்பெறும் வினைமுற்றுப் பயனிலையின் எழுவாயானது வெளிப்படையாகவும் குறிப்பாகவும் அறியப்பட்டு [நீ எம் பற்றியோய்] போன்ற வாக்கியப் பெயர்த் தொடர்களை அமைக்க முடியும்.

### *18.5* ஒருங்கிணைந்த ஆய்வு

*18.5.1* உயிர்வினைப்பிரிவில் உள்ளது போலவே மெய்வினைப் பிரிவிலும் ஒவியல் வினைகளின் நிகழ்ச்சி காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(25) நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
(அகம். 48. 21, 22)

(26) வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
எந்தையும் கொடுக்க எனவேட் டேமே (ஐங். 6)

(27) கேட்டோன் எந்தையென் தெண்கிணைக் குரலே
(புறம். 400.8)

இந்த மூன்று எடுத்துக்காட்டுக்களிலும் நிகழும் *சென்றோன், வேட்டோள், கேட்டோன்* ஆகிய ஒவியல் வினைகள் (26)-இல் காணப்படும் *வேட்டேம்* என்பதைப்போன்ற முற்று வினைகளாகும். *வேட்டேம்* என்ற வினைமுற்றானது பயனிலையாகச் செயல்படுவதைப் போலவே *சென்றோன், வேட்டோள், கேட்டோன்* ஆகிய வினைமுற்றுக்களும் மேல் எடுத்துக்காட்டுக்களில் பயனிலையாகச் செயல்படுகின்றன. வினைப் பெயர்களாகிய இந்த வினைமுற்றுக்கள் *சென்றான், வேட்டாள், கேட்டான்* என்பவற்றுடன் தொடர்புடையவையாகும். ஓர் இலக்கணம் இந்த வினைகளுக்கிடையிலான அமைப்பியல்

தொடர்பை விளக்க வேண்டும். இதனை ஓர் ஒருங்கிணைந்த இலக்கண ஆய்வின் மூலம்தான் புலப்படுத்த முடியும். ஆய்வு வசதிக்காக *வேட்டாள், வேட்டோள்* ஆகிய இரண்டையும் இங்கே கருத்தில் கொள்ளலாம். ஒன்றிலிருந்து ஒன்றை வருவிப்பதன் மூலம் இரண்டும் தொடர்புடையவை என்பதைப் புலப்படுத்தலாம். ஆனால் *வேட்டாள்* என்பதிலிருந்து *வேட்டோள்* என்பதையோ, *வேட்டோள்* என்பதிலிருந்து *வேட்டாள்* என்பதையோ வருவிக்க வாய்ப்பில்லை. ஆனால் இவற்றுக்கிடையிலான தொடர்பைத் தொல்காப்பியர் நன்கு அறிந்துள்ளார். *ஆன், ஆள், ஆர்* மற்றும் *ஆய்* ஆகிய நான்கு விகுதிகளை ஈறாகக் கொண்ட வினைகளைப் பற்றிப் பேசுகையில் *பாலறி மரபின் அம்மூ ஈற்றும், ஆஓ ஆகும் செய்யு ளுள்ளே* (சொல். சேனா. 211), *ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்* (மேற்படி. 212) என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். இந்தக் கூற்றினின்றும் *வேட்டான்* என்பதும் *வேட்டோன்* என்பதும் தொடர்புடையவை என்பது தெளியப்படுகிறதே தவிர அவற்றின் தொடர்பை இலக்கணம் எப்படிப் புலப்படுத்த வேண்டும் என்பதை அது விளக்கவில்லை.

1852 இந்த நிலையில் *மணந்தான், மணந்தவன்* ஆகிய வினைகள் நிகழும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

(28) முருகன் வள்ளியை மணந்தான்.

(29) வள்ளியை மணந்தவன் முருகன்.

இவற்றுள் (28) -இல் உள்ளது நேர் வாக்கியம் (Normal Sentence). (29) -இல் உள்ளது கவை வாக்கியம் (Cleft Sentence). இரண்டும் தொடரனியல் தொடர்புள்ள (Syntactically Related) அமைப்புக் களாகும். இவற்றில் காணப்படும் *மணந்தான்* என்பதும் *மணந்தவன்* என்பதும் துணைநிலை வழக்கில் நிகழ்வனவாகும். இதனைக் கருதுகையில் *வேட்டாள், வேட்டோள்* இரண்டும் *வேட்டவள்* என்பதுடன் தொடர்புள்ளவை என்பது புலனாகின்றது. இந்த உண்மையானது *வேட்டாள், வேட்டோன்* இரண்டையும் *வேட்டவள்* என்பதினின்றும் வருவிக்க வகை செய்கிறது. இதனைத் தொடர்ந்து இந்த ஆய்வில் *வேட்டவள்* என்பது அடிநிலை வடிவ மாகக் கொள்ளப்பட்டு அதனின்றும் *வேட்டாள், வேட்டோள்* ஆகியவை வருவிக்கப்பட்டு மூன்றும் தொடரனியல் நிலையில் தொடர்புடையவை என்பது நிறுவப்படுகிறது. இது தொடர்பான பின்வரும் ஆய்வைக் கருத்தில் கொள்க. இந்த ஆய்வில் 0 என்பது ஓர் ஒலியன் கெடுவதைத் தொடர்ந்து ஏற்படும் வெற்றிடத்தைக் குறிப்பதாகும். வெறுமை என்பதையும் இக்குறியீடு உணர்த்தும்.

30 (1) வேட்டவள் > வேட்ட0அள் (வகரமெய்க்கேடு)

(2) வேட்ட0அள் > வேட்டஆள் (அ>ஆ/அ-)

(3) வேட்டஆள் > வேட்டாள் (அ>0/- உயிர்நெடில்)

அடைப்புக்குள் இருக்கும் விதிகளை இப்படி விளக்க வேண்டும். 30(2)-இல் குறில் முற்று விகுதியில் உள்ள அகரம் *அவ்* சாரியையின் எச்சமாகவுள்ள அகரத்தின் பின் நெடிலாகிறது. 30(3)-இல் சாரியையின் எச்சமாகிய அகரம் நெடிலுயிர்முன் கெடுகிறது.

31 (1) வேட்டவள் > வேட்டவொள் (அ>ஒ/வ்-)

(2) வேட்டவொள் > வேட்ட0ஒள் (வகரமெய்க்கேடு)

(3) வேட்ட0ஒள் > வேட்டஓள் (ஒ>ஓ/அ-)

(4) வேட்டஓள் > வேட்டோள் (அ>0/- உயிர் நெடில்)

இந்த இரண்டு ஆய்வுகளும் ( (30), (31)-இல் உள்ளவை) *வேட்டவன், வேட்டான், வேட்டோன்* ஆகிய மூன்றும் தொடர்புள்ளவை என்பதை உணர்த்துவனவாகும். படிநிலை வளர்ச்சியில் இவை மூன்றும் ஒருங்கிணைகின்றன. '*வேட்டவன்* என்பதும் *வேட்டனன்* என்பதும் மாறுபட்ட படிநிலை வளர்ச்சிகளைக் கொண்டவை. எனவே, *வேட்டனன்* என்பதை *வேட்டான், வேட்டோன்* என்ப வற்றுடன் ஒருங்கிணைந்த ஆய்வுக்கு உட்படுத்த முடியாது. இங்கே இன்னொரு கோட்பாட்டுச் சிக்கலையும் நாம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. *வேட்டவன்* என்பதில் வகரமெய்க் கேட்டினைத் தொடர்ந்து *அ0அ* ஆகிய இரண்டு குறில்களில் எந்தக் குறில் நெடிலாகிறது? *நெடில்-குறில் மயக்கம்* என்ற முந்தைய கட்டுரையில் முதல் குறில் நெடிலாவதாகக் கொள்ளப்பட்டிருக் கிறது. இங்கே இரண்டாம் குறில் நெடிலாகிறது. இந்த முரண்பாட்டை எப்படித் தவிர்ப்பது என்பது மேலும் ஆய்வுக்குரியதாகும்.

18.5.3 மேலே (30), (31) -இல் குறிப்பிட்டுள்ள ஆய்வு முறையானது *வேட்பான், வேட்போன்* ஆகியவற்றை *வேட்பவன்* என்ற அடிநிலை வினையிலிருந்து வருவிப்பதற்குப் பொருந்திவரும். *வேட்டேம், வேட்டாம், வேட்டோம், வேட்பேம், வேட்பாம், வேட்போம்* ஆகிய தன்மை வினைகளையும் மேற்கண்டவாறு தொடர்புள்ள அடிநிலை வினைகளிலிருந்து வருவிக்கமுடியுமென்று தோன்றுகிறது. ஆயினும் இது சிந்தனைக்குரியது. நெடில் இயைபு விகுதிகளைக் கொண்ட முன்னிலை வினைமுற்றுக்களின் அடிநிலை வினைகள் பழந்தமிழில் பதிவாகியுள்ளன. இவை கீழே குறிக்கப்பட்டு அவற்றினின்றும் தோன்றுவதற்கு வாய்ப்புள்ள புறநிலை முற்றுவினைகளும் சுட்டப் பெற்றுள்ளன.

| அடிநிலை வினைகள் | புறநிலை வினைகள் |
|---|---|
| *(32) அட்டவை (பரி. 21.66)* | *அட்டாய், அட்டோய்* |
| *(33) ஏந்தினவை (பரி. 15.58)* | ஏந்தினாய், ஏந்தினோய் |
| *(34) பெயர்ப்பவை (பரி. 21.66)* | பெயர்ப்பாய், பெயர்ப்போய் |
| *(35) விரித்தவை (பரி. 21.67)* | விரித்தாய், விரித்தோய் |
| *(36) கண்டவிர் (கலி. 140.1)* | கண்டீர் |
| *(37) அரியவை (பரி. 4.61)* | அரியாய், அரியோய் |
| *(38) அனையவை (பரி. 15.54)* | அனையாய், அனையோய் |
| *(39) உளவவை (பரி. 4.64)* | உளாய், உளோய் |

இந்த எடுத்துக்காட்டுக்களின் சொல்லமைப்பில் -அவ்- என்பது சாரியையாகும். இது மரபிலக்கணிகளால் குறிக்கப்படாத ஒன்றாகும். இது தொடர்பான குறிப்பினை அடிக்குறிப்பு (6)-இல் காண்க. இதனையடுத்துப் பல எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *ஐ* என்பது முன்னிலை ஒருமை விகுதியாகும். *அவ்* சாரியையில் உள்ள வகரமெய் பிறழ்பிரிப்பின் காரணமாக *ஐ* என்ற முன்னிலை ஒருமை விகுதியுடன் சேர்ந்து *வை* எனக் கொள்ளப்பட்டுத் தெலுங்கில் அது *-வி* எனத் திரிந்து வழங்குகிறது. எ-டு: நுவ்வு *பெத்ததானி-வி* (peddada:ni-vi) 'நீ பெரியவள்', *நுவ்வு பெத்தவாடி-வி* (peddadava:Di-vi) 'நீ பெரியவன்'. மேல் எடுத்துக் காட்டுக்களில் (37) முதல் (39) வரையுள்ளவை (*அரியவை, அனையவை, உளவவை* ஆகியவை) குறிப்பு வினைப்பெயர்களாகும். பழந்தமிழில் காணப்படும் இது போன்ற அடிநிலை வடிவங்கள் இக்கட்டுரையின் இறுதில் பிற்சேர்க்கை 1-இல் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வாளர்களுக்கு இவை பெரிதும் பயன்படும்.

18.5.4 ஆன், ஆள், ஆர் முதலான நெடில் விகுதிகளைக் கொண்ட வினைவடிவங்களின் தோற்றம்பற்றி மேலே பேசப்பட்டது. இவற்றின் அடிநிலை வடிவங்களில் *அவ்* என்பது சாரியையாகவும் அதனையடுத்து *அன், அள், அர்* முதலான குறில் இயைபு விகுதிகளும் நிகழ்கின்றன. கால இடை நிலையின் முன் சந்தியோ அல்லது அதன் விகார வடிவமோ நிகழாத வினையமைப்புகளைப் பொறுத்தவரை அடிநிலை முற்று வடிவத்தில் (எ-டு: செய்பவன்) காணப்படும் நிகழ்வெதிர்வுக் கால விகுதியாகிய (Non Past Marker) பகரமெய் புறநிலை வடிவங்களில் வகரமெய்யாகத் திரிகிறது. இதனைப் பின்வரும் ஒலியனியல் விதியின் மூலம் புலப்படுத்தலாம்.

40) ப் > வ் / { உயிரொலியன் / இடையொலியன் } - உயிரொலியன்

இந்த ஒலியனியல் விதியானது உயிரொலியன்களின் இடையிலும், இடையொலியன்களாகிய ய,ர,ல,ழ,ள ஆகியவற்றுக்கும் உயிரொலி யனுக்கும் இடையிலும் நிகழும் பகர மெய் வகரமெய்யாகத் திரியும் என்பதைக் குறிப்பிடுகிறது. இந்த விதி செயல்படும் அடிநிலை முற்றுவடிவங்களும் அவற்றினின்றும் பெறப்படும் புறநிலை முற்று வினைகளும் சுருக்கமாகக் கீழே தரப்பட்டுள்ளன.

| அடிநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|
| (41) வருபவன் | வருவான், வருவோன் |
| (42) கொய்பவன் | கொய்வான், கொய்வோன் |
| (43) வளர்பவன் | வளர்வான், வளர்வோன் |
| (44) செல்பவன் | செல்வான், செல்வோன் |
| (45) வாழ்பவன் | வாழ்வான், வாழ்வோன் |
| (46) ஆள்பவன் | ஆள்வான், ஆள்வோன் |

இங்கே குறிக்கப்பெற்றுள்ள அடிநிலை முற்றுவடிவங்கள் நிகழ்வெதிர்வுத் தன்மையன. அதாவது நிகழ்வையும் உணர்த்தும்; எதிர்வையும் குறிக்கும். இவற்றினின்றும் தோன்றியமையும் ஓவியல் வினைமுற்றுக்கள் (எ-டு: வருவோன், அளிப்போன் முதலானவை) நிகழ்வு, எதிர்வு இரண்டையும் உணர்த்துவனவாகவும் ஏனையவை (எ-டு: வருவான், அளிப்பான் முதலானவை) எதிர்காலத்துக்கு மட்டுமே உரியனவாகவும் அமைகின்றன. இத்தகைய புதுமை யாக்கங்கள் (Innovations) தாய் மொழியாளர்களைக் கொண்ட மொழிகளில் இயல்பாக நிகழக்கூடியனவாகும்.

18.5.5 முன்னதாக இக்கட்டுரையில் இகர வினைகள் (எ-டு: பாடியான், பாடியோன் முதலியன) பற்றிப் பேசப்பட்டது. மேலே (12), (13) மற்றும் (16) முதல் (21) வரையுள்ள எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க. இதே போல் இன்- வினைகளையும் (எ-டு: பாடினான், பாடினோன் முதலியன) கருத்தில் கொள்க. அவ்சாரியையும் அதனையடுத்துள்ள குறில் இயைபு விகுதிகளும் அமைந்த அடிநிலை முற்று வினைப்பெயர்களிலிருந்து பாடியான், பாடியோன் முதலானவையும் பாடினான், பாடினோன் முதலானவையும் தோன்றியமைகின்றன. பின்வரும் ஆய்வு இதனைத் தெளிவுபடுத்தும்.

47 (1) [பாடியவன் / பாடினவன்] > [பாடிய0அன் / பாடின0அன்] (வகரமெய்க்கேடு)

(2) [பாடிய0அன் / பாடின0அன்] > [பாடியஆன் / பாடினஆன்] (அ > ஆ / அ--)

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | பாடியஆன்<br>பாடினஆன் | > | பாடியான்<br>பாடினான் | (அ>0/-நெடில்உயிர்) |
| 48 (1) | பாடியவன்<br>பாடினவன் | > | பாடியவொன்<br>பாடினஒன் | (அ > ஒ/வ்-) |
| (2) | பாடியவொன்<br>பாடினவொன் | > | பாடிய0ஒன்<br>பாடின0ஒன் | (வகரமெய்க்கேடு) |
| (3) | பாடிய0ஒன்<br>பாடின0ஒன் | > | பாடியஒன்<br>பாடினஒன் | (ஒ > ஓ/அ-) |
| (4) | பாடியஓன்<br>பாடினஓன் | > | பாடியோன்<br>பாடினோன் | (அ > 0/-உயிர்நெடில்) |

தமிழில் பாடியான், பாடியாள், பாடியார் ஆகிய வாய்பாட்டு வினைகள் வினையாலணையும் பெயர்களாகக் கருதத்தக்கவை என்ற எல்.வி. ராமசாமி அய்யரின் கருதுகோள் முன்னதாகக் குறிப்பிடப் பட்டது. ஆயினும் (14) முதல் (21) வரையிலான எடுத்துக் காட்டுக்களில் நிகழும் இகர வினைகளும் (47), (48)-இல் நிகழ்த்தப் பெற்றுள்ள ஆய்வும் ராமசாமி அய்யரின் கருதுகோளை அரண் செய்வனவாக இல்லை. எனவே நாம் அதனை முனைப்பாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

### 18.6 ஒலியன் திரிபு

18.6.1 மேலே (47), (48)-இல் நிகழ்த்திய ஆய்விலும், முன்னதாக (30), (31)-இல் நிகழ்த்திய ஆய்விலும் சில ஒலியன்கள் திரிந்தமையும்போக்கு காணப்பட்டது. இவ்வாறு திரிந்தமையும் ஒலியன்களின் பண்புகளைப் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுவது அவசியமாகிறது. அகரமும் ஒகரமும் இதழ்குவி பின்னுயிர்களாகும். பல்லிதழ் ஒலியனாகிய வகரமெய் பின்னுயிர்களின் இன ஒலியனாகும். இதனால்தான் வகரத்தையடுத்து நிகழும் அகரம் ஒகரமாகிறது. *கண்டவிர்* (கலி. 140.1) என்பது *கண்டீர்* எனத் திரிகிறது. இங்கே வகரம் கெட்டபின் இகரம் நெடிலாகிறது. வகரம் கெட்டபிறகு குறில் முதல் இயைபுவிகுதி நெடில் முதல் விகுதியாகத் திரிதலும் அவ்சாரியையில் எஞ்சியுள்ள அகரம் கெடுதலும் கோட்பாட்டு நிலையில் சிந்திக்கத் தக்கவையாகும். அவ் என்னும் சாரியையில் உள்ள அகரம் கெட்டு, குறில் முதல் இயைபு விகுதிகள் நெடில் முதல் விகுதிகளாகின்றனவா அல்லது குறில்முதல் விகுதிகள் நெடில் முதலாகத் திரிந்தபின் அவ் சாரியையின் அகரம் கெடுகிறதா என்பதெல்லாம் ஆய்வுக்குரியது.

18.6.2 கன்னடத்திலும் செய்தோன், செய்வோன், செய்யாதோன் ஆகியவை போன்ற ஓவியல் வினைகளின் நிகழ்ச்சி காணப்படு கின்றது. (D.N.S. Bhat 1971:48,49) தமிழில் உள்ளது போன்றே மேலே குறிப்பிட்ட ஓவியல் வினைகள் அவ்சாரியை கொண்ட கழிநெடில் வினைகளின் திரிபாக அமைகின்றன. பின்வரும் எடுத்துக்காட்டுக் களும் அவற்றின் அடிநிலை வடிவங்களாகிய கழிநெடில் வினைகளும் இதனைப் புலப்படுத்தும்.

48(1) கொட்டோனு (பக். 48) < *கொட்டவனு (=கொடுத்தவன்)

(2) கொட்டோளு (பக். 48) < *கொட்டவளு (=கொடுத்தவள்)

(3) கொட்டோரு (பக். 48) < *கொட்டவரு (=கொடுத்தவர்)

49(1) ho:po:nu (Page 48) < *ho:pavanu (=போகிறவன்)

(2) ho:po:Lu (Page 48) < *ho:pavaLu (=போகிறவள்)

(3) ho:po:ru (Page 48) < *ho:pavaru (=போகிறவர்)

(50) bando:Lu (Page 48) < *bandavaLu (=வந்தவள்)

(51) ho:gaddo:nu (Page 48) < *ho:gaddavanu (=போகாதவன்)

மேலே குறிப்பிட்டது போன்ற மேலும் பல ஓவியல் சார்ந்த கன்னட வினைகளும் அவற்றின் அடிநிலை வினைகளும் பிற்சேர்க்கை 2-இல் கொடுக்கப்பட்டுள்ளன.

### 18.7. எதிர்மறையிலும் அவ்வாறே

தமிழில் செய்யாதார், செய்யாதோர் முதலான எதிர்மறைக் குறிப்பு வினைப் பெயர்களும் நல்லார், நல்லோர் முதலான குறிப்பு வினைப் பண்புப் பெயர்களும் காணப்படுகின்றன. அதேபோல் எல்லாரும், எல்லோரும் ஆகியவையும் உறழன்களாக (Free Variants) நிகழ்கின்றன. இவை முறையே செய்யாதவர், நல்லவர், *எல்லவரும் ஆகிய அடிநிலை வடிவங்களிலிருந்து வருவிக்கத்தக்கனவாகும். மேலே (30), (31), (47), (48) ஆகியவற்றில் குறிப்பிட்டுள்ள ஆய்வு முறை இவற்றுக்கும் பொருந்தும். பழந்தமிழில் *கொய்யுமோன்* (புறம். 252.3), *அறியுமோன்* (புறம். 137.4), *வேயுமோர்* (பரி. 12.11), *உணருமோர்* (தொல். சொல். சேனா. 96), *தெரியுமோர்* (தொல். சொல். சேனா. 101), *தெளியுமோர்* (தொல். சொல். சேனா. 153) முதலான வினைமுற்றுப் பெயர்கள் காணப்படுகின்றன. இவை முறையே செய்யுமவன், செய்யுமவர் வாய்பாட்டு அடிநிலை வினைகளினின்றும் வருவிக்கத்தக்கனவாகும்.

## பிற்சேர்க்கை – 1

பழந்தமிழில் பதிவாகியுள்ள அடிநிலைவடிவங்களாகக் கொள்ளத்தக்க குறிப்பு முற்றுவினைவடிவங்களும், அவற்றினின்றும் தோன்றியமையக் கூடிய குறிப்பு முற்றுவினைப்பெயர்களும் கீழே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

| அடிநிலை வடிவம் | புறநிலை வடிவம் |
|---|---|
| (1) இணையவை (பரி. 4.62) | இணையாய், இணையோய் |
| (2) உடையவை (பரி. 1.56) | உடையாய், உடையோய் |
| (3) ஒளியவை (பரி. 15.55) | ஒளியாய், ஒளியோய் |
| (4) கடவுளவை (பரி. 4.63) | கடவுளாய், கடவுளோய் |
| (5) குழையவை (பரி. 15.55) | குழையாய், குழையோய் |
| (6) கொடியவை (பரி. 1.57, 15.56) | கொடியாய், கொடியோய் |
| (7) சான்றவை (பரி. 9.80) | சான்றாய், சான்றோய் |
| (8) சான்றவிர் (கலி. 139.1, 33) | சான்றீர் (கலி. 139.4, புறம். 195.1) |
| (9) நாஞ்சிலவை (பரி. 15.57) | நாஞ்சிலாய், நாஞ்சிலோய் |
| (10) நிழலவை (பரி. 1.58,13.47) | நிழலாய், நிழலோய் |
| (11) நேமியவை (பரி. 1.61,15.59) | நேமியாய், நேமியோய் |
| (12) புகழவை (பரி. 1.60,13.41) | புகழாய், புகழோய் |
| (13) பூணவை (பரி. 4.47) | பூணாய், பூணோய் |
| (14) வட்டத்தவை (பரி. 15.61) | வட்டத்தாய், வட்டத்தோய் |
| (15) வாளவை (பரி. 15.61) | வாளாய், வாளோய் |
| (16) குழையவன் (கலி. 105.11) | குழையான், குழையோன் |
| (17) அம்பினவை (பரி. 15.60) | அம்பினாய், அம்பினோய் |
| (18) உருவினவை (பரி. 1.59) | உருவினாய், உருவினோய் |
| (19) எஃகினவை (பரி. 9.79) | எஃகினாய், எஃகினோய் |
| (20) துளவினவை (பரி. 15.54) | துளவினாய், துளவினோய் |
| (21) மார்பினவை (பரி. 1.60) | மார்பினாய், மார்பினோய் |
| (22) வளையினவை (பரி. 1.57) | வளையினாய், வளையினோய் |
| (23) ஊரவிர் (கலி. 147.53) | ஊரீர் (அகம்.390.8, புறம். 141.4) |
| (24) நுதலவர் (கலி. 45.23) | நுதலார், நுதலோர் |
| (25) ஊரவர் (கலி. 72.13) | ஊரார் (ஐங். 113.3),<br>ஊரோர் (அகம். 273.13) |
| (26) சான்றவர் (கலி. 120.16) | சான்றார் (கலி. 11. 20, பரி. 20. 88)<br>சான்றோர் (அகம்.55.13) |
| (27) தோளவை (பரி. 21.67) | தோளாய் (கலி. 20.15)<br>தோளோய் (குறுந். 204.5, நற். 13.5) |

இந்த அடிநிலை வடிவங்களைக் கருத்தில் கொண்டு *யாரீர்* (புறம். 141.5, 150.23, அகம். 390.14) என்பது *யாரவிர் என்பதினின்றும் பெறப் படும். அதேபோல் ஒளிபடைத்த *கண்ணினாய் வா வா வா*, உறுதி கொண்ட *நெஞ்சினாய் வா வா வா* என்ற பாரதியின் அடிகளில் நிகழும் கண்ணினாய், நெஞ்சினாய் ஆகியவை **கண்ணினவை*, **நெஞ்சினவை* ஆகியவற்றினின்றும் தோன்றியமையும்.

## பிற்சேர்க்கை – 2

கன்னடத்தில் நிகழும் ஓவியல் வினைகளும் அவற்றின் அடிநிலை வினைகளாகிய கழிநெடில் வினைகளும் ஒப்பீட்டு ஆய்வுக்காக வேண்டி கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இவை மைசூர் கன்னடத்தில் (U.P. Upadhyaya & N.D. Krishnamurthy 1972) வழக்கில் உள்ளவையாகும்.

1 (1) கலியோரு (பக். 216) < *கலியுவரு (=கற்பவர்)
(2) கலியோளு (பக். 219) < *கலியுவளு (=கற்பவள்)
(3) கலியோனு (பக். 219) < *கலியுவனு (=கற்பவன்)
(4) மாடோரு (பக். 217) < *மாடுவரு (=செய்பவர்)
(5) ஓதோரு (பக். 219) < *ஓதுவரு (=படிப்பவர்)
(6) நேயோரு (பக். 221) < *நேயுவரு (=நெய்பவர்)
(7) காணோது (பக். 221) < *காணுவது (=காண்பது).

2 (1) மாடதோரு (பக். 219) < *மாடதவரு (=செய்யாதவர்)
(2) கொடதோரு (பக். 216) < *கொடதவரு (=கொடாதவர்)

3 (1) ho:do:ru (Page 216) < *ho:davaru (=போந்தவர்)
(2) bando:ru (Page 219) < *bandavaru (=வந்தவர்)
(3) bardo:ru (Page 220) < *baredavaru (=வரைந்தவர் 'எழுதியவர்')
(4) beLedo:ru (Page 221) < *beLedavaru (=விளைத்தவர்)
(5) beLiyo:ru (Page 221) < *beLiyuvaru (=விளைப்பவர்)
(6) bariyo:nu (Page 220) < *bareyuvanu (=வரைபவன் 'எழுதுபவன்')

4 (1) bariyado:ru (Page 220) <*bariyadavaru (=வரையாதவர் 'எழுதாதவர்')
(2) bariyado:nu(Page 221) <*bariyadavanu (=வரையாதவன் 'எழுதாதவன்')

தமிழில் மெய்வினைகள் வினைத்திரிபின் அடிப்படையில் வல்வினை-மெல்வினை என்று பாகுபடுத்தப்படும். கன்னடத்தில்

இந்தப் பாகுபாடு தமிழில் உள்ளது போல் அமையவில்லை. எடுத்துக்காட்டாகக் *கேள், குடி, பிடி* ஆகிய வினைகள் தமிழில் வல்வினையாகவும் கன்னடத்தில் மெல்வினையாகவும் நிகழ்கின்றன. கருதுக: *கேட்டான்* (த) *கேளிதனு* (கன்); *குடித்தாள்* (த), *குடிதளு* (கன்); *குடித்த* (த), *குடித* (கன்); *பிடித்து* (த), *ஹிடிது* (கன்).

மேலே குறிக்கப்பெற்றுள்ள கன்னட ஒவியல் வினைகளையும் அவற்றின் அடிநிலை வினைகளையும் இந்தப் பின்னணியில் நோக்க வேண்டும்.

❊ ❊ ❊

# 19. அப்புறம்

## 19.1. பிறகும் பிறவும்

தமிழில் *பிறகு* என்ற காலக்கிளவிக்கு நிகராகப் *பின், பின்னர், பிற்பாடு, பின்றை* ஆகிய சொற்கள் வழங்குகின்றன. எ-டு: *வந்த+ பிறகு/பின்/பின்னர்/பிற்பாடு/பின்றை).* இவற்றுள் *பின்றை* என்பது பழந்தமிழ் வழக்காகும். எ-டு: *வதுவை கூடிய பின்றை* (அகம். 70.8). இவை தவிர, பொதுப்பேச்சு வழக்கில் *அப்புறம்* என்றொரு சொல்லும் *பிறகு* என்பதற்கு நிகராகக் காணப்படுகிறது. இந்தச் சொல் பொதுப்பேச்சுத் தமிழில் (Standard Spoken Tamil) காணப் பட்டாலும் செவ்வியல் தமிழிலும் இதன் ஆட்சி காணப்படுகிறது. எ-டு: *நான் அப்புறம் சாப்பிடுவேன்* (மு.வ. 1978:51). பேச்சு வழக்கில் *அப்புறம்* என்ற உருபன் (Morpheme) *புறம்* என்ற மாற்றுருபையும் (Allomorph) கொண்டுள்ளது. இந்த மாற்றுருபு இறந்தகாலப் பெய ரெச்சத்தையடுத்து நிகழ்வதாகும். எ-டு: *வந்தப்புறம், செய்தப்புறம், போனப்புறம், சொன்னப்புறம், பாடினப்புறம்.* தமிழில் *அப்பொழுது* என்ற தொடருக்கு எதிராக *இப்பொழுது* என்ற தொடரும், வினாவின் தன்மையதாய் *எப்பொழுது* என்ற தொடரும் காணப்படுகின்றன. ஆனால் *அப்புறம்* என்பதற்கு எதிராக *இப்புறம்,* வினாவின் தன்மையதாகிய *எப்புறம்* ஆகியவற்றின் நிகழ்ச்சி பேச்சுவழக்கிலாகட்டும் செவ்வியல் வழக்கிலாகட்டும் காணப்படவில்லை. இதனின்றும் *அப்புறம்* என்பது *அவ்+புறம் / *அம்+புறம்* என்று பகுப்பாய்வு செய்ய முடியாத ஒரு தனியுருபன் என்பது புலனாகிறது.

## 19.2 புறம் – நிகழ்ச்சிக் களம்

*அப்புறம்* என்பதன் மாற்றுருபாகிய *புறம்* என்பது இறந்தகாலப் பெயரெச்சத்தையடுத்து நிகழும் என்று மேலே அறியப்பட்டது. இதிலும் கூட ஒரு நிகழ்ச்சிக் கட்டுப்பாடு போற்றப்படுகிறது. வடிவங்களைக் கருத்தில் கொண்டு இறந்தகாலப் பெயரெச்சங்களைச் *செய்த, பாடின, பாடிய* என்று மூன்று வாய்பாட்டினவாக வகைப்படுத்தலாம். இவற்றுள் *செய்த, பாடின* ஆகிய வாய்பாட்டுப் பெயரெச்சங்களையடுத்தே *புறம்* என்பது நிகழ்கிறது. எ-டு: *வந்தப்புறம், பாடினப்புறம்.* எந்த வழக்கிலும்

**பாடியப்புறம்* என்பதன் நிகழ்ச்சி காணப்படவில்லை. இறந்தகாலப் பெயரெச்சங்களையடுத்து வல்லொற்றில் தொடங்கும் பெயர்கள் நிகழும்போது வல்லொற்று மிகுவதில்லை. எ-டு: *வந்த பையன், பாடின பையன், பாடிய பையன்.* செவ்வியல் வழக்கிலாகட்டும் பேச்சு வழக்கிலாகட்டும் **வந்தப்பையன், *பாடினப் பையன், *பாடியப் பையன்* என்று வல்லொற்று மிகுந்த தொடர்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

## 19.3 வல்லொற்று மிகுதி வழங்கும் தடயம்

19.3.1 பழந்தமிழில் *கண், கால், கடை* ஆகிய இட வேற்றுமைப் பெயர்கள் இறந்தகாலப் பெயரெச்சத்தின் பின் நிகழ்கையில் வல்லொற்று மிகும் நிலை காணப்படுகிறது. எ-டு: *எய்தியக் கண்ணும்* (குறள். 670, 740), *தேறியக்கண்ணும்* (குறள். 514), *வந்தக்கால்* (கலி. 38.14), *இயைந்தக்கால்* (குறள். 489), *வந்தக்கடை* (கலி. 22.22), *அறிந்தக்கடைத்தும்* (குறள். 37). இந்த எடுத்துக் காட்டுக்களில் நிகழும் வல்லொற்று மிகுதியும் *வந்தப்புறம், சொன்னப்புறம், போனப்புறம்* முதலிய *செய்தப்புறம்* வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் வல்லொற்று மிகுதியும் ஒரே ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டியவையாகும். இங்கே தீர்வு காண வேண்டிய அடிப்படைச் சிக்கல் என்னவெனில் செய்தப்புறம் வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் வல்லொற்று மிகுதியை எப்படி விளக்குவது? இந்தச் சிக்கலுக்கான தீர்வு செவ்வியல் வழக்கில் காணப்படும் *ஓடாக்குதிரை,* பேச்சுவழக்கில் காணப்படும் *செய்தப்ப (=செய்தபோது), செய்யாதப்ப (=செய்யாதபோது)* ஆகிய தொடர்களில் நிகழும் வல்லொற்று மிகுதிக்கும் பொருந்தும் என்று தோன்றுகிறது.

19.3.2 திருநெல்வேலி, கன்னியாகுமரி (நெல்லை-குமரி) ஆகிய தென்மாவட்டப் பேச்சு வழக்கில் **செய்தம்பிறகு* (=செய்த பிறகு) என்ற ஓர் வாய்பாட்டுத் தொடரின் நிகழ்ச்சி பரவலாகக் காணப்படுகின்றது. இந்த வாய்பாட்டுத் தொடரில் நிகழும் *பிறகு* என்பது *பெறவு, பொறகு, பொறவு* என்று பலவாறாகத் திரிந்தமைவதை நெல்லை-குமரி மாவட்ட இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

(1) ஆக்கினம் பெறவு (*நீல. 1968:24*) (= ஆக்கிய பிறகு)

(2) இருட்டினம் பெறவு (*சு.ரா.1973:28*) (= இருட்டிய பிறகு)

(3) இறங்கினம் பொறவு (*நீல. 1968:115*) (= இறங்கிய பிறகு)

(4) போனம் பொறவு (நீல1968:25,வநி1996ஆ:130) (=போனபிறகு)

(5) சொன்னம் பொறகு (நா.நா1977:303) (= சொன்னபிறகு)

(6) பெத்தம் பொறவு (வநி 1996அ:5) (= பெற்றபிறகு)

(7) வந்தம் பொறகு (வதா.1976: சபலம்) (=வந்தபிறகு)

(8) வந்தம் பொறவு (நீல. 1968:183, வநி. 1996 ஆ52) ( ,, )

(9) வந்துட்டம் பொறவு (வநி1996ஆ:64) (=வந்துவிட்டபிறகு)

19.3.3 மேற்கண்ட எடுத்துக்காட்டுக்கள் பொதுப்பேச்சு வழக்கில் காணப்படும் *செய்தப்புறம்* வாய்பாட்டுத் தொடர்களுக்கு நிகரானவையாகும். இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் பெய ரெச்சங்கள் *செய்தம்* வாய்பாட்டினவாகக் கருதத்தக்கவையாகும். *செய்தம்* வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் *செய்-த்+அம்* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகும். இந்த வாய்பாட்டு அமைப்பில் காணப்படும் *-அம்* விகுதியானது செய்த வாய்பாட்டுப் பெய ரெச்சங்களின் ஈற்றில் நிகழும் அகர விகுதியின் மாற்றுருபாகக் கொள்ளத்தக்கதாகும்.

## 19.4 கோரைப்பாயும் – கோரம்பாயும்

19.4.1 செய்தப்புறம் வாய்பாட்டுத் தொடர்களில் நிகழும் வல்லொற்று மிகுதியை ஆராய்கையில் இத்துடன் தொடர்புள்ள வேறு சில வழக்குகளையும் கருத்தில் கொள்வது பொருத்தமாக இருக்கும். செவ்வியல் வழக்கில் நிகழும் *கோரைப்பாய்* என்பது *கோரம்பாய்* (நாநா. 1977:103, ஸ்ரீதர. 1995:149) என்றும், *மலைக்காடு* என்பது *மலங்காடு* (பூ. 1979:39) என்றும், *புன்னைப்பூ* என்பது *புன்னம்பூ* (நாநா. 1977:56) என்றும் *காளைக்கன்று* என்பது *காளங் கன்னு* (வநி. 1996அ:4) என்றும் வட்டார வழக்கு இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. பழந்தமிழிலும் இது போன்ற நிலையினைக் காணமுடிகிறது. எ-டு: *புளிங்கூழ்/புளிக்கூழ்* (தொல். எழுத்து. இளம். 245, 246). *பிடாஅங்கிளை/பிடாஅக்கிளை* (தொல். எழுத்து. இளம். 230, 231), *தேங்குடம்/தேக்குடம்* 'தேன்குடம்' (தொல். எழுத்து. இளம். 341, 342), *வெரிங்குறை/வெரிக்குறை* < *வெரிந்+குறை* (தொல். எழுத்து. இளம். 301,302), *குளங்கரை/குளக்கரை* (தொல். எழுத்து. இளம். 311, 313).

19.4.2 *கோரைப்பாய்-கோரம்பாய், மலைக்காடு-மலங்காடு, புன்னைப்பூ-புன்னம்பூ* ஆகியவற்றில் வல்லொற்று, மெல்லொற்று மிகுதியின் நிகழ்ச்சியை இரு வேறு வழக்கு மொழிகள், அதாவது செவ்வியல் மொழியும், பேச்சு மொழியும் கட்டுப்படுத்துகின்றன. பழந்தமிழில் காணப்படும் இரட்டை வழக்குகளும் வழக்கு வேறுபாடு

காரணமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. கிளைமொழி வழக்கும் செவ்வியல் வழக்கில் இடம்பெற்றுப் பழந்தமிழில் தொல்காப்பியம் வழியாக அறியப்படும் இரட்டை வழக்குகளும் தோன்றியிருக்கக் கூடும். வல்லொற்று, மெல்லொற்று மிகுதிக்கு வருமொழியும் ஒரு காரணியாக அமையும் என்பதைப் பழந்தமிழில் காணப்படும் சார்க்காழ்/சார்ங்கோடு (தொல். எழுத்து. இளம். 364, 363), தடக்கை (அகம். 148.1)/தடந்தாள் (குறுந். 349.2), தடந்தோள் (பெருங். 2.19.131, 3.22.231) ஆகிய எடுத்துக்காட்டுக்கள் புலப்படுத்து கின்றன. *செய்தம்பிறகு வாய்பாட்டுத் தொடரைப் பொறுத்தவரை இரண்டு காரணிகள் கருத்தில் கொள்ளத்தக்கனவாகின்றன. *செய்தம்பிறகு, செய்தபிறகு ஆகியவற்றின் நிகழ்ச்சியை இருவேறு வழக்கு மொழிகள் அதாவது, செவ்வியல் மொழியும் கிளைமொழியும் கட்டுப்படுத்துகின்றன. இந்தக் காரணி *செய்தம்பிறகு, செய்தப்புறம் ஆகியவற்றுக்கும் பொருந்தும். ஆனால் இவையிரண்டும் அதாவது செய்தம் பிறகு என்பதும் செய்தப்புறம் என்பதும் இரு வேறு பேச்சுவழக்குகளுக்கு உரியன வாகத் தோன்றுகின்றன. தென் மாவட்டங்கள் தவிர தமிழகத்தின் பிற பகுதிகளில் *செய்தம் பிறகு வாய்பாட்டுத் தொடர்களின் நிகழ்ச்சி காணப்படவில்லை. இங்கு இன்னொரு காரணியையும் கருத்தில் கொள்ளலாம். வருமொழிகளாகிய பிறகு என்பதும், புறம் என்பதும் வல்லொற்று, மெல்லொற்று நிகழ்ச்சியினைக் கட்டுப்படுத்துகின்றன. ஆனால் *செய்தம்பிறகு, செய்தப்புறம் ஆகிய இரண்டு வாய்பாட்டுத் தொடர்களும் இருவேறு பேச்சு வழக்குகளில் நிகழ்வதால், இந்தக்கட்டுப்பாடு முக்கியத்துவம் பெறாமல் போய் விடுகின்றது.

### 19.5 மிகுதியன்று; திரிபே

வட்டாரவழக்கில் காணப்படும் கோரம்பாய் (<*கோரய்-ம்+பாய்), மலங்காடு (<*மலய்-ங்(<ம்)+காடு), புன்னம்பூ (<*புன்னய்-ம்+பூ), காளங்கன்னு (<*காளய்-ங் (<ம்)+கன்னு), ஆகியவற்றில் நிலைமொழியை அடுத்து நிகழும் மெல்லொற்றுச் சாரியை செவ்வியல் வழக்கில் இனவல்லொற்றாகத் திரிகிறது. இவ்வாறு திரிவதற்குக் காரணம் வருமொழி முதல் வல்லொற்று நிலை யொலித் தன்மையை (Voiceless Character) இழக்காமல் இருப்பதே யாகும். இதன் விளைவாக கோரய்ப்பாய் (=கோரைப்பாய்), மலய்க்காடு (=மலைக்காடு), புன்னய்ப்பூ (=புன்னைப்பூ), காளய்க்கன்று (=காளைக்கன்று) என்ற வடிவங்கள் தோன்றியமை கின்றன. வட்டார வழக்கில் நிலைமொழியீற்றில் நிகழும் யகரமெய் மெல்லொற்றுச் சாரியைமுன் கெடுகிறது. காரணம் வருமொழி

முதல் வல்லொற்றானது மெல்லொற்றுச் சாரியையின் தாக்கத்தால் நிலையொலித் தன்மையை இழந்து அலையொலி (Voiced Phone) யாகத் திரிகின்றது. இந்த மாற்றங்களைத் தொடர்ந்து *கோரம்பாய், மலங்காடு, புன்னம்பூ, காளங்கன்னு* ஆகிய கிளைமொழி வழக்குகள் தோன்றியமைகின்றன. வட்டார வழக்கில் மெல்லொற்றுச் சாரியை நிலைபெறுவதும், செவ்வியல் வழக்கில் அது வல்லொற்றாகத் திரிவதும் இருவேறு படிநிலைகளின் வெளிப்பாடுகளாகும். இந்தப் படிநிலைகள் **செய்தம்பிறகு, செய்தப்புறம்* ஆகிய வாய்பாட்டுத் தொடர்களுக்கும் பொருந்தும்.[1]

## *19.6* அடிநிலையமைப்பில் *செய்தம் வினைகள்

*19.6.1* **செய்தம்பிறகு* வாய்பாட்டுத் தொடரில் உள்ள *செய்தம்* என்னும் பெயரெச்சத்தின் நிகழ்ச்சி *செய்தப்புறம்* வாய்பாட்டுத் தொடரிலும் குறிக்கத்தக்கதாகின்றது. இல்லையெனில் *புறம்* என்பதன்முன் நிகழும் பகரமெய்யின் நிகழ்ச்சியை விளக்க முடியாமல் போய்விடும். இதனைத் தொடர்ந்து செய்தப்புறம் வாய்பாட்டுத் தொடரானது **செய்தம்+புறம்* என்ற அமைப்பினதாகக் கொள்ளப்படும். *செய்தம்பிறகு* வாய்பாட்டுத்தொடரில் மகரமெய் நிலைபெற, புறம் என்பதன் முன் அது வல்லொற்றாகத் திரிகிறது. **செய்தம்+புறம்* என்ற தொடரில் வருமொழிமுதல் வல்லொற்றானது நிலையொலித்தன்மையைத் தக்கவைத்துக் கொள்வதால் நிலைமொழியீற்று மகரமெய் இனவல்லொற்றாகத் திரிகிறது. இதன் விளைவாக, செய்தப்புறம் வாய்பாட்டுத் தொடர்கள் தோன்றியமைகின்றன. **செய்தம் பிறகு* வாய்பாட்டுத் தொடரில் வருமொழி முதல் வல்லொற்றானது அதன் முன் நிகழும் மெல்லொற்றின் தாக்கத்தால் அலையொலியாகத் திரிகின்றது. இதன் விளைவாக இந்த வாய்பாட்டுத் தொடரில் மகரமெய் இனவல்லொற்றாகத் திரிய வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. இந்த ஆய்வினைக் கருத்தில் கொண்டு பழந்தமிழில் நிகழும் *செய்தக்கால், செய்தக்கடை, செய்தக்கண்ணும்* ஆகிய வாய்பாட்டுத் தொடர்களின் அமைப்புகள் முறையே *செய்தம்+கால், *செய்தம்+ கடை, *செய்தம்+கண்ணும் என்று கொள்ளத்தக்கனவாகின்றன. இதே போல் பேச்சுத்தமிழில்

---

1. செய்தம்பிறகு வாய்பாட்டுத் தொடர்களைச் செய்ததன் பிறகு வாய்பாட்டுத் தொடர்களின் திரிபாகக் கருதலாம் என்று ஒரு வாய்மொழிக் கருத்தும் நிலவுகிறது. பேச்சுத்தமிழில் நிகழும் செய்தப்ப (=செய்தபோது) வாய்பாட்டுத் தொடர்களையும், மலையாளத்தில் நிகழும் செய்தப்போழ் (=செய்தபோது)) வாய்பாட்டுத் தொடர்களையும் செய்ததன் வாய்பாட்டு வினைகளின் அடியாகத்தோன்றியவையாகக் கொள்ள வாய்ப்பில்லை. ஆகவே மேற்படி வாய்மொழிக் கருத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

நிகழும் *செய்தப்ப, செய்யாதப்ப* ஆகிய வாய்பாட்டுத் தொடர்களின் நிலைமொழியைச் *செய்தம், செய்யாதம்* ஆகிய வாய்பாட்டினவாகக் கொள்ளலாம். செவ்வியல் வழக்கில் நிகழும் *ஓடாக்குதிரை* என்ற எதிர்மறைப் பெயரெச்சத் தொடரின் நிலைமொழியைச் *செய்யும்* வாய்பாட்டு வினையின் எதிர்மறையாகிய **செய்யாம்* (<*செய்யாயும்) வாய்பாட்டினதாகக் கொள்ளப்படும்.

*19.6.2* *செய்தப்புறம்* என்ற வாய்பாட்டுத் தொடர் **செய்தம்+புறம்* என்ற அமைப்பினது என்று மேலே துணியப்பட்டது. இந்த வாய்பாட்டுத் தொடரே *அப்புறம்* என்பதன் தோற்றத்துக்கு நிலைக்களனாக அமைகிறது. *செய்தப்புறம்* வாய்பாட்டுத் தொடரின் அமைப்பு பிறழ உணரப்பட்டதாலும், *புறம்* என்பது தனியுருபனாக நிகழாமையாலும் *அப்புறம்* என்ற உருபன் தோற்றம் கொள்ளலாயிற்று. இதன் விளைவாக, *செய்தப்புறம்* என்ற தொடர் *செய்த+அப்புறம்* என்ற அமைப்பினதாகப் பிறழக் கருதும் நிலை ஏற்பட்டது. *அப்புறம்* என்பது பகுப்பாய்வு செய்யமுடியாத ஓர் தனியுருபன் ஆதலால் இதன் தோற்றம் பிறழ்பிரிப்பின் (Wrong Segmentation) விளைவாக நிகழ்ந்த ஒன்று எனத் துணியப்படுகிறது.

*19.6.3* பழந்தமிழில் *செய்ததால்* என்ற காரணத் தொடருக்கு நிகராக, *செய்தமாறு* என்ற வாய்பாட்டுத் தொடர்களின் நிகழ்ச்சி காணப்படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

*10)* அகன்றுறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே *(நற். 40.11,12)*

*11)* கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
வயமான் தோன்றல்நீ வந்த மாறே *(ஐங். 500)*

19.6.4 இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பிறந்தமாறு, வந்தமாறு* ஆகியவை முறையே பிறந்தமையால், வந்தமையால் என்ற பொருண்மையனவாகும். இவை *பிறந்த+மாறு, வந்த+மாறு* என்று பகுப்பாய்வு செய்யப்பட்டு *மாறு* என்பது (காரண) விகுதியாக இலக்கணப் புலவர்களால் கருதப்படுகிறது. (தொல். சொல். சேனா. *250. உரை., நச். 252. உரை). துஞ்சாய்மாறு* (புறம். *2238)* 'துஞ்சாமையால்', *தீங்காமாறு* (நற். *2319)* 'நீங்காமையால்', *அருளன்மாறு* (புறம். *92.6)* 'அருளுதலால்' ஆகியவற்றிலும் *மாறு* என்பது காரண விகுதியாகவே கொள்ளப்படுகிறது. இந்த விகுதியானது பிறழ்பிரிப்பின் விளைவாக,

*செய்தமாறு* வாய்பாட்டுத் தொடர்கள் *செய்தம்+ஆறு* என்ற வாய்பாட்டு அமைப்பின என்ற உண்மை மறக்கப்பட்டு, *செய்த+மாறு* என்ற வாய்பாட்டு அமைப்பினவாகப் பிறழ உணர்ந்ததைத் தொடர்ந்து தோற்றம் கொண்டதாகும். *செய்தம்* வாய்பாட்டு வினைகள் வழக்கிழந்து போனமையால் வழக்கில் இருக்கும் *செய்த* வாய்பாட்டு வினைகளைக் கருத்தில் கொண்டு *செய்தமாறு* தொடர்கள் *செய்த+மாறு* என்று பகுப்பாய்வு செய்யப் பட்டனவாதல் வேண்டும். செய்தம் வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சிக்கு **செய்தம்பிறகு* வாய்பாட்டுத் தொடர்களே சான்றாக அமைவதால் *செய்தமாறு* என்பதைச் *செய்தம்+ஆறு* என்று வரலாற்று நிலையில் பகுப்பாய்வு செய்வது பொருத்தமாகவே தோன்றுகிறது. ஆயினும் *துஞ்சாய்மாறு* (புறம்.22.38), *அருளன்மாறு* (புறம். 92.6) ஆகியவற்றில் பிறழ்பிரிப்பின் விளைவாகிய *மாறு* இயல்பாக அமைந்துவிட்டதால் விண்டுறை ஆய்வில் (Descriptive Analysis) இதனை *ஆறு* என்ற காரண விகுதியின் மாற்றுருபாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. அக நிறைவை (Internal Adequacy) அடிப்படையாகக் கொண்ட விண்டுரை ஆய்வில் *செய்தம்* வாய்பாட்டு நிலைமொழிகளைப் பதப்புணர்ச்சியில் அமைத்துக்கொள்ள வாய்ப்புள்ளது. மரபிலக்கணப் புலவர்கள் புற நிறைவை (External Adequacy) அடிப்படையாகக் கொண்ட விண்டுரை ஆய்வைப் போற்றுவதால் *மாறு* என்பதைக் காரண விகுதியாகக் கொள்ளவேண்டிய நிலை ஏற்படுகிறது.

19.6.5 *செய்தப்புறம்* வாய்பாட்டுத் தொடர்கள் *செய்தம்* வாய்பாட்டு வினையமைப்புகளின் அடியாகத் தோன்றியனவாகக் கருதத்தக்கவை என்று கண்டறியப்பட்டது. இந்த வாய்பாட்டு வினையமைப்புகள் பழந்தமிழில் நிகழும் செய்தமாறு வாய்பாட்டுக் காரணத்தொடர்களுக்கும் பகுதியாக அமைகின்றன என்ற செய்தியும் மேலே குறிப்பிடப்பட்டது. இவற்றுக்கெல்லாம் ஆதாரமாக வட்டார வழக்கு இலக்கியங்களில் பதிவாகியுள்ள **செய்தம்பிறகு* வாய்பாட்டுத் தொடர்கள் கருத்தில் கொள்ளப்பட்டன. *செய்தம்* வாய்பாட்டு வினையமைப்புகளின் நிகழ்ச்சி பேச்சு வழக்கினதாகிய *செய்தப்ப (=செய்தபோது)* வாய்பாட்டுத் தொடரில் மட்டுமின்றி இதற்கு இணையான *செய்தப்போழ்* என்ற மலயாளத் தொடரிலும், *சேஸினப்புடு* என்ற தெலுங்குத் தொடரிலும் காணப்படுகிறது. *செய்தம்* என்பதற்கு இணையாகத் தெலுங்கில் *சேஸினம்* என்பது இனங்காணப்படுகிறது.

19.6.6 *செய்தம்* வாய்பாட்டு வினைகள் தொல் வழக்கில் நிகழ்ந்து பின்னர் தொன்மொழியின் கிளை மொழிகள் தனிமொழி

களாக இனங்காணப்பட்ட நிலையில் அவற்றில் நிகழும் புணர் மொழிகளில் தம் தடயத்தை விட்டுச் சென்றுள்ளதாகக் கருதலாம். *செய்தமை* வாய்பாட்டு வினைப் பெயர்கள், *செய்தவன்/செய்தவள்/செய்தவர்* வாய்பாட்டு வினைப்பெயர்கள், *செய்தவாறு* வாய்பாட்டு வினையமைப்புக்கள், செய்தோம் வாய்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றுக்கள் ஆகியவற்றின் அடிநிலை வடிவங்களில் செய்தம் வாய்பாட்டு வரலாற்று வினையமைப்புக்கள் குறிக்கத்தக்கனவாகின்றன. செய்தவன்/செய்தவள்/செய்தவர், செய்தவாறு வாய்பாட்டு வினைப் பெயர்களில்-இவையும் ஒரு வகை வினைமுற்றுக்களே -நிகழும் செய்தவ்- என்ற வாய்பாட்டு வினையமைப்புகள் *செய்தம்* வாய்பாட்டு வினையமைப்புக்களின் திரிபாகும். *செய்தோம்* வாய்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றுக்களின் அடிநிலை வடிவங்கள், **செய்தவம்* என்ற வாய்பாட்டினவாகக் கொள்ளத்தக்க வையாகும்.[2] இந்த அடிநிலை வடிவங்களில் காணப்படும் *செய்தவ்* வாய்பாட்டு வினையமைப்புகளும் **செய்தம்* வாய்பாட்டு வினைகளின் திரிபாகும். இவை குறிப்புகள் மட்டுமே. இவற்றைக் கருத்தில் கொண்டு ஒரு புதிய நோக்கில் திராவிட முற்றுவினைகள் ஆராயப்பட வேண்டும். இந்த ஆய்வில் செய்த வாய்பாட்டுப் பெயரெச்சங்களைச் **செய்தம்* வாய்பாட்டு வினைகளோடு தொடர்புபடுத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட வில்லை. ஒரு சில வாய்பாட்டுத் தொடர்களில் மட்டுமே **செய்தம்* வாய்பாட்டு வினைகளை (அக) மீட்டுருவாக்கம் (Internal Reconstruction) செய்யமுடிகிறது. இதனை விரிவுபடுத்தப் போதிய தடயங்கள் கிடைக்கவில்லை.

---

2. இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள *கழிநெடில் வினைகள்* என்ற கட்டுரையில் **செய்தவம்* வாய்பாட்டு அடிநிலை வடிவத்திலிருந்து *செய்தாம், செய்தோம்* ஆகிய வாய்பாட்டு வினைவடிவங்களை எவ்வாறு வருவிப்பது என்பதுபற்றிப் பல்வேறு வகையான அடிநிலை வினைகளைக் கருத்தில் கொண்டு விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

# 20. சாமிநாத தேசிகரும் தமிழ் மொழியியலும்

## 20.1. தேசிகர் பார்வை

20.1.1 பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றித் தமிழ் மொழியியலுக்கு அரிய தொண்டாற்றியவர்களுள் சாமிநாத தேசிகர் என்னும் இலக்கணப்புலவர் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். தமிழ்மொழியை வண்ணனை நிலையிலிருந்து ஆய்ந்த இவர், தம் ஆய்வு முடிபுகளை *இலக்கணக் கொத்து* என்னும் சிறு நூலில் நூற்பாக்கள் வடிவில் தொகுத்துக் கொடுத்துள்ளார். நூற்பா வடிவில் தாம் எழுதிய நூலுக்குத் தாமே உரை விளக்கமும் கண்டுள்ளார் சாமிநாத தேசிகர். இந்தமுறையானது அவர்தம் நூற்பாக்களின் கருத்தைப் பிறழ உணராமல் இருப்பதற்குப் பெரிதும் துணை புரிகின்றது. சாமிநாத தேசிகர் தமிழில் போலவே வடமொழியிலும் புலமை பெற்று விளங்கியவர். இந்தப் புலமையை இலக்கணக்கொத்தில் ஆங்காங்கே இவர் வெளிப்படுத்திச் செல்கிறார். இலக்கணக்கொத்தை நன்கு புரிந்து கொள்ள வேண்டு மானால் வடமொழி அறிவும் வேண்டற்பாலது என்பதை,

(1) தமிழ்விதி வல்லராய் வடமொழி விதிசில
அறிந்த வர்க்கே இந்நூலாம் என்க (இ.கொ.7)

என்னும் நூற்பாவில் தேசிகர் தெளிவுபடுத்துகிறார்.

20.1.2 தேசிகரின் இலக்கணக்கொத்து வேற்றுமை இயல், வினை இயல், ஒழிபியல் என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது. பாயிரம் தொடங்கி, இலக்கணக்கொத்து 131 நூற்பாக்களில் பின்னப்பட்டுள்ளது. வேற்றுமை இயல் 52 நூற்பாக்களானும், வினையியல் 22 நூற்பாக்களானும், ஒழிபியல் 45 நூற்பாக்களானும் இலக்கணக்கொத்து நடைபெற்றியல்கின்றது. தாமே தம் நூலுக்கு உரைகண்ட போதிலும் எல்லா நூற்பாக்களுக்கும் தேசிகர் உரை வகுக்கவில்லை. விளக்கமும் தெளிவும் வேண்டும் நூற்பாக்களுக்கு மட்டுமே இவர் பரக்க உரை வகுத்துள்ளார். பொருத்தமான எடுத்துக்காட்டுக்களைத் தருவதன் வாயிலாகவே சில நூற்பாக் களைத் தேசிகர் விளக்கிச்செல்கின்றார். தேசிகரின் புலமை நலத்துக்குச் சான்றாக அவர்தம் நூற்பாக்களும், உரை விளக்கமும்

விளங்குவதைக் கீழ்வரும் நூற்பாவின்கண்ணும் அதனை அடுத்து வரும் அதன் உரையின்கண்ணும் காணலாம்.

(2) விதிச்சொல் மறைப்பொருள் ஆகி வருநவும்
மறைச்சொல் விதிப்பொருள் ஆகி வருநவும்
விதிச்சொலின் முதனிலை மறைப்பொருள் பெறுநவும்
மறைச்சொலின் முதனிலை விதிப்பொருள் பெறுநவும்
உளவென மொழிகுவர் ஒருபுடை யோரே (இ.கொ77)

உரை:- "அழுக்காறு-பொறாமை, அழுக்காறாமை-பொறுத்தல்; உடன்படல்-மறாமை; மறுத்தல்- உடன்படாமை; 'அறவினை யாதெனிற் கொல்லாமை' 'கொல்லாமை மேற் கொண்டொழுகுவான்', இவை போல்வனவெல்லாம் விதிச்சொல் மறைப்பொருளும், மறைச்சொல் விதிப்பொருளும் என்க.

'உள்ளங்கையினுரோம முளைத்ததாயின் அறிவிலான டங்குவன்'. இவற்றுள் முளைத்தது, அடங்குவன் என்னும் விதி வினையினுள் முதனிலை பிரிந்து முளையாமையே துணிவு, அடங்காமையே துணிவு என்றே பொருள்படுதல் காண்க. இது விதிச்சொல்லின் முதனிலை மறைப்பொருள் பெற்றது.

20.1.3 இனி, ஒரு பொருளின் புடைபெயர்ச்சியே வினையென்பது எல்லாருக்கும் ஒப்ப முடிந்தது. அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சமென்பதும் அங்ஙனமுடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக் கொள்ளுதலன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙன முடிந்தது. ஆகவே *உண்டு நடந்தான்* என்பது பொருந்தும் *உண்டு நடவான்* என்பது பொருந்தாது. இலக்கண வழுவேயாம். ஆகையால் அம்மறைச் சொல்லினுள் முதனிலையைப் பிரித்து, ஒரு பொருளின் புடைபெயர்ச்சியாகிய புடை பெயர்ந்த நடத்தல் என்னும் தொழிற் பெயராக்கி, வினையெச்சத்தை வினைகொண்டு முடித்து, பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து உண்டு நடத்தலைச் செய்யான் என்று முடிப்பர். இக்கருத்து பரிமேலழகர்க்கும் உரையாசிரியர்க்கும் நியமம். இது மறைச்சொல்லின் முதனிலை விதிப்பொருள் பெற்றது" (இ.கொ.பக்கம். 69).

20.1.4 மேற்குறித்த நூற்பாவும் அதன் உரையும் மொழியை உள்ளுறைப் பொருண்மையியல் (Implicational Semantics / Conversational Implicature) நிலையிலும் வைத்து அணுகவேண்டும் என்பதனை வலியுறுத்தும். இனி, தேசிகரின் புலமைக்கு உரைகல்லாக இலக்கணக் கொத்தில் விளங்கும் சில பகுதிகளைக் காண்போம்.

## *20.2 எழுவாய்*

20.2.1 எழுவாயாகச் செயல்படும் பெயர்கள் பல பொருண்மைகளை உடையனவாகத் தேசிகர் கருதுகிறார். எழுவாய், ஏவுதல் கருத்தாவாகவோ (எ-டு அரசன் தேர் செய்தான்), இயற்றுதல் கருத்தாவாகவோ (எ-டு. தச்சன் தேர் செய்தான்), இவற்றின் வேறாகவோ (எ-டு. சாத்தன் உறங்கினான்) அமையும் என்பது ஒரு சாரார் கொள்கை.

(3) ஏவுதல் இயற்றுதல் இவையின் வேறாதல்
எனவினை முதல்மூ வகையாம் என்ப (இ.கொ.28)

ஆயினும், தேசிகர் 'வினை முதல் இன்னும் விரிக்கிற் பெருகும்' (இ.கொ.29) என்று குறிப்பிடுவதுடன் அமையாது முந்தைய நூற்பா ஒன்றில் எழுவாய் பத்து நிலைகளினின்றும் ஆராயப்படும் என்று தெளிவுபடுத்துகிறார்.

(4) இருவகைச் செயப்படு பொருளே ஏதுத்
தன்வசம் தெரியாநிலை, தடுமாற்றம்
தொழிற்பெயர், ஏழில் தோன்றும் வினைமுதல்
கருவி, இடம், கொள்வானினும் கருதுவர் (இ.கொ.26)

உரை: "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற்றாமே வரும்", "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்", "வரிசையால், வானூர் மதியம் போல் வைகலும் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்பனவற்றுள் "இன்னா தாமே வரும்", "கேண்மை தானே நந்தும்", "தொடர்பு தானே தேயும்" எனச் செயப்படுபொருள் தேற்றத்தோடு வினை முதலாய்ச் செயப்படுபொருள் குன்றிய வினை கொண்டது. 'திண்ணை மெழுகிற்று' எனச் செயப்படுபொருள் தேற்றமின்றி வினை முதலாய்ச் செயப்படு பொருள் குன்றாத வினைகொண்டது. இவ்விரு வகையும் வடமொழி விதியாகலின், விரிக்கிற் பெருகும். 'ஆதித்தன் கற்றீப் பிறப்பித்தான்', 'காற்றுப் பழ முதிர்த்தது'. --இவை ஏதுக்கருத்தா. 'சாத்தன் உண்டான்'. இது தன்வசக்கருத்தா. 'பாடஞ் செய்யப்பட்டது' இது தெரியாநிலை. தெரியா நிலையாவது வினை முதல் என்று தெரியப்படாமல் வினை முதலாயே நிற்பது. இது தெரியாநிலை எனவே ஏனைய, தெரிநிலை என்க. 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'. இது தடுமாற்றம். தடுமாற்றமாவது ஓர் பொருளே ஒருகால் வினை முதலாயும், ஒருகாற் செயப்படு பொருளாயும் நிற்றல். 'கொல்லாமை அறவினையெல்லாம் தரும், கோறல் பிறவினை எல்லாம் தரும்', 'தேரான் தெளிவும் தெளிந்தான்

கண் ஐயுறவும், தீரா இடும்பை தரும்' இவை தொழிற்பெயர்க் கருத்தா.

'கண் காணும்', 'குன்று குவட்டைத்தாங்கும்', 'தூண் போதிகையைத் தொட்டது', 'இரப்பவர் என்பெறினும் கொள்வர்', எனக் கருவி முதல் மூன்றும் முறையே காண்க. கருதுவர் எனவே இலக்கணமன்று" (இ.கொபக்கம் 45).

*20.2.2* மேற்கண்ட நூற்பாவில் பேசப்படும் பல செய்திகள் தொடரனை (Syntax) மையமாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளன என்பது தெளிவு. தற்கால மொழியியலில் மாற்றிலக்கணம் ஒரு புதிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி, தொடரன்களைப் புதிய கோணத்தில் நின்று ஆராய வகை செய்துள்ளது. தேசிகர் மேற்கண்ட உரையில் காட்டிச்செல்லும் எடுத்துக் காட்டுக்களை நுணுகி நோக்கும்போது, மாற்றிலக்கணம் குறிப்பிடும் முறையில் மொழியை ஆராய வேண்டும் என்ற உணர்வு அவருக்கு இருந்தமை புலனாகிறது.

*20.2.3* சில தொடரன்களில் (எ-டு. தாய் மகவுக்கு ஊட்டினாள், ஆசிரியன் மாணாக்கனுக்குப் படிப்பித்தான், தலைவன் தலைவியைப் புல்லினான்) ஒரு பயனிலை வினை இரு எழுவாய்களைக் கொண்டு இயலும் எனக் குறிக்கிறார் தேசிகர்.

(5) இருவினை முதலால் ஒரு வினையும் உள (இ.கொ.27)

இந்நூற்பாவுக்குத் தேசிகர் காட்டும் வாக்கியங்களை உற்று நோக்கும்போது (எடுத்துக்காட்டுக்கள் மேலே தரப்பட்டுள்ளன) அவருடைய தொடரனியல் உணர்வு தெற்றென விளங்கும். தாய் மகவுக்கு ஊட்டினாள் என்ற தொடரனில் மகவு உண்டது என்ற ஒரு செய்தியும் அடங்கியுள்ளது. இவ் உண்மை புற அமைப்பில் (Surface Structure) தோன்றவில்லையாயினும் மேற்படி தொடரனைப் புதை அமைப்பில் (Deep Structure) வைத்து ஆராய்கையில் தோன்றி நிற்பதை அறியலாம். புதை அமைப்பில் தாய், மகவு இரண்டு பெயர் களும் எழுவாய்களாக நின்று புற அமைப்பில் மகவு நான்காம் வேற்றுமைப் பெயராய் அமைகின்றது.

20.2.4 வேற்றுமை உருபேற்ற பெயர்களும் எழுவாயாகச் செயல்படுமாற்றினைத் தேசிகர் பின்வரும் நூற்பாவில் பேசுகிறார்.

(6) ஒன்று மூன்று நான்கு ஆறு எனும் உருபொடு
வருமே வினைமுதல் எனவகுத் தனரே (இ.கொ.44)

உரை: "அவர் செய்தார் என்றும், அவராற் செய்யத் தகும் அக்காரியம், அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம், 'இனைத்தென அறிந்த சினை முதற் கிளவிக்கு வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்', 'இன் என வரூஉம் வேற்றுமை உருபிற்கு இன் என் சாரியை இன்மை வேண்டும்' என்றும், அவரது வரவு என்றும் முறையே காண்க" (இ.கொ.பக்கம் 52)".

## 20.3 எச்சங்கள்

எச்சங்கள் தொடரன்களின் புதை அமைப்பில் பயனிலை களாகச் செயல்படுமாற்றினைத் தேசிகர் நன்கு உணர்ந்துள்ளார்.

"உண்டான் சாத்தான் ஊருக்குப் போனான் என்புழி, உண்ட சாத்தன் ஊருக்குப் போனான் எனப்பொருள் படுதல் காண்க. இது வினைமுற்றுப் பெயரெச்சமானது. வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான், சாத்தன் உழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி, சாத்தன் உழுதான் எனப் பொருள்பட்டு ஈரெச்சமும் முற்றாதல் காண்க" (இ.கொ.பக்கம் 79).

## 20.4 பெயரெஞ்சு கிளவி

செயப்படுபொருள் குன்றாவினைகளின் அடியாகத் தோன்றிய பெயரெஞ்சு கிளவிகளை அடுத்து வரும் பெயர்கள் அக அமைப்பில் செயப்படுபொருள்களாக அமைதல் இயல்பு. தேசிகர் இத்தகைய பெயர்களின் முன்னர் நிகழும் பெயரெஞ்சு கிளவிகளை நுட்பமாக ஆராய்கிறார். உண்டசோறு என்ற பெயர்த்தொடரில் உள்ள உண்ட என்னும் பெயரெஞ்சு கிளவி உண்ணப்பட்ட என்னும் செயப்பாட்டுப் பொருண்மையைத் தன்னகத்தே கொண்டுள்ளது என்று குறிப்பிடுகிறார் தேசிகர் (இ.கொ. பக்கம் 62). இதனை மையமாகக் கொண்டு உண்டசோறு என்னும் தொடரை (யாரோ ஒருவரால்) உண்ணப்பட்ட சோறு எனக் கொண்டு சோறு யாரோ ஒருவரால் உண்ணப்பட்டது என்ற அடிப்படை வாக்கியத்தினின்றும் மேற்படி தொடர் பெறப் பட்டதாகக் கொள்ள வேண்டும். இதில் உள்ள ஒரு சிக்கல் யாதெனில் சோறு யாரோ ஒருவரால் உண்ணப்பட்டது என்ற வாக்கியம் தன்னகத்துள் யாரோ ஒருவர் சோறு உண்டார் என்ற வாக்கியத்தை அதற்கு நிகரான செயப்பாட்டு வினை வாக்கியத்துடன் எவ்வாறு பொருத்திக் காட்டுவது என்பதே யாகும். இக்கண்ணோட்டத்தில் தேசிகர் நோக்கவில்லையாதலால் இது மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

## 20.5 நிலைமாற்றம்

20.5.1 சொற்கள் அல்லது தொடர்கள், இவற்றின்கண் பொருந்தி நடைபெறும் சில உறுப்புக்கள் புதை அமைப்பில் ஓரிடத்தில் பொருந்தி, புற அமைப்பில் பிறிதோரிடத்துக்கு நகர்ந்து செல்வதே நிலைமாற்றம் ஆகும். இத்தகைய நிலையைப் பொருத்தமில் புணர்ச்சி என்ற தலைப்பின் கீழ் ஆராய்கிறார் தேசிகர்.

"கொடிச் சேவலான், செய்தவேள்வியன், கொண்ட பகையன், உடைமரவுரியான் இவை போல்வன எல்லாம் சேவற் கொடியான், வேள்வி செய்தவன், பகை கொண்டவன், மரவுரி உடையான் என்று விகுதி பொருந்தலே முறையென்க. செல்வத்துள் எல்லாம் தலை, நடுவூருள் நச்சுமரம் இவை போல்வன எல்லாம் செல்வம் எல்லாவற்றுள், ஊர் நடுவுள் என்று உருபு பொருந்தலே முறையென்க. 'புணரியல் நிலை யிடைக் குறுகலும் உரித்தே', சாத்தன் வருவதற்கு உரியனு மாவான் இவை போல்வன எல்லாம் புணரியல் நிலையிடையும் குறுகல் உரித்து, சாத்தன் வருதற்கும் உரியன் ஆவன் என்று உம்மை பொருந்தலே முறையென்க (இ.கொ. பக்கம் 109,110)".

20.5.2 நிலைமாற்றங்களை விரிவாக ஆராயும் தேசிகர் அவற்றை இரண்டு வகையாகக் கொள்கிறார். ஒன்று, தமிழுக்கு உரியதென்றும் ஏனையது, வடமொழிக்கு உரியது என்றும் கூறி இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டினைப் பின் வருமாறு விளக்குகிறார்.

"தமிழ் மொழி விதியால் நிலைமாறுதற்கும், வடமொழி விதியால் நிலைமாறுதற்கும் வேறுபாடு என்னெனில் நிலை மொழியும் வருமொழியும் திரியாது தம்முள் நிலைமாறுதல், திரிந்து தம்முள் நிலைமாறுதல் என்க" (இ.கொ.பக்கம் 112, 113).

இவ்வரையறையைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்கள் மூலம் தேசிகர் தெளிவுபடுத்துகிறார்.

### (அ) தமிழ் மொழி விதியால் நிலைமாறுதல்

நுனிக்கொம்பர், கடைக்கண், அடிநா, இடைநா, கடைநா, அரைக்காசு, முன்மாலை, பின்மாலை, வந்தான் உழுது, செய்தான் மாடம், இருந்தான் குன்றம் (இ.கொபக்கம் 112) வைக்கும் தன்னாளை யெடுத்து பருகுவன் பைதல் நோயெலாம் கெட (இ.கொபக்கம் 113).

### (ஆ) வடமொழி விதியால் நிலைமாறுதல்

செய்த வேள்வியர், எய்திய செல்வத்தர், கழிந்த உண்டியர், வேண்டாவுயிரார், அருங்கேடன், கொண்ட கூழ்த்தாகி, கூப்பிய கையினர், வெறுத்தவாசையர், பொறுத்த சடையினர், கெட்டவறுமையர், விட்ட அவாவினர், வேர்த்து வெகுளார், கொழுநற் றொழுதெழுவாள், வாய்பிளந்து உறங்கினான், குறட்டை விட்டு உறங்கினான் (இ.கொ. பக்கம் 112)

### 20.6 தொடர் நிலைகள்

வடமொழியின் செல்வாக்கால் தேசிகர் வாக்கிய அமைப்பில் தொடர்கள் சென்று இயையுமாற்றை இரு வகையாக ஆராய்கிறார். இதனை 'ஒருதொடர் பலதொடர் எனத்தொடர் இரண்டே' (இ.கொ. பக்கம் 124) என்ற நூற்பாவில் குறிப்பிட்டு, இவ் இருவகைத் தொடர்களுக்கும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் காட்டுகிறார் தேசிகர்.

> "சாத்தன் அரிசி, நெற் பயறு முதலானவை கொண்டுவந்தான்; கொற்றன் பூ, இலை, காய், பழம் முதலானவை கொண்டு வந்தான்; தேவன் மிளகு, புளி, கடுகு முதலானவை கொண்டு வந்தான்; பூதன் சீலை, தாலி, பூண், அணி முதலானவை கொண்டு வந்தான்; அரசன் அக்காலத்து அமைச்சோடு வந்தான்; தலைவன் தலைவிக்குத் தாலி கட்டினான். இப்பல தொடர்களும் வரைவு என்னும் ஒரு பொருட் கண்ணே வருதலின் ஒரு தொடரேயாம். அங்ஙனமாதல், வந்தான் என்னும் ஐந்து முற்றையும் செய வென்னும் எச்சமாக்கி நோக்குக........

சாத்தனை வரைவிற்கு வடக்கனுப்பினான்; கொற்றனை இழவுக்குக் கிழக்குப் போக்கினான்; தேவனை நெற்கொள்ளத் தெற்கே ஏவினான்; பூதனைத் தேன் விற்க மேற்கே செலுத்தினான். இவையெல்லாம் ஒருவன் வினையேயாயினும் ஒன்றற்கொன்று மறையாய்ப் பொருத்தமின்மையால் பல தொடரே யாமென்க...... இவற்றை வடநூலார் ஏக வாக்கியம், பின்ன வாக்கியம் என்பர். அதனான் மொழி பெயர்த்தமை என்க" (இ.கொ. பக்கம் 128, 129).

## 20.7 தேசிகர் திறன்

தேசிகர் ஆய்வுத்திறனையும், முறையையும் இச்சிறு கட்டுரையில் விரிவாக ஆராய்வதற்கில்லை. ஆயினும் இக் கட்டுரையில் எடுத்துக்காட்டிய செய்திகள் மூலம் தேசிகர் மொழியை எவ்வாறு அணுகினார் என்பது ஓரளவு புலனாகும். இலக்கணக் கொத்தில் அவர் கூறிச் செல்லும் கருத்துக்களை நூற்றுக்கு நூறு அப்படியே நாம் ஏற்றுக் கொள்ள முடியாது என்றாலும், தமிழ் மொழியியலுக்கு அவர் ஆற்றியுள்ள தொண்டினை எள்ளளவும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. *ஐந்தெழுத்தால் ஒரு பாடை என்று அறையவே நாணுவர் அறிவுடையோரே* (இ.கொ.7) என்று பாயிரத்தில் தமிழைப் பற்றித் தேசிகர் குறிப்பிட்டுவிட்ட ஒரே காரணத்தால், அறிஞருலகம் அவரைப் புறக்கணித்து வருவது மிகவும் வருந்தத்தக்கது. அவர் நூலில் தள்ள வேண்டுவன சில; கொள்ள வேண்டுவன பல. இதனைக் கருத்தில் கொண்டு மொழியியலார் தேசிகரின் இலக்கணக்கொத்தினை அணுகுதல் வேண்டும்.

❀ ❀ ❀

# 21. நாடெனப்படுவது

*21.1.1.* இடப்பெயர்கள் பற்றிய ஆய்வினை இயற்பெயர், பொதுப்பெயர் என்று இரண்டு நிலைகளில் மேற்கொள்ளலாம். புதுச்சேரி, விழுப்புரம், தஞ்சாவூர் முதலானவை இயற் பெயர்களாகவும் சேரி, ஊர், நாடு, பாக்கம், பட்டினம், பாடி, பள்ளி, பற்று, பட்டி, குப்பம் முதலானவை பொதுப்பெயர் களாகவும் இங்குக் கொள்ளப்படுகின்றன. இயற்பெயர்களானவை பொதுப்பெயர்களை ஏற்றும், ஏற்காமலும் அமைவதுண்டு. அகரம், மங்கலம், மதுரை முதலான ஊர்களில் பொதுப்பெயர் நிகழ்ச்சி இன்மையையும் புதுச்சேரி, தஞ்சாவூர், உசிலம்பட்டி முதலான ஊர்களில் சேரி, ஊர், பட்டி ஆகிய பொதுப் பெயர்களின் நிகழ்ச்சி உண்மையையும் காணலாம். இயற் பெயர்களில் அமைந்த பொதுப் பெயர்கள் இடப்பெயர்களின் ஒருங்கிணைந்த உறுப்புகளாக நிகழ்வதால் அவற்றை வண்ணனை நிலையில் தனிமைப்படுத்தி ஆராய முடியாது. ஆயினும் இடப்பெயர்களைச் சுருக்கி வழங்குகையில் பொதுப்பெயர்கள் தவிர்க்கப்படும் நிலையைக் காணலாம். எ-டு: புதுச்சேரி-புதுவை; நாகப்பட்டினம்-நாகை; உசிலம்பட்டி-உசிலை; தஞ்சாவூர்-தஞ்சை. இடப்பெயர்களைத் தனிமைப்படுத்துகையில் இடப்பெயர்களின் தோற்றம் பற்றிய வரலாறு புலனாவதற்கு உரிய தடயங்களைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படுகின்றது. ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம். *ஆரூர்* என்னும் இயற்பெயராகிய இடப்பெயரை வரலாற்று நிலையில் ஆராய்கையில் *ஊர்* என்னும் பொதுப் பெயர் தனிமைப்படுகிறது. எஞ்சியுள்ள *ஆர்* என்னும் முன்னுறுப்பானது மரத்தைக் குறிக்கும் ஓர் பெயர்நிலைக் கிளவியாகும். இதனின்றும் *ஆரூர்* என்னும் ஊரானது *ஆர்* என்னும் மரத்தினை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது என்ற உண்மை புலனாகின்றது.*

*21.2.* பொதுப்பெயர்களில் சில இயற்பெயர்களாகவும் அமைந்துவிடுதல் உண்டு. *குப்பம், பாக்கம்* ஆகிய ஊர்களை இந்த

---

* ஆரூரின் பெயர்க் காரணத்தைக் கண்டறிந்து எனக்கு எடுத்துக் கூறியவர் ஓய்வுபெற்ற புதுவைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் அ. பாண்டுரங்கன் அவர்கள் ஆவார்.

வகையில் கருத்தில் கொள்ளலாம். சேரி, ஊர், நாடு ஆகிய பொதுப் பெயர்கள் இயற்பெயர்களாக வழங்கும் நிலை காணப்படவில்லை. இக்கட்டுரையில் இந்த மூன்று பொதுப் பெயர்களைப் பற்றிச் சிந்தித்தாலும், நாடு என்னும் பொதுப் பெயர் பற்றிய ஆய்வே முனைப்பாக மேற்கொள்ளப்படுகின்றது. சேரி, ஊர், நாடு மூன்றும் தொடக்கத்தில் உணர்த்திய பொருண்மைக்கும், அவை இன்று உணர்த்தும் பொருண்மைக்கும் வேறுபாடு உண்டு. கேரி என்பதன் திரிபாகிய சேரி என்னும் இயற்பெயர் தொடக்கத்தில் தெரு, சந்து, சிற்றூர் ஆகிய பொருண்மைகளை உணர்த்தியது. இந்த நிலை இன்றும்கூட சில திராவிட மொழிகளில் காணப் படுவதைப் பின்வரும் தரவுகள் தெளிவுபடுத்தும்.

| | | | |
|---|---|---|---|
| (1) DED. 2007. | Tamil | <u>ce:ri</u> | 'town, village, hamlet, street, quarters of the Pariahs' |
| | Malayalam | <u>ce:ri</u> | 'assemblage, village, street' |
| | Kota. | <u>ke:ry</u>, | 'street. exogamous division in Kota village' |
| | Toda. | <u>ke:ry</u> | 'street of Badaga village' |
| | Kannada. | <u>ke:ri</u> | 'street' |
| | Kodagu. | <u>ke:ri</u> | 'hamlet' |
| | Tulu. | <u>ke:ri</u> | 'street, lane' |
| | Telugu | <u>ge:ri</u> | 'street, passage' |

இத்தரவுகளில் தமிழ், மலையாளம் தவிர ஏனைய திராவிட மொழிகளில் சேரி என்பது கேரி என்று வழங்குவதுடன், அச்சொல் கொடகு தவிர்த்த பிறமொழிகளில் தெரு என்னும் பொருண்மையை உணர்த்துவதையும் காணலாம். இப்பொருண்மையை இன்றைய தமிழில் காணமுடியவில்லை. ஆயினும் பழந்தமிழில் சேரி தெருப் பொருண்மையை உணர்த்தியதைப் பின்வரும் சங்க இலக்கியச் சான்று தெளிவுப்படுத்துகிறது.

*(2) ஊஉர் அலரெழச் சேரி கல்லென*
*ஆனாது அலைக்கும் அறனில் அன்னை (குறுந்தொகை 262: 1, 2)*

இந்த எடுத்துக்காட்டின் முதலடிக்கு *ஊரில் பழிமொழி உண்டாக, தெருவில் உள்ளோர் கல்லென்று ஆரவாரிப்ப* என்று உரை வகுக்கப் பட்டுள்ளது (உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு). விளக்க வுரையில் ஊர் அலரெழுதலும் சேரி ஆரவாரித்தலும் தலைவி தலைவனுடன் செல்வதனால் நிகழ்வன; சேரியில் உள்ளார் ஊரினருள் தலைவியை நன்கு அறிந்தவர்களாதலின் ஆரவாரித்தனர்

என்று குறிக்கப்படுகின்றது.[1] இதனின்றும் சேரி என்னும் இடப் பொதுபெயர் தொடக்கத்தில் ஊரின் ஓர் உறுப்பாகிய தெரு என்னும் பகுதியைக் குறித்தமை புலனாகின்றது.[2] கலித்தொகைப் பாடல் ஒன்றில் நிகழும் *நம், சேரியிற் போகாமுடமுதிர் பார்ப்பான்* (657,8) என்ற அடிக்கு 'நந்தெருவினின்றும் போகாமல் ஒளித்துத் திரியும் முடமாகிய முதிர்ந்த பார்ப்பான்' என்று உரை வகுப்பார் நச்சினார்க்கினியர். இதனின்றும் நச்சினார்க்கினியர் காலத்திலும் சேரி என்னும் பெயர்நிலைக் கிளவியானது தெரு என்னும் பொருண்மையை உணர்த்தியது என்பது தெளிவாகின்றது.

*21.3.* நாடு என்னும் பொதுப்பெயர் இக்காலத்தில் ஊர் என்னும் பொதுப்பெயரினின்றும் மாறுபட்ட பொருண்மையை உணர்த்து கிறது. இந்திய ஊர், இந்தியா என்னும் ஊர் என்பன போன்ற வழக்குகள் ஏற்புடையனவாகக் கொள்ளப் பெறுவதில்லை. காரணம் ஊரும் நாடும் ஒரே அளவிலான சமுதாயப் பரப்பினவாக

---

1. இது தொடர்பாக இன்னொரு குறிப்பினையும் கருத்தில் கொள்ளலாம். *ஊரும் சேரியும் உடனியைந் தலரெழ* (220.1) என்ற அகநானூற்றுப் பாடற்பகுதி *யாம் வாழும் ஊரினிடத்தும், எமது தெருவினிடத்தும் பொதுவாகவும் சிறப்பாகவும் எம்பால் பழிமொழி பிறக்கும்படி* என்ற உரையினைப் பெறுகின்றது. ஊர், சேரி இரண்டினையும் மேலும் விளக்கு கையில் ஊர் என்பது ஏதிலார்க்கு ஆகுபெயர்; சேரி என்பது சுற்றத்தார்க்கு ஆகுபெயர் என்று குறிக்கப்படுகிறது. சேரி என்பது தெரு என்பதும், இப்பகுதியில் உறைவோர் சுற்றத்தினர் என்பதும் இந்த உரையின் மூலம் புலனாகின்றது. மேலே குறிப்பிட்ட அகநானூற்றுப்பாடலின் ஆசிரியர் மதுரை மருதனிளநாகனார் என்பவர் ஆவார். இவர் பாடல் புனைந்த காலமும், அப்பாடலுக்கு உரை தோன்றிய காலமும் ஒன்றாக இருக்க முடியாது என்பது உண்மைதான். ஆயினும் பிற திராவிட மொழிகளில் சேரி என்பது தெருவினை உணர்த்துவதால் மருதனிளநாகனார் காலத்தில் இந்த நிலை போற்றப்பட்டிருக்க வேண்டும் என்றும் அகநானூறுக்கு உரை தோன்றிய காலப்பகுதியிலும் இந்த நிலை தொடர்ந்து இருந்து வந்திருக்க வேண்டும் என்றும் தெளியலாம்.

2. பிராகிருதம், மராத்தி ஆகிய இந்தோ ஆரிய மொழிகளில் சேரி கடன் வாங்கப்பெற்று தெரு என்னும் பொருண்மையை உணர்த்துவது இங்கே குறிப்பிடத்தக்கதாகும். இம்மொழிகளில் இச்சொல் *ஸேரி* எனக் குறிக்கப் படுகிறது. பிராகிருதத்தில் குடியகம் (Quarters) என்ற பொருண்மையையும் இச்சொல் உணர்த்துகின்றது. மராத்தியில் alley என்பதன் பொருண்மை யையும் சேரி உணர்த்துகிறது. alley என்பதன் பொருண்மை a narrow back street, a walk as in a garden, enclosed with hedges or shrubbery, a passage as through a continuous row of houses, permitting access from the street to the backyards (A Random House Dictionary of the English Language) என்று குறிக்கப்படுகின்றது.

இக்காலத்தில் கொள்ளப்படுவதில்லை. நாடு என்பது மாநிலம், தேசம் ஆகிய பொருண்மைகளை உணர்த்தும் நிலையே இன்று காணப்படுகின்றது. வரலாற்று நிலையில் ஊரும் நாடும், சிற்றூரும் பேரூருமாகப் பயின்ற நிலையும் உண்டு. கி.பி எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் இறையனார் அகப் பொருள் என்னும் நூலுக்கு அமைந்த நக்கீரர் உரையின் ஒருபகுதி இந்த உண்மையைப் புலப்படுத்துவதாக உள்ளது. பின்வரும் அந்த உரைப் பகுதியைக் கருத்தில் கொள்க.

> (3) அம்பல் என்பது முகிழ் முகிழ்த்தல்; அலர் என்பது சொல் நிகழ்தல்
> அம்பல் என்பது சொல் நிகழ்தல்; அலர் என்பது இல் அறிதல்
> அம்பல் என்பது இல் அறிதல்; அலர் என்பது அயல் அறிதல்
> அம்பல் என்பது அயல் அறிதல்; அலர் என்பது சேரி அறிதல்
> அம்பல் என்பது சேரி அறிதல்; அலர் என்பது ஊர் அறிதல்
> அம்பல் என்பது ஊர் அறிதல்; அலர் என்பது நாடு அறிதல்
> அம்பல் என்பது நாடு அறிதல்; அலர் என்பது தேசம் அறிதல்

அம்பலும் அலரும் களவு (நூற்பா. 22) என்ற இறையனாரின் நூற்பாவுக்கு அமைந்த நக்கீரர் உரையின் ஒரு பகுதியே மேலே காணப்படுவது. இப்பகுதியில் சேரி, ஊர், நாடு தேசம் ஆகிய இடப்பொதுப் பெயர்களின் சமுதாயப் பரப்பு படிப்படியாகக் கீழிருந்து மேல் நோக்கிச் சுட்டப்படுகின்றது. சேரி என்பது ஊரின் பகுதி என்பதும், ஊர் என்பது நாட்டின் பகுதி என்பதும், நாடு தேசத்தின் பகுதி என்பதும் இந்த உரையின் வாயிலாக அறியப்படு கின்றது. இதனின்றும் நாடும் தேசமும் ஒன்றல்ல என்ற உண்மை பெறப்படுகின்றது. இன்றைய பின்னணியில் பார்க்கும் போது மேற்படி உரையில் குறிக்கப்படும் ஊர் என்பது சிற்றூராகவும், நாடு என்பது பேரூராகவும் அன்று கொள்ளப்பட்டதாகத் தெரிகின்றது. ஆனால் இன்னும் பின்னோக்கிச் சென்றால் உண்மை வேறாகக் காணப்படுகின்றது.

21.4 சங்க இலக்கியங்களில் ஊரன் என்ற வழக்கு மருத நிலத் தலைவனையும், நாடன் என்ற வழக்கு குறிஞ்சிநிலத் தலைவனையும், ஒரோவழி முல்லைநிலத் தலைவனையும் குறிப்பனவாய் அமைகின்றன. *பொய்கை ஊரன் கேண்மை* (குறுந்தொகை 61), *குன்ற நாடன் கேண்மை* (குறுந்தொகை 38), *கானக நாடன்* (புறம். 5.3) ஆகிய தொடர்கள் இந்த வகையில் சிந்தனைக்கு உரியன வாகின்றன. ஊரும், நாடும் வழங்கிய நிலப்பகுதிகளைப் பின்வரும் புறநானூற்றுப் பாடல் நன்கு தெளிவுபடுத்துகின்றது.

(4) நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ (புறம். 49.1,2)

சேரமான் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் புகழ்ந் துரைக்கும் பாடலின் இப்பகுதிக்குப் பின்வரும் உரை காணப் படுகின்றது.

குறிஞ்சிநிலம் உடைமையால் நாடன் என்று சொல்லுவேனோ?
மருதநிலம் உடைமையால் ஊரன் என்று சொல்லுவேனோ?
நெய்தல் நிலம் உடைமையால் ஒலி முழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பன் என்று சொல்லுவேனோ?
(பழைய உரை. உ.வே.சா. பதிப்பு)

இதனின்றும் ஒரு குறிப்பிட்ட சமுதாயப் பரப்பானது தொடக்கத்தில் குறிஞ்சிநிலப் பகுதியில் நாடு என்றும், மருத நிலப்பகுதியில் ஊர் என்றும், நெய்தல் நிலப்பகுதியில் சேர்ப்பு என்றும் வழங்கிய நிலையை அறிய முடிகின்றது. இதனையே வேறுவகையில் சொல்ல வேண்டுமானால் நாடு, ஊர், சேர்ப்பு[3] ஆகிய மூன்று இடப்பொதுப்பெயர்களும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) அமைந்து ஒருபொருட்பன் மொழிகளாகக் கொள்ளத்தக்கனவாகின்றன. இது வரலாற்றில் ஒரு நிலைதான். காலப்போக்கில் இந்த வரைமுறை தளர்ந்து போக வாய்ப்பு உண்டு. காரணம், மக்கள் பொதுவாகக் குடிபெயர்ந்துறையும் இயல்பினர். சங்க காலத்திலேயே ஊர், நாடு இரண்டும் வழங்கிய நிலப் பகுதிகளின் வரையறை புறக்கணிக்கப்பட்டிருக்கலாம். இது ஆய்வுக்குரியது. ஆனால் பிற திராவிட மொழிகளில் நாடு என்னும் இடப்பொதுப் பெயர் பல்வேறு திரிபுகளுடன் ஊர் அல்லது கிராமம் என்னும் பொருண்மையை உணர்த்தும் நிலையே காணப் படுகிறது. இதனைப் பின்வரும் தரவுகளின் வாயிலாக அறியலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) DED. 3638. | Tamil. | <u>na:Tu</u> | 'country, district, province, locality, situation, earth, land, world, kingdom,state, rural traits, open place, side. |
| | Kannada. | <u>na:Du</u> | 'province, district, country (in opposition to town)' |
| | | <u>na:diga</u> | 'village superintendent in the service of a sma:rta guru' |

3. சேர்ப்பு என்பதன் வேர்ச் சொல்லாகிய சேர் என்பதும் சேரி என்பதும் கிளைச் சொற்களாகக் கருதத்தக்கவை என்று தோன்றுகிறது. ஆனால் சேரி என்பதன் தொன்மை வடிவம் கேரி என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| Tulu. | na:du | 'district, village' |
| Telugu. | na:Du, na:dika na:NDU | (inscr), 'a country' |
| Gondi | na:r | (obl. na:t pl. na:hk) 'village' |
| Konda | ña:ru | (obl. na:t- pl. na:Rku) 'village' |
| | na:Tan | 'pertaining to a village' |
| Pengo. | na:z/na:s | (obl. na:t- pl. na:sk) |
| Manda. | na:y | (obl. na:t- ) 'village' |
| Kui. | na:ju | (pl. na:ska ), na:yu 'village, town, hamlet' |
| Kuwi. | naiyu: | (pl.na:ska), na:yu (pl. na:ska) 'village'* |

மேலே காணப்படும் தரவுவகளினின்றும் மத்திய திராவிட மொழிகளில் நாடு என்பது பல்வேறு திரிபுகளுடன் கிராமம் என்ற பொருண்மையைக் குறிப்பதை அறியலாம். கூய் மொழியில் கூடுதலான பொருண்மைகளை இச்சொல் உணர்த்துகிறது. தென் திராவிட மொழிகளில் கிராமம் என்ற பொருண்மையைத் தவிர பல்வேறு அளவிலான சமுதாயப் பரப்புகளையும் உணர்த்தும் சொல்லாக நாடு அமைகிறது. தமிழைப் பொறுத்தவரையில் இன்று இச்சொல் ஊர்/கிராமம் என்ற பொருண்மையை உணர்த்தவில்லை. தென் திராவிட மொழிகளில் நாடு, விளைநிலப்பகுதியை உணர்த்து வதாகவும் அமைகிறது. மத்திய திராவிட மொழிகளில் இச்சொல் இப்பொருண்மையைக் குறிக்கவில்லை. ஆகவே தொடக்கத்தில் நாடு விளைநிலப்பகுதியை உணர்த்த வாய்ப்பில்லை. இது மேற்கொண்டு ஆய்வுக்குரியது. கிடைக்கிற சான்றுகளைக் கொண்டு நோக்கும்போது நாடு என்னும் இடப்பொதுப்பெயர் ஊர் என்னும் இடப்பொதுப் பெயரின் பொருண்மையையே தொடக்கத்தில் உணர்த்தியதாகக் கொள்ளத் தோன்றுகிறது. கேரள மாநிலத்தில் இன்றும் பேச்சு வழக்கில் இச்சொல்லானது ஊர் என்னும் பொருளிலேயே வழங்குகிறது. தமிழகத்தில் வழங்கும் *நாட்டாண்மை, நாட்டுப்புறத்தான்* முதலான தொடர்களிலும் *ஒரத்தநாடு, கொறநாடு* (< கூறைநாடு), *செட்டிநாடு, சேந்த(ன்) நாடு* ஆகிய ஊர்ப்பெயர்களிலும் நிகழும் நாடு பெரிய சமுதாயப் பரப்பை உணர்த்துவதாகக் கொள்ள முடியாது. ஊர் என்னும் சமுதாயப் பரப்புக்கு உரியதாகவே இச்சொல் இத்தொடர்களில் அமைகிறது.

*21.5* காலப்போக்கில் ஊர் என்பதும், நாடு என்பதும் வெவ்வேறு சமுதாயப் பரப்புகளை உணர்த்தும் சொற்களாகப்

பொருள் மாற்றம் பெற்று நிகழலாயின. வள்ளுவர் குறிப்பிடும் நாடானது ஊர் என்பதை உணர்த்தாமல் ஓர் அரசாட்சிக்குட்பட்ட சமுதாயப் பரப்பாகிய தேசம் என்பதையே உணர்த்துகின்றது. சோழர்கள் காலத்தில் ஆட்சிப் பகுதிகளாகக் குறிக்கப்படுவன வற்றுள் மண்டலம், வளநாடு, நாடு முதலானவை அடங்கு கின்றன. மண்டலம் என்பது வளநாடுகளையும், வளநாடு என்பது நாடுகளையும், நாடு என்பது ஊர்களையும் உட்பகுதிகளாகக் கொண்டிருந்தன என்பதை ராஜராஜ சோழன் கல்வெட்டுகள் தெளிவுபடுத்துகின்றன. *தொண்டை நாடான ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஓய்மா நாட்டுப் பேராயூர் நாட்டுப் பேராயூர்* (கல்வெட்டு எண்.15. S.I.I. Vol.II. NO.92) என்ற தொடர் 'தொண்டை நாடு எனப்படும் ஜயங்கொண்ட சோழ மண்டலத்தில் உள்ள, ஓய்மா நாட்டைச் சேர்ந்த பேராயூர் நாட்டில் உள்ள பேராயூர்' என்று விளக்கற்பாலதாகும் (வே. மகாதேவன் 1985). *அருமொழி தேவ வளநாட்டு மங்கல நாட்டு மங்கலம்* (கல்வெட்டெண்18. S.I.I. Vol.II. No.69) என்ற தொடர் 'அரு மொழிதேவ வளநாட்டில் அமைந்த மங்கல நாட்டில் உள்ள மங்கலம்' என்று விளக்கற்பால தாகும் (வே. மகாதேவன். 1985). இவ்விரண்டு எடுத்துக்காட்டுக் களிலும் பேராயூர், மங்கலம் ஆகிய இரண்டு ஊர்களும் நாடு என்னும் ஆட்சிப் பகுதியாகக் குறிக்கப்படுவதையும், இவ்விரு நாடுகளும் முறையே அருமொழிதேவ வளநாடு, ஓய்மாநாடு என்ற வளநாடு ஆகிய ஆட்சிப் பகுதிகளின் உட்பகுதிகளாகக் குறிக்கப்படுவதையும், தொண்டைநாடு மற்றும் ஓய்மாநாடு ஆகியவற்றில் நிகழும் நாடு என்னும் சொல் ஆட்சிப்பகுதியை உணர்த்தாமையையும் கருத்தில் கொண்டால் இச்சொல்லானது பிற்காலத்தில் பல்வேறு சமுதாயப் பரப்புகளைக் குறித்திருக்கிறது என்பது புலனாகும். இன்று இந்த நிலை மாறி முன்பே குறிப்பிட்டபடி மாநிலம், தேசம் ஆகிய பொருண்மைகளை மட்டும் உணர்த்தும் சொல்லாக நாடு பயன்படுத்தப்படுகின்றது.

21.6. சொல்லமைப்பு என்று எடுத்துக்கொண்டால் நாடு என்பதன் அமைப்பும் அதன் சொற்பொருண்மையும் ஆய்வுக் குரியனவாக உள்ளன. தெலுங்குக் கல்வெட்டுக்களில் இச்சொல் *நாண்டு* (na:NDU) எனக் காணப்படுகின்றது. (Korada Mahadeva Sastri 1969) எ-டு: *மஞ்ச்சிகொண்ட நாண்டு, ரேநாண்டு.* இனமெல்லொலி வீழ்ச்சியால் *நாண்டு* என்பது *நாடு* எனத்திரிந்தது என்பது இதன் மூலம் தெளிவாகிறது. *நாண்டு* என்பது *நாண்+து* என்ற

அமைப்பினதாகக் கொள்ளற்பாலது. இந்த அமைப்பில் காணப்படும் *நாண்* என்ற சொல்லின் பொருண்மையை இன்னதென்று இப்போதைக்கு அறியமுடியவில்லை. கன்னட இலக்கியமாகிய பம்ப பாரதத்தில் *நாழ்-கடி* என்னும் தொடர் 'நாட்டு எல்லை' என்ற பொருண்மையைக் குறிக்கிறது. இத் தொடரில் நாடு என்னும் சொல் *நாழ்* எனக் குறிக்கப்பட்டுள்ளது (B. Ramachandra Rao 1972:39). *நாழ்* என்னும் இந்த வழக்கு நாண் என்பதை நாடு என்பதன் வேர்ச் சொல்லாகக் கொள்வதில் சிக்கலை ஏற்படுத்துகிறது[4]. எனவே நாடு என்பதன் சொல்லமைப்பு, அதன் பொருண்மை ஆகியவை பற்றிய ஆய்வு இரண்டாவது கட்டமாக மேற்கொள்ளப்பட வேண்டியதாகிறது.

❀ ❀ ❀

4. *பிழி, பழம்* ஆகிய சொற்கள் தெலுங்கில் முறையே *பிண்டு, பண்டு* என்று நிகழும் நிலையைக் கருத்தில் கொண்டு புணர்ச்சியில் ழகரம் ணகரமாகத் திரிந்தது எனக் கருதலாம். இதனைச் சான்றாகக் கொண்டு *நாழ்* என்பது *நாண்* எனத் திரிந்ததாகக் கருதலாம். அல்லது *நாழ்* என்பதில் நிகழும் ழகர மெய் மிகைத்திருத்தத்தின் விளைவாகவும் இருக்கலாம். இது மேலும் ஆய்வுக்கு உரியதாகும்.

# 22. தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயரியல

## *22.1. இலக்கும் நெறியும்*

*22.1.1.* பல்வேறு காலக்கட்டங்களில் பயின்று வழங்கி, இன்றும் வழக்கில் நிலைகொண்டுள்ள மொழியானது பல்வேறு படிநிலைகளின் வெளிப்பாடுகளாக விளங்கும் படிவங்களைக் கொண்ட ஒரு கட்டமைப்பாகும். எழுத்தியல், சொல்லியல், தொடரனியல் என்று பல்வேறு பிரிவுகளைக் கொண்ட மொழியின் கட்டமைப்பினை வண்ணனை ஆய்வுக்கு உட்படுத்தும்போது இலக்கணிகளும் மொழியியலாரும் பல அமைப்பியல் சிக்கல்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. மொழியின் வண்ணனை விளக்கம் என்பது மொழியின் அமைப்பைப் பற்றிய ஒரு வண்ணனைக் கோட்பாடாகும். இந்த வண்ணனைக் கோட்பாடு அகநிறைவு (Internal Adequacy), புறநிறைவு (External Adequacy) என்று இருவகை ஆய்வுத் தடங்களின் பின்னணியில் அமைவதாகும். இந்த இரண்டனுள் எது சிறந்தது என்பதை முடிவு செய்வது ஆய்வாளனின் கடமை யாகும். அகநிறைவைக் கருத்தில் கொண்ட ஆய்வானது மொழி யமைப்பின் உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளைக் கருத்தில் கொண்ட தாகும். ஒரு வகையில் இந்த ஆய்வானது படிநிலைகளின் விளக்கமாகக் கொள்ளத்தக்கதாகும். இந்த ஆய்வில் கருத்தில் கொள்ளப்படும் தரவுகள் வண்ணனை ஆய்வில் வெளிப்படையாக வழக்கில் நிகழவேண்டும் என்ற கடப்பாடு இல்லை. இத்தகைய தரவுகள் வண்ணனை மொழியில் கற்பிதத்தன்மையனவாகத் தோன்றினாலும் அவை வரலாற்று நிகழ்வுகளாகக் கொள்ளத் தக்கவையாகும். எடுத்துக்காட்டாக *மகப்பேறு/மகப்பெயர், பேரப்பிள்ளை/பேரக்குழந்தை, வியாழக்கிழமை* ஆகிய தொடர்களின் நிலைமொழிகள் **மகம், *பேரம், *வியாழம்* எனக் கருதத்தக்கவையாகும். *மகவு/மக, பேரன், வியாழன்* ஆகியவற்றின் மாற்றுருபுகளாகக் கொள்ளத்தக்க இந்த நிலைமொழிக் கிளவிகள் வழக்கில் காணப்படவில்லையாயினும் இயல்பான, செயற்கைத் தன்மையற்ற ஆய்வுக்கு இவற்றை ஆய்வாளன் கருத்தில் கொள்வது தவிர்க்க முடியாததாகின்றது. இத்தகைய ஆய்வு அகநிறைவுத் தன்மையதாகிய கோட்பாட்டின் கீழ் அமைவதாகும். புறநிறைவுத் தன்மையதாகிய வண்ணனை ஆய்வானது படிநிலைகளையோ, மொழியமைப்பில் காணப்படும்

உள்ளார்ந்த ஒழுங்கமைதிகளையோ கருத்தில் கொள்வதில்லை. இந்த ஆய்வானது மொழியின் இயல்பான கட்டமைப்பை அதன் போக்கில் விளக்குவதில்லை.

*22.1.2.* மொழியின் இயல்பான வளர்ச்சிப் போக்குக்கு மாறாக ஆய்வாளன் தனக்குத் தோன்றியவாறெல்லாம் தனது ஆய்வுக்குக் கோட்பாட்டு அமைதி கூறிக்கொள்ளலாம். இவ்வாறு அமைந்ததுதான் தொல்காப்பியரின் நெருடல் மிக்க எழுத்தியல் ஆய்வு. எடுத்துக்காட்டாக *நுஞ்செவி* (<நும்+செவி), *தேக்குடம்* (<தேன்+குடம்), *வெரிங்குறை/வெரிக்குறை* (<வெரிந்+குறை) ஆகிய தொடர்களில் நிலைமொழிகளின் ஈற்று மெல்லொலி கெட்டு வருமொழி முதல் வல்லெழுத்துக்கு இனமாகிய வல்லொற்றோ, மெல்லொற்றோ இடம்பெற்றதாகப் புறநிறைவுத் தன்மையதாகிய தொல்காப்பிய ஆய்வில் கொள்ளப்படும். ஆனால் இலக்கை மட்டுமே குறியாகக் கொண்ட இத்தகைய ஆய்வுக்கு எழுத்தியல் அமைதி எதுவும் இல்லை. எந்த ஆய்விலும் இலக்கு எந்த அளவுக்கு முக்கியமோ அந்த அளவுக்கு அதை அடைய மேற்கொள்ளப்படும் நெறியும் முக்கியமாகும். தொல்காப்பிய எழுத்தியல் ஆய்வில் இலக்குக்கு அளிக்கப்பட்டுள்ள முக்கியத்துவம் அதை அடைவதற்கான நெறிமுறைகளுக்குக் கொடுக்கப்படவில்லை. புறநிறைவுத் தன்மையதாகிய ஆய்வில் காணப்படும் அடிப்படைக் குறைபாடே இதுதான். வண்ணனை ஆய்வானது வரலாற்று நிகழ்வுகளை/உண்மைகளைக் கருத்தில் கொள்ள வேண்டியதில்லையாயினும் அதற்கான வாய்ப்பு இந்த ஆய்வில் இல்லை என்று சொல்ல முடியாது. ஆனால் தொல்காப்பியர் தனது எழுத்தியல் ஆய்வில் புறநிறைவுத் தன்மையதாகிய வண்ணனைக் கோட்பாட்டினையே கருத்தில் கொள்வதால் ஒரு செயற்கையான, வலுவற்ற கோட்பாட்டுத் தடத்தில் அதன் போக்கு அமைந்து விடுகிறது. இந்த ஆய்வுரையில் இதுபற்றிச் சுருக்கமாகப் பேசப்படும்.

## 22.2. பதப்புணர்ச்சியில் மெய்யீற்றுத் தொழிற்பெயர்கள்

*22.2.1.* மெய்யீற்றுத் தொழிற்பெயர்கள் வேற்றுமை-அல்வழிப் புணர்ச்சிகளில் நிலைமொழியாக நிகழ்கையில் வருமொழி வல்லொற்றின்முன் உகரப் பேற்றினையும் அதனைத் தொடர்ந்து வல்லொற்றுப் பேற்றினையும், வல்லொற்று அல்லாத ஏனைய எழுத்துக்களை முதலாகக் கொண்ட வருமொழிகளின்முன் உகரப்பேற்றினையும் ஏற்று நிகழும் என்று ஓர் எழுத்தியல் ஆய்வினைத் தொல்காப்பியர் முன்மொழிகிறார். ஞகர, ணகர, மகர, லகர, ளகர மெய்யீற்றுத் தொழிற்பெயர்கள் அல்வழிப் புணர்ச்சியிலும் வேற்றுமைப் புணர்ச்சியிலும் அவற்றையடுத்து வல்லெழுத்தை முதலாகவுடைய வருமொழி நிகழ்ந்தால் உகரம்

தொடர்ந்த இனவல்லொற்றையும், ஞ, ந, ம, வ ஆகிய எழுத்துக்களை முதலாகவுடைய வருமொழி நிகழ்ந்தால் உகரப் பேற்றினையும் ஏற்று நிகழும் என்றும் நகர ஈற்றுப் பெயர் (எ-டு: *பொருந்*) அல்வழிப் புணர்ச்சியில் மேற்கூறியவாறும் வேற்றுமைப் புணர்ச்சியில் வருமொழிமுதல் வல்லெழுத்தாயின் அகரம் தொடர்ந்த இனவல்லொற்றையும், ஏனையவை ஆயின் அகரப் பேற்றினையும் ஏற்கும் என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுவார். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க. அடைப்புக்குள் குறிக்கப் பெற்றுள்ள நூற்பா எண்கள் இளம்பூரணர் உரை வகுத்த தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பாக்களின் வரிசை எண்களாகும்.

| அல்வழிப் புணர்ச்சி | வேற்றுமைப் புணர்ச்சி |
|---|---|
| *1(1) உரிஞ்+கடிது > உரிஞுக் கடிது (297)* | *உரிஞ்+கடுமை > உரிஞுக் கடுமை (297)* |
| *(2) உரிஞ்+வலிது > உரிஞு வலிது (298)* | *உரிஞ்+வலிமை > உரிஞு வலிமை (298)* |
| *2(1) மண்+கடிது > மண்ணுக் கடிது(307)* | *மண்+கடுமை > மண்ணுக் கடுமை(307)* |
| *(2) மண்+வலிது > மண்ணு வலிது (307)* | *மண்+வலிமை > மண்ணு வலிமை(307)* |
| *3(1) செம்+தீது > செம்முத் தீது (328)* | *செம்+தீமை > செம்முத் தீமை (328)* |
| *(2) செம்+வலிது > செம்மு வலிது(328)* | *செம்+வலிமை > செம்மு வலிமை (328)* |
| *4(1) கல்+சிறிது > கல்லுச் சிறிது (377)* | *கல்+சிறுமை > கல்லுச் சிறுமை (377)* |
| *(2) கல்+வலிது > கல்லு வலிது (377)* | *கல்+வலிமை > கல்லு வலிமை (377)* |
| *5(1) துள்+பெரிது > துள்ளுப் பெரிது(402)* | *துள்+பெருமை > துள்ளுப்பெருமை(402)* |
| *(2) துள்+வலிது > துள்ளு வலிது (402)* | *துள்+வலிமை > துள்ளு வலிமை(402)* |
| *6(1) பொருந்+தீது > பொருநுத் தீது (299)* | *பொருந்+தீமை > பொருநத் தீமை (299)* |
| *(2) பொருந்+வலிது > பொருநுவலிது(300)* | *பொருந்+வலிமை > பொருந வலிமை(300)* |

22.2.2. தொழிற்பெயர் அல்லாத *மின்/பின்/பன்* (346), *தெவ்* (383), *புன்/வன்* (404), *உரும்* (329) ஆகியவை அல்வழியிலும் வேற்றுமையிலும் *உரிஞ்* என்ற தொழிற்பெயர்போல் வருமொழி முன் புணரும். *கன்* (346), *ஈம்/கம்* (329), *வல்* (374) ஆகியவை அல்வழியில் *உரிஞ்* என்ற தொழிற்பெயரைப் போலவும், *எகின்* (338), *கன்* (347), *வல்* (375) மூன்றும் வேற்றுமையில் *பொருந்* என்ற தொழிற்பெயரைப் போலவும் வருமொழிமுன் புணரும். *ஈம், கம்* (330) இரண்டும் வேற்றுமைப் புணர்ச்சியில் வருமொழிமுன் *அக்கு* என்ற ஒரு கற்பிதச் சாரியையை ஏற்று நிகழும். தொல்காப்பியரின் இந்தப் புணரியல் ஆய்வானது புற நிறைவுத் தன்மையதாகிய கோட்பாட்டின்கீழ் அமைந்ததாகும். அல்வழி-வேற்றுமைப் புணர்ச்சிகளில் நிலைமொழியைச் சார்ந்து நிகழும் அகர, உகர எழுத்துப் பேறுகளையும் அகரம்/உகரம்+ வல்லொற்று என்ற சாரியைப் பேறுகளையும் ஒருங்கிணைக்கும்

முயற்சி தொல்காப்பிய ஆய்வில் மேற்கொள்ளப்படவில்லை. இதனால் இவற்றுக்கிடையிலான தொடர்பு வெளிப்படாமல் போய்விடுகின்றது. தொல்காப்பிய எழுத்தியல் ஆய்வில் குறிப்பிடத்தக்க கோட்பாட்டு நெருடல்களுள் இதுவும் ஒன்றாகும்.

## 22.3. ஓர் மாற்று ஆய்வு

22.3.1. தொல்காப்பியரின் ஆய்வுக்குப் பின்புலமாக அமையும் மேலே (1) முதல் (6) வரை குறிக்கப்பெற்றுள்ள தரவுத் தொகுதியை அகநிறைவுத் தன்மையிலான கோட்பாட்டினைக் கருத்தில் கொண்டு ஆராய முடியும். இந்த ஆய்வில் *உரிஞுக்கடிது/உரிஞுக்கடுமை, பொருநுக்கடிது/பொருநக்கடுமை, உரிஞு வலிது/உரிஞு வலிமை, பொருந வலிமை* ஆகியவை உம், அம் ஆகிய சாரியைகளை அடிநிலை அமைப்புக்களில் கொண்டுள்ளவையாகக் கருதப்படும். இந்தக் கருதுகோளை அடிப்படையாகக் கொண்டு மேலே குறிக்கப்பெற்றுள்ள அல்வழி, வேற்றுமைப் புணர்ச்சியில் அமைந்த அல்வழித் தொடரன்கள், வேற்றுமைத் தொடர்கள் ஆகியவற்றின் அடிநிலை அமைப்புக்கள் பின்வருமாறு ஆராயப்படும்.

7(1) உரிஞ்-உம்+கடிது/கடுமை>உரிஞுங்+கடிது/கடுமை > உரிஞுக் கடிது/கடுமை
(2) உரிஞ்- உம்+வலிது/வலிமை > உரிஞு வலிது/வலிமை

8(1) பொருந்- உம்+கடிது > பொருநுங் கடிது > பொருநுக் கடிது
(2) பொருந்- உம்+வலிது > பொருநு வலிது

9(1) பொருந்- அம்+கடுமை > பொருநங் கடுமை > பொருநக் கடுமை
(2) பொருந்- அம்+வலிமை > பொருந வலிமை

22.3.2. இந்த ஆய்வில் அம் சாரியையின் திரிபாக அகரமும், உம் சாரியையின் திரிபாக உகரமும் கொள்ளப்பட்டு அவை ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. மேலும் இந்த ஆய்வினை முன்னதாகக் குறிக்கப்பெற்றுள்ள *மின், பின், பண், கன், தெவ், வல், புள், வள், ஈம், கம், உரும்* ஆகியவற்றின் அல்வழி, வேற்றுமைப் புணர்ச்சி அமைப்புக்களுக்கும் விரிவுபடுத்தலாம். எடுத்துக்காட்டாக *வல்லுக் கடிது, வல்லப் பலகை, வல்ல நாய்* ஆகிய தொடர்களின் அடிநிலை அமைப்புக்களை முறையே *வல்-உம்+கடிது, வல்-அம்+பலகை, வல்-அம்+நாய்* எனக் குறிக்கலாம். தொல்காப்பிய ஆய்வில் *ஈமக்குடம், கம்மக்குடம்* ஆகிய தொடர்களின் அமைப்பு *ஈம்/கம்-அக்கு+குடம்* என்று அகநிறைவுத்தன்மையதாகிய ஆய்வில் கொள்ளப்படுகிறது. அக்குச் சாரியை நிகழ்வதாகக் கொள்வதற்கு மாறாக இவற்றில் அம் என்னும் சாரியை நிகழ்வதாகக் கொள்ளப்படும். *எருவங்குழி, செருவக்களம்* ஆகியவற்றில் அம் என்னும் சாரியையின் நிகழ்ச்சியைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். *எருவங்குழி*

என்பதில் அம்மென் சாரியையின் மகரம் வல்லொற்றின் முன் இன மெல்லொற்றாகத் திரியும். இவ்வாறு திரிந்து மெல்லொற்றினை அடுத்து நிகழும் நிலையொலியாகிய வல்லெழுத்து அலையொலியாகத் திரிந்தமைவதால் *எருவங்குழி* என்ற அமைப்பு தோன்றி நிகழ்கிறது. அந்த வல்லொலி அலையொலியாகத் திரியாத நிலையில் *எருவங்குழி* என்பது **எருவக்குழி* என அமையும். **எருவக்குழி* என்பது ஒரு கற்பித ஆய்வாகும். இந்தத் திரிபு *ம்>ங்>க்/-க்* என்ற போக்கில் அமையும். இது தமிழ் எழுத்தியல் வரலாற்றில் ஒரு படிநிலையாகும்.

22.3.3. *செருவக்களம்* என்ற தொடரின் அமைப்பைத் தொல்காப்பியர் *செரு-அம்+களம்* (261) எனக் கொண்டு, அம் சாரியையில் உள்ள மகரத்தைக் கெடுத்து வருமொழி வல்லொற்றை மிகுவிப்பார். இத்தகைய ஆய்வுக்கு எந்த எழுத்தியல் உந்துதலும் இல்லை; எழுத்தியல் அமைதியும் கூற முடியாது. பதப்புணர்ச்சியில் நிலைமொழி ஈற்று மெல்லொற்றைக் கெடுத்து வருமொழி வல்லொற்றினையோ அல்லது அதன் இன மெல்லொற்றினையோ மிகுவிப்பது (311, 313) தொல்காப்பியரின் ஆய்வு மரபாகும். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களில் காணலாம்.

(10) செருவம்+களம் > செருவ+களம் > செருவக்களம் (261) (செருவம்< செரு+அம்)

(11) வெரிந்+குறை > வெரி+குறை > வெரிங்குறை/வெரிக்குறை (301, 302)

(12) குளம்+கரை > குள+கரை > குளக்கரை/குளங்கரை (311, 313)

(13) இல்லம்+கோடு > இல்ல+கோடு > இல்லங்கோடு (314)

(14) அகம்+கை > அக+கை > அகங்கை; அகம்+கை > அக+கை > அ+கை > அங்கை (316)

(15) எல்லாம்+குறியவும் > எல்லா+குறியவும் > எல்லாக்குறியவும்/எல்லாங் குறியவும் (323, 324)

(16) நும்+கை > நு+கை > நுங்கை (326)

(17) தேன்+குடம் > தே+குடம் > தேக்குடம்/தேங்குடம் (341, 342)

(18) தேன்+இறால் > தே+இறால் > தேத்த்+இறால் > தேத்திறால் (345)

(19) அழன்+குடம் > அழ+குடம் > அழக்குடம் (355)

அகநிறைவுத் தன்மையதாகிய ஆய்வு இதற்கு மாறுபட்டதாகும். இந்த ஆய்வில் மொழியிறுதி மெல்லொற்று வருமொழிக்கேற்ப இனமெல்லொற்றாகவோ, இனவல்லொற்றாகவோ திரிந்ததாகக் கொள்ளப்படும்.

22.3.4. *அழத்து, புழத்து, மரத்து, மகத்து* ஆகிய வடிவங்களின் அடிநிலை அமைப்புக்களைத் தொல்காப்பியர் *அழன்/புழன்/*

*மரம்/மக+ அத்து* எனக் கொண்டு நிலைமொழியீற்று மெய்யைக் கெடுத்து, பின்னர் அகர நிலைமொழியை அடுத்து நிகழும் அத்தின் அகரத்தைக் கெடுத்து (126) மேற்படி வடிவங்களை வருவிப்பார். புறநிறைவுக் கோட்பாட்டின்மீது அமைந்த இந்த ஆய்வுகள் அனைத்தும் படிநிலைகளை விளக்குவனவல்ல. இத்தகைய ஆய்வுகள் செயற்கைத் தன்மையன என்பது மட்டுமல்ல, வலுவான கோட்பாட்டுப் பின்னணியில் அமைந்தவையும் அல்ல. மொழியின் இயல்பான வளர்ச்சி நிலைகளை இயல்பான கோட்பாட்டின் பின்னணியில் விளக்காத எந்த இலக்கண விளக்கமும் மொழியின் கட்டமைப்பை நேரிய முறையில் புரிந்து கொள்ள வகை செய்யாது. அகநிறைவுக் கோட்பாட்டின் கீழ் மேற்கொள்ளப்படும் வண்ணனை ஆய்வில் இத்தகைய குறைபாடுகளுக்கு வாய்ப்பில்லை. செயற்கையான இலக்கண விளக்கக் கோட்பாட்டை வகுத்துக் கொண்டு அதன் அடிப்படையில் தனது ஆய்வு முடிபுகளுக்கு அமைதி காண முற்படுவது மொழியின் இயல்பான கட்டமைப்பை நேரிதாகப் புரிந்து கொள்ள வகை செய்யாது, இதற்குத் தொல்காப்பியரின் மேலே குறிக்கப்பெற்றுள்ள எழுத்தியல் ஆய்வுகளே தக்க சான்றுகளாகும்.

22.3.5. மகர ஈற்றுப் பெயர்களின் புணர்ச்சித் திரிபுகளைக் கருத்தில் கொண்டு *தேக்குடம்/தேத்திறால்/தேமொழி, அழக்குடம், அழத்து, புழத்து* ஆகிய வடிவங்களின் நிலைமொழி களை **தேம், *அழம், *புழம்* என அக மீட்டுருவாக்கம் செய்ய முடியும். இந்த வடிவங்கள் வண்ணனை ஆய்வில் கற்பித வடிவங்களாகக் கொள்ளப்பட்டு முறையே *தேன், அழன், புழன்* ஆகியவற்றின் மாற்றுருபுகளாகக் கருதப்படும். இந்த ஆய்வில் தொல்காப்பியர் குறிப்பிடும் அத்துச் சாரியைக்கு இடமில்லை. *அழத்து, புழத்து* மற்றும் *தேத்திறால்* என்பனவற்றில் நிகழும் *தேத்து* ஆகியவை *அழம்/புழம்/தேம்+து* என்ற அமைப்பினவாகக் கொள்ளப்படும். *செருவக்களம்* என்ற தொடரில் அம் சாரியையின் நிகழ்ச்சியைத் தொல்காப்பியர் குறிப்பிடுவார். இங்கே அக்குச் சாரியைக்கு வாய்ப்பில்லை. தொல்காப்பியரின் இந்த ஆய்வு நமக்கு உடன்பாடே. இதனைக் கருத்தில் கொண்டு *ஈமக்குடம், கம்மக்குடம், தாழக்கோல், தமிழக்கன்னி, குன்றக்கூகை, மன்றப்பெண்ணை* ஆகியவற்றின் அடிநிலை அமைப்புக்களை முறையே *ஈம்-அம்+குடம், கம்-அம்+குடம், தாழ்-அம்+கோல், தமிழ்-அம்+கன்னி, குன்று-அம்+கூகை, மன்று-அம்+பெண்ணை* எனக் கொள்ளமுடியும். *தாளமு* (< தாழம்), *தமிழமு* ஆகிய தெலுங்கு வழக்குகளும் *குன்றம், மன்றம்* ஆகிய தமிழ் வழக்குகளும் மேலே குறிப்பிட்ட அடிநிலை அமைப்புக்கள் நேரியவை என்பதை உறுதிப்படுத்துகின்றன. இந்த அடிநிலை

அமைப்புக்களில் குறிக்கப்பெற்றுள்ள அம் சாரியை மொழியின் வளர்ச்சிப் போக்கில் நிலைமொழியின் அல்லது பகுதியின் ஒருங்கிணைந்த உறுப்பாக அமைந்துவிட்டது. தொல்காப்பியரின் அக்குச் சாரியைக் கோட்பாட்டின்மீது அமைந்த ஆய்வில் இந்த வரலாற்று உண்மைகள் வண்ணனை ஆய்வில் வெளிப்பட வாய்ப்பில்லை. இதனைக் கருத்தில் கொண்டே *உரினுக் கடிது, பொருநக் கடுமை, வல்லப் பலகை, உரினு வலிது, வல்ல நாய்* ஆகிய தொடர்கள் உம் மற்றும் அம் சாரியைகள் நாம் முன்மொழியும் அகநிறைவுக் கோட்பாட்டின் மீதான ஆய்வில் அடிநிலை அமைப்புக்களில் குறிக்கப்படுகின்றன. இந்தச் சாரியைகளில் உள்ள மகரம் வருமொழி வல்லொற்றின் முன் இனவல்லொற்றாகவும், ஞ, ந, ம, வ ஆகியவற்றின் முன்கேடுற்றும் நிகழ்கின்றன. இத்தகைய திரிபு *மரக்கட்டில், மரவேர்* ஆகிய அமைப்புக்களுடன் ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

### 4.0. செருவக்களமும் எருவங்குழியும்

*செருவக்களம், எருவங்குழி* ஆகியவற்றின் நிலைமொழியைத் தொல்காப்பியர் *செரு, எரு* எனக் கொள்வார். இவற்றை முறையே *செருவு, எருவு* எனப் படைத்துக் கொள்வதன்மூலம் வகர உடம்படுமெய்யை வலிந்து திணிப்பதைத் தவிர்த்துவிடலாம். மகரம் அலையொலியாகிய வல்லொற்றின்முன் இனமெல்லொற் றாகவும், நிலையொலியாகிய வல்லொற்றின்முன் இனமெல் லொற்றாகத் திரிந்து பின்னர் இனவல்லொற்றாகவும் திரிந்தமையும் பெற்றியதாகும். இதனையே *எருவங்குழி, செருவக்களம்* ஆகிய எடுத்துக்காட்டுக்கள் உணர்த்துகின்றன. தொல்காப்பிய ஆய்வில் இந்த எழுத்தியல் உண்மைகள் பெறப்படவில்லை.

### 22.5. மும்மெய் மயக்கமும் அதன் அடிநிலை அமைப்பும்

இந்தச் சிற்றாய்வை முடிக்குமுன் இன்னொரு கருது கோளையும் இங்கு முன்மொழிந்தாக வேண்டும். னகர ணகரங்களும், லகர ளகரங்களும் வருமொழி வல்லொற்றின்முன் இன வல்லொற்றுக்களாகத் திரிகின்றன. எ-டு. *பொன்+குடம்> பொற்குடம், மண்+பானை> மட்பானை, கல்+குவியல்> கற்குவியல், முள்+புதர்> முட்புதர். உரினுக் கடிது, உரினுக் கடுமை* ஆகியவற்றின் அகநிறைவு இலக்கண விளக்க அடிப்படையிலான அடிநிலை அமைப்புக்களைக் கருத்தில் கொண்டு *பொற்குடம், மட்பானை, கற்குவியல், முட்புதர்* ஆகியவற்றைப் பின்வரும் அடிநிலை அமைப்புக்களிலிருந்து பெறலாம்.

(20) பொன்-உம்+குடம் > பொனுங்குடம் > பொன்க்குடம் > பொற்க்குடம் > பொற்குடம் (மலயாளத்தில் நிகழும் பொன்னுங்குடம் (= பொற்குடம்) என்ற தொடர் கருத்தில் கொள்ளத்தக்கதாகும்).

(21) மண்-உம்+பானை > மணும்பானை > மணுப்பானை > மண்ப்பானை > மட்ப்பானை > மட்பானை

(22) கல்-உம்+குவியல் > கலுங்குவியல் > கலுக்குவியல் > கல்க்குவியல்> கற்க்குவியல் > கற்குவியல்

(23) முள்-உம்+புதர் > முளும்புதர் > முளுப்புதர் > முள்ப்புதர் > முட்ப்புதர் > முட்புதர்

இந்த ஆய்வில் குமாரசாமி ராஜாவின் NPP/LPP மெய்மயக்கங்கள் இடைநிலை அமைப்புக்களில் நிகழ்வதைக் காணலாம். தொல்காப்பிய ஆய்வு மரபில் இத்தகைய இலக்கண விளக்கத்துக்கு வாய்ப்பில்லை. *எண்ணுப்பெயர்* (எண்-உம்+ பெயர்), *வில்லுப்பாட்டு* (வில்-உம்+பாட்டு), *கள்ளுக்கடை* (கள்+உம்+கடை), *எள்ளுப் பிண்ணாக்கு* (எள்-உம்+பிண்ணாக்கு) முதலானவற்றுக்கும் *எட்கடிது* (எண்+கடிது/309), *முரட்கடுமை* (முரண்+கடுமை/310), *மீற்கண்* (மீன்+கண்/340), *தேற்குடம்* (தேன்+குடம்/341), *கற்குறிது* (கல்+குறிது/369), *நெற்கடிது* (நெல்+கடிது/372), *முட்கடிது* (முள்+கடிது/399) முதலானவற்றுக்கும் மேலே (20) முதல் (23) வரை முன்மொழியப்பட்டுள்ள ஆய்வு பொருந்தும். புணர்ச்சியில் வல்லொற்று/மெல்லொற்று மிகும் அமைப்புக்களுக்கும் *காளைக்கன்று/காளங்கன்று, கோரைப்பாய்/கோரம்பாய், மலைப்பாம்பு/மலம்பாம்பு, பனைத்திரள்/பனந்திரள்* (நன்னூல் 203) முதலானவற்றுக்கும் இந்த ஆய்வை விரிவுபடுத்த வாய்ப்புள்ளது. எடுத்துக்காட்டாக, *பனைத்திரள் / பனந்திரள்* என்ற இணை பின்வருமாறு வருவிக்கப்படும்.

24 (1) *பனய்-ம்+திரள் > பனய்ந்த்இரள் > பனய்த்திரள் (=பனைத்திரள்)

(2) *பனய்-ம்+திரள் > பனய்ந்திரள் > பனந்திரள்

வருமொழி முதல் வல்லொற்றானது தனது நிலையொலிப் பண்பை (Voiceless Property) இழக்காத நிலையில் அதன் முன் நிகழும் மெல்லொற்று இன வல்லொற்றாகத் திரிகிறது. இத்தகைய திரிபு நிகழ்கையில் நிலைமொழியீற்று யகரமெய் கெடுவதில்லை. இதனை 24(1)-இல் நிகழ்த்தப் பெற்றுள்ள ஆய்வில் காணலாம். வருமொழி முதல் வல்லொற்றானது தனது நிலையொலிப் பண்பை இழந்து அலையொலிப் பண்பினதாகத் (Voiced Property) திரிகையில் அதன்முன் நிகழும் இனமெல்லொற்றானது (Homorganic Nasal) வல்லொற்றாகத் திரிவதில்லை. தவிரவும் நிலைமொழியீற்று யகர மெய்யும் கெடுவதில்லை. இதனை 24(2)-இல் நிகழ்த்தப் பெற்றுள்ள ஆய்வில் காணலாம்.

❀ ❀ ❀

# 23. இலக்கியத்தில் மொழி வழக்குகள்

### *23.1 வழக்கெனப்படுவன*

*23.1.1* தமிழானது இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா ஆகிய நாடுகளில் கல்வி மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் மட்டுமின்றி, படைப்பிலக்கிய மொழியாகவும் விளங்குகிறது. கல்வி மொழியாகவும் ஆட்சிமொழியாகவும் அமையும் தமிழ், கற்றோர் வழக்கைப் பிரதிபலிப்பதாகும். இதற்குத் தாய்மொழியாளர்கள் கிடையாது. ஆகவே இந்தத் தமிழில் பேச்சுத் தமிழின் தாக்கத்துக்கு இடமில்லை. ஆனால் படைப்பிலக்கிய மொழியாக அமையும் தமிழ் பல்வேறு மொழி வழக்குகளைப் பிரதிபலிப்பதாக உள்ளது. தமிழ்ப்படைப்பிலக்கியங்களில், குறிப்பாக இந்திய விடுதலைக்குப் பின் தோன்றிய (உரைநடைத்) தமிழில் அமைந்த படைப்பிலக்கியங்களில் செவ்வியல் வழக்கு, பொதுப்பேச்சு வழக்கு, வட்டாரப் பேச்சு வழக்கு என்று மூன்று வகைத் தமிழ் வழக்குகள் காணப்படுகின்றன. இந்த மூவகை வழக்குகளுள் செவ்வியல் வழக்கு என்பது கற்றோர் வழக்காகும். செவ்வியல் வழக்கின் ஊடுருவல் ஏனைய இரு வழக்குகளில் காணப்பட்டாலும் இதைப்பற்றி நாம் இந்தக் கட்டுரையில் ஏதும் பேசப் போவதில்லை. பொதுப் பேச்சு வழக்கும் வட்டாரப் பேச்சு வழக்கும் இந்தக் கட்டுரையில் பொதுவழக்கு, வட்டார வழக்கு என்று குறிக்கப்படும். வட்டார வழக்குகள் அவை வழங்கும் நிலப்பகுதியைக் கருத்தில் கொண்டும் குறிக்கப்படும். எடுத்துக்காட்டாகத் திருநெல்வேலி, ராமநாதபுரம் மாவட்டப் பகுதிகளில் பேசப்படும் தமிழ் நெல்லைத் தமிழ் அல்லது நெல்லை வழக்கு என்றும் கன்னியாகுமரி மாவட்டப் பகுதியில் பேசப்படும் தமிழ் குமரித்தமிழ் அல்லது குமரி வழக்கு என்றும் இந்தக் கட்டுரையில் குறிக்கப்படும்.

*23.1.2* தமிழ்ப் படைப்பிலக்கியங்களில் காணப்படும் மூன்று வகையான மொழி வழக்குகள் பற்றி மேலே குறிப்பிடப்பட்டது. இவையன்றி சாதிப்பேச்சு வழக்கு (சாதி வழக்கு) என்றும் ஒன்று உண்டு. இந்த வழக்கு வட்டார வழக்கின் உட்பகுதியாகக் கொள்ளத் தக்கதா என்பது ஆய்வுக்குரியது. பார்ப்பனப் பேச்சு வழக்கு (பார்ப்பன வழக்கு) வட்டார வழக்கின் உட்பகுதியாக அமையுமா என்பதும் கேள்விக்குறியாக உள்ளது. ஏனெனில் தமிழகத்தில்

பார்ப்பனர்கள் சிறுபான்மை இனத்தவராக இருந்தாலும் அவர்கள் மாநிலம் முழுவதும் பரவியுள்ளனர் என்பது கருதத்தக்கதாகும். ஆக, தமிழ்ப்படைப்பிலக்கியங்களில் மொழி வழக்குகள் என்ற ஆய்வில் சாதி வழக்காகக் கருதப்படும் பார்ப்பன வழக்கை வட்டார வழக்கின் கீழ்க் கொண்டுவர முடியுமா என்பது சிந்தனைக்குரியதாகும். ஆயினும் பார்ப்பன வழக்கு மையங் கொண்ட வட்டாரத்தைக் கண்டறிய முடிந்தால் அதனை வட்டார வழக்கின் உட்பிரிவாகக் கொள்ள முடியும் என்று தோன்றுகிறது. இந்த வகையில் நெல்லை, குமரி வழக்குகளைப் பிரதிபலிக்கும் படைப்பிலக்கியங்கள் உறுதுணையாக அமையும் என்று கருதலாம்.

23.1.3. தமிழ்ப்படைப்பிலக்கியங்களின் அடித்தளத்தை வலுப் படுத்தியதில் இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் பங்களிப்பானது மொழியியல், இலக்கியவியல் கண்ணோட்டத்தில் கணிசமான தாகும். இந்தியப் பேச்சுத் தமிழிலிருந்து இலங்கைப் பேச்சுத் தமிழ் வித்தியாசமானது என்பதை இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புகள் நன்கு தெளிவுப்படுத்துகின்றன. எனவே தமிழ் வட்டார வழக்குகள் பற்றிய ஆய்வினின்றும் இலங்கைப் பேச்சுத் தமிழை நாம் ஒதுக்கி வைக்க முடியாது. வட்டார வழக்குகளைப் படைப்பிலக்கியங்களின் அடிப்படையில் வகைப்படுத்தும்போது இலங்கை வழக்கையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். சிங்கப்பூர்-மலேசியப் பேச்சுத்தமிழானது இந்தியப் பேச்சுத் தமிழையே ஒத்திருப்பதால் சிங்கப்பூர் பேச்சுத்தமிழ் என்றும் மலேசியப் பேச்சுத்தமிழ் என்றும் வகைப்படுத்த வாய்ப்பில்லை. ஆக, வட்டார வழக்குகள் என்று வரும்போது இந்தியப் பேச்சுத் தமிழையும் இலங்கைப் பேச்சுத் தமிழையும் மட்டுமே கருத்தில் கொண்டால் போதுமானது என்று தோன்றுகிறது.

23.1.4 தமிழ்ப்படைப்பிலக்கியங்களில் மூன்று வகையான மொழி வழக்குகள் பற்றி முன்னர்க் குறிப்பிடப்பட்டது. இவற்றுள் செவ்வியல் வழக்கு என்பது முறைசார்ந்த கல்வியின் மூலம் ஐந்து வயதுக்குப்பிறகு அறிமுகமாகிறது. ஐந்து வயது நிரம்பிய தமிழ்க் குழந்தை பள்ளிக்கு வருவதற்கு முன்பே பேச்சுத்தமிழில் வல்லாண்மை பெற்று விளங்குகிறது. தமிழ்க் குழந்தைக்கு முதலில் அறிமுகமாவது தாய்பேசும் தமிழேயாகும். இந்தத் தமிழ் உயிர்த் துடிப்புள்ள ஒரு சமுதாய வழக்காகும். இதுவே பைந்தமிழ் எனப்படும் பச்சைப் பசுந்தமிழுமாகும். பள்ளிக்குச் செல்லும் வயதுள்ள குழந்தைக்கு முதலில் அறிமுகமாகும் பேச்சுத்தமிழ் பொதுவாக வட்டார வழக்காகவே அமையும். வட்டார வழக்கு அறிமுகமாகும்போது படிப்படியாகப் பொது வழக்கும்

அறிமுகமாகத் தொடங்குகிறது. மேலே குறிப்பிட்ட மூவகைத் தமிழ் வழக்குகளையும் பின்வரும் எடுத்துக் காட்டுக்களின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.

1(அ) செவ்வியல் வழக்கு: பேசுகிறான், பேசுகிற, பேசுவது
(ஆ) பொது வழக்கு : பேசறான், பேசற, பேசறது
(இ) வட்டார வழக்கு :
1. நெல்லை : பேசுதான், பேசுத, பேசுதது
2. குமரி : பேசுகான், பேசுக, பேசுகது

பொது வழக்கிலும், வட்டார வழக்கிலும் சில மாறுபாடுகள் காணப்படலாம். எடுத்துக்காட்டாக, *பேசறான்* என்பது *பேசுறான்* என்றும் பொதுவழக்கில் நிகழலாம். குமரி வழக்கில் *பேசுகு* என்னும் ஒன்றன்பால் நிகழ்வினை *பேசுவு* என்றும் திரிந்து அமைகிறது. இத்தகைய திரிபுகள் சார்பு நிலையில் அமைந்தவை யாகும். இவற்றைச் சார்பு நிலைக் கிளைமொழி வேறுபாடுகள் (Sub-Dialectal Variations) எனக் குறிப்பிடலாம். இத்தகைய வேறுபாடுகளைப்பற்றியும் இக் கட்டுரையில் நாம் பேசப் போவதில்லை.

### 23.2 செவ்வியல் வழக்கு

23.2.1. செவ்வியல் வழக்கு என்பது ஒரு குறிப்பிட்ட வழக்கினை மட்டுமே அடித்தளமாகக் கொண்டதாகக் கருத முடியாது. தமிழைப் பொறுத்தவரையில் செவ்வியல் வழக்கின் தொடக்கம் சங்கத் தொகை நூல்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை இரண்டிலும் காணப்படுகிறது. இவற்றின் காலம் இன்னதென்று திட்டவட்டமாக அறியமுடியாவிட்டாலும் இவையே பழந்தமிழில் தோன்றிய முதல் இலக்கியங்களாகும். தொல்காப்பியருக்கு இலக்கணம் வகுப்பதற்குக் கிடைத்த தரவுகளுள் பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் அடங்கும். *உம் உந்தாகும் இடனுமார் உண்டே* (சொல்.சேனா.இடை.44) என்ற தொல்காப்பிய நூற்பாவானது புறநானூற்றில் 24, 352, 395, 396, 400-ஆம் பாடல்களில் நிகழும் செய்யுந்து வாய்ப்பாட்டு வினைகளை அடிப்படையாகக் கொண்டதாகும். கவிதை நடையில் யாப்பு மரபினையொட்டி அமைந்த சங்கத்தொகை நூல்களின் மொழிவீச்சின் தாக்கம் தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் ஆகிய பக்தி இலக்கியங்கள் வரை நீண்டுச் செல்கிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் பாடுதும், பாடுகம் என்ற அமைப்பிலான தகர மற்றும் ககர விகுதிகள் அமைந்த எதிர்கால வினைகளை இடைக் காலத்தில் தோன்றிய பக்தி இலக்கியங்களிலும் காணலாம். பின் வரும் எடுத்துக்காட்டுகள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கவை.

2(1) மண்சுமந்து கூலிகொண்டு அக்கோலால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதும் காண் அம்மானாய்
(திருவா. திருவம்மானை. 8)

(2) மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்தும் நாமே (திருவா. திருப். 6)

(3) விண்ணோரைப் பணித்தி (திருவா. திருச். 10)

3(1) ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத்து உரைக்கேன்
(திருவா. வாழாப்.1)

(2) எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்
(திருவா. திருவெம்.4)

(3) எழில்நகை கண்டுநின் திருவடி தொழுகோம்
(திருவா. திருப்பள்ளி.1)

இந்த எடுத்துக்காட்டுக்களில் நிகழும் *பாடுதும்* (பாடுவோம்/ பாடுகிறோம்) *இடித்தும்* (இடிப்போம்/இடிக்கிறோம்), *பணித்தி* (பணிப்பாய்/பணிக்கிறாய்), *நோகேன்* (நோவேன்), *உரைக்கேன்* (உரைப்பேன்), *தொழுகோம்* (தொழுவோம்/ தொழுகிறோம்) ஆகிய வினைகள் சங்க இலக்கிய வினையமைப்புக்களின் தொடர்ச்சி யாகும். இத்தகைய வினைப் படிவங்கள் இன்றைய வட்டார வழக்குகளில் நிகழ்வினைகளாக அமைந்து வட்டார வழக்கு இலக்கியங்களிலும் இடம்பெறுகின்றன. நெல்லை வழக்கில் காணப்படும் *சொல்லுதான்* என்பதும் குமரி வழக்கில் காணப்படும் *சொல்லுகான்* என்பதும் இந்த உண்மையைத் தெளிவுபடுத்தும்.

23.2.2. செவ்வியல் வழக்கின் வரலாறு சங்க இலக்கியங் களிலிருந்து தொடங்கினாலும். இவற்றில் காணப்படும் தமிழை முழுக்க முழுக்க வரலாற்று நிலையில் செவ்வியல் வழக்காகக் கொள்ள முடியுமா என்பது சிந்தனைக்குரியதாகும். செவ்வியல் வழக்கு என்பது தாய்மொழியாளர் இல்லாத வழக்காயினும் தொடக்க நிலையில் இதனைப் பேச்சுவழக்கிலிருந்து பெறப்பட்ட தாகவே கருதவேண்டும். இன்னும் சொல்லப்போனால் சங்கத்தமிழ் இலக்கியங்கள் வெளிப்படுத்தும் செவ்வியல் வழக்கானது பல்வேறு வட்டார வழக்குகளின் தொகுப்பாகவே கருதப்படவேண்டும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணம் சங்கஇலக்கியங்களில் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு (Tense) உரிய வினையானது பல்வேறு வடிவங்களாகக் காணப்படுவதேயாகும். இதனைப் பின்வரும் *அறி* என்னும் வினையடியாக அமைந்த வாய்பாட்டு எதிர்கால/ நிகழ்கால வினைமுற்றுக்கள் தெளிவுபடுத்தும்.

4)

| இக்கால வழக்கு | செவ்வியல் வழக்கு வகைகள் | | | | |
|---|---|---|---|---|---|
| | வகை-1 | வகை-2 | வகை-3 | வகை-4 | வகை-5 |
| அறிவோம் | அறிதும் | அறிகும் | அறிகம்/ அறிகேம் | அறிகுவம் | அறியுநம் |
| அறிவாய் | அறிதி | - | - | அறிகுவை | அறிநை< அறியுநை |
| அறிவீர் | அறிதிர் | - | - | அறிகுவிர் | அறியுநர் |

செவ்வியல் வழக்குகளில் வகை-2, வகை-3 இரண்டிலும் முன்னிலை வினைகளின் நிகழ்ச்சி சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. இக்கால வழக்கினவாக மேலே குறிக்கப்பட்டுள்ள தன்மை, முன்னிலை வினைகள் சங்கத்தமிழுக்கு அன்னியமானவை அல்ல. மேலே குறிப்பிட்ட வினை வகைகளைத் தவிர *அறியுநர், களையுநர்* ஆகியவற்றின் திரிபுகளாகிய *அறிநர், களைநர்* ஆகியவையும் *அறிஞர், களைஞர்* ஆகியவையும் சார்புநிலைக் கிளைமொழித் திரிபுகளாகக் கருதப்படும். பிற்காலத்தில் இத்தகைய திரிபு வினைகள் வினைப்பெயர்களாக வழங்கலாயின.

*23.2.3.* இடைப்பிறவரலாக இங்கே இரண்டு வகையான விகுதிகளின் தோற்றம் பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். ஒன்று, *ஆளுநர், இயக்குநர், ஓட்டுநர், நடத்துநர்* முதலானவற்றில் நிகழும் நகர விகுதியின் தோற்றம் பற்றியது. இன்னொன்று *அறிஞர், இளைஞர்* முதலானவற்றில் நிகழும் ஞகர விகுதியின் தோற்றம் பற்றியது. நகர விகுதியும், ஞகர விகுதியும் அமைந்த இத்தகைய வினைப்பெயர்கள்/வினையாலணையும் பெயர்க்ள் பழந்தமிழிலும் காப்பியத்தமிழிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவற்றுள் சில கீழே தரப்பட்டுள்ளன.

5(1) (அ) அறியுநம் (அகம்.243-12)
(ஆ) அறியுநன் (புறம்.136-15)
(இ) அறியுநள் (நற்.44-5)
(ஈ) அறியுநர் (நற்.42-7)
(உ) வாழுநர் (பதி.49-15)

(2) (அ) அறிநை (புறம்.381-20) (< *அறியுநை)
(ஆ) அரிநர் (புறம்.42-12) (< *அரியுநர்)
(இ) அறிநர் (புறம்.373-23) (< *அறியுநர்)
(ஈ) கிளைநர் (சீ.சி.1394) (< *கிளையுநர்)
(உ) கொலைநர் (சீ.சி.2770) (< *கொலையுநர்)

(ஊ) படைநர் (பெருங்.2-8-100) (< *படையுநர்)
(எ) வாழ்நர் (பதி.37-10) (< *வாழுநர்)
(ஏ) வினைநர் (பதி.62-16) (< *வினையுநர்)

6 (1) அரிஞர் (அகம்.84-12) (< *அரிய்நர்)
(2) அறிஞர் (நற்.314-2) (< *அறிய்நர்)
(3) எறிஞர் (அகம்.71-12) (< *எறிய்நர்)
(4) களைஞர் (குறுந்.397-8) (< *களைய்நர்)
(5) கிளைஞர் (அகம்.93-1) (< *கிளைய்நர்)
(6) கொலைஞர் (நாலடி.331) (< *கொலைய்நர்)
(7) படைஞர் (பதி.25-4) (< *படைய்நர்)
(8) பகைஞர் (புறம்.180-7) (< *பகைய்நர்)
(9) வலைஞர் (புறம்.249-3) (< *வலைய்நர்)
(10) வறிஞர் (நாலடி.1) (< *வறிய்நர்)
(11) விலைஞர் (குறுந்.117-6) (< *விலைய்நர்)
(12) வினைஞர் (அகம்.84-3) (< *வினைய்நர்)

மேலே குறிப்பிட்ட இருவகை வினைப்பெயர்களுள் (6)-இல் உள்ள ஞகர விகுதி வினைப்பெயர்கள் (5)-இல் உள்ள நகர விகுதி வினைப்பெயர் களின் திரிபுகளாகும். இந்தத் திரிபினைப் பின்வருமாறு விளக்கலாம்.

7(1) அறியுநர் (பதி.26-4)
↓
*அறிய்நர் (உகரக்கேடு)
↓
அறிநர் (புறம்.373-23) (யகரமெய்க்கேடு)

(2) அறியுநர்
↓
*அறிய்நர் (உகரக்கேடு)
↓
*அறிய்ஞர் (நகரமெய் யகரமெய்யை அடுத்து ஞகரமெய்யாகத் திரிந்தது)
↓
அறிஞர் (நற்.314.2) (ஞகர மெய்யின் முன் யகரமெய் கெட்டது)

(8) களையுநர் (அகம். 365.8)
↓
*களைய்நர் → *களைய்ஞர் → களைஞர் (குறுந். 392.5)
↓
களைநர் (இலக்கியத்தில் காணப்படவில்லை. ஆனால் ஏற்புடையது)

மேலே (7)-இல் செயல்படும் சந்திவிதிகளே (8)-இலும் செயல்படு கின்றன. *களைதர்* என்ற சொல் இலக்கியத்தில் காணப்படவில்லை யாயினும் *கொலைதர்* (சீ.சி.2770) *வினைதர்* (பதி.62-16) ஆகியவற்றை முறையே *கொலையுநர் *வினையுநர் ஆகியவற்றினின்றும் வருவிக்க (8)-இல் உள்ள ஆய்வு முறையைப் பின்பற்றலாம். ஞகர விகுதியமைந்த வினைப் பெயர்கள் பின்வரும் எடுத்துக்காட்டுக் களில் வினையாலணையும் பெயர்களாக நிகழ்வதைக் காணலாம்.

(9) வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை (நற். 314-2)

(10) வெண்ணெல் அரிஞர் தண்ணுமை வெரீஇ (புறம். 348-1)

(11) தன்னுறு விழுமம் களைஞரோ விலரே (குறுந். 397-8)

இந்த எடுத்துக்காட்டுகளில் நிகழும் *அறிஞர், அரிஞர், களைஞர்* ஆகியவை அடிப்படையில் எதிர்கால/நிகழ்கால வினைமுற்றுக்களாகும். இதனைப் பின்வரும் ஓர் எடுத்துக்காட்டு தெளிவுபடுத்தும்.

(12) நம், அருந்துயர் களைஞர் வந்தனர் (கலி. 29. 24,25)

இந்த எடுத்துக்காட்டில் *களைஞர்* என்பது *களைய* என்னும் எதிர்காலச் செயவென் எச்சவினைக்கு நிகராய் அமைந்து முற்றெச்சமாகச் செயல்படுகிறது. பழந்தமிழில் வினை முற்றுக்கள் முற்றெச்சமாகச் செயல்படுதல் இயல்பான நிகழ்ச்சியாகும். இதனின்றும் ஞகர விகுதியமைந்த வினைப்பெயர்கள் வரலாற்று நிலையில் வினைமுற்றுக்களாகச் செயல்பட்டன என்பது புலனாகின்றது.

23.2.4 இனி *அறியுநர், களையுநர்* ஆகியவற்றில் நிகழும் நகர விகுதியின் தோற்றத்தை ஆராயலாம். எட்டுத் தொகையுள் ஒன்றாகிய புறநானூற்றில் செய்யுந்து வாய்பாட்டில் அமைந்த ஒருவகை நிகழ்கால/எதிர்கால வினைகளின் நிகழ்ச்சி காணப்படு கின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

13 (1) ஆருந்து (395-8)

(2) இரியுந்து (396-6)

(3) இரீஇயுந்து (395-15) (< *இரிகுந்து)

(4) உகளுந்து (339-5)

(5) ஒப்புந்து (396-4)

(6) குறூஉந்து (339-8) (< *குறுகுந்து)

(7) தரூஉந்து (24-9) (< *தருகுந்து)

(8) தாங்குந்து (396-9)

(9) தூங்குந்து (24-6, 400-14)

(10) பாயுந்து (24-3)
(11) வழங்குந்து (396-1)
(12) வைகுந்து (384-9)

14(1) உறைக்குந்து (384-7) (< உறைக்கு+உந்து)
(2) ஒலிக்குந்து (137-6, 386-17) (< ஒலிக்கு+உந்து)
(3) கறக்குந்து (352-2) (< கறக்கு+உந்து)
(4) நிலைக்குந்து (386-15) (< நிலைக்கு+உந்து)
(5) பறிக்குந்து (352-4) (< பறிக்கு+உந்து)
(6) பூக்குந்து (396-2) (< பூக்கு+உந்து)
(7) பெயர்க்குந்து (395-11) (< பெயர்க்கு+உந்து)
(8) மறுக்குந்து (343-2) (< மறுக்கு+உந்து)

மேலே (13), (14)-இல் காணப்படும் வினைமுற்றுக்களைக் கருத்தில் கொண்டே தொல்காப்பியர் *உம் உந்தாகும் இடனுமார் உண்டே* (சொல்.சேனா.இடை. 44) என்று குறிப்பிடுவார். புறநானூற்றில் மட்டுமே காணப்படும் இந்தச் செய்யுந்து வாய்பாட்டு வினைகள் திராவிட மொழிகளின் நிகழ்கால, எதிர்கால வினைகளின் தோற்றத்துக்கு ஒரு வலுவான அடித்தளத்தை அமைத்துக் கொடுத்துள்ளன. இது பற்றி இங்கே விரிவாகப் பேசுவதற்கு வாய்ப்பில்லையாயினும் பேச்சுத் தமிழில் காணப்படும் செய்யுது வாய்ப்பாட்டு ஒன்றன்பால் நிகழ்வினைகளும், மலயாளத்தில் காணப்படும் செய்யுந்நு வாய்பாட்டு நிகழ்காலப் பொதுவினை முற்றுக்களும் (Impersonal Finite Verbs) செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் வழித்தோன்றல்கள் என்பதை உணர்த்திவிட்டு மேலே தொடரலாம்.

23.2.5. *செய்யுந்து* வாய்பாட்டுப் பொது வினைகள் *செய்+உந்து* என்ற வாய்பாட்டு வினையமைப்பைக் கொண்டவையாகும். ஆயினும் செய்யுந்து வாய்பாட்டு வினைகளின் அமைப்பு செய்யுந்+து என்று பிறழ உணரப்பட்டு, துகரக்கிளவி ஒன்றன் பால் விகுதியாகவும், செய்யுந் என்பது புதிய வாய்பாட்டு நிகழ்வு அல்லது எதிர்காலப் பகுதியாகவும் (Non Past Base) மறு ஆய்வுக்கு (Reanalysis) உட்படுத்தப்பட்டன. இந்த மறு ஆய்வில் செய்யுந் என்பதில் உள்ள நகரமெய் கால விகுதியாக உணரப்பட்டது. கால விகுதியை அடுத்து முற்றுவிகுதிகள் அமைவது தமிழில் இயல்பான நிகழ்ச்சி யாதலால் செய்யுநம், செய்யுநை, செய்யுநன், செய்யுநள், செய்யுநர், செய்யுந முதலான தன்மை, முன்னிலை, படர்க்கை வினை முற்றுக்கள் தோற்றம் கொண்டு பழந்தமிழில் நிகழலாயின. இந்த வாய்பாட்டு

வினைகளில் காணப்படும் காலக் கிளவியாகிய -உந் என்ற விகுதியும் நகரவிகுதியும் செய்யும் வாய்பாட்டு வினைகளில் நிகழும் உம் என்ற விகுதியின் எச்சங்களாகும். இந்த அடிப்படையில் எடுத்துக் காட்டாக *அறியுநர்* என்ற வினைமுற்று *அறிய்-உந்+அர்* என்றும், *அறிநர்* என்ற வினை முற்றானது *அறி-ந்+அர்* என்றும் பகுப்பாய்வு செய்யப்பட வேண்டும். பின்வரும் எடுத்துக்காட்டில் *களையுநர்* என்னும் வினையானது வினையாலணையும் பெயராக நிகழ்வதைக் காணலாம்.

*(15)*இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து (குறள். *879*)

*23.2.6* தமிழில் வினையாலணையும் பெயர் என்பது வினை முற்றுக்களில் ஒரு வகையாகும். சிறப்புவினை முற்றுக்கள் (Personal Finite Verbs) நேரடியாக வேற்றுமை விகுதிகள் ஏற்பது தமிழில் இயல்பாகக் காணப்படும் ஒரு நிகழ்ச்சியாகும். *யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டு வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே* (திருச்சதகம் 15) என்ற மாணிக்கவாசகப் பெருமானின் திருவாசகப் பாடற் பகுதியில் நிகழும் *நின்றாயை* (*நின்றாய்+ஐ) என்ற வேற்றுமை உருபேற்ற வினைமுற்று இதனைத் தெளிவுபடுத்தும். இந்த எடுத்துக் காட்டில் நிகழும் *நின்றாயை* என்பது *நின்ற+உன்னை* என்ற பெயரெச்சத் தொடருடன் பொருண்மை நிலையில் ஒன்றுபடுவதாகும். வினைமுற்றாகிய வினையாலணையும் பெயரும் பெயரெச்சவினையும் துணைநிலை வழக்கில் (Complementary Distribution) நிகழ்பவையாகும் (Kothanda raman, R. 1990b: 45-88)). இக்காலத் தமிழில் நிகழும் ஓர் எடுத்துக் காட்டின் மூலம் இதனைத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். விட்டல்ராவின் (1977:64) *போக்கிடம்* என்ற புதினத்தில் அமைந்த பின்வரும் எடுத்துக்காட்டினைக் கருத்தில் கொள்க.

*16(1)* [பேச்சி பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தவள்]
கதவைச் சாத்தித் தாழிட்டுக் கொண்டாள்.

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *பேச்சி பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவள்* என்ற பெயர்த்தொடர் பின்வரும் எடுத்துக்காட்டில் *பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த பேச்சி* என்ற பெயரெச்சத் தொடராகப் பொருண்மை சிதையாமல் அமைவதைக் காணலாம்.

*16(2)* [பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த பேச்சி]
கதவைச் சாத்தித் தாழிட்டுக் கொண்டாள்.

எடுத்துக்காட்டு (16)-இல் காணப்படும் *நுழைந்தவள், நுழைந்த* ஆகிய இரண்டு வினைகளும் துணைநிலை வழக்கில் அமைவதைக் காணலாம். இதனைக் கருத்தில் கொண்டு பழந்தமிழில் நிகழும் பின்வரும் எடுத்துக்காட்டில் காணப்படும் பெயரெச்சத் தொடராகத் திரியவல்ல பெயர்த் தொடர்களை ஆராயலாம்.

(17) தொறுத்தவயல் ஆரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு உழாதுவித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் இரைதடுக்குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்
(ஒலிதெங்கின் இமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம் பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழுவைப்பின்
நாடு...) (பதிற்றுப்பத்து 13.1-10)

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *பிறழ்ந, வித்துந, தடுக்குந, ஆர்ந* ஆகிய பலவின்பால் நிகழ்வினைகளை வினைப்பெயர்த் திரிசொல் என்று பதிற்றுப்பத்தின் பழைய உரை குறிப்பிடுகிறது. உ.வே. சாமிநாதய்யர் தன் குறிப்புரையில் இவற்றை வினையாலணையும் பெயர்களாகக் குறிப்பிடுவார். இரண்டும் ஒன்றே. எடுத்துக்காட்டு 16 (1) இல் நிகழும் *பேச்சி* என்பதற்கு நிகராக (17)இல் *வயல், செறு, நெய்தல், மூதா* ஆகிய பெயர்கள் நிகழ்கின்றன. அதாவது (17) இல் காணப்படும் *வயல் ஆரல் பிறழ்ந, செறு உழாது வித்துந, நெய்தல் இரை தடுக்குந, மூதா ஆம்பல் ஆர்ந* ஆகிய பெயர்த்தொடர்கள் 16(1) இல் காணப்படும் [*பேச்சி பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவள்*] என்ற பெயர்த்தொடர்க்கு நிகராய் அமைந்தவையாகும். இந்தப் பெயர்த்தொடர்களை 16 (2)இல் உள்ள *பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த பேச்சி* என்ற பெயரெச்சத் தொடர் போல் மாற்றியமைக்க முடியும். இதனைப் பின்வரும் இணைத் தொடர்கள் நன்கு தெளிவுபடுத்தும்.

18(1) வயல் ஆரல் பிறழ்ந
(2) ஆரல் பிறழும் வயல்

19(1) செறு உழாது வித்துந
(2) உழாது வித்தும் செறு

20(1) நெய்தல் இரை தடுக்குந
(2) இரையைத் தடுக்கும் நெய்தல்

*21(1) மூதா ஆம்பல் ஆர்ந*
*(2) ஆம்பல் ஆரும் மூதா*

மேலே (1), (2) உட்பிரிவுகளில் நிகழும் இணைத் தொடர்களில் காணப்படும் *பிறழ்ந-பிறழும், வித்துந-வித்தும், தடுக்குந- தடுக்கும், ஆர்ந-ஆரும்* ஆகிய இணை வினைகள் துணை நிலை வழக்கில் அமைகின்றன. இதன் அடிப்படையில் *பிறழ்ந, வித்துந, தடுக்குந, ஆர்ந* ஆகியவற்றின் நிலை பற்றி நாம் முடிவு செய்ய வேண்டும். இந்த வகையில் பின்வரும் எடுத்துக்காட்டையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

*22(1) வீழ்ந்து மயில்போல் விசயை கிடந்தாளை (சீ.சி. 1810)*

இது வேற்றுமை உருபேற்ற ஒரு பெயர்த்தொடராகும். *கிடந்தாள்* என்ற வினைமுற்றை அடுத்து வேற்றுமை உருபு நிகழ்வதால் இந்த வினைமுற்றானது பெயராகக் கொள்ளத்தக்கதாகின்றது. இலக்கண ஆசிரியர்கள் இதனை வினையாலணையும் பெயர் என்று குறிப்பர். வினைமுற்றே வினையாலணையும் பெயர் என்று குறிக்கப் படுவதால் வினைமுற்றுக்கள் அனைத்தும் வினையாலணையும் பெயர்களே என்பது உறுதிப்படுகின்றது. மேலே 22 (1)இல் உள்ள பெயர்த்தொடர் பின்வரும் பெயரெச்சத்தொடருடன் தொடர்புடைய தாகும்.

*22(2) வீழ்ந்துமயில்போல் கிடந்த விசயையை*

இந்த எடுத்துக்காட்டில் நிகழும் *கிடந்த* என்ற பெயரெச்சமும் 22 (1)-இல் நிகழும் *கிடந்தாள்* என்ற வினை முற்றும் துணைநிலை வழக்கில் உள்ளன. துணை நிலை வழக்கிலுள்ள உறுப்புக்கள் ஒரே இனத்தைச் சார்ந்தவையாக இருக்க வேண்டும். *கிடந்தாள்* என்பது முற்றுவினையாகலின் *கிடந்த* என்பதும் முற்றுவினையின் ஒரு வகையாகவே கொள்ளப்படும். இதேபோல் (18) முதல் (21) வரையிலுள்ள இணைத் தொடர்களில் நிகழும் இணைவினை களையும் முற்றுவினையின் வகைகளாகவே கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டு 22(1)ஐக் கருத்தில் கொண்டு வினைமுற்றுகள் எல்லாம் வினையாலணையும் பெயர்களே என்று துணியப்பட்டது. இதன் அடிப்படையில் *பிறழ்ந, வித்துந, தடுக்குந, ஆர்ந* ஆகிய பலவின்பால் நிகழ்வினைகளும் வினையாலணையும் பெயர்களாகவே கொள்ளப்படும். இந்த உண்மையானது நிகழ்வினைமுற்றுக்களுடன் துணைநிலை வழக்கில் நிகழும் பெயரெச்ச வினைகளுக்கும் பொருந்தும். வினைமுற்றுக்களாகிய வினையாலணையும் பெயர்கள் வேற்றுமை உருபு ஏற்பதும் ஏற்காததும் அவை நிகழும் வாக்கியச்சூழலைப் (Syntactic Context) பொறுத்தது.

*23.2.7* மீண்டும் ஞகர நகர விகுதிகள் அமைந்த வினைகளுக்கு வருவோம். *அறிஞர், அறியுநர், அறிநர்* ஆகிய வினை வகைகள் பற்றிய ஆய்வானது பழந்தமிழை ஒற்றை வழக்கிலான செவ்வியல் மொழியாகக் கொள்ளத் துணைபுரியவில்லை. இதன் மூலம் பழந் தமிழானது பல்வேறு வினைப்படிவங்களைக் கொண்ட ஒரு செவ்வியல் மொழி என்பது தெளிவாகின்றது. நிகழ்வெதிர்வாகிய ஒரே காலத்தை குறிக்கும் இத்தகைய வினைப்படிவங்கள் (Verbal Patterns) செவ்வியல் மொழியாகக் கருதப்படும் சங்கத் தமிழாகிய பழந்தமிழில் நிகழ்வதால் அதனைப் பல்வேறு பேச்சு வழக்குகளின் தொகுப்பாகக் கருதமுடியும்.

*23.2.8* செவ்வியல் வழக்கில் இடம்பெற்றுள்ள ஒரே காலத்தைக் குறிக்கும் பல்வேறு வினைப்படிவங்களின் நிகழ்ச்சிக்களங்கள் கண்டயறிப்பட வேண்டிய ஒன்றாகும். உத்தேசமாகச் சொல்ல வேண்டுமானால் *செய்யுதும், செய்கம்* ஆகிய வாய்பாட்டு வினைகளை முறையே நெல்லை வழக்காகவும் (கருதுக: சொல்லுதோம்) குமரி வழக்காகவும் (கருதுக: சொல்லுகோம்) கருதலாம். இந்தக் கருதுகோள் செய்யுதும், செய்கம் ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் தகர ககரகால விகுதிகளை மட்டுமே கருத்தில் கொண்ட தாகும். அறியுநர், அறிநர், அறிஞர் ஆகிய வினைவகைகளைச் சார்பு நிலைக் கிளைமொழி வேறுபாடுகளாகக் கருதலாம். இதன் மூலம் இந்த வினைவகைகளும் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் வழங்கியனவாகத் துணியலாம்.

*23.2.9* சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ள செவ்வியல் தமிழில் பல்வேறு பேச்சு வழக்குகளின் தாக்கம் இருப்பதற் கான வாய்ப்புகள் பற்றி மேலே ஆராய்ந்தோம். இக்காலப் படைப்பிலக்கியங்களில் பயன்படுத்தப்படும் செவ்வியல் தமிழில் பழந்தமிழில் காணப்படுவதுபோல் பேச்சு வழக்குகளின் தாக்கம் காணப்படவில்லை. *அறிதும், அறிகும், அறிகம், அறிகுவம்* ஆகிய எல்லாவற்றுக்கும் சேர்த்து *அறிவோம்* என்ற ஒரே வினைதான் இக்காலச் செவ்வியல் தமிழில் காணப்படுகின்றது. வட்டார வழக்குகளோ சாதி வழக்குகளோ இக்காலச் செவ்வியல் தமிழில் இடம்பெறுவது மிகுந்த விழிப்புடன் கண்காணிக்கப்படுகிறது. ஆனால் வட்டார வழக்கில் அமைந்த இக்கால உரைநடைப் படைப்பிலக்கியங்களில் பயின்று வழங்கும் செவ்வியல் வழக்கில் அங்குமிங்குமாக வட்டார வழக்குகள் இடம்பெறுவதைக் காண முடிகிறது. ஆனால் இது செவ்வியல் வழக்கில் குறிப்பிடத்தக்க எந்த மொழியியல் பாதிப்பையும் இதுவரை ஏற்படுத்தவில்லை. இனி எப்படியோ?

## 23.3 பொது வழக்கு

*23.3.1.* செவ்வியல் வழக்கானது தொடக்க நிலையில் பேச்சு வழக்காக நிகழ்ந்திருக்க வேண்டும் என்றும், செவ்வியல் மொழியாகக் கருதப்படும் பழந்தமிழில் பல்வேறு பேச்சு வழக்குகளின் தாக்கம் உண்டு என்றும் மேலே பேசப்பட்டது. தேவ பாஷை என்று நம்பப்படும் சமஸ்கிருதத்துக்கும் இது பொருந்தும். பேச்சு இல்லையென்றால் மொழி ஏது? செவ்வியல் மொழிகள் அனைத்தும் பேச்சு மொழிகளின் மீது கட்டப்பட்டுள்ள மாளிகைகள்தான். இந்தக் கூற்று பொதுவழக்குக்கும் பொருந்தும். தமிழைப் பொறுத்தவரை பொது வழக்கு, வட்டார வழக்கு இரண்டுமே தாய்மொழியாளர்களைக் கொண்டிருப்பதால் இரண்டையும் இனம் காண்பதில் சற்று இடர்ப்பாடு இருக்கலாம். ஆயினும் இந்த இடர்ப்பாடு பொதுவழக்கையும் வட்டார வழக்கையும் வேறு படுத்துவதற்கு ஒரு தடையாக அமைய வாய்ப்பில்லை. பொதுவழக்கு என்பதும் வட்டார வழக்கை அடித் தளமாகக் கொண்டது என்பதையும் அது வட்டார வழக்காகவும் கருதத்தக்கது என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். *பேசறான், சொல்றான், கேக்கறான்* முதலான நிகழ்வினைகள் தமிழகத்தில் நடுவண் மற்றும் வடமாவட்டங்களில் நிகழும் வட்டார வழக்காவும், அதே சமயத்தில் தமிழகம் முழுவதும் நிகழும் பொது வழக்காகவும் அமைவதைத் தமிழில் உள்ள படைப்பிலக்கியங்கள், குறிப்பாக வட்டார இலக்கியங்கள் மூலம் அறியலாம்.

*23.3.2.* பொது வழக்கில் காணப்படும் நிகழ்கால வினைகளின் தோற்றம் சிந்திக்கத்தக்கதாகும். *பேசறான், கேக்கறான்* முதலான பொதுவழக்கு நிகழ்வினைகளில் றகரமெய்யானது கால இடை நிலையாக உள்ளது. செவ்வியல் வழக்கில் காணப்படும் நிகழ் வினைகளில் *-கிற்-* என்பது காலவிகுதியாகக் கருதப்படுகிறது. எ-டு. பேசுகிறான், கேட்கிறான். இந்த விகுதியின் எச்சமாகப் பொது வழக்கில் காணப்படும் நிகழ்வினைகளில் உள்ள காலவிகுதியைக் கருதமுடியவில்லை. மாறாகப் *பேசறான், கேக்கறான்,* முதலான பொதுவழக்கு நிகழ்வினைகளைப் *பேசுதான், கேக்குதான்* முதலான வற்றின் திரிபுகளாகக் கொண்டால் முந்தியவற்றில் காணப்படும் நிகழ்விகுதியாகிய றகரமெய்யைப் பிந்தியவற்றில் காணப்படும் நிகழ்விகுதியாகிய தகரமெய்யின் திரிபாகத் துணியலாம். தகர விகுதியமைந்த நிகழ்வினைகள் நெல்லை வழக்கில் நிகழ்வதைப் புதுமைப்பித்தன் (1977), ராஜநாராயணன் (1988), வண்ணநிலவன் (1979), வண்ணதாசன் (1976) முதலியவர்களின் படைப்புக்களில்

காணலாம். வலிமிகு வினையடியாகத் தோன்றிய _*கேட்டான்_ (< கேள்த்தான் = < *கேளுத்தான்) போன்ற நிகழ்வினைகள் அமைப்பியல் காரணங்களால் நெல்லை - குமரி வழக்கில் இடம்பெறவில்லை. எனவேதான் _கேக்குதோம்_ (கொ.மா. கோதண்டம் 1991:44) என்பது நெல்லை-குமரி வழக்கிலும் _அறுக்குதி_ (பக்.73), _சிரிக்கிதி_ (பக்.17), _படிக்கிதி_ (பக்.10), ஆகியவை ஹெப்சிபா ஜேசுதாசின் (1964) _புத்தம் வீடு_ என்ற புதினத்திலும், _பாக்குதேன்_ (பக்.298), _கொடுக்குதான்_ (பக்.271) ஆகியவை நீல பத்மநாபனின் (1968) _தலைமுறைகள்_ என்ற புதினத்திலும் _நிக்கதிய_ (பக்.189), _நிக்கிதிய_ (பக்.192) ஆகியவை அபிமானி (1977) என்பவரின் _சூடு_ என்ற சிறுகதையிலும் மாற்றுவழக்காகக் காணப்படுகின்றன. _புத்தம் வீடு_, _தலைமுறைகள்_ இரண்டும் குமரி வழக்கை முதன்மைப்படுத்தும் படைப்புகள் என்பது கருதத்தக்கதாகும். _கேக்குதோம்_ என்ற வல்வினையமைப்பில் _கேக்கு_ (< கேட்கு) என்பது _கேள்/கேளு_ என்பதன் மாற்றுருபாகும். இது ஏனைய வல்வனைகளுக்கும் பொருந்தும்.

23.3.3. பொது வழக்கில் காணப்படும். _ஆடுது, ஓடுது, வருது_ முதலான ஒன்றன்பால் நிகழ்வினை வழக்குகள் நெல்லை வழக்கில் காணப்படும் _ஆடுதான், ஓடுதான், வருதான்_ முதலானவற்றில் காணப்படும் வினைத்திரிபு மரபை அடிப்படையாகக் கொண்டவையாகும். குமரி வழக்கில் _அடிக்கு, குடிக்கு, நடக்கு, இருக்கு_ முதலானவை ஒன்றன்பால் நிகழ்வினைகளாகும். இந்த வினைகள் பொது வழக்கிலும் நெல்லை வழக்கிலும் காணப்படும் _அடிக்குது, குடிக்குது, நடக்குது, இருக்குது_ முதலான ஒன்றன்பால் நிகழ்வினைகளில் வினைப்பகுதிகளாக அமைகின்றன. இதனின்றும் பொதுவழக்கின் தோற்றத்துக்கு வட்டார வழக்குகளின் பங்களிப்பு தெளிவாகிறது.

23.3.4. பொதுவழக்கில் ஒரு பிரயோகம் இருக்கும்போது வட்டாரவழக்குப் பிரயோகமும் இடம் பெற்று இரண்டுமே பொது வழக்கில் இயல்பாக நிகழ்வதற்கு வாய்ப்பு உண்டு. _இருக்குது, இருக்கறான்_ முதலானவை பொதுவழக்குப் பிரயோகங்களாகும். _இருக்கு, இருக்கான்_ முதலானவை குமரி வழக்கினவாகும். இரு என்ற வினையடியாக அமைந்த குமரி ஒன்றன்பால் நிகழ்வினைகள் பொதுவழக்கிலும் இடம் பெற்றதால் பிந்தியதில் இருவகைப் பிரயோகங்களும் பயின்று வழங்குவதைக் காணலாம். ஒரு வட்டார மொழி வழக்கு பொதுவழக்கில் இடம்பெற்று உயர்நிலை பெறுவதை இந்த எடுத்துக்காட்டுகள் தெளிவுபடுத்தும்.

23.3.5. பொதுவழக்கில் காணப்படும் நிகழ்வினைகளாகிய *கேக்கறான், நடக்கறான்* முதலானவற்றின் பகுதிகளைப் பற்றி இடைப்பிறவரலாக ஒரு செய்தியைக் குறிப்பிட்டாக வேண்டும். இந்த வினைகள் *கேக்குதான், நடக்குதான்* முதலானவற்றின் திரிபு களாகக் கொள்ளத்தக்கவை என்று முன்னதாகக் குறிப்பிடப்பட்டது. இந்தக் குறிப்பானது *கேக்குதான், நடக்குதான்* ஆகியவற்றை, *கேக்கு/நடக்கு-த்+ஆன்* என்று பகுப்பாய்வு செய்வதற்கு வகை செய்கிறது. இந்த ஆய்வில் *கேக்கு* (<கேட்கு), *நடக்கு* ஆகியவற்றைப் பகுதி களாகக் கொள்வது தவிர்க்க முடியாத ஒன்றாகிறது. இத்தகைய வினைப்பகுதிகளைச் சங்க இலக்கியங்களில் காணப்படும் *கேட்குவம்* (புறம். 2259), (<கேட்கு-வ்+அம்), *கொடுக்குவர்* (புறம். 182.5), (<கொடுக்கு-வ்+அர்), *தூர்க்குவன்* (பத்துப். 9.272) (<தூர்க்கு-வ்+அன்) ஆகியவற்றில் காணலாம். இதனைக் கருத்தில் கொண்டு செவ்வியல் வழக்கில் காணப்படும் *கேட்கிறான், பார்க்கிறான்* ஆகியவற்றின் வினைப்பகுதிகளையும் *கேட்கு, பார்க்கு* என்று கொள்ள முடியும். இதேபோல் *செய்கிறான்* என்பதில் உள்ள வினைப்பகுதியையும் *செய்கு* என்று குறிப்பிட முடியும். *செய்குவர்* (ஐங். 215.6) என்பதன் வினைப்பகுதியாகச் *செய்கு* என்பதைத்தான் சுட்ட முடியும் என்பதையும் இங்குக் கருத்தில் கொள்ள வேண்டும். இத்தகைய வினைப்பகுதிகள் தமிழில் இறந்தகால வினைகளுக்கு விரிவுபடுத்தப்படவில்லை. இதற்குக் காரணம் கிளைமொழிக் கட்டுப்பாடுகள் (Dialect Constraints) என்று தோன்றுகிறது. இந்தப் பின்னணியைக் கருத்தில் கொண்டே பொதுவழக்கில் காணப்படும் *கேக்கறான், நடக்கறான், இருக்கறான்* ஆகியவை *கேக்குதான், நடக்குதான், இருக்குதான்* ஆகியவற்றின் திரிபாக இங்கு கருதப் படுகின்றன. ஆனால் *பாடறான்* என்பதை, எடுத்துக்காட்டாக *பாடுகிறான்* (< *பாடுகுதான்) என்பதன் திரிபாகக் கருத முடியாது. காரணம் *பாடுதான்* என்ற வினை இன்றும் நெல்லை வழக்கில் காணப்படுவதேயாகும். *பாடுகிறான்* என்பதைவிட *பாடுதான்* என்பதிலிருந்து *பாடறான்* என்பதை வருவிப்பது எளிமையாக மட்டுமல்ல, இயற்கையாகவும் உள்ளது.

### 23.4 வட்டார வழக்கு

23.4.1. பொது வழக்கு பல வட்டாரங்களின் மீது படர்ந்து செல்வது. ஆனால் வட்டார வழக்கு என்பது ஒரு குறிபிட்ட நிலப் பகுதியில் மட்டுமே இயல்பான வழக்காகக் காணப்படுவது. இதன் சிதறல் அடுத்துள்ள வேறொரு வட்டார வழக்குக்கு உரிய நிலப்பகுதியிலும் காணப்படும். எடுத்துக்காட்டாக, *பேசுதான்* என்பது நெல்லை வழக்காகவும் *பேசுகான்* என்பது குமரி

வழக்காகவும் போற்றப்பட்டாலும் முன்னதன் வீச்சினை நாஞ்சில் பகுதியிலும் காணலாம். ஆனால் *கேக்கான், குடிக்கான்* போன்ற வலிமிகு வினையடியாகத் தோன்றிய நிகழ்வினைகள் நெல்லை, குமரி இருவட்டாரங்களுக்கும் பொதுவாகக் காணப்படுகின்றன. ஏனெனில் அமைப்பியல் சிக்கல் காரணமாகக் *கேக்குதான், குடிக்குதான்* முதலான வினைகளின் நிகழ்ச்சி கட்டுப்படுத்தப்பட்டு விட்டது. பழந்தமிழிலும் பக்தி இலக்கியத்திலும் காணப்படும் *அளித்தி* (பதி. 79.3), *இறத்தி* (புறம். 8.7), *ஒளித்தி* (புறம். 8.7), *கிடத்தி* (புறம். 272.5), *பணித்தி* (திருவா. திருச். 10), *இரத்திர்* (நற். 71.3) ஆகிய வினைகள் *அளிக்குதி, இறக்குதி, ஒளிக்குதி, கிடக்குதி, பணிக்குதி, இரக்குதிர்* என்று அமையவில்லை. இதனை விரிவாக ஆராய்வதற்கு இங்கு வாய்ப்பில்லையாதலால் இது தனி ஆய்வுக்கு விடப்படுகிறது. *பேசுதான், பேசுகான்* போல இருவகை வழக்குகள் ஒரு வட்டாரத்தில் மயங்குமாயின் அந்த வட்டாரத்தைக் கிளைமொழி வளாகம் (Dialect Area) என்று குறிப்பிடலாம். கிளைமொழி வளாகத்தில் நிகழும் இருவகை வழக்குகளுள் ஒன்று அந்த வளாகம் அமைந்த வட்டாரத்துக்கே உரியதாகும். மயங்கும் வழக்குகளைத் தவிர்த்து, நெல்லை மற்றும் குமரி வட்டாரத்தில் நிகழும் நிகழ் வினைகள் கீழே தொகுத்தளிக்கப்படுகின்றன.

### 23. நெல்லை வழக்கு

| செவ்வியல் வழக்கு | பொது வழக்கு | நெல்லை வழக்கு |
|---|---|---|
| 1.1 அலைகிறேன் | அலயறேன் | அலையுதேன் (ரா.நா. 1976:132) |
| 1.2 சொல்கிறேன் | சொல்றேன் | சொல்லுதேன் (வ.நி. 1996 ஆ:14) |
| 1.3 திரிகிறாள் | திரியறாள் | திரியிதாள் (கொ.மா.கோ. 1991:78) |
| 1.4 நடத்துகிறாய் | நடத்தறெ | நடத்துத (வ.நி. 1996 அ:4) |
| 1.5 பாடுகிறான் | பாடறான் | பாடுதான் (கொ.மா.கோ. 1991:30) |
| 1.6 பேசுகிறாள் | பேசறாள் | பேசுதா (வ.நி. 1996 அ:5) |
| 1.7 பேசுகிறீர்கள் | பேசறீங்கள் | பேசுதீய (வ.நி. 1996 அ:4) |
| 1.8 வருகிறோம் | வர்றோம் | வருதோம் (பு.பி. 1977:86) |
| 2.1 சீவுகிற | சீவற | சீவுத (வ.நி. 1996 அ:5) |
| 2.2 சொல்கிற | சொல்ற | சொல்லுத (வ.நி. 1996 இ:72) |
| 2.3 தூங்குகிற | தூங்கற | தூங்குத (வ.நி. 1996 ஆ:14) |
| 2.4 பேசுகிற | பேசற | பேசுத (வ.நி. 1996 ஆ:4) |
| 2.5 போடுகிற | போடற | போடுத (வ.நி. 1996 இ:73) |
| 2.6 வாழ்கிற | வாழற | வாழுத (கொ.மா.கோ. 1991:54) |
| 3.1 வாங்குகிறவன் | வாங்கறவன் | வாங்குதவன் (பு.பி. 1977:89) |

| | | |
|---|---|---|
| 3.2 ஓட்டுவது | ஓட்றது | ஓட்டுதது (வ.நி. 1996இ:79) |
| 3.3 கூறுவது | கூர்றது | கூறுதது (வ.நி. 1979:113) |
| 3.4 சொல்வது | சொல்றது | சொல்லுதது (வ.நி. 1971இ:79) |
| 3.5 பண்ணுவது | பண்றது | பண்ணுதது (வ.நி. 1996 இ:91) |
| 3.6 வாங்குவது | வாங்கறது | வாங்குதது (பு.பி. 1977:86) |

24. குமரி வழக்கு

| செவ்வியல் வழக்கு | பொது வழக்கு | நாஞ்சில் வழக்கு |
|---|---|---|
| 1.1 கொல்கிறான் | கொல்றான் | கொல்லுகான் (நா.நா. 1977:314) |
| 1.2 சொல்கிறீர் | (சொல்றீர்) | சொல்லுகீர் (நா.நா. 1977:66) |
| 1.3 சொல்கிறீர்கள் | சொல்றீங்கள் | சொல்லுகியோ (நா.நா. 1977:348) |
| 1.4 சொல்கிறீர்கள் | சொல்றீங்கள் | சொல்லுகேள் (நா.நா. 1977:233) |
| 1.5 சொல்கிறேன் | சொல்றேன் | சொல்லுகேன் (நா.நா. 1977:14) |
| 1.6 பேசுகிறாய் | பேசறெ | பேசுகே (நா.நா. 1977:47) |
| 2.1 அழுகிறது | அழு(வு)து | அழுகு (நா.நா. 1977:351) |
| 2.2 காய்கிறது | காயுது | காயி (*காய்கு) (நா.நா. 1977:265) |
| 2.3 தெரிகிறது | தெரியுது | தெரியி (<தெரிகு) (நா.நா. 1977:22) |
| 2.4 மூடுகிறது | மூடுது | மூடுகு (நா.நா. 1977:78) |
| 2.5 கேட்கிறது | கேட்குது | கேக்கு (நா.நா. 1977:303) |
| 2.6 நடக்கிறது | நடக்குது | நடக்கு (நா.நா. 1977:64) |
| 3.1 சொல்கிற | சொல்ற | சொல்லுக (நா.நா. 1977:156) |
| 3.2 பேசுகிற | பேசற | பேசுக (நா.நா. 1977:352) |
| 3.3 கிடக்கிற | கெடக்கற | கெடக்க (ஐசக். 1975:107) |
| 3.4 படிக்கிற | படிக்கற | படிக்க (நீல. 1968:23) |
| 4.1 எழுதுவது | எழுதறது | எழுதுகது (நா.நா. 1977:233) |
| 4.2 சொல்வது | சொல்றது | சொல்லுகது (நா.நா. 1977:54) |
| 4.3 கேட்பது | கேக்கறது | கேக்கது (நா.நா. 1977:63) |
| 4.4 நடப்பது | நடக்கறது | நடக்கது (நா.நா. 1977:140) |

23.4.2 குறிப்பிட்ட வட்டாரத்துக்கே உரிய குறிப்பிட்ட மொழி வழக்குகள் அந்த வட்டாரத்திலேயே குறிப்பிட்ட பகுதிகளில் குறிப்பிட்ட போக்கில் திரிந்தமைய நேர்ந்தால் அத்தகைய திரிபுகள் சார்புநிலைக் கிளைமொழி வேறுபாடுகள் எனக் கருதப்படும் என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டது. குமரிப் பகுதியில் இத்தகைய வேறுபாடுகள் காணப்படுவது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். *ஆடுகு, வருகு* என்பவை *ஆடுவு, வருவு* எனவும் *தாறுகு, தெரிகு* என்பவை *தாறு, தெரியு* எனவும் *சிரிக்கது, நடக்கது* என்பவை *சிரிக்யது, நடக்யது* எனவும் திரிந்தமையும் போக்கினை ஐசக் அருமை ராஜன் (1975), நீல பத்மநாபன் (1968), ஹெப்சிபா

ஜேசுதாசன் (1964) ஆகியோரின் இலக்கியப் படைப்புக்களிலிருந்து அறியமுடிகிறது. இந்தக் கட்டுரையில் இத்தகைய திரிபுகள் பற்றிப் பேச வாய்ப்பில்லை.

23.4.3 வட்டார வழக்கிலிருந்து பிரயோகங்கள் பொது வழக்கில் இடம்பெறுவதுபோல் (எ-டு. இருக்கு, இருக்கான், இருக்காள் முதலியன), பொதுவழக்கிலிருந்தும் பிரயோகங்கள் வட்டார வழக்கில் இடம்பெறுவது உண்டு. *வருதான், தருதான்* ஆகியவை நெல்லை வட்டாரத்துக்கும் *வருகான், தருகான்* ஆகியவை குமரி வட்டாரத்துக்கும் உரிய வழக்குகளாயினும் இந்த வட்டாரங்களில் இவற்றின் பயன்பாடு அருகியே காணப்படு கின்றது. பொதுவழக்கில் நிகழும் *வர்ரான், தர்ரான்* ஆகிய வழக்குகளே வாரான், தாரான் எனத் திரிந்தும் திரியாமலும் நெல்லை குமரி வட்டாரங்களில் நிகழும் போக்கினை ராஜ நாராயணன், வண்ணநிலவன், கொ.மா. கோதண்டம், நாஞ்சில் நாடன், ஐசக் அருமைராஜன், நீல. பத்மநாபன், ஹெப்சிபா ஜேசுதாசன் முதலானவர்களின் இலக்கியப் படைப்புகளின் மூலம் அறிய முடிகின்றது.

## 23.5 இலங்கைத் தமிழ்

23.5.1. இலங்கை வழக்கைப் பற்றிய குறிப்பு இல்லாமல் வட்டார வழக்கு பற்றிய சிந்தனை முழுமை பெற்றதாகக் கருத முடியாது. இலங்கைத் தமிழைப் பொறுத்த வரை முஸ்லீம் வழக்கு, மட்டக்களப்பு வழக்கு, யாழ்ப்பாண வழக்கு என்று மூன்று வகையான வழக்குகள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இலங்கை வழக்கில் அமைந்த இலக்கியப் படைப்புக்களின் துணை கொண்டு இலங்கையில் காணப்படும் வட்டார வழக்குகளை எது எந்தப் பகுதிக்கு உரியது என்று இனங்காண முடியவில்லை. இவ்வாறு இனங்காண முடியாமைக்கு இந்தக் கட்டுரையாளர் இந்தியத் தெலுங்குத் தமிழராக இருப்பதும் ஒரு காரணமாக இருக்கலாம். இலங்கையில் காணப்படும் வட்டாரத் தமிழ் வழக்குகளைப் பற்றி இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களும், அங்குள்ள தமிழ் மொழியியல் அறிஞர்களும் தான் நமக்குக் கூறவேண்டும். ஆயினும் இந்தியப் பேச்சுத் தமிழிலிருந்து இலங்கைப் பேச்சுத்தமிழ் குறிப்பிடத்தக்க வகையில் மாறுபடுவதை இலங்கை வழக்கினை முதன்மைப்படுத்தி எழுதப்பட்டுள்ள இலங்கை இலக்கியப் படைப்புகள் நன்கு தெளிவுபடுத்துகின்றன. இலங்கை இனக்கலவரத்தின் விளைவாக இந்தியாவில் குடியேறிய பிறகு எழுதப்பட்டு வரும் இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின்

படைப்புகளில் இந்தியப் பேச்சுத் தமிழின் தாக்கம் மிகுதியாக உள்ளதை இங்கு மிகுந்த வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியுள்ளது. அவர்கள் எங்கிருந்தாலும் அவர்களின் இலக்கியப் படைப்புகளில் அவர்கள் மண்ணின் மணம் கமழவேண்டும். இந்த மணம் அவர்கள் மொழியையும் உள்ளடக்கியதாகும்.

22.5.2 இப்பொழுது இலங்கை வழக்கைச் சுருக்கமாக இங்கே ஆராயலாம். இலங்கை வழக்கு பற்றிய சிந்தனை சில வினை யமைப்புகளைப் பற்றியதாகும். இலங்கைத் தமிழில் காணப்படும் தன்மை, முன்னிலை வினைகளில் அன்சாரியையை அடுத்து *ஆன், ஆங்கள், இ/ஈ, ஈர், ஈங்கள்* ஆகிய விகுதிகள் நிகழுகின்றன. இவற்றுள் முதல் இரண்டும் தன்மை ஒருமை (உயர்வுப்) பன்மை விகுதிகளும் ஏனையவை முன்னிலை ஒருமை, (உயர்வுப்) பன்மை விகுதிகளும் ஆகும். இவை எதிர்கால வினைகளில் காணப்பட வில்லை. தன்மை, முன்னிலை இறந்தகால வினைகளில் பெரு வழக்காகக் காணப்படுகின்றன. நிகழ்கால வினைகளில் இவற்றின் நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட நம்முடைய தரவுகள் போது மானவையாக இல்லை. பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

| 26. செவ்வியல் வழக்கு | இலங்கை வழக்கு |
|---|---|
| 1.1 கண்டேன் | கண்டனான் (செ.யோ. 1993:175) |
| 1.2 கேட்டேன் | கேட்டனான் (செ.யோ. 1993:104) |
| 1.3 தின்றேன் | திண்டனான் (செ.யோ. 1993:120) |
| 1.4 வந்தேன் | வந்தனான் (செ.யோ. 1993:192) |
| 2.0 போனோம் | போனனாங்கள் (மலர். 1994:43) |
| 3.1 அழுதாய் | அழுதனி (செ.யோ. 1993:191) |
| 3.2 கேட்டாய் | கேட்டனீ (சுபா. 1994:28) |
| 3.3 படுத்தாய் | படுத்தனீ (டொமினிக் 1978:25) |
| 3.4 வந்தாய் | வந்தனி (டொமினிக் 1962:73) |
| 3.5 விற்றாய் | வித்தனீ (சுபா 1994:28) |
| 4.1 கண்டீர் | கண்டனீர் (செ.யோ. 1993:281) |
| 4.2 கேட்டீர் | கேட்டனீர் (செ.யோ. 1993:105) |
| 4.3 பார்த்தீர் | பாத்தனீர் (செ.யோ. 1993:50) |
| 5.1 கட்டினீர்கள் | கட்டினனீங்க (செ.யோ. 1993:31) |
| 5.2 பார்த்தீர்கள் | பார்த்தனீங்கள் (செ.யோ. 1993:49) |
| 5.3 முடித்தீர்கள் | முடிச்சனீங்க (செ.யோ. 1993:30) |
| 5.4 வந்தீர்கள் | வந்தனீங்க (டொமினிக் 1962:130) |

இந்த எடுத்துக்காட்டுகளில் உட்பிரிவு (3)-இல் நிகழும் முன்னிலை ஒருமை வினைகள் செய்தனை என்னும் முன்னிலை ஒருமை வாய்பாட்டு வினைகளின் திரிபாகும்.

23.5.3. குமரி வழக்கில் காணப்படும் *இருக்கேன்* (பக்.46), *சொல்லுகேன்* (பக்.223), *நிக்கேன்* (பக்.14), *இருக்கியோ* (பக்.8), *கேக்கியோ* (பக்.22), *பேசுகியோ* (பக்.14) முதலான முன்னிலை உயர்வு வினைகள் நாஞ்சில் நாடனின் (1977) *தலைகீழ் விகிதங்கள்* என்ற புதினத்திலும் *குடிக்கியள்* (பக்.67), *கேக்கியள்* (பக்24), *சொல்லுகியள்* (பக்.97) முதலான முன்னிலை உயர்வு நிகழ்வினைகள் ஐசக் அருமைராஜனின் (1975) *கீறல்கள்* என்ற புதினத்திலும் பதிவாகி யுள்ளன. இவ்வினைகள் அனைத்தும் **செய்கியள்* வாய்பாட்டு வினைகளின் திரிபுகளாகும். *செய்கியள்* என்ற நிகழ் வினைக்கு நேரான இறந்தகால, எதிர்கால உயர்வு வினைகள் முறையே *செய்தியள், செய்வியள்* வாய்பாட்டு வினைகளின் கீழ் அமையும். இந்த மூன்று வாய்ப்பாட்டு வினைகளும் முறையே *செய்கிறிங்கள், செய்தி(றி)ங்கள், செய்விங்கள்* என்ற வாய்பாட்டு வினைகளி னின்றும் தோன்றி அமைந்தவையாகும். இலங்கைத் தமிழில் *செய்தியள், செய்கிறியள், செய்வியள்* ஆகிய வாய்பாட்டு வினைகளின் நிகழ்ச்சியை செ. யோகநாதனின் (1993) *நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே* என்ற புதினத்தில் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களை இந்த வகையில் கருத்தில் கொள்க.

| 26. | செவ்வியல் வழக்கு | பொது வழக்கு | இலங்கை வழக்கு |
|---|---|---|---|
| 1.1 | கேட்டீர்கள் | கேட்டிங்கள் | கேட்டியள் (பக்.376) |
| 1.2 | சொன்னீர்கள் | சொன்னிங்கள் | சொன்னியள் (பக்.181) |
| 2.1 | இருக்கிறீர்கள் | இருக்கிறிங்கள் | இருக்கிறியள் (பக்.21) |
| 2.2 | சொல்கிறீர்கள் | சொல்றிங்கள் | சொல்லுறியள் (பக்.50) |
| 2.3 | நினைக்கிறீர்கள் | நெனக்கிறிங்கள் | நினைக்கிறியள் (பக்.38) |
| 3.1 | அடிப்பீர்கள் | அடிப்பிங்கள் | அடிப்பியள் (பக்.156) |
| 3.2 | உடுத்துவீர்கள் | உடுத்துவிங்கள் | உடுத்துவியள் (பக்.214) |
| 3.3 | செய்வீர்கள் | செய்விங்கள் | செய்வியள் (பக்.194) |
| 3.4 | தருவீர்கள் | தருவிங்கள் | தருவியள் (பக்.335) |
| 3.5 | வெட்டுவீர்கள் | வெட்டுவிங்கள் | வெட்டுவியள் (பக்.214) |

மேலே பொது வழக்கிலும் இலங்கை வழக்கிலும் காணப்படும் வினைகளைச் செவ்வியல் வழக்கில் நிகழும் வினைகளிலிருந்து வருவிக்க முடியாது. மாறாக, இலங்கை வழக்கில் காணப்படும் வினைகளைப் பொது வழக்கின் திரிபுகளாகக் கொள்வதில் இடர்ப் பாடு ஏதுமில்லை. இந்தத் திரிபைப் பின்வருமாறு விளக்கலாம்.

(27) செய்திங்கள் > *செய்திகள் > செய்தியள்

*செய்திங்கள்* என்பதில் உள்ள மெல்லொலி கெட்ட பிறகு அதனை அடுத்து நிகழும் ககரமெய் வன்மையிழந்து உரசொலியாக மாறுகின்றது. *செய்திகள்* என்பதில் இகரத்தினையடுத்து நிகழும் ககர உரசொலி யகர மெய்யாகத் திரிகின்றது. இகரமும் யகரமும் இன ஒலிகளாதலால் இகரம் தன்னையடுத்து நிகழும் வலிமை குன்றிய ககர உரசொலியைத் தன்னுடைய இன ஒலியாகிய யகர ஒலியாக மாற்றி விடுகின்றது. இது மொழியியல் அடிப்படையிலான விளக்கமாகும். *செய்தியள், செய்கிறியள், செய்கியள், செய்வியள்* ஆகிய வாய்பாட்டு வினைகளில் நிகழும் *-இய-* என்பது *-ஏ-* எனத் திரிவதன்மூலம் *செய்தேள், செய்கிறேள், செய்கேள், செய்வேள்* ஆகிய வாய்பாட்டு வினைகள் இந்தியப் பேச்சுத் தமிழில் இடம்பெறுகின்றன.

23.5.4. இலங்கைத் தமிழில் குறிப்பிடத்தக்க இரண்டாவது அம்சம் ஒருசார் வினையடிகளின் மீதமைந்த உடன்பாட்டு வினைகளிலும், செய்யமாட்டு* என்ற வாய்பாட்டில் அமைந்த பகுதிகளைக் கொண்டு அமைந்த எதிர்மறை வினைகளிலும் *இன்* சாரியை நிகழ்தலும், அதனையடுத்து *ஐ, அம்* ஆகியவை பலர்பால் விகுதிகளாக நிகழ்தலும் குறிப்பிடத்தக்கவையாகும். பின்வரும் எடுத்துக்காட்டுகள் இதனைத் தெளிவுபடுத்தும். தெளிவுக்காக வேண்டி இலங்கை வழக்கையடுத்து அடைப்புக்குள் செவ்வியல் வழக்கும் தரப்பட்டுள்ளது.

28. (1) உடன்பாட்டு வினைகள் (பலர்பால் விகுதியாக ஐ)

(1) ஆரோ வருகினை (=வருகிறார்கள்) (செ.யோ. 1993:413)

(2) உம்மை விசர் (=பைத்தியம்) என்று ஆர் சொல்லுகினை (=சொல்கிறார்கள்) (செ.யோ. 1993:337)

(3) ஊரவை (=ஊரார்) அதைக்கேட்டு நோண்டுகினை (=நோண்டுகிறார்கள்) (செ.யோ. 1993:268)

(4) வீட்டிலை கலியாணம் பேசுகினை (=பேசுகிறார்கள்) (செ.யோ. 1993:294)

(5) எனக்கு ஆர் இருக்கினை (=இருக்கிறார்கள்) (செ.யோ. 1993:153)

(6) ஆம்பிளையள் (=ஆண்கள்) ஏதவேன் சொல்லுவினையோ (சொல்வார்களோ) (செ.யோ. 1993:197)

(7) புதுக்கூத்துப் படிக்கிறதாய் பறைஞ்சினை (=சொன்னார்(கள்)) (செ.யோ. 1993:110)

---

* *செய்யமாட்டு-* என்ற அமைப்பில் காணப்படும் *மாட்டு* என்பது எதிர்மறைப் பொருண்மையதன்று (Kothandaraman, R. 1975, Subrahmanyam, P.S. 2004: 129) இது கன்னடத்தில் நிகழும் *மாடு* (= செய்) என்ற வினையின் தமிழ் வடிவமாகும்.

28 (2) உடன்பாட்டு வினைகள் (பலர்பால் விகுதியாக அம்)

(1) இங்கையுள்ள கங்காணிமார்தான் உள்ளவையளையும் (=உள்ளவர்களையும்) இல்லாதவையளையும் (=இல்லாதவர் களையும்) ஒரொரு மாதிரியா நடத்தினம் (=நடத்தினார்கள்) (டொமினிக் 1962:57)

(2) கொழும்பாளவை (=கொழும்பு ஆட்கள்) வந்ததும் வந்தினம் (=வந்தாலும் வந்தார்கள்) காய் பிஞ்சுவிலை எப்படி எக்கச்சக்கமாக ஏறிக்கிடக்குது (டொமினிக் 1962:39)

(3) அதை உன்ரை மனுசியும் தம்பிப் பொடியனும் வெளியிலை எடுத்தினம் (=எடுத்தார்கள்) (டொமினிக் 1962:75)

(4) அவையள் (=அவர்கள்) ஆரைச் சொல்லுகினம் (=சொல்கிறார்கள்) (செ.யோ. 1993:295)

(5) தானாடாவிட்டாலும் தன் சதையாடும் எண்டு சும்மாவா சொல்லுகினம் (=சொல்கிறார்கள்) (டொமினிக் 1962:95)

(6) ஆரோ உன்னைத் தேடுகினம் (=தேடுகிறார்கள்) (டொமினிக் 1962:129)

(7) சோமாலையைத்தவிர ஆர் இருக்கினம் (=இருக்கிறார்கள்) (டொமினிக், 1962:91)

(8) கனபேர் வருவினம் (=வருவார்கள்) (மலர். 1994:43)

(9) எல்லோரும் பேந்து என்னைத் தானே குற்றஞ்சொல்லுவினம் (=சொல்வார்கள்) (டொமினிக் 1962:79)

29 (1) எதிர்மறை வினைகள் (பலர்பால் விகுதியாக ஐ)

(1) ஆருமே காணமாட்டினை (=காணமாட்டார்கள்) எண்டு சொல்லிவிடு (செ.யோ. 1993:292)

(2) ஆரும் பார்க்க மாட்டினை (=பார்க்கமாட்டார்கள்) (செ.யோ. 1993:60)

(3) அவையள் (=அவர்கள்) இதைப்பற்றிப் பேசமாட்டினை (=பேச மாட்டர்கள்) (செ.யோ. 1993:295)

(4) உன்னைப்போல் ஆரும் இருக்கமாட்டினை (=இருக்க மாட்டார்கள்) (செ.யோ. 1993:509)

29 (2) செத்தவை (=செத்தவர்கள்) திரும்பிவரமாட்டினம் (=வரமாட்டார்கள்) (மலர், 1994:43)

எதிர்மறை வினையில் அம் பலர்பால் விகுதியாக நிகழும் எடுத்துக் காட்டாக 29(2)-இல் உள்ள ஒன்றுதான் நம்முடைய தரவுத் தொகுப்பில் காணப்படுகிறது. யோகநாதனில் அம் விகுதிபெற்ற *பறையினம்* என்ற ஓர் பலர்பால் வினை காணப்படுகிறது. இது இறந்தகால வினையா நிகழ்கால வினையா என்பது விளங்கவில்லை. இந்த வினை நிகழும் உரையாடற்சூழல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

(30) "அவர் இந்த ஊரைவிட்டு எங்கையோ போயிட்டார் அக்காள்..."

"ஆர் கனகுவோ?" அதிர்ச்சியோடு கேட்டாள் சின்னப் பிள்ளை.

"ஓம்."

"ஆரு சொன்னது..."

"அயலிலை பறையினம்..."

இந்த உரையாடற் சூழலில் *பறையினம்* என்பது நிகழ்வினையாயின் "சொல்கிறார்கள்" என்று பொருள்பட்டு **பறைகினம்* என்பதன் திரிபாக அதைக் கருதலாம். இறந்தகால வினையாயின் அதில் நிகழும்-இன்-என்பது இறந்தகால விகுதியாகக் கருதப்பட வேண்டும். ஆனால் பறை என்னும் வினையடி தமிழில்-இன்- இறந்த கால விகுதியை ஏற்பதற்கு வாய்ப்பு இருப்பதாகத் தோன்றவில்லை.

23.5.5. மேல் எடுத்துக்காட்டுகளில் நிகழும் பலர்பால் வினைகளில் இன் சாரியையை அடுத்து. ஐ, அம் ஆகியவை முற்று விகுதிகளாக இடம்பெற்றுள்ளதைக் கருதுகையில் இலங்கைத் தமிழில் இரண்டு வகைப் பேச்சு வழக்குகள் இருக்கும் போல் தோன்றுகிறது. ஆனால் இந்தப் பேச்சு வழக்குகள் வட்டார வழக்குகளின் பிரதிபலிப்பா என்பதைக் கள ஆய்வின் மூலம்தான் கண்டறியமுடியும்.

23.5.6 இலங்கைத் தமிழில் மூன்றாவதாகக் குறிப்பிடத்தக்க அம்சம் வினையாலணையும் பெயர்கள் என்று நம்பப்படும் வினைகள் வினைமுற்றுக்களாக நிகழ்வதாகும். வினையாலணையும் பெயர் என்பது வினைமுற்றுக்களுள் ஒரு வகையே என்று முன்பே நாம் குறிப்பிட்டோம். வினையாலணையும் பெயர்கள் என்று சுட்டப்படும் வினைகள் வினைமுற்றுக்களாக நிகழ்வதாகும். வினை யாலணையும் பெயர்கள் என்று கருதப்படுபவை பழந்தமிழில் வினைமுற்றுக்களாகவும் அமைந்து பயனிலையாகச் செயல்படு கின்றன. பின்வரும் எடுத்துக்காட்டு இதனைத் தெளிவுபடுத்தும்.

(31) ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப

*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்*
*படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்*
*இன்னா தம்மஇவ் வுலகம்*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே* (புறம். 194)

இந்தப் பாடலில் நிகழும் *படைத்தோன்* என்பது *படைத்தான்* என்பதற்கு நிகராகவும் *உணர்ந்தோர்* என்பது *உணர்ந்தவர்* என்பதற்கு நிகராகவும் காணப்படுகின்றன. வாக்கியச் சூழல் இந்தச் சமன்பாடுகளைக் கட்டுப்படுத்துவதால் *படைத்தோன், உணர்ந்தோர்* இரண்டுமே வினைமுற்றுக்கள் என்பதும் அவை அடிப்படையில் வினையாலணையும் பெயர்களே என்பதும் பெறப்படுகின்றன. இலங்கை வழக்கில் வினையாலணையும் பெயர்கள் வினைமுற்றுக் களுடன் மயங்கும் நிலைமிகுதியாகக் காணப்படுகின்றது. யோகநாதனில் (1993:141&142) புனையப்பட்டுள்ள ஓர் உரையாடற் பகுதி இதனைத் தெளிவுபடுத்துவதற்குக் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

(32) திடீரென்று விக்கலெடுத்தது கார்த்திகேசுவுக்கு விக்கியபடி தலையில் உள்ளங்கையினால் அழுத்தி அடித்தான்.
"தண்ணியைக் குடி..."
செம்பை எடுத்து அவனது கையில் கொடுத்தாள் பொன்னாச்சி.
"ஆரவோ நினைக்கினை போலை இருக்கு" என்றாள் தனக்குத் தானே அவள்.
கார்த்திகேசு சட்டென்று கேட்டான்: "கவுண்மெந்துக்காறன்கள் ஆராவது இங்கினை வந்திட்டுப் போனவங்களோ"
பொன்னாச்சியின் முகம் சிறுத்தது.
"வந்தவங்கள்..."
"என்ன கேட்டவங்கள்?"
"என்ரை காணியை ஏதோ பாதை போடுறதுக்காக ஒரு மாசத்துக்குள்ளை எடுக்கப் போறாங்களாம்..."
"நீ என்ன சொன்னனி?"
"முடியுமெண்டால் எடுத்துப்பாருங்க எண்டனான்"
"அதுக்கு என்ன சொன்னவங்கள்?"
"நீ உன்னாலை என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து பார். ஆனால் இந்தக் காணியை நாங்க எடுக்கிறது எடுக்கிறதுதான் எண்டு ஓர்மமாகச் சொன்னாங்கள்..."
"ஒருக்கால்தான் வந்தவங்களோ?"
"இஞ்சாறு தரம் வந்தவங்கள்..."

இந்த உரையாடற் பகுதியில் நிகழும் *போனவங்கள், வந்தவங்கள், கேட்டவங்கள், சொன்னவங்கள்* ஆகியவை முறையே *போனாங்கள், வந்தாங்கள், கேட்டாங்கள், சொன்னாங்கள்* ஆகிய வினை முற்றுக்களுக்கு நிகராகச் செயல்படுகின்றன. இலங்கைத் தமிழில் எந்த வாக்கிய அல்லது உரையாடற் சூழலில் வினைமுற்றுக்கள் நிகழும் இடத்தில் வினையாலணையும் பெயர்களாகிய வினை முற்றுகள் நிகழ்கின்றன என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

### 23.6. இனிச் செய்ய வேண்டியது

23.6.1. படைப்பிலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்படும் மொழி வழக்குகள் பற்றிய ஆய்வு ஒரு முன்னோட்ட ஆய்வாகவே (Pilot Survey) கருதப்படும். ஆனால் இத்தகைய ஆய்வை நாம் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. இந்த முன்னோட்ட ஆய்வுகளே ஆய்வாளன் அடுத்து மேற்கொள்ள வேண்டிய முனைப்பான கள ஆய்வுக்குத் தேவையான அடிப்படைகளை வகுத்துக் கொடுப்பனவாகும். தமிழில் வெளியாகியுள்ள வட்டார வழக்கு இலக்கியங்கள் இலக்கியவியல் பார்வையிலும் மொழியியல் பார்வையிலும் ஒப்பற்ற செல்வங்களாகும். இந்த இரு நோக்கிலும் வட்டார வழக்கு இலக்கியங்கள் முனைப்பான ஆய்வுக்கு இன்னும் உட்படுத்தப்படவில்லை என்பது வருந்ததக்க செய்தியாகும்.

23.6.2. படைப்பிலக்கியங்களில் வட்டார வழக்குகள் மிகுதியாக இடம்பெறும்போது அவை பேச்சு இனங்களின் (Speech Communities) யதார்த்த நிலையை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. இந்த யதார்த்த நிலை ஒரு சமுதாயத்தின் குறுக்கு வெட்டுத் தோற்றத்தினைப் புலப்படுத்துவதுடன் அந்தச் சமுதாயத்தின் பண்பாட்டுக் கூறாகிய அதன் பேச்சு வழக்கையும் வாசகனுக்கு அறிமுகப்படுத்துகிறது. இந்தப் பேச்சு வழக்கு இல்லையென்றால் வட்டார இலக்கியங்களாகிய நடப்பியல் இலக்கியங்களுக்கு வாழ்வு இல்லை. மொழியியல் மற்றும் இலக்கியவியல் ஆய்வாளர்களுக்கு வட்டார வழக்கு இலக்கியங்கள் சிறந்த வேட்டைக்களங்களாகும். ஆனால் இந்த உண்மையை நாம் இன்னும் உணரவில்லை என்றே தோன்றுகிறது. தமிழில் வெளியாகும் வர்த்தக நிலையிலான இலக்கிய இதழ்களின் பங்களிப்பானது வட்டார வழக்கு இலக்கியங்களைப் பொறுத்த வரை ஏமாற்றம் அளிப்பதாகவே உள்ளது. வட்டார வழக்கில் எழுத முற்படும் எழுத்தாளர்களை - அவர்கள் இந்தியத் தமிழர்

களாகட்டும், இலங்கைத் தமிழர்களாகட்டும்- குமுதம், கல்கி, ஆனந்தவிகடன் ஆகிய முன்னணி இதழ்கள் ஊக்குவிக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் படைப்புகள் இலக்கிய மதிப்பு வாய்ந்தவை மட்டுமல்ல; மொழியியல் முக்கியத்துவமும் உடையவையாகும். கல்கி மற்றும் தினமணி கதிரின் தொண்டு இந்த வகையில் பாராட்டத்தக்கதாக உள்ளது. தமிழில் வெளியாகும் முன்னணி இலக்கிய வார இதழ்கள் தமக்குள்ள வாய்ப்புகளையும் வசதிகளையும் வட்டார வழக்கு இலக்கியங்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்த முன்வரவேண்டும். பல ஆண்டுகளுக்கு முன் குமுதம் வார இதழில் வெளியான பவதாரிணி என்ற இலங்கை எழுத்தாளரின் இலங்கைத் தமிழில் அமைந்த *ஞானா* என்ற இலக்கியப் படைப்பை இலக்கியவியல் நோக்கிலும் மொழியியல் நோக்கிலும் இன்றும் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

❀ ❀ ❀

# 24. அக்கேடியம் - லத்தீன் - தமிழ் முகச்சாயல்

## *24.1 அக்கேடியம் – ஒரு குறிப்பு*

*24.1.1* வடமொழி, (Sanskrit), லத்தீனைப்போல் வழக்கற்றுப் போன பலமொழிகளுள் அக்கேடியம் (Akkadian), என்ற மொழியும் ஒன்றாகும் (Thomas A. Caldwell et.al. 1978). இந்த மொழியானது செமித்திய (Semitic), மொழிக் குடும்பத்தைச் சேர்ந்ததாகும். அராபியம் (Arabic), எபிரேயம் (Hebrew), அரமியம், (Aramaic), எதியோப்பியம் (Ethiopic) முதலான மொழிகளும் இந்த மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவை யாகும். அராபியம், எபிரேயம் ஆகிய மொழிகளின் வாக்கிய அமைப்பு பயனிலை + எழுவாய் + செயப்படுபொருள் என்ற முறையில் அமைந்ததாகும். ஆனால் அக்கேடியம் செமித்திய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்ததாயினும் அதன் வாக்கிய அமைப்பானது அராபியம், எபிரேயம் ஆகியவற்றின் வாக்கிய அமைப்பினின்றும் மாறுபட்டு, திராவிட மொழிகளில் உள்ளது போல் எழுவாய் + செயப்படு பொருள் + பயனிலை என்ற வாக்கிய வகையைக் கொண்டுள்ளது. அக்கேடிய மொழியில் காணப்படும் இந்த மாறுபட்ட வாக்கிய அமைப்பானது சுமேரிய மொழியின் தாக்கத்தால் நேர்ந்ததாகக் கருதப்படுகிறது.

*24.1.2* பண்டைய மெசபதோமியாவையும் அதன் வரலாறு, பொருளாதாரம், பண்பாடு, இலக்கியம், சமயம் ஆகியவற்றையும் அறிந்துகொள்ள அக்கேடிய மொழியில் அமைந்த எழுத்துச் சான்றுகளே நமக்குப் பெரிதும் துணை புரிகின்றன. இம்மொழியின் தடயங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேற்பட்ட கால வெளியில் பரவிக் கிடக்கின்றன. செமித்திய மொழிக் குடும்பத் திலேயே மிகப் பழமையானதாகிய அக்கேடிய மொழியைப் பற்றி அறிந்து கொள்வது தமிழில் சொல்லியற் பாங்கினை வகைப் பாட்டியல் (Typological) கண்ணோட்டத்தில் ஆராயப் பெரிதும் துணைபுரியும். இந்தக் கட்டத்தில் நாம் கருத்தில் கொள்ள வேண்டிய மிக முக்கியமான செய்தி ஒன்றும் உண்டு. திராவிட மொழிக் குடும்பமும், செமித்திய மொழிக் குடும்பமும் சில வகைப்பாட்டியல் ஒற்றுமைகளைக் கொண்டிருந்தாலும் இந்தக் குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் வெவ்வேறு வாக்கிய

அமைப்பினைக் கொண்டவையாகும். ஆகவே இந்த இரண்டு மொழிக் குடும்பங்களையும் பிறப்பு நிலையில் ஒரு சேரவைத்துப் போற்றுவதற்கில்லை.

## 24.2 அக்கேடியத்தில் சுமேரியத் தாக்கம்

கி.மு. 30ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து கி.பி முதல் நூற்றாண்டுவரை மெசபதோமியப் பகுதியில் அக்கேடிய மொழியானது வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. மிகப் பழமையான அக்கேடிய மொழிக் கல்வெட்டுக்களில் சுமேரிய மொழியின் தாக்கத்தை வெகுவாகக் காணமுடிகிறது. அக்கேடியர் களின் பண்பாட்டில் சுமேரியப் பண்பாட்டின் செல்வாக்கினை மிகுந்த அளவில் காணலாம். மெசபதோமியாவின் மிகப் பழமையான பண்பாட்டினை உருவாக்கிய பெருமை சுமேரியர் களையே சாரும். கி.மு. 3000 என்ற காலப் பகுதியில் சுமேரிய மொழியும் பண்பாடும் மிகச்சிறந்த நிலையில் இருந்தன. திக்ரிஸ் (Tigris) மற்றும் யூப்ரதெஸ் (Euphrates) நதிகளுக்கிடையில் அமைந்த பாபிலோனியப் பகுதியில் சுமேரியரின் மொழியும் பண்பாடும் மேலோங்கியிருந்தன. சுமேரியப் பகுதிக்குள் கி.மு.2600 வாக்கில் அக்கேடியர்கள் நாடோடிகளாக நுழைந்தனர். தமக்கென ஒரு சிறப்பான வாழ்க்கை முறையும் பண்பாடும் அற்ற அக்கேடியர்கள் சுமேரிய வாழ்க்கை நெறிகளையும் பண்பாட்டையும் படிப்படியாக ஏற்றுக் கொண்டனர். காலப்போக்கில் சுமேரியர்கள் அக்கேடியர் களுடன் ஒன்று கலந்து தங்கள் தனித்தன்மையை இழக்கத் தொடங்கினர். கி.மு. 1990-க்குப் பின்னர் சுமேரிய மொழி வழக்கற்றுப் போயிற்று. ஆயினும் அம்மொழியின் தாக்கம் அக்கேடிய மொழியில் மிக ஆழமாகக் காணப்படுவது குறிப்பிடத் தக்கதாகும். சுமேரியப் பண்பாட்டுச் சிறப்பே இதற்குக் காரண மாகும். சுமேரிய மொழியின் மறைவுக்குக் காரணமாக அமைந்த அக்கேடிய மொழியின் சொல்லமைப்பினைப் பற்றி இனி ஓரளவு இங்கே சிந்திக்கலாம்.

## 24.3 அக்கேடியச் சொல்லியல் (Akkadian Morphology)

24.3.1. செமித்திய மொழிக்குடும்பத்தில் அடிப்படைச் சொற் பொருண்மையை உணர்த்தும் வேர்ச்சொற்கள் இரண்டு, மூன்று அல்லது நான்கு மெய்யொலிகளுடன் ஓர் உயிரொலியைக் கொண்டதாய் அமைகின்றன. எல்லா வேர்ச் சொற்களிலும் உயிரொலி நிகழ்வதாகக் கொள்ள முடியாது. வேர்ச்சொற்களில் அமைந்த மெய்யொலிகளுக்கிடையில் உயிரொலிகளைச் சேர்த்தும், வேர்ச்சொற்களுடன் முன்னொட்டுக்களையும் (Prefixes),

பின்னொட்டுக்களையும் (Suffixes), சேர்த்தும் சொற்கள் படைத்துக் கொள்ளப்படுகின்றன. சொல்லாக்க முறையில் வேர்ச் சொற்களில் அமைந்த மெய்யொலிகளும், உயிரொலிகளும் கூட மாற்றங்களுக்கு உள்ளாகின்றன. ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம். *prus என்பது ஓர் அக்கேடிய வேர்ச் சொல். 'தனிப்படு, தீர்மானி' ஆகியவை இந்தச் வேர்ச்சொல்லின் அடிப்படைப் பொருண்மைகள். இந்த வேர்ச்சொல்லின் அடியாக அமைந்த பல்வேறு சொல் லமைப்புகள் கீழே ரோமன் எழுத்தில் குறிக்கப்பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| 1 (1) | purus | 'decide' |
| (2) | i-prus | 'he decided' |
| (3) | paris | 'he is decided' |
| (4) | iptaras | 'he has decided' |
| (5) | para:sum | ' to decide' |
| (6) | pa:risum | ' one who decides, deciding' |

இந்த அமைப்புகளிலும் இனி காட்டப்படும் அமைப்புகளிலும் : என்ற குறியீடு உயிர் நெடிலை உணர்த்தும்.

*24.3.2* அக்கேடிய மொழியில் வினைச் சொற்களும், பெயர்ச் சொற்களும் இனங்கண்டுகொள்ளக்கூடிய வகையில் அமைந்துள்ளன. பெரும்பாலான வினைவேர்ச்சொற்கள் மூன்று மெய்யொலி களையும், இரண்டாம் மெய்க்கும் மூன்றாம் மெய்க்கும் இடையில் ஓர் உயிர்க்குறிலையும் உடையனவாய் அமைந்துள்ளன. இவ்வாறு அமையும் உயிர்க் குறில்கள் அகரம், இகரம், உகரம் இவற்றுள் ஒன்றாக இருக்கும். பொதுவாக அகரமுதலிகளில் அக்கேடிய வினைச் சொற்கள் எதிர்வெச்சங்களாகவே (Infinitives) குறிக்கப்படு கின்றன. தமிழ் எடுத்துக்காட்டு ஒன்றின் மூலம் இதனைப் புலப்படுத்தலாம். அடி என்ற வினையின் எதிர்வெச்சம் அடிக்க என்பதாகும். அக்கேடிய வினைகள் அகரமுதலிகளில் அடி என்று குறிக்கப்படாமல் அடிக்க என்ற எதிர்வெச்ச வடிவிலேயே குறிக்கப் படுகின்றன. *ஷ்பத்* (shbat) என்பது ஓர் அக்கேடிய வினைவேர்ச் சொல். இதன் பொருள் 'பற்று, கைக்கொள்' என்பதாகும். இந்த வினையின் எதிர்வெச்ச வடிவம் *ஷபாதும்* (shaba:tum) என்பதாகும். எதிர்வெச்சங்கள் அக்கேடிய மொழியில் பெயர்நிலைக் கிளவிகளாகவும் நிகழவல்லவையாகும். இந்த மொழியில் உம்மைக்கிளவியை வினை வேர்ச்சொற்களையடுத்துச் சேர்ப்பதன் மூலம் எதிர்வெச்சங்கள் அமைக்கப்படுகின்றன. அக்கேடிய எதிர்வெச்சங்கள் ஈற்றில் நிகழும் மகரமெய்யை இழந்தும் நிகழவல்லவையாகும். எடுத்துக்காட்டாக *ஷபாதும்* என்பது *ஷபாது* எனவும் நிகழற்பாலது. இத்தகைய மகரத்தேய்வு அக்கேடிய

மொழியில் இயல்பாகக் காணப்படுகின்றது. திராவிட மொழிகளிலும் இத்தகைய நிகழ்ச்சியை வரலாற்று நிலையில் காண முடிகிறது. இதுபற்றி இக்கட்டுரையின் இறுதியில் சுருக்கமாகப் பேசப்படும்.

*24.3.3* பெயர்வேர்ச் சொற்கள் இரண்டு அல்லது மூன்று மெய்யொலிகளையும் ஓர் குறில் அல்லது நெடில் உயிரையும் உடையனவாக அமைகின்றன. எ-டு: bi:t 'வீடு' ruba:. 'இளவரசன்', nakr 'பகை, நட்பின்மை', rabi 'பெருமை' (அளவு). அக்கேடிய மொழியில் எழுவாய், செயப்படுபொருள்., உடைமை ஆகிய மூன்று வேற்றுமைகள் சிறப்பாக அமைகின்றன. எழுவாய் வேற்றுமையை உம் என்ற விகுதியும், செயப்படுபொருள், வேற்றுமையை அம் என்ற விகுதியும், உடைமை வேற்றுமையை இம் என்ற விகுதியும் உணர்த்துகின்றன. இந்த வேற்றுமை விகுதிகளில் காணப்படும் மகரமெய்யானது எதிர்வெச்சங்களில் குறிப்பிட்டதுபோல் கெடும் இயல்பினது. ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை விளக்கலாம்.

2 (1) bi:t 'வீடு'
(2) bi:t-um/bi:t-u 'வீடு' (எழுவாய்)
(3) bi:t-am/bi:t-a 'வீட்டை'
(4) ina bi:t-im/bi:t-i 'வீட்டின்/வீட்டில்' (உடைமை, இடம்)

பெயர்வேர்ச்சொற்கள் உயிர் ஈற்றனவாய் இருப்பின், வேற்றுமை விகுதிகளின் உயிரொலி நிகழ்ச்சி போற்றப்படுகின்றது. இதற்கு விதிவிலக்கும் உண்டு. வேர்ச்சொல்லின் ஈற்றுயிரும், வேற்றுமை விகுதியின் உயிரொலியும் புணர்ந்து பொருத்தமான உயிர்நெடில் தோற்றம் கொள்ளும் நிலையும் காணப்படுகின்றது. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

3. (1) ruba: + um > rubu:m 'இளவரசன்' (எழுவாய்)
(2) ruba: + am > ruba:m 'இளவரசனை'

## 24.4 அக்கேடியப் பெயர்த் தொடர் (Akkadian Noun Phrase)

24.4.1 அக்கேடிய மொழியில் பெயர்த்தொடர் அமைப்பு லத்தீன் மொழியினின்றும் கிளைத்தெழுந்த பிரஞ்சு, போர்த்துக்கீசியம் முதலான மொழிகளில் உள்ளது போல் தலைமைப்பெயர் (Head Noun) முன்னும், பெயரடை (Adjective/Noun Modifier) அதனையடுத்தும் நிகழும் தன்மையினை உடையதாகும். இத்தகைய அமைப்பினை எழுவாய்+செயப்படுபொருள்+பயனிலை என்ற அமைப்பின தாகிய வாக்கிய வகையைக் கொண்ட மொழிகளில் காண முடியாது. எழுவாய்+பயனிலை+செயப்படுபொருள் அல்லது பயவினை+

எழுவாய்+செயப்படுபொருள் என்ற முறையில் அமைந்த வாக்கிய வகைகள் உள்ள மொழிகளில்தான் இத்தகைய பெயர்த்தொடர் அமைப்பினைப் பொதுவாகக் காணமுடியும். பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் பெயர் முன்னும் பெயரடை பின்னுமாக அமைந்த அக்கேடியப் பெயர்த்தொடர்களாகும்.

4(1) sarrum dannum
அரசன் வலிய (ன்) 'வலிய அரசன்' (எழுவாய்)

(2) sarram dannam
அரசனை வலியனை 'வலிய அரசனை'

(3) rabu:m (rabi+um) 'பெரிய'
(உம் என்பது இதில் எழுவாய் உருபு)

(4) aplum rabu:m 'மூத்தமகன்'
மகன் முதிய(ன்)

அக்கேடிய மொழியில் பெயரடையும் தலைமைப் பெயர் ஏற்கும் வேற்றுமை உருபினை ஏற்கிறது. இதனை மேற்கண்ட எடுத்துக் காட்டுக்களில் காணலாம். இந்த மொழியில் அமைந்துள்ள பெயர்த் தொடரின் அமைப்பானது அம்மொழி அடிப்படையில் பயனிலை + எழுவாய்+செயப்படுபொருள் என்ற வாக்கிய வகையை உடைய தாயிருந்தது என்பதை நன்கு தெளிவுபடுத்துகின்றது. சுமேரிய மொழியின் தாக்கத்தால் அக்கேடிய வாக்கிய அமைப்பில் பயனிலை யானது இறுதி நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது. ஆயினும் அக்கேடிய மொர்ழியின் பெயர்த்தொடர் அமைப்பு சுமேரிய மொழியின் தாக்கத்துக்கு இலக்காகவில்லை.

### 24.5 அக்கேடியத்தில் எழுவாய் வேற்றுமை

23.5.1 அக்கேடிய மொழியில் பெயர்ச்சொற்கள் பொதுவாக உம் (um) என்ற எழுவாய் வேற்றுமை உருபு சேர்த்தே குறிக்கப் படுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுகள் இந்த வகையில் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

5. (1) izb-um 'கருச்சிந்தைவு',
(2) nakr-um 'எதிரி',
(3) ra:d-um 'இடி, பெருமழை',
(4) erb-um 'திறை, வருவாய்',
(5) apl-um 'சந்ததி',
(6) milk-um 'திட்டம்',
(7) il-um 'கடவுள்',
(8) bel-um 'தலைவன்',

*(9)* kalb-um *'ஆண்நாய்'*,
*(10)* ekall-um *'மாளிகை'*,
*(11)* ma:r-um *'மகன்'*,
*(12)* alp-um *'கால்நடை'*,
*(13)* a:l-um *'நகரம்'*,
*(14)* bi:t-um *'வீடு'*.

*அக்கேடிய மொழியின் சொல்லமைப்புகளில் உம் என்ற விகுதியின் பயன்பாடு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அக்கேடியம் தவிர லத்தீன், தமிழ் ஆகிய மொழிகளிலும் இந்த விகுதியின் நிகழ்ச்சி பல்வேறு சொல்லமைப்புகளில் காணப்படுகிறது.*

### *24.6 லத்தீனில் உம்*

லத்தீன் இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியாகும். பிரஞ்சு, போர்த்துக்கீசியம், இதாலியம், ஸ்பானியம் (Spanish) முதலான மொழிகள் இதனின்றும் தோன்றியமைந்தவை யாகும். அக்கேடிய மொழியைப் போலவே பேச்சுவழக்கற்ற லத்தீன் மொழியிலும் உம்மைக் கிளவியானது பெயர் மற்றும் வினைச் சொல்லமைப்புகளில் விகுதியாக அமைந்த பல்வேறு இலக்கணப் பொருண்மைகளை உணர்த்துகின்றது. செய்யும் பொருட்டு என்ற வாய்பாட்டு வினையெச்சத்தின் பொருண்மையை உணர்த்தும் லத்தீன் எதிர்வெச்சங்களில் உம்மைக்கிளவி நோக்குப் பொருண்மையை உணர்த்துகின்றது. எ-டு. ama:t-um 'காதலிக்கும் பொருட்டு' monit-um 'அறிவுறுத்தும் பொருட்டு' rect-um 'ஆளும் பொருட்டு'. ஒருவகைப் பெயர்ச் சொல்லமைப்புகளில் எழுவாய், செயப்படுபொருள், விளி ஆகிய இலக்கணப் பொருண்மைகளை உணர்த்தும் வேற்றுமை உருபாகவும் உம் செயல்படுகிறது. எ-டு. templ-um 'கோயில்' (எழுவாய், செயப்படுபொருள், விளி). சில பெயர்ச் சொற்களில் உம்மையானது செயப்படுபொருள் விகுதியாகவும், வேறு சில பெயர்ச்சொற்களில் உடைமைப் பொருண்மையை உணர்த்தும் பன்மை வேற்றுமை உருபாகவும் அமைகின்றது. எ-டு. man-um 'கையை' grad-um 'படிக்கட்டினை' agr-um 'வயலை' libr-um 'புத்தகத்தை' serv-um 'அடிமையை' do:min-um 'இறைவனை' re:g-um 'அரசர்களின்' flo:r-um 'மலர்களின்' no:min-um 'பெயர்களின்' oper-um 'வேலைகளின்' capit-um 'தலைகளின்'. லத்தீனில் பெயர்த்தொடர் அமைப்பு அக்கேடிய மொழியில் உள்ளது போலவே காணப்படு கிறது. எ-டு. re:gn-um bon-um 'நல்லரசு' (எழுவாய், செயப்படுபொருள், விளி). இந்த எடுத்துக்காட்டில் bon-um என்பது பெயரடை ஆகும். லத்தீனில் பெயர்த்தொடர் அமைப்பு திராவிட மொழிகளில்

உள்ளது போலவும் அரிதாகக் காணப்படுகின்றது. எ-டு. magn-um opus 'பெரும்பணி' (எழுவாய், செயப்படுபொருள், விளி). இந்த எடுத்துக்காட்டில் magn-um என்பது வேற்றுமைப் பொருண்மையை உணர்த்தும் உம் விகுதியமைந்த பெயரடையாகும்.

## 24.7 தமிழில் உம்

24.7.1. பல்வேறு நூற்பாக்களில் (சொல்லதிகாரம், தெய்வச் சிலையார். 279, 280, 281, 283, 285, 287, 288) உம் விகுதியின் இலக்கணச் செயற்பாடுகளைப்பற்றி ஆராயும் தொல்காப்பியர் இவ்விகுதியானது எச்சம், சிறப்பு, ஐயம், எதிர்மறை, முற்று, எண், தெரிநிலை, ஆக்கம் (சொல். தெய்வச்.252) ஆகிய எட்டு இலக்கணப் பொருண்மைகளை உணர்த்தும் என்று குறிப்பிடுகிறார். உம்மைக் கிளவி பல்வேறு சொல்லமைப்புக்களில் திரிந்தும், திரியாமலும் சாரியையாகவும் நிகழவல்லது என்ற உண்மை மரபிலக்கணிகளின் பார்வையில் படாமற்போன ஒன்றாகும். பழங்கன்னடத்தில் இரண்டாம் வேற்றுமை உருபாகிய *அன்* என்ற விகுதியின் முன் உம் சாரியையின் நிகழ்ச்சி போற்றப்படுகின்றது. (S.V. Shanmugam 1971:211) எ-டு: *பள்ளிய் + உம் + அன்* 'பள்ளிக்கூடத்தை' *ரிஷியர் + உம் + அன்* 'முனிவர்களை'. தமிழில் நான்காம் வேற்றுமை உருபேற்கும் பெயர்ச் சொற்களிலும், *புறாக்கள், தெருக்கள்* முதலான பன்மைப் பெயர்களிலும் *தாய்ப்பால், புலித்தோல்* முதலான பெயர்த் தொடர்களிலும் உம்மைக் கிளவி மகரமாகத் தேய்ந்தும் தேயாமலும் சாரியையாக நிகழும் என்பது புதிய தமிழ் இலக்கணத்தில் உணர்த்தப்பட வேண்டிய செய்தியாகும். பின்வரும் சொல்லமைப்புக்களில் உம்மைக்கிளவியும் அதன் திரிபாகிய மகரமும் சாரியைகளாக நிகழ்வதை அறியலாம்.

| | | |
|---|---|---|
| 6(1) | மகற்கு | (<*மகன்க்கு < மகனுக்கு < மகன்-உம்+கு) |
| (2) | காலுக்கு | (< கால் - உம் + கு) |
| (3) | கிளிக்கு | (< கிளி - ம் + கு) |
| (4) | தலைக்கு | (< தலை - ம் + கு) |
| (5) | தாய்க்கு | (< தாய் - ம் + கு) |
| (6) | புறாக்கள் | (< புறா - ம் + கள்) |
| (7) | தெருக்கள் | (< தெரு - ம் + கள்) |
| (8) | தாய்ப்பால் | (< தாய் - ம் + பால்) |
| (9) | புலித்தோல் | (< புலி - ம் + தோல்) |

24.7.2. பழங்கன்னடத்தில் *புலித்தோல்* என்ற தொடர் *புலிதோல்* (puli-do:l) என்று வழங்குகிறது. (R. Narasimhacharya 1967:75).

இத்தொடரின் தோற்றம் *புலி-ம்+தோல் > *புலிந்தோல் > புலிதோல் (puli-do:l) என்று விளக்கற்பாலதாகும். அடிநிலையமைப்பில் நிகழும் மகரச் சாரியையானது தமிழில் தகரமாகத் திரிந்து புலித்தோல் என்ற தொடர் தோற்றம் கொள்கிறது. பழங்கன்னடத்தில் இந்தச் சாரியை நகரமாகத் திரிந்து வருமொழி முதல் தகர மெய்யை அலையொலியாக (Voiced Phone) மாற்றிவிட்டு வீழ்ந்துபடுகிறது. இதன் விளைவாக, *புலிதோல்* (puli-do:l) என்ற தொடர் தோன்றி அமைகிறது. பேச்சுத் தமிழில் உம்மைக் கிளவியானது கள் விகுதி பெற்ற பன்மைப் பெயர்களிலும், பன்மை வினைமுற்றுக்களிலும் சாரியையாக நிகழ்கின்றது. எ-டு.

7(1) *ஆணுங்கள் (< ஆண் - உம் + கள்) 'ஆண்கள்'
(2) *அவனுங்கள் (< அவன்-உம் + கள்) 'அவர்கள்' (ஆண்பால்)
(3) *அவளுங்கள் (< அவள்-உம் + கள்) 'அவர்கள்' (பெண்பால்)
(4) *ஆளுங்கள் (< ஆள் - உம் + கள்) 'ஆட்கள்'
(5) *கிளிங்கள் (< கிளி - ம் + கள்) 'கிளிகள்'
(6) *பூனைங்கள் (< பூனை - ம் + கள்) 'பூனைகள்'

**கிளிங்கள், *பூனைங்கள்* என்ற பன்மைப்பெயர்களில் நிகழும் மகரச் சாரியை உம்மைச் சாரியையின் எச்சமாகும். இதனை உம்மைக் கிளவியின் மாற்றுருபாகக் கொள்ளலாம்.

8(1) *வந்தானுங்கள்
(< வந்தான் - உம் + கள்) 'வந்தார்கள்' (ஆண்பால்)
(2) *வந்தாளுங்கள்
(< வந்தாள் - உம் + கள்) 'வந்தார்கள்' (பெண்பால்)
(3) * ஓடுதுங்கள்
(< ஓடுத் - உம் + கள்) 'ஓடுகின்றன'

### 24.8 உம்மைக் கிளவியின் நிகழ்ச்சிப் பரப்பு

அக்கேடியத்திலும், லத்தீனிலும் உம் விகுதி எழுவாய் உருபாகவும் நிகழும் என்று கண்டோம். தமிழில் இத்தகைய நிலை காணப்பட வில்லையாயினும் மொழியீற்று முற்றுகரத்தையும், குற்றுகரம் கெட வந்த முற்றுகரத்தையும் (எ-டு. *பாட்டுக்கு, பாட்டுகள்*) உம் விகுதியின் தேய்மானங்களாகக் கருதலாம். அக்கேடியத்தில் உம்மை விகுதி உகரமாகத் தேய்ந்து நிகழ்வது இங்கே கருதற்பாலதாகும். எ-டு. bi:t-um/bi:t-u 'வீடு' (எழுவாய்) உகரவீற்றுத் தமிழ்ச் சொற்களை உம் ஈற்றனவாக மீட்டுருவாக்கம் செய்யமுடியும். இது விரிவான ஆய்வுக்குரியதாகும்.

### 24.9 வகைப்பாட்டியல் இணையத்தில் தமிழ்

அக்கேடியம், லத்தீன், தமிழ் ஆகிய மூன்று மொழிகளும் பிறப்பு நிலையில் தொடர்பற்ற மூன்று வேறுபட்ட மொழிக் குடும்பங்களைச் சார்ந்தவையாகும். ஆயினும் இந்த மூன்று மொழி களிலும் காணப்படும் உம்மைக்கிளவியும், அதன் பல்வேறு இலக்கணச் செயற்பாடுகளும் செமித்தியம், இந்தோ- ஐரோப்பியம், திராவிடம் ஆகிய மொழிக்குடும்பங்கள் ஒரு குறிப்பிட்ட தொன் மொழியின் திரிபுகளாக இருக்கக்கூடுமோ என்று ஐயுறச் செய்வன வாக உள்ளன. ஒப்பீட்டுமொழியியலில் நடைமுறையிலுள்ள மீட்டுருவாக்கக் கோட்பாட்டினைக்கொண்டு இந்த மொழிக் குடும்பங்களைப் பிறப்புநிலையில் தொடர்புடையனவாகக் கருத வாய்ப்பில்லை. இந்த நிலையில் அக்கேடியம், லத்தீன், தமிழ் ஆகிய மொழிகளில் பல்வேறு சொல்லமைப்புகளில் காணப்படும் உம்மைக்கிளவியின் நிகழ்ச்சியைக் கருத்தில்கொண்டு இம் மொழிகளை வகைப்பாட்டியல் அடிப்படையில் தொடர்புள்ள வையாகக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை. வகைப்பாட்டு நிலையில் முகச்சாயலைக் கொண்டுள்ள மொழிகளைப் பிறப்பு நிலையில் தொடர்புள்ள மொழிகளாகக் கொள்வதற்கு வாய்ப்பில்லை.

❀ ❀ ❀

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| அச்சோ. | - | அச்சோப்பத்து |
| அடைக்கலம். | - | அடைக்கலப்பத்து |
| அதிசயம். | - | அதிசயப்பத்து |
| அ.ப. | - | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| அ.ப.வெ. | - | அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு |
| அ.மு. | - | அ. முத்தானந்தம் |
| அயோ. | - | அயோத்தியா காண்டம் |
| அன். | - | அன்பின் செபா |
| ஆ.மா. | - | ஆ. மாதவன் |
| ஆனந்த. | - | ஆனந்தமாலை |
| இடை. | - | இடையியல் |
| இ.கொ. | - | இலக்கணக் கொத்து |
| இளம். | - | இளம்பூரணம் |
| உவே.சா. | - | உவே. சாமிநாதைய்யர் |
| எழுத்து. | - | எழுத்ததிகாரம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐசக் | - | ஐசக் அருமைராஜன் |
| ஒழிபு. | - | ஒழிபியல் |
| க./கன். | - | கன்னடம் |
| கண்ட. | - | கண்டபத்து |
| க.பு. | - | கந்தபுராணம் |
| க.ரா. | - | கம்பராமாயணம் |
| கலி. | - | கலித்தொகை |
| கிட். | - | கிட்கிந்தா காண்டம் |
| கிரா. | - | கி. ராஜநாராயணன் |

| | | |
|---|---|---|
| குமா. | - | குமார செல்வா |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| கென். | - | கென்னடி. ஐ. |
| கொ.மா.கோ. | - | கொ.மா. கோதண்டம் |
| கோ.தி. | - | கோயில் திருப்பதிகம் |
| சம். | - | சம்பந்தர் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சீ.சி. | - | சீவகசிந்தாமணி |
| சீவக. | - | சீவகசிந்தாமணி |
| சு.ரா. | - | சுந்தரராமசாமி |
| சூர். | - | சூர்யகாந்தன் |
| செத்திலா. | - | செத்திலாப்பத்து |
| செ.யோ. | - | செ. யோகநாதன் |
| செல். | - | செல்சேவிஸ் |
| சேனா. | - | சேனாவரையம் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| சோ.த. | - | சோ. தர்மன் |
| டி.கே.சி. | - | டி.கே. சிதம்பரநாத முதலியார் |
| டொமினிக் | - | டொமினிக் ஜீவா |
| த. | - | தமிழ் |
| தங். | - | தங்கம் என்.எஸ். |
| திருக். | - | திருக்குறள் |
| திருச். | - | திருச்சதகம் |
| திருத்தோள். | - | திருத்தோள் நோக்கம் |
| திருப். | - | திருப்பொற்சுண்ணம் |
| திருப்பள்ளி. | - | திருப்பள்ளியெழுச்சி |
| திருப்பொற். | - | திருப்பொற்சுண்ணம் |
| திருவா. | - | திருவாசகம் |
| திருவி. | - | திருவிருத்தம் |

| | | |
|---|---|---|
| திருவெண். | - | திருவெண்பா |
| திருவெம். | - | திருவெம்பாவை |
| திருவே. | - | திருவேசரவு |
| தெ. | - | தெலுங்கு |
| தே. | - | தேவாரம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தோ. | - | தோப்பில் முகம்மது மீரான் |
| தோப்பில். | - | தோப்பில் முகம்மது மீரான் |
| நச். | - | நச்சினார்க்கினியம் |
| நம். | - | நம்மாழ்வார் |
| நற். | - | நற்றிணை |
| நன். | - | நன்னூல் |
| நா.நா. | - | நாஞ்சில் நாடன் |
| நாலடி. | - | நாலடியார் |
| நாலா. | - | நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் |
| நீல. | - | நீல. பத்மநாபன் |
| பத்துப். | - | பத்துப்பாட்டு |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பழ. | - | பழமொழி நானூறு |
| பா. கா. | - | பாலகாண்டம் |
| பு.பி. | - | புதுமைப்பித்தன் |
| புறம். | - | புறநானூறு |
| பூ. | - | பூமணி |
| பெ.எ. | - | பெயரெச்சம் |
| பெருங். | - | பெருங்கதை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| பொன். | - | பொன்னீலன் |
| மணி. | - | மணிமேகலை |
| மலர். | - | மலரன்னை |

| | | |
|---|---|---|
| மு.வ. | - | மு. வரதராசன் |
| மு.வீ. | - | முத்துவீரியம் |
| யு.கா. | - | யுத்தகாண்டம் |
| ரா.நா. | - | ராஜநாராயணன் |
| வ.கு. | - | வன்னியகுலம் |
| வ.தா. | - | வண்ணதாசன் |
| வ.நி. | - | வண்ணநிலவன் |
| வாழாப். | - | வாழாப்பத்து |
| வே.தொ. | - | வேற்றுமை தொகை |
| ஹெ. | - | ஹெப்சிபா ஜேசுதாசன் |
| ஹெப். | - | ஹெப்சிபா ஜேசுதாசன் |
| ஸ்ரீதர. | - | ஸ்ரீதரகணேசன் |
| D.E.D. | - | Dravidian Etymological Dictionary (Revised Edition - 1984). |
| Kan. | - | Kannada |
| Kod. | - | Kodagu |
| KR.N. | - | Kumaraswamy Raja, N. |
| Mal. | - | Malayalam |
| MS.T.P. | - | Meenakshisundaram, T.P. |
| PILC. | - | Pondicherry Institute of Linguistics and Culture |
| Tel. | - | Telugu |
| Tul. | - | Tulu |

# கருவி நூல்களும் கட்டுரைகளும் தரவு மூலங்களும்

(*இக்குறியிட்ட நூல்கள்/இலக்கியப்படைப்புகள் தரவு மூலங்களாகும்)


அகத்தியலிங்கம், ச., 1986. *சங்கத் தமிழ் - 4. வினையியல்*, அண்ணாமலை நகர், அனைத்திந்திய தமிழ்மொழியியற் கழகம்.

* அபிமானி, 1977. *சூடு*, தமிழரசு - இலக்கிய மலர், தமிழக அரசு வெளியீடு, சென்னை.

* அன்பின் செபா, 1997. *செய்வினை*, காலகட்டம் - இதழ் 3, தக்கலை, குமரி மாவட்டம்.

ஈஸ்வரன், ச. 1995. *டி.கே. சிதம்பரநாத முதலியாரின் கலை இலக்கியப் பணி - ஓர் ஆய்வு*, நாகர்கோவில், ரோகிணி பதிப்பகம்.

* ஐசக் அருமைராஜன், 1975. *கீறல்கள்*, சென்னை, கிறித்துவ இலக்கியச் சங்கம்.

* குமார செல்வா, 1992, *உக்கிலு*, மார்த்தாண்டம் (குமரி மாவட்டம்), தாயக வெளியீடு.

* கென்னடி, ஐ. 1997 அ. *வார்த்தபாடு*, காலகட்டம் - இதழ் 2 (இலக்கியக் காலாண்டிதழ்), தக்கலை (குமரி மாவட்டம்).

* ----- 1997 ஆ. *வியாகுலங்கள்*, காலகட்டம் - இதழ் 3 (இலக்கியக் காலாண்டிதழ்), தக்கலை (குமரி மாவட்டம்).

* கோதண்டம், கொ. மா. 1991. *காட்டுக்குயில்கள்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

கோதண்டராமன், இரா. 1971. *ஆய்தத்தின் வரலாறு*, தமிழ்ப் பொழில், 44:11, 12 (பிப்ரவரி - மார்ச்சு), தஞ்சாவூர், கரந்தை தமிழ்ச் சங்கம்.

------- 1997. *இலக்கியத்தில் மொழி வழக்குகள்* (இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளது), புதுச்சேரி, கதை சொல்லி - 3 (எண்வழிச் சிற்றிதழ்).

------ 1997. *இலக்கியம் போற்றுதும் இலக்கியம் போற்றுதும்* (இத்தொகுப்பில் *இலக்கியம் தேடும் இலக்கணம்* என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ளது). புதுச்சேரி, கதை சொல்லி - 3 (புரட்டாசி/செப்டம்பர்).

------- 2001. (பதிப்பர் செ.ஜீன் லாறன்ஸ்) *அலையொலித் திரிபும் ஆய்தம் நிலையலும்* (தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள்), சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

------- 2002அ. *மயங்கா மரபின் எழுத்து முறையும் மயங்கிய மரபின் வைப்பு முறையும்* (பல்நோக்குக் கட்டுரைகள் - பதிப்பர். தூ. சேதுபாண்டியன், மதுரை, ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு மன்றம்.

------- 2002ஆ. *இறவாக்காலப் பொது வினைமுற்றுக்கள்* (தமிழியல் ஆய்வு - இன்றைய போக்குகள்) பதிப்பர். கா. இராமையா முதலியோர். தஞ்சாவூர், திருமதி செண்பகம் சுப்பையா நினைவு அறக்கட்டளை வெளியீடு.

------- 2002இ. *செய்தென் வினைகள்: அகமும் புறமும்,* Journal of Tamil Studies - No. 60., Chennai, International Institute of Tamil Studies.

சண்முகம், செ.வை. 1980. *எழுத்திலக்கணக் கோட்பாடு,* அண்ணாமலைநகர், அனைத்திந்திய தமிழ் மொழியியல் கழகம்.

சிதம்பரநாத முதலியார், டி.கே. 1953. *கம்பர் தரும் ராமாயணம் - முதற்பாகம்: பால- அயோத்தியா காண்டங்கள்,* தென்காசி, பொதிகை மலைப் பதிப்பு.

* சுந்தர ராமசாமி, 1973 (2-ஆம் பதிப்பு) *ஒரு புளிய மரத்தின் கதை,* சென்னை, தமிழ்ப் புத்தகாலயம்.

* சுபா, 1994. *மண்ணில் எல்லாம் உயிர்த்திருக்கு* (சிறுகதை), பாரிஸ், (எரிமலை சித்திரை இதழ்).

* சூர்யகாந்தன், 1989. *மானாவாரி மனிதர்கள்,* சென்னை, தாகம் வெளியீடு.

* செல் சேவிஸ், 1996. *கொம்பியெ* (கவிதைகள்), பரக்குன்று (குமரி மாவட்டம்), வேணாடு மலைத் தமிழ் வெளியீட்டகம்.

* டொமினிக் ஜீவா, 1962 (முதல் பதிப்பு). *பாதுகை* (சிறுகதைத் தொகுப்பு), சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

------- 1978 (2ஆம் பதிப்பு). *சாலையின் திருப்பம்* (சிறுகதைத் தொகுப்பு) சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

தங்கம், என்.எஸ்., 1997. *வாய்க்கரி,* காலகட்டம் - இதழ் - 2 (இலக்கியக் காலாண்டிதழ்), தக்கலை (குமரி மாவட்டம்).

தர்மன், சோ., 1991 (2ஆம் பதிப்பு). *சருகுகள்,* கரிசல் கதைகள் (தொகுப்பு: கி. ராஜநாராயணன்), சிவகெங்கை, அன்னம் வெளியீடு.

*------- 1996. *தூர்வை,* கும்பகோணம், அகரம் வெளியீடு.

தெட்சிணாமூர்த்தி, அ., 1976. *இன்னிசையளபெடை,* எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை - தொகுதி 2, மைசூர், இந்திய மொழிகள் மைய நிறுவனச் சார்பு வெளியீடு.

* தோப்பில் முகம்மது மீரான், 1991. *துறைமுகம்,* திருநெல்வேலி, ஜலீலா பப்ளிஷிங் ஹவுஸ்.

* ------ 1993. *கூனன் தோப்பு,* திருநெல்வேலி, ஜலீலா பப்ளிஷிங் ஹவுஸ்.

* ------ 1995. *சாய்வு நாற்காலி,* திருநெல்வேலி, ஜலீலா பப்ளிஷிங் ஹவுஸ்.

நாஞ்சில் நாடன், 1977. *தலைகீழ் விகிதங்கள்,* சென்னை, பாரி நிலையம் (விற்பனை உரிமை).

* ------ 1979. *என்பிலதனை வெயில் காயும்,* சிவகங்கை, அன்னம் வெளியீடு.

* ------ 1990. *உப்பு,* சிவகங்கை, அன்னம் வெளியீடு.

* பத்மநாபன், நீல., 1968. *தலைமுறைகள்,* சென்னை, பாரி நிலையம்.

* புதுமைப்பித்தன், 1977. *அன்று இரவு* (3ஆம் பதிப்பு), மதுரை, மீனாட்சி புத்தக நிலையம்.

* பூமணி, 1979. *பிறகு,* சிவகங்கை, *அன்னம் வெளியீடு.*

* பொன்னீலன், 1979. *கொள்ளைக்காரர்கள்,* சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

* ------ 1995 (முதல் பதிப்பு 1992). *புதிய தரிசனங்கள்,* சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

* மகாதேவன், வே., (பதிப்பர்) 1985. *சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுகள்,* சென்னை, காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சுவாமிகள் பொன் விழாக் கமிட்டி, சங்கரா மேனிலைப் பள்ளி, வசந்தா பிரஸ் சாலை, அடையாறு.

* மலரன்னை, 1994. *புயலாக மாறும் பிஞ்சுகள்* (சிறுகதை), பாரிஸ், எரிமலை (ஆடி இதழ்).

* மாதவன், ஆ., 1974. *புனலும் மணலும்,* சென்னை, வாசகர் வட்டம்.

மீனாட்சி, கு., 1994. *பாணினி,* சென்னை, மணிவாசகர் பதிப்பகம்.

* முத்தானந்தம், அ., 1991 (முதல் பதிப்பு 1984). *மாடுகள்,* கரிசல் கதை (தொகுப்பு: கி. ராஜநாராயணன்), சிவகங்கை, அன்னம் வெளிட

முத்து, நெல்லை சு. 1994. *முத்துக்கணினி - 1994*, தமிழும் கணிப்பொறியும்: கருத்தரங்கு - 1994. ஆகஸ்டு 5, 6, கணிப்பொறி அறிவியல் தொழில்நுட்பத் துறை, சென்னை, அண்ணா பல்கலைக் கழகம்.

* யோகநாதன், செ., 1993. *நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே*. சென்னை, காந்தளகம்.

* ராஜநாராயணன், கி. 1976. *கோபல்ல கிராமம்*, சென்னை, வாசகர் வட்டம்.

* ------ 1988. *கரிசல் காட்டுக் கடுதாசி*, சிவகங்கை, அன்னம் வெளியீடு.

* ------ 1991 (முதல் பதிப்பு 1984) *நிலை நிறுத்தல்*, கரிசல் கதைகள் (தொகுப்பு: கி ராஜநாராயணன்) சிவகங்கை, அன்னம் வெளியீடு.

* வரதராசன், மு., 1978. *வாடாமலர்*, சென்னை, தாயக வெளியீடு, விற்பனை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

* வண்ணதாசன், 1976. *கலைக்க முடியாத ஒப்பனைகள்* (சிறுகதைத் தொகுப்பு), மதுரை, மீனாட்சி புத்தக நிலையம் (விற்பனை உரிமை).

* வண்ணநிலவன், 1979 (முதல்பதிப்பு 1977). *கடல்புரத்தில்*, சென்னை, நர்மதா பதிப்பகம்.

* ------ 1996 அ. *சீப்பு* (சிறுகதை), சென்னை, தினமணி கதிர் (30.6.1996), தினமணி இணைப்பு.

* ------ 1996 ஆ. *மோதிரம்* (சிறுகதை), சென்னை, தினமணி கதிர் (30.6.1996), தினமணி இணைப்பு.

* ------ 1996 இ. *தேடித்தேடி*, கோவை, வைகறை.

* வன்னிய குலம், 1986. *ஈழத்துப் புனைகதைகளில் பேச்சு வழக்கு*. யாழ்ப்பாணம், முத்தமிழ் வெளியீட்டுக் கழகம்.

* விட்டல் ராவ், 1977, *போக்கிடம்*, சென்னை, வானதி பதிப்பகம்.

வேங்கடராஜுலு ரெட்டியார், வே., (ஆண்டு தெரியவில்லை). *ஐகார ஔகாரம்*, சென்னை, The Journal of Oriental Research of the University of Madras, Vol.I. Parts 1 & 2.

ஹெப்சிபா ஜேசுதாசன், 1964. *புத்தம் வீடு*, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம்.

ஸ்ரீதர கணேசன், 1995. *உப்பு வயல்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

## REFERENCES


Acharya, A.S., 1967. *Halakki Kannada,* Poona, Deccan College, Post Graduate and Research Institute.

——— 1971. *Tiptur Kannada,* Poona, Deccan College, Post Graduate and Research Institute.

Agesthialingom, S., 1976. *Ka:Nikka:ra Dialect,* Annamalai Nagar, Annamalai University.

Bhat, D.N.S. 1971. *An Outline Grammar of Havyaka,* Poona, Deccan College, Post Graduate and Research Institute.

——— 2000. *Dravidian and Tibeto-Burman - A Typological Comparison,* Thiruvananthapuram, IJDL. XXIX:1 (January).

Caldwell, Robert. 1961 (First Print Preface dated 1875), *A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages,* Madras, University of Madras.

Caldwell, Thomas A., John N. Oswalt, John F.X. Sheehan. 1978, *An Akkadian Grammar* (5th Edition), Milwaukee, Wisconsin, U.S.A., Marquetee University Press.

Emeneau, M.B., 1961. *Kolami - A Dravidian Language,* Annamalai Nagar, Annamalai University.

*——— 1994. *South Dravidian Languages,* In, *Dravidian Studies - Selected Papers,* New Delhi, Motilal Banarsidass Publishers.

Gair, James. W., Suseendirarajah, S., and Karunatilake, W.S., 1978. *An Introduction to Spoken Tamil,* Sri Lanka, External Services Agency, University of Sri Lanka.

John Lyons, 1969. *Introduction to Theoretical Linguistics,* London, Cambridge University Press.

Kothandaraman, R., 1975. *ma:TTu in Future Negetion,* A:yvukko:vai- 7, Annamalai Nagar, Proceedings of the All India University Tamil Teachers' Conference.

——— 1978. *Verbal bases in Tamil - A New Look. Madurai,* Journal of Madurai-Kamaraj University, Vol. 10-11. No. 2.

*——— 1979. *Agreement Markers in K. Verbals,* A:yvukko:vai - II. Vol.2.

*——— 1980. *A Brief on K. Adjectivals in Tamil,* Chennai, Pulamai 6:1.

*——— 1982. *Verbal Bases as a Sub-Class of Noun.* IJDL xi:2. Thiruvanandapuram, Dravidian Linguistics Association.

* ------ 1990a. *Agreement Markers in T. Verbals.* Thiruvananthapuram, IJDL IX:I.

* ------ 1990b. *Relative Clause and Participle Noun in Tamil - A New Perspective.* In, *Tamil Syntax - New Perspectives,* Pondicherry. Pondicherry Institute of Linguistics and Culture.

------- 1991. *Empty Markers in Tamil - A New Perspective,* Pondicherry, PILC Journal of Dravidic Studies, Vol.1:2.

* ------ 1992, *Pre-Junctural Semi-vowels in Tamil,* Pondicherry, PILC Journal of Dravidic Studies.

* ------ 1993, *Increments in Tamil Dative,* Pondicherry, PILC Journal of Dravidic Studies.

* ------ 2001, *System Reduction and System Re-analysis,* IJDL. xxx:1, Dravidian Linguistics Association, Thiruvananthapuram, Kerala.

Krishnamurti, Bh. 1972 (First Edition - 1961). *Telugu Verbal Bases. A Comparative and Descriptive Study,* Delhi, Motilal Banarsidass.

Kumaraswamy Raja, N. 1969. *Post Nasal Voiceless Plosives in Dravidian,* Annamalai Nagar, Annamalai University.

------- 1973. *Aytam and Verbal Length,* A:yvuko:vai - 5, Madras.

------- 1980. *Three Consonant Clusters in Tamil. In, A Festschnift for Prof. M. Shanmugam Pillai,* Madurai, Madurai-Kamaraj University.

Mahadeva Sastri, Korada, 1969. *Historical Grammar of Telugu,* Anantapur (A.P.), S.V. University, P.G. Centre.

Meenakshisundaram, T.P. 1965. *A History of Tamil Language,* Poone, Deccan College Post-Graduate and Research Institute.

Narasimhacharya, R. 1969. *History of Kannada Language* (Readership Lectures), Mysore, Mysore University.

Ramachandra Rao, B., 1972. *A Descriptive Grammar of Pampa Bharata,* Mysore, University of Mysore.

Ramakrishna T. Shetty, 2001. *A Comprehensive Grammar of Tulu,* Annamalai Nagar, Annamalai University.

Ramaswamy Ayyar, L.V., 1936. *The Evolution of Malayalam Morphology,* Trichur, Ernakulam. The Ramavarma Research Institute.

Sakthivel, S., 1978. *Muduva Dialect.* Annamalai Nagar, Annamalai University.

Shanmugam, S.V. 1971. *Dravidian Nouns,* Annamalai Nagar, Annamalai University.

Subrahmanyam, P.S., 1971. *Dravidian Verb Morphology ( A Comparative Study),*. Annamalai Nagar, Annamalai University.

-------- 2004. *Voicing and Degemination of Original steps in Kannada,* IJDL xxxiii: 2, Thiruvananthapuram (Kerala), Dravidian Linguistics Association.

Thomas Lehmann and Thomas Malten, 1992. *A Word Index of Old Tamil Cankam Literature,* Stuttgart: Steiner, Sudasien - Institut, Universität Heidelberg.

Upadhyaya, 1968. *Nanjangud Kannada* (Vakhaliga Dialect) Poona, Deccan College Post Graduate and Research Institute.

Upadhyaya, U.P. & N.D. Krishnamurthi, 1972. *Conversational Kannada,* Bangalore.

## ஆய்வுக்குத் துணைபுரிந்த பழந்தமிழ் இலக்கியங்களும், பக்தி மற்றும் காப்பிய இலக்கியங்களும், மரபிலக்கணங்களும்

*அகநானூறு,* காசி விசுவநாதன் செட்டியார் பதிப்பு, 1943, விற்பனையாளர்: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

*இலக்கணக் கொத்து,* சரசுவதி மகால் நூல் நிலையப் பதிப்பு - 1973, தஞ்சாவூர்.

*இலக்கண விளக்கம், சொல்லதிகாரம்,* சரசுவதி மகால் நூல் நிலையப் பதிப்பு - 1971. தஞ்சாவூர்.

*இறையனார் அகப்பொருள்,* பவானந்தர் கழக வெளியீடு, 1939, பவானந்தர் கழகம், வேப்பேரி, சென்னை.

*கலித்தொகை* (நச்சினார்க்கினியர் உரை), காசி விசுவநாதன் செட்டியார் பதிப்பு, 1938.

*குறுந்தொகை,* உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு, 1937, சென்னை.

*சிலப்பதிகாரம்,* உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு, 1944, சென்னை.

*சீவகசிந்தாமணி,* உ.வே. சாமிநாதய்யர் (4-ஆம் பதிப்பு), 1942, திருவான்மியூர், சென்னை, உ.வே.சா. நூல் நிலையம்.

*திருக்குறள்* (பரிமேலழகர் உரை), கழக வெளியீடு, சென்னை.

*திருவாசகம்* (சுவாமி சித்பவானந்தர் விளக்கவுரை), 1970, ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை.

*தேவாரம்* (அப்பர்), அடங்கல் முறை, மயிலை இளமுருகனார் பதிப்பு, 1950.

*தேவாரம்* (அப்பர்), மயிலை இளமுருகனார் பதிப்பு, 1953, சென்னை, திருவருளகம், 150, கோவிந்தப்ப நாயக்கன் தெரு.

*தேவாரம்* (சுந்தரர்), அடங்கல் முறை, மயிலை இளமுருகனார் பதிப்பு, 1950.

*தேவாரம்* - அடங்கல் முறை, இளமுருகனார் பதிப்பு, 1953,. சென்னை 150 கோவிந்தப்ப நாயக்கன் தெரு, திருவருளகம்.

*தேவாரம்* (சம்பந்தர்), தருமபுரி ஆதின வெளியீடு.

*தொல்காப்பியம், எழுத்ததிகாரம் - இளம்பூரணம்,* கணேசய்யர் பதிப்பு, 1937, சென்னை.

*தொல்காப்பியம், சொல்லதிகாரம்* - சேனாவரையம், கழகப் பதிப்பு, 1956, சென்னை.

*தொல்காப்பியம், சொல்லதிகாரம்* - தெய்வச்சிலையார், கரந்தைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு, 1929, தஞ்சாவூர்.

*தொல்காப்பியம், சொல்லதிகாரம்* - நச்சினார்க்கினியம், சென்னை, பவானந்தர் கழக வெளியீடு, 1941.

*தொல்காப்பியம், சொல்லதிகாரம்* - நா. பொன்னையா பதிப்பு, 1938.

*தொல்காப்பியம், பொருளதிகாரம்* (இளம்பூரணம்), வ.உ. சிதம்பரம் பிள்ளை - எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்பு, 1935-36.

*நற்றிணை* - அ. நாராயணசாமி ஐயர் உரை, கழகம், 1952.

*நன்னூல் விருத்தியுரை* (சிவஞான சுவாமிகள்), தாரண ஆண்டு, ஆறுமுக நாவலர் பதிப்பு.

*நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்,* கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு, 1981, திருவேங்கடத்தான் திருமன்ற வெளியீடு.

*பரிபாடல்,* உவே. சாமிநாதய்யர் பதிப்பு, 1935, சென்னை.

*பிரயோக விவேகம்,* இரத்தாட்சி ஆண்டு, ஆறுமுக நாவலர் பதிப்பு.

*புறநானூறு,* உவே. சாமிநாதய்யர் பதிப்பு, 1935, சென்னை.

*மணிமேகலை,* காசி விசுவநாதன் செட்டியார் பதிப்பு, 1946, சென்னை, விற்பனையாளர் - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் -100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

Pub.No. 515 **தமிழெனப்படுவது** 115.00